# திருக்குறள் தேசிய நூல்

## பன்முக ஆய்வுப் பார்வை

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு


பதிப்பாசிரியர்

முனைவர் கோ. விசயராகவன்

தொகுப்பாசிரியர்

த. உடையார் கோயில் குணா






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# திருக்குறள் தேசிய நூல்

## பன்முக ஆய்வுப் பார்வை

பதிப்பாசிரியர்
முனைவர் கோ. விசயராகவன்

தொகுப்பாசிரியர்
த. உடையார்கோயில் குணா



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | திருக்குறள் தேசிய நூல் பன்முக ஆய்வுப் பார்வை |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் கோ. விசயராகவன்<br>இயக்குநர்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் |
| தொகுப்பாசிரியர் | : | த. உடையார்கோயில் குணா<br>பொதுச்செயலாளர்<br>தமிழ்த்தாய் அறக்கட்டளை<br>தஞ்சாவூர் |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113<br>தொலை பேசி எண். 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : | 772 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டிஎன்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 அளவு |
| பக்க எண்ணிக்கை | : | xvi+382 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ175/-(ரூபாய் நூற்றி எழுபத்தைந்து மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம்<br>148, தம்புத் தெரு<br>சென்னை-600 001<br>9444265471 |
| பாடம் | : | திருக்குறள் ஆய்வுக் கட்டுரைகள் |

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை- 600 113

## அணிந்துரை

கடுகைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்

எனத் திருக்குறளின் பெருமைகளைக் கூறும் இடைக்காடர் பாடல் திருவள்ளுவ மாலையில் இடம் பெற்றுள்ளது. நிலவுலகும் கடலுலகும் சேர்ந்தமைந்த இந்தப் பூமிக்கோள் முழுமைக்கும் திருக்குறள் உரியதாக விளங்குகிறது. இத்தகு உலக இலக்கியமான திருக்குறளைப் பெற்றதால் தமிழன்னை தலைநிமிர்ந்து விளங்குகிறாள். தமிழ்கூறு நல்லுலகான தமிழ்நாடும் தலைநிமிர்ந்துள்ளது.

தமிழர் அனைவரும் உலக இலக்கியமான திருக்குறளைக் கற்று ஒழுகவேண்டிய கடப்பாடு உடையவராவர். அதுபோல், தமிழரல்லாதாரும் அவரவர் மொழியில் திருக்குறளை மொழிபெயர்த்துப் படித்து அதன்படி ஒழுக வேண்டியது சாலச்சிறந்தது.

இன்றையநாளில் குறள் கருத்துகள் உலகம் முழுவதும் பரவுவதற்கான சூழல்கள் நன்கு உருவாகியுள்ளன. தமிழ்நாடு அரசு இச்சூழல்களில் முதலிடத்தில் நின்று திருக்குறளைப் பரவச் செய்வதில் முனைப்புக் காட்டிவருகின்றது. சீனமொழியிலும் அரபுமொழியிலும் திருக்குறளை மொழிபெயர்த்துத் தமிழ் வளர்ச்சித் துறையின் மூலம் இன்றைய நாளில் வெளியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் உரூபாய் பத்து இலட்சம் செலவில் திருக்குறள் காட்சிக் கூடம் அமைந்துள்ளது மேலும் பெருமைக்குரியதாகும். திருக்குறள் அது கையாளப்பெறும் நிலையில் சிறப்படைந்து வருகின்றது இதுகாறும் திருக்குறள் மேம்பாட்டுக்கு எடுத்த முயற்சிகளுக்கு மேலாகப் பள்ளிக் குழந்தைகள் முதல் கற்ற முதியவர் வரை குறளை ஓதாதார் இலர். திருக்குறள் முற்றோதல், திருக்குறளில் அவதானம், குறளை நூல்களில் எடுத்தாளுதல், பேச்சுகளில் மேற்கோள் காட்டல், சட்ட மன்றத்தைக் குறள் ஓதித் தொடங்குதல், பேருந்துகளிலும் பொது இடங்களிலும் குறள்களை எழுதி வைத்தல், இதன்மூலம் பொதுமக்களின் மனத்தில் குறள்களைப் பதியவைத்தல், குறள் நீதிக் கதைகளைச் சித்திரித்தல், திருக்குறளை

மொழிபெயர்த்தல், அவற்றுக்குப் புத்துரைகளை உருவாக்குதல், திருவள்ளுவருக்குப் பெருமைசேர்க்கும் வகையில் அவர் தொடர்பான வரலாற்றுச் சுவடுகளை ஏற்படுத்துதல், திருக்குறள் தொடர்பான சொற்பொழிவுகளை நடத்துதல், திருக்குறள் இருக்கைகளைத் தொடங்குதல், திருக்குறள் காட்சிகளை ஒலி, ஒளி, காணொலிக் காட்சிகளாக உருவாக்குதல், திருக்குறளில் உயராய்வுகளை மேற்கொள்ளுதல், திருக்குறளை அது தொடர்பான பிறமொழி இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆராய்தல், திருக்குறள் மூலபாடப் பதிப்புகளை வெளியிடுதல், திருக்குறள் வழியில் நடத்தல் போன்றவை உலகெங்கும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

அவற்றுக்குமேலாக, இங்கு வெளியிடப்பெறும் கட்டுரைகளின் தொகுப்புநூல் விளங்குகின்றது. குறளின் பன்முகச் சிறப்புகளைப் பறைசாற்றும் வகையில் வள்ளுவர் அறிவுறுத்தும் நெறிகளில் ஐம்பதுக்கும் மேற்பட்டவற்றைத் தலைப்புகளாகப் பெற்று இத்தொகுப்புநூல் விளங்குவது குறிப்பிடத்தக்கது. வள்ளுவர் காட்டும் அரசியல், சமூகம், அன்பு, வாழ்வியல், அறநெறி, இல்லறம், மானுடம், அறிவியல், இயற்கை, பெண்ணியம், நட்பு, கல்விச் சிந்தனைகள், நிருவாகம் போன்ற நெறிகளில் ஒன்றுக்கு மேற்பட்ட கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன. மேலும் கற்பு, தோழியின் பங்கு, தத்துவச்சிந்தனைகள், வரலாற்றுக் கருத்துகள், சமூக உரிமைச் சிந்தனைகள், நீதிகள், காவல்நிருவாகம், அங்கதம், அறிநெறிகள், பொதுவாழ்வு, வள்ளுவரின் கருத்துகளை எடுத்தாளுதல் போன்ற தலைப்புகளிலும் கட்டுரைகள் எழுதப்பெற்றுள்ளன.

வள்ளுவர் காட்டும் சமூகம் கீழ்க்காணுமாறு விளக்கப்படுகிறது:

> ஆணும் பெண்ணும் கூடிவாழ்வதே குடும்பம். தனிமனிதனும் குடும்பமும் ஒருங்கிணையும் போது சமூகம் தோன்றுகிறது. மனிதன் எந்தச் சூழலில் வாழ்ந்தாலும் சமூகத்திற்குக் கட்டுப்பட்டே வாழ்கிறான். சமூகம் நன்கு இலங்க வழிகாட்டும் முறைகளை நயம்பட உரைப்பதே சமூக உணர்வு. (பக்.7)

திருக்குறளில் வாழ்வியல் கூறுகள் ஏராளமாக இடம் பெற்றிருக்கின்றன. இவற்றை எட்டுக் கட்டுரைகள் இந்தத் தொகுப்பு நூலில் வெளிப்படுத்துகின்றன.

தஞ்சாவூரில் செயல்பட்டு வரும் தமிழ்த்தாய் அறக்கட்டளை சார்பாக அதன் நிறுவனரும் பொதுச் செயலாளருமான கவிஞர் உடையார்கோயில் குணா தொடர்ந்து தன்னால் இயன்ற தமிழ்ப்பணியை ஆற்றி வருகிறார்.

திருக்குறள்தொடர்பான அயல்நாட்டுக் கருத்தரங்குகள், தேசியநூலுக்கான அறப்போரட்டங்கள் மூலமாக திருக்குறள் தொடர்பான ஆக்கப்பூர்வமான முயற்சிகளையும் மேற்கொண்டு வருகிறார்.

இவரது முயற்சியால் சென்னையில் நடைபெற்ற திருக்குறள் தேசியநூல் கோரிக்கை மாநாட்டில் பெறப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை நூலாகத் தயாரித்து வெளியிடுவதில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பெருமை கொள்கிறது.

**தமிழும், தமிழ்நாடும் வாழ்ந்திட, அல்லும் பகலும் அயராது உழைத்துவரும் தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா** அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தமிழ்மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்துவரும் பள்ளிக் கல்வி மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவர் **மாண்புமிகு அமைச்சர் கே.சி.வீரமணி** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் **மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அறக்கட்டளை நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் ஒளியச்சுக் கோர்வை செய்த இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ சரவணா அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

*இயக்குநர்*

# முன்னுரை

திருக்குறளைத் தேசிய நூலாக இந்திய அரசு அறிவிக்க வேண்டுமென்று உலகத் தமிழ் அறிஞர்கள் கோரிக்கை விடுத்து வருகிறார்கள். மாண்பு தமிழக முதல்வா புரட்சித்தலைவி அம்மா அவர்கள் தமிழ்நாடு சட்டமன்றத்தில் 13.04.2005இல் தீர்மானம் நிறைவேற்றி இந்திய அரசைக் கேட்டுக் கொண்டார்கள்.

உலக நாடுகளில் தேசியநூல்-என்கிற வகைப்பாடு இல்லை என்கிற காரணத்தைச் சுட்டிக் காட்டி நடுவண் அரசு தமிழக சட்டமன்றத் தீர்மானத்தை ஆதரிக்க மறுத்தது.

உலகப் பொதுமறையாம் திருக்குறளை இந்திய அரசு தேசிய நூலாக அறிவிப்பது காலத்தின் கட்டாயமாகும்.

இக்கோரிக்கைக்காக தமிழ்த்தாய் அறக்கட்டளை தன் பங்களிப்பாக கல்வியியல் சார்ந்து ஆய்வுக் கருத்தரங்குகள் வழியாக இப்பணியை முன்னெடுத்து வருகிறது.

மலேசியாவில் தஞ்சோங் மாலிம் ஹிறிஷிமி பல்கலைக் கழகத்தில் 31.10.2011இல், கொல்கத்தாவில் பாரதியார் தமிழச் சங்கத்தில் 11.03.2012இல், அந்தமானில் அந்தமான் தமிழர் சங்கத்தில் 07.08.2012இல் கருத்தரங்குகள் நடத்தியும், சென்னையில் அரசு அருங்காட்சியத்தில் 17.03.2013இல் திருக்குறள் தேசியநூல் கோரிக்கை மாநாடு நடத்தியும் உள்ளது.

மாலத்தீவு நாட்டின் தேசியப் பல்கலைக் கழகத்தில் 23.08.2013இல் மாலத்தீவு நாட்டின் தாய்மொழியான திவேகியில் திருக்குறள் முதல் அதிகாரம் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.

இப்படிப்பட்ட நிகழ்வுகளில், ஆய்வுக் கருத்தரங்குகளில் ஆய்வாளர்களால் வாசித்து வழங்கப்பெற்ற கட்டுரைகளை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஏற்று நூலாக அச்சிட்டு வெளியிட்டுள்ளது.

தமிழ்மொழியின் முன்னேற்றத்திற்கும், தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சிக்கும், தமிழ்ப் படைப்பாளர்களின் வாழ்க்கை உயர்வடையவும் துணை நின்று ஊக்கப்படுத்தி உதவி வரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர்

கோ. விசயராகவன் அவர்களுக்கு என்றென்றும் நன்றிக் கடன்பட்டுள்ளோம்.

திருக்குறளைத் தேசியநூலாக இந்திய அரசு அறிவிக்க வேண்டும் என்கிற கோரிக்கை முயற்சியில் தமிழ்த்தாய் அறக்கட்டளைக்குத் துணை நின்று உதவி வருகின்ற கவிமாமணி துரை. இராசமாணிக்கம், பாவலர் ப.கோ. நாராயணசாமி, கவிஞர் மா.கோமுகி மணியன், திருக்குறள் புலவர் நாவை.சிவம், செயங்கொண்ட சோழபுரம் புலவர் சி. பன்னீர்செல்வம், அரிமா தா. சம்பத், கவிமாமணி சி.உதியன், புரவலர் மா. சின்ராஜ், அரிமா பா. இந்திரராசன், குடியாத்தம் குமணன், தகடூர் தமிழ்கதிர், ஆய்வாளர் எஸ்.கே. மணி, அதம்பை வை. இராமமூர்த்தி, துணைவியார் சிவகாமி ஆகியோருக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

-உடையார்கோயில் குணா

மாண்புமிகு தமிழக முதல்வர்
புரட்சித்தலைவி அம்மா அவர்களால்
தமிழ்நாடு சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பெற்ற
திருக்குறளை இந்தியாவின் தேசிய நூலாக
அறிவிக்கக் கோரும் தமிழக அரசின்
தனித்தீர்மானம் மற்றும் சட்டமன்ற உரை.
நாள் : 13.04.2005

# 5. அரசினர் தனித் தீர்மானம்

## திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக அறிவிக்கக் கோருதல்

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** அரசினர் தனித் தீர்மானம் திருக்குறளை இந்தியாவின் தேசி இலக்கியமாக அறிவிக்கக் கோரும் தீர்மானம் மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள்.

**மாண்புமிகு செல்வி ஜெ.ஜெயலலிதா:** மாண்புமிகு பேரவைத் தலைவர் அவர்களே, திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக அறிவிக்கக் கோரும் தீர்மானம் ஒன்றைக் கீழ்க்கண்டவாறு பேரவையில் முன்மொழிகின்றேன்;

**திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக அறிவிக்கக் கோரும் தீர்மானம்:**

தெய்வப் புலவர் திருவள்ளுவரால் இயற்றப்பட்ட இறவாத இலக்கியமாகிய திருக்குறள், இந்தியத் திருநாட்டின் தேசிய இலக்கியமாக அறிவிக்கப்பட வேண்டும் என்று இப்பேரவை விழைகின்றது.

எழிலார்ந்த இலக்கிய வடிவம், ஆழ்ந்த கருத்துகள், அறத்தை, நீதியை விளக்கும் அற்புதம், உலகளாவிய பார்வை ஆகியவற்றால் உலக இலக்கியத்தில் தன்னேரில்லாத தனி இடத்தைப் பெற்றது திருக்குறள்.

மானுடப் பண்புகளை விளக்கி, மனித குலத்திற்கு மாபெரும் அறநூலாய் விளங்கும் மகத்தான நூல் திருக்குறள். காலத்தை வென்று நிற்கும் ஞானக் களஞ்சியமாய் ஞாலத்தில் உயர்ந்து நிற்பது திருக்குறள். புனித நூலாம் பைபிளுக்கு அடுத்தபடியாக, உலக அளவில் அதிகமான மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட தனிப்பெரும் சிறப்பு திருக்குறளுக்கே உரியது.

மக்களாட்சித் தத்துவம், அரசியல், ஆட்சி அமைப்பு ஆகியவற்றைப் பற்றிய அடிப்படைக் கொள்கைகளோடு, இந்திய அரசமைப்புச் சட்டத்தில் இடம் பெற்றுள்ள இணையற்ற கோட்பாடுகளாகிய சமயம் சாராத தன்மை, சமூக நீதி ஆகியவற்றைப் பற்றியும், அரிய பல கருத்துக்களைத் தன்னகத்தே கொண்ட திருநூல் திருக்குறள். தொன்மை வாய்ந்த நமது மரபையும், புதுமை வாய்ந்த குடியாட்சிக் கோட்பாடுகளையும் கொண்டது திருக்குறள்.

மானுடத்தின் விழுமிய பண்புகளை, அது அறம் சார்ந்ததாயினும் சரி, உலகியல் சார்ந்ததாயினும் சரி, அவற்றை உலகளாவிய அளவில் எடுத்து இயம்பும் சமயம் சாராத ஓர் உன்னத நூல் திருக்குறளைத் தவிர, வேறு ஒன்று இன்னும் எழுதப்படவில்லை என்பதே உண்மையாகும். சாதி மத பேதங்களுக்கு அப்பாற்பட்டு, சகல மனிதருக்கும் பொது நீதியை உரைக்கும் திருமறை திருக்குறளாகும். இந்தியக் குடியாட்சியின் சமயம் சாராத இயல்புக்கு ஏற்ற ஒரே நூல் திருக்குறள்தான்.

சங்க காலமாகிய கி.மு. முதல் நூற்றாண்டில் எழுதப்பட்ட தொன்மை வாய்ந்ததாயினும், இன்றைய நவீன குடியாட்சித் தத்துவங்களுக்கு ஏற்ற முறையில் அரசியல் தத்துவத்தை விளக்கும் திருக்குறள், இந்தியத் திருநாட்டின் தேசிய இலக்கியம் என்னும் சிறப்பைப் பெறுவதற்கு முற்றும் தகுதி வாய்ந்தது. அன்பு, அருள், இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், விருந்தோம்பல், இனியவை கூறல், செய்நன்றி அறிதல், நடுவு நிலைமை, பயனில சொல்லாமை, ஈகை, புகழ், வாய்மை, கொல்லாமை, இறைமாட்சி, கல்வி, பெரியாரைத் துணைகோடல், செங்கோன்மை, கண்ணோட்டம், ஊக்கம் உடைமை, ஆள்வினை உடைமை, சொல் வன்மை, அவை அஞ்சாமை, பொருள் செயல் வகை, மருந்து, குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, உழவு, ஒழுக்கம், நட்பு போன்றவை பற்றிய காலத்தால் அழியாத கருத்துகளை ஞாலத்திற்குத் தந்திருக்கும் நன்னூல் திருக்குறள். இவ்வாறு, உலகைத் தழுவும் அகலப் பார்வையைக் கொண்டிருந்தபோதிலும்,

ஆழமான கருத்துகளை மிகச் சிறிய வடிவான குறள் வெண்பா வடிவில் திருவள்ளுவப் பெருமான் வடித்திருக்கும் திறம் எண்ணி எண்ணி வியக்கத்தக்கது.

ஒவ்வொரு திருக்குறள் மட்டும் அன்றி, அந்தக் குறளின் ஒவ்வொரு சீரும் செதுக்கி வடிவமைக்கப்பட்ட சிறப்பை உடைது. எக்காலத்திற்கும் பொதுவான கருத்துகளை இயம்பும் நூல் என்பதால், தற்காலத்திலும் ஒவ்வொரு மனிதனும் பின்பற்ற வேண்டிய உன்னத நூல் என்று திருக்குறள் ஒன்றை மட்டுமே நாம் சொல்ல இயலும்.

இத்தகைய இணையற்ற சிறப்புகளைப் பெற்றிருக்கும் ஈடற்ற திருமறையாகிய திருக்குறளை, இந்தியத் திருநாட்டின் தேசிய இலக்கியமாக அறிவிக்க வேண்டும் என்பது, இந்தப் பேரவையில் உள்ள ஒவ்வொருவருடைய விருப்பமும் ஆகும்.

எனவே, உலகச் சிந்தனையின் மணிமுடியாகவும், தமிழ் மொழியின் தலையாய அணிகலனாகவும் விளங்கும் வான்புகழ் கொண்ட திருக்குறளை, இந்தியத் திருநாட்டின் தேசிய இலக்கியமாக மத்திய அரசு அறிவிக்க வேண்டும் என்று இப்பேரவை பெரிதும் விழைகிறது.

திருக்குறளைத் தேசிய இலக்கியமாக அறிவிக்க வேண்டும் என்று பல ஆண்டுகளாக தமிழ்ச் சான்றோர்களும், அறிஞர் பெருமக்களும் வலியுறுத்தி வந்த வேண்டுகோளுக்கிணங்க, 16.9.2004 அன்று, **மாண்புமிகு பாரதப் பிரதமர் டாக்டர் மன்மோகன் சிங்** அவர்களிடம் **மாண்புமிகு தமிழ்நாடு** முதலமைச்சர் **செல்வி ஜெ. ஜெயலலிதா அவர்கள்** அளித்திட்ட கோரிக்கை மனுவை ஒட்டி, உலகப் பொதுமறையாகவும், தேசியத் திருமறையாகவும் விளங்கும் திருக்குறளை, தேசிய இலக்கியமாக அறிவிக்க வேண்டும் என்று இப்பேரவை மத்திய அரசை வலியுறுதிக் கேட்டுக்கொள்கிறது.''
(மேசையைத் தட்டும் ஒலி)

# பொருளடக்கம்

# திருக்குறளில் அரசியல் கோட்பாடுகள்

முனைவர் கோ. விசயராகவன்

**முன்னுரை**

அரசு பற்றிய கல்வியே அரசியல், அரசு, ஆட்சி, மக்கள், நாடு ஆகியவையெல்லாம் அரசியலுக்குரியன. ஆனால் திருக்குறளிலுள்ள அரசியலுக்கு அரசனது இயல்புகள் என்று பரிமேலழகர் உரையில் பொருளுரைக்கிறார். எனவே திருவள்ளுவரைப் பொறுத்தவரையில் அரசனது பண்புகளைக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் அது இன்றைய அரசியலுக்கும் பொருத்தமுடையதாய் அமைந்துள்ளதே திருக்குறளின் பண்பாகும்.

அரசன் நாட்டினை ஆளுவதற்கு ஏற்ற வழிமுறைகளைக் கூறும் வகையில் அரசனின் கடமை, அமைச்சர், தூதர், ஒற்றர், வெளிஉறவு, நீதி, வரி, படை, போர், நாடு நிர்வாகம் போன்றவற்றைப் பற்றி விளக்குவதிலும் திருக்குறளுக்கு நிகர் வேறொன்றில்லை. தொலைநோக்குப் பார்வையோடு தொட்டுக் காட்டிய வள்ளுவனின் அன்றைய அரசியல் கோட்பாடுகளை இன்றைய அரசியலோடு பொருத்திப் பார்க்கும் பாங்கினையே திருக்குறளில் அரசியல் கோட்பாடுகள் எனும் தலைப்பு வரையறுத்துக் கூறுகிறது. திருக்குறள் மன்னர்கள் காலத்தில் தோன்றியது என்றாலும் கூட அவற்றிலே கூறப்பட்டுள்ள அரசனின் தன்மைகள், அரசாள்வோனின் பணிகள் முதலியவை இன்றைய குடியாட்சி அரசியலின் உட்பிரிவுகளோடு தொடர்புடையனவாக உள்ளதாலும் இதனை ஆய்வோடு பார்ப்பதாலும் இத்தலைப்பு இவ்வாறு அமைந்ததெனலாம்.

**அரசு, அரசர்**

குடும்பம், குடி, சமயம், பிற மன்றங்கள் ஆகியவை அடங்கப் பரந்த அமைப்பே சமூகம். அச்சமூகத்திலுள்ள மேலாண்மையே அரசாகும். அரசு என்பது சட்டமியற்றி அதனை நடைமுறைப்படுத்திக் காண்பித்து வரும் ஓர் அரசமைப்பு. அரசு பெற்ற உருவகமே ஆட்சி எனலாம். அரசே தன்னிடம் இயல்பாக

அமைந்த அதிகாரத்தை ஆட்சி எனப்படும் ஆளுங்கணத்திற்குத் தந்து செயல்படுகிறது. இவ்வாளுங்கணத்தின் தலைமையே அரசன். இது முடியாட்சியின் நிலை. இன்றைய குடியாட்சி நிலையில் இது குடியரசுத் தலைவர் (அ) அமைச்சர் என அமையும். இப்படிப்பட்ட அரசியலை மக்கள், நிலப்பரப்பு, ஆட்சி, இறைமை என நான்கு கூறுகள் அடிப்படையிலான கோட்பாடுகளை இன்றைய அரசியல் அறிஞர்கள் வகுத்துரைக்கின்றனர். இவ்வாறே வள்ளுவரின் அரசியலும் வகுத்துரைக்கிறது. அன்றைய வள்ளுவரின் தொலைநோக்கு இன்றும் பொருந்தக்கூடிய தொடர்புள்ளனவாக உள்ளதால் இத்தலைப்பு பொருந்துவது புலப்படும்.

**அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தற்கு இயல்பு (குறள்.382)**

**தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்**
**நீங்கா நிலனாள் பவர்க்கு (குறள்.383)**

வீரம், ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய நான்கும் (382), தூங்காமை, கல்வி, துணிவு இம்மூன்றும் (383) ஆகிய அனைத்துப் பண்புகளும் அரசனுக்கு அவசியம் என்கிறார் வள்ளுவர். இவை இன்றைய அரசியலுக்கு நிறைந்திருக்க வேண்டிய பண்புகளாகின்றன.

**அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா**
**மானம் உடையது அரசு (குறள்.384)**

**காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம் (குறள்.386)**

**இன்சொலால் ஈத்துஅளிக்க வல்லார்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்துஇவ் வுலகு (குறள்.387)**

**செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக்கீழ் தங்கும் உலகு (குறள்.389)**

**கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்**
**உடையானாம் வேந்தர்க்கு ஒளி (குறள்.390)**

வறியோர்க்கு ஈயும் பண்புடையவனாகவும், கல்வி கேள்விகளில் தேர்ந்த நுண்ணறிவு பெற்றவனாகவும், ஒரு பொருளை நன்கு ஆராய்ந்து துணிந்து கருத்துகளை எடுத்துரைப்பவனாகவும், குடிமக்களின் குறைகளை அறிந்து உடனடியாக நீக்கும் தன்மையைப் பெற்றவனாகவும், காட்சிக்கு எளியவனாகவும், இன்சொல் கூறுபவனாகவும், பொறுமையுடன் பொதுமக்களின்

ஏச்சுப்பேச்சுகளைச் செவிமடுத்து அவற்றுள் நன்மைத் தீமைகளை ஆராய்ந்து ஆராய்ச்சியை நடத்துபவனாகவும் இருத்தல் வேண்டும் என மேற்காணும் குறள்கள் கூறும் பண்புகளையெல்லாம் ஒருங்கே பெறுவது அன்றைய அரசனுக்கு மட்டுமல்ல இன்றைய அரசியலுக்கும் பொருந்துகின்றது.

அரசனின் பணிகளாக, காவற்பணி, போர்ப்பணி, ஆட்சிப்பணி, வருவாய்ப்பணி அமைகின்றன. வள்ளுவத்தில் காத்தல், வினை, தெரிந்து விளையாடல், இயற்றல், ஈட்டல், குடிஓம்பல் முதலானவை குறிப்பிடப்பட்டுள்ளன.

**காவற்பணி**

மற்ற நாட்டுடன் ஏற்படும் தாக்குதலினின்று மக்களையும் நாட்டையும் காக்கும் பணியை வள்ளுவர்,

**இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை**
**முறைகாக்கும் முட்டாச் செயின் (குறள்.547)**

**செருவந்த போழ்தின் சிறைசெய்யா வேந்தன்**
**வெருவந்து வெய்து கெடும் (குறள்.569)**

என்ற குறள்களின்மூலம் விளக்குகிறார்.

பிற நாடுகளுடன் மட்டுமல்லாமல் உள்நாட்டிலே நிகழும் உட்பகையிலிருந்து நாட்டு மக்களைக் காத்தல் அரசனின் கடமையென்பதை,

**பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு (குறள்.735)**

என்ற குறள் காட்டுகிறது. மேலும் இவ்வுட்பகை தோன்றும்போதே களைந்தெறியப்பட வேண்டுமென்பதை,

**இளைதாக முள்மரம் கொல்க; களையுநர்**
**கைகொல்லும் காழ்த்த இடத்து (குறள்.879)**

என்ற குறள்மூலம் கட்டளையிடுகிறார் வள்ளுவர்.

**இடனறிந்து மன்னன் செயல்பட வேண்டும்**

இக்கால அரசாட்சியில் இத்தகைய புறப்பகையை எதிர்க்கப் படைகளும், உட்பகையை களையக் காவல் படைகளும் உள்ளமை குறளுணர்த்தும் அரசியல் கோட்பாடேயாகும்.

போர்ச்செயலைச் செய்வதற்கு முன்பே அச்செயல் பற்றி ஆராயவேண்டும் என்பதை,

**தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு**
**அரும்பொருள் யாதொன்றும் இல் (குறள்.462)**

என்ற குறளிலும், போரில் பொருளைச் செலவிடும்போது அதன் வலிமையையும் உணர்ந்து செயல்பட வேண்டும் என்பதை,

**வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்**
**துணைவலியும் தூக்கிச் செயல் (குறள்.471)**

என்ற இவ்விரு குறள்களிலும், போரிட ஏற்ற இடம் தெரிவு செய்வதிலும் அரசன் விழிப்புடன் செயல்பட வேண்டு மென்பதை,

**காலாழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா**
**வேலான் முகத்த களிறு (குறள்.500)**

**தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்**
**இடம்கண்ட பின்அல் லது (குறள்.491)**

**நெடும்புனலுள் வெல்லும் முதலை; அடும்புனலின்**
**நீங்கின் அதனைப் பிற (குறள்.495)**

முதலான குறள்களிலே வள்ளுவர் எடுத்துரைப்பதை இடனறிந்து செய்தலின் இயல்புவழி அறியலாகிறது.

**அமைச்சர்**

அரசாட்சியில் அரசனுக்கு அடுத்த இடத்தைப் பெறுபவர் அமைச்சரே. அமைச்சர் மக்களுக்கும் அரசனுக்கும் நெருங்கிய தொடர்புடையவர். இவர் அரசரின் குறிப்பறிந்து நடக்கத் தெரிந்தவராகவும் அரசியல் அறங்களை அறிந்து, கல்வி நிறைந்து, அடங்கிய சொல்லை யுடையவராகவும் இருத்தல் வேண்டும் என்று அமைச்சியல் என்னும் பத்து அதிகாரங்களின்வழி வள்ளுவர் உரைக்கிறார். இக்கோட்பாடும் இன்றைய அரசியலுக்குப் பொருந்துவதாகவே உள்ளது.

**தூதுவர்**

அரசவையில் நாட்டுடனான தொடர்பை வலுப்படுத்தவும், நட்புறவைப் பேணிக் காக்கவும் தூதுவர்கள் மிகவும் அவசியமானவர்களாக இருந்தனர். அண்டை நாட்டோடு தொடர்பு கொள்ளும்போது சொல்ல வருபவற்றைச் சுருக்கமாக, கடுஞ்சொற்களைத் தவிர்த்து, கேட்பவர் இன்புறும்படி சொல்லி உடன்பாடு செய்ய வல்லவனே சிறந்த தூதுவனாகக் கருதப்பட்டான் என்று வள்ளுவர் தூதுவருக்கு இலக்கணம் வகுக்கிறார்.

**ஒற்றர்**

அரசனுக்குக் கண் போன்றவன் ஒற்றன். பகைநாட்டின்பால் சென்று அங்கே உள்ள நடப்புகளை அறிந்தும் உள்நாட்டுச்

சூழ்நிலைகளைத் தெரிந்தும் வந்து அரசனிடம் தெரிவிப்பதே இவன் பணி. இப்பணியின் சிறப்பினை ஒற்றாடல் என்னும் அதிகாரம்வழி விளக்குகிறார் வள்ளுவர். இன்றைய அரசியலில் சி.பி.ஐ. என்று கூறப்படும் மத்தியப் புலனாய்வுத் துறைக்கு இக்கோட்பாடு பொருந்தும்.

**வருவாய்ப்பணி**

அரசன் தன்ராஜபோக வாழ்விற்கும், குடிமக்களைக் காக்கவும் பெருஞ்செல்வம் செலவழிக்க வேண்டியிருந்தது. அதாவது அயல்நாட்டார் தம்நாட்டைத் தாக்காமல் நாட்டின் எல்லைகளைப் பாதுகாக்கப் பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டியிருந்தது. பாதுகாவலர்களையும் பாதுகாப்பு ஆயுதங்களையும் உருவாக்கப் பொருள் தேவை என்பதால் செலவிடுவதற்குப் பொருள் தேடவும், தேடியவற்றைக் காத்தலும், காத்தவற்றை முறையாக வகுத்தலும் அரசனுடைய தலையாய பணிகளாக இருந்தன. இத்தகைய பணிகளை,

**இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு (குறள்.385)**

**செய்க பொருளைச் செறுநர் செருக்குஅறுக்கும்**
**எஃகுஅதனின் கூரியது இல் (குறள்.759)**

**உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள் (குறள்.756)**

முதலிய குறள்களில் வள்ளுவர் விளக்குகிறார்.

*திருக்குறள் பொழுதுபோக்கு இலக்கியமன்று; மனித சமுதாயத்தின் பொதுச்சட்டம். இந்திய அரசியலமைப்புச்சட்டம் என்கின்றோமே அதுபோலச் சமுதாயத்தில் அரசியலமைப்புச் சட்டம் திருக்குறள். மக்கள் சமுதாயம் நாம் வாழ்வதற்கு அவர் 'விதிமுறை'களை வகுத்துத் தந்தார்.*

*(திருவள்ளுவரும் கார்ல்மார்க்சும்,*
*ம.பொ.சி., ப.68)*

*மனித வாழ்க்கைக்குரிய விதிமுறைகளை குறிக்கோள்களைத் திருவள்ளுவர் வகுத்துத் தந்துள்ளார் என்பது ஒன்று. மற்றொன்று, திருக்குறள் மனித சமுதாயம் அனைத்திற்கும் உரியது என்பது*

*(திருக்குறள் கனிகள்,*
*டாக்டர் ந.சஞ்சீவி, ப.169)*

எனவே மேற்கண்ட அறிஞர்களின் கருத்துகளின் மூலம் திருக்குறளில் அரசியல் கோட்பாடுகள் தெளிவாக விளங்குகின்றன.

**படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு (குறள்.381)**

ஆகிய 6 உடைமைகளையும் பெற்று அரசையும் குடிமக்களையும் நடுநாயகமாய் கொண்டு சிறந்த முறையில் ஆட்சிபுரியும் அரசனை,

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும் (குறள்.388)**

என இறைவனோடு ஒப்பிட்டு உணர்த்தும்போது வள்ளுவரே ஓர் அரசியல் அறிஞராக இங்குச் செயல்படுவதை உணரமுடிகிறது.

அறநெறியே அரசியலைத் தாங்கும் தூணாக அமைய வேண்டும் என்பதே வள்ளுவர் உள்ளம் என்று தெரிய வேண்டும். அதனால் தான் 'மறை செய்து' என்று அழகான சொல்லால் அரசியலார்க்கு அறிவுரை கூறியுள்ளார். அரசியலில் உள்ளோர் முறைசெய்து மக்களைக் காத்திடின் ''முறைசெய்யக் குறை'' என்ன இருக்க முடியும். 'முறை செய்து' என்ற சொற்றொடர்தான் அரசியலார் தம்பொறுப்புணர உணர்த்திய 'செஞ்சொல்' என நினைவுகூர்க. விரிந்து பொருள் காண்கில் இதன் பரப்பே 'அரசியல்' எனவாகும்.

**முடிவுரை**

பண்டைக் காலத்தில் மன்னராட்சியைத் தவிர வேறு அமைப்புகள் இல்லை. எனினும் மக்களாட்சியையும் குடியாட்சியில் கொடுங்கோலாட்சியையும் காணமுடிகிறது. ஆட்சி எந்த உருவத்தில் காணப்பட்டாலும் அதன் நோக்கம், பயன் ஆகியவை கருதித்தான் உயர்ந்தது என்றோ, தாழ்ந்தது என்றோ கொள்ளப்பட வேண்டும். திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே 'மக்கள் நல அரசுக்கு' வித்திட்டார் எனில் அது மிகையாகாது. திருவள்ளுவருடைய அரசியல் என்பது மக்கள் அரசாக இன்றும் என்றும் விளங்கும்.

## குறிப்பு நூல்கள்

1. *திருவள்ளுவரும் கார்ல்மார்க்சும்,* ம.பொ.சி.
2. *திருக்குறள் கனிகள்,* டாக்டர் ந. சஞ்சீவி.
3. *திருக்குறள்,* பரிமேலழகர் உரை.

# திருவள்ளுவர் அறிவுறுத்தும் சமூக உணர்வு

முனைவர் அ.ரோஸ்மேரி

**முன்னுரை**

அறிவியல் வளர்ச்சி சமூக அமைப்பில் பலவித மாற்றங்களை உருவாக்கியுள்ளது. கூட்டுக்குடும்ப அமைப்பு சிதைந்தது; தனிக்குடும்ப அமைப்பு மேலோங்கியது. மரபுகளும், சிந்தனைகளும் உடைக்கப்பட்டுப் புதிய சித்தாந்தங்கள் உருப்பெற்றன. 'பொருள் தேடுதல்' ஒன்றே வாழ்வின் குறிக்கோள் ஆயிற்று. சமூகப்பண்புகள் நலிந்தன. இச்சமூகச் சூழலில் அன்றும் இன்றும் என்றும் மானிடமும் உலகமும் நிலைத்து நிற்க வள்ளுவர் வகுத்த சமூக உணர்வுகளைச் சுட்டிக்காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**சமூகம்**

ஆணும் பெண்ணும் கூடி வாழ்வதே குடும்பம். தனிமனிதனும் குடும்பமும் ஒருங்கிணையும்போது சமூகம் தோன்றுகிறது. மனிதன் எந்தச் சூழலில் வாழ்ந்தாலும் சமூகத்திற்குக் கட்டுப்பட்டே வாழ்கிறான். சமூகம் நன்கு இயங்க வழிகாட்டும் முறைகளை நயம்பட உரைப்பதே சமூக உணர்வு.

**1. தனி மனிதனுக்கு நல்கும் உணர்வு**

தனிமனிதன் செய்யும் தவறுகள் பல வேளைகளிலும் ஒரு சமூகத்தையே சீரழிக்கின்றது. இயல்பான வாழ்க்கையினைச் சிதைக்கும் பிறமகளிர் உறவு, கள்ளுண்ணல், சூது, தீநட்பு, பொய்கூறல், களவு, அழுக்காறு, கல்லாமை, இன்னா செய்தல் போன்றவற்றையும் அதனால் வரும் விளைவுகளையும் அவற்றிலிருந்து நேர்வழிப்படுத்தும் முறையினையும் எக்கால வாழ்க்கைக்கும் பொருந்துமாறு கூறியுள்ளார் திருவள்ளுவர்.

**1.1 பிறமகளிர் உறவு**

'ஒருவனுக்கு ஒருத்தி' என்பதே வள்ளுவர் வகுத்த நெறி. இதுவே ஆரோக்கியமான உறவுமாகும். சிற்றின்பம் கருதி பல

மகளிரை நாடும் மாந்தர்களுக்குக் கொடிய நோயான 'எய்ட்ஸ்' வந்து தாக்கும் என்பது இன்றைய மருத்துவ உண்மை. பிற மகளிர் நாட்டம், ஆக்கம்-ஊக்கம்-புகழ் என்பவற்றைக் கெடுத்துத் தீராப்பழியைக் கொடுக்கும். பொருட்பெண்டிருடன் இன்பம் துய்த்தல் என்பது உயிரற்ற பிணத்தை இருட்டறையில் தழுவுவதற்கு ஒப்பாகும் என வள்ளுவர்

**பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று (குறள்.913)**

என்னும் குறள்வழி மிகக்கடுமையாக எச்சரிக்கின்றார்.

**1.2 கள்ளுண்ணல்**

இன்றைய காலக்கட்டத்தில் மது அருந்துதல் ஒரு நாகரிகச் செயலாகக் கருதப்படுகிறது. மது உண்ணும் மயக்கத்தால் உறவு முறைகள் பாதிக்கப்படுகின்றன. ஈட்டும் பொருள் மதுவில் மூழ்கி குடும்பம் வறுமையில் ஆழ்ந்து போகிறது. கேரளா மாநிலத்தில் மட்டும் புத்தாண்டு நாளில் 32 கோடி ரூபாய்க்கு மது விற்கப்பட்டது என்னும் செய்தி மனித குலத்தின் நிலைமையைக் சுட்டுகிறது. இது குடும்ப உறவினைச் சிதைப்பதுடன் வரும் தலைமுறையினரையும் மனநோய்க்கு ஆளாக்குகின்றது. விவாகரத்து இன்று கேரளாவில் பெருகிவருகிறது. இத்தகைய விளைவுகளை உருவாக்கும் கொடிய பழக்கத்தினை ஒழிக்க வேண்டும். மதியினை மயக்கும் மதுவினைத் தொடர்ந்து அருந்துவது உயிரினை மாய்த்துக் கொள்ளச் சிறிதுசிறிதாக நஞ்சினை உண்பதற்கு ஒப்பாகும் என்று

**துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பார் கள்ளுண் பவர் (குறள்.926)**

என்னும் குறள் வாயிலாகத் திறன்பட உணர்த்துகின்றார். போதையினால் மதியிழந்து பெற்றோரைத் தாக்கும் கொடிய செயல்கள் இன்று நம்கண்முன் நிகழ்கின்றன.

**1.3 சூது, தீ நட்பு கூடாமை**

இந்தியாவிலும் தகவல் தொடரியத்தின் வளர்ச்சி மேலைநாட்டு நிறுவனங்களின் வளர்ச்சிக்குப் போட்டியாக அப்பண்பாட்டினைப் பின்பற்றும் இன்றைய இளைஞர்கள் விடுதிகளில் பொழுது போக்கி, மதுவிலும், மங்கையிலும், சூதிலும் சிக்கித் தத்தளிக்கின்றனர். இங்குதான் தீ நட்பும் கூடா நட்பும் இணைகின்றன. இவற்றின் விளைவினை உணர்த்துமாறு தனித்தனி அதிகாரங்களே அமைத்து அறிவுறுத்துகின்றார். எந்தச் சமூகமும் சீராக அமைவதற்கும் இயங்குவதற்கும் தனிமனிதனின்

ஒழுக்க நெறிகள் அடிப்படைக் கூறுகளாக அமைகின்றன. அதனால்தான்,

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும். (குறள்.131)**

என ஒழுக்கம் உயிரை விடச்சிறந்தது என்று போற்றப்படுகிறது.

**2. குடும்ப உணர்வு**

தனிமனிதனின் மேன்மை, இல்லங்களை மேன்மைப் படுத்துகின்றன. இல்வாழ்வோர் சமூகத்துடன் இணைந்து பிறரால் பழக்கப்படாது வாழ்வதற்கு உரியர். தனிமனிதன் ஒழுக்கத்துடன் வாழ்ந்தால் இல்லறம் நல்லறமாகிச் சமூக அறம் மேன்மை பெறும் என்ற கருத்தை அடியொற்றி வள்ளுவர் இருபது அதிகாரங்களில் இல்வாழ்க்கையின் மேன்மையை உணர்த்துகின்றார். அவ்வகையான இல்லறம் எவ்வாறு அமையும் என்பதை,

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது. (குறள்.45)**

என்ற குறள்மூலம் விளக்குகின்றார். ஒத்த தலைவனையும் தலைவியையும் நன் மக்கட்பேறினையும் கொண்டோர் இல்வாழ்வின் முழுப்பயனையும் பெறுகின்றனர்.

**2.1 தலைவனின் கடன்**

பொருள் ஈட்டுவது தலைவனின் கடமையாகும். அதுவும் நேர்வழியில் பொருள் ஈட்டி வாழ்க்கையைச் சீராக நடத்த வேண்டும். அதன் பயனை,

**அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து**
**தீதின்றி வந்த பொருள். (குறள்.754)**

எனக்கூறி உணர்த்துகின்றார். பிறர் துன்பம் தீர்த்தல், எதையும் தாங்குதல், பெற்றோர் சுற்றத்தாரை மதித்தல், வழிகாட்டல், அறவழியில் சென்று கடவுளைத் தொழல், இறந்தவர்களை மதித்து பிதிர்க்கடன் செய்தல் ஆகியன குடும்பத்தலைவனின் கடமைகள் ஆகும். தலைவன் கடமை தவறாத காவலனாகவும் செயல்பட வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

**2.2. தலைவியின் கடன்**

கணவனின் தேவைகளைப் புரிந்து, வரவிற்கு ஏற்ப செலவு செய்து, குழந்தை நலம் பேணி, இன்முகத்துடன் விருந்தோம்பி, சுற்றத்தாரை மதித்து, அன்புடன் பழகும் மனைவியே நல்ல இல்லத்தரசி ஆவாள் என்று திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

நற்குணம் படைத்த தலைவி இருக்கும் குடும்பத்தில் எல்லாம் நிறைவாகக் காணப்படும். இல்லாவிடில் எல்லாம் நிறைவாக இருந்தும் குறைவாகவே உணர்வர். இதனை,

**இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை? (குறள்.53)**

எனக்கூறுகின்றார். இன்று தலைவியும் பொருள் ஈட்டத் தொடங்கியதோடு தலைவியின் வேலைப்பளு அதிகமாகவும், தலைவனுக்குத் தாழ்வு மனப்பான்மை ஏற்படவும், இல்லத்தில் இன்பம் நலிந்து விடவும் செய்கிறது. இது சமுதாய மாற்றத்தால் ஏற்பட்ட விளைவே. இத்தகைய தலைவருக்கு,

**இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாம் தலை. (குறள்.47)**

என்று கூறி உணர்வூட்டுகிறார் வள்ளுவர்.

### 2.2 பெற்றோர்-பிள்ளைகளின் கடன்

இல்லறம் நல்லறம் ஆகும் போதே வரும் தலைமுறையினரும் சமுதாய நலனை விரும்புவர். பெற்றோர் - பிள்ளைகளின் கடமைகளை மிகவும் ஆணித்தரமாகக் கூறுகிறார் வள்ளுவர். தந்தை மகனுக்குச் செய்யும் உதவி அவனைச் சான்றோர் அவையில் முந்தியிருக்கச் செய்வதே. தன்னை முன்னேற்றிய தந்தைக்கு மகன் செய்யும் பதிலுதவி நற்பண்பும் திறனும் பெற்ற இவனை மகனாய்ப்பெற இவன் தந்தை என்ன தவம் செய்தானோ! என்று சான்றோர் புகழும்படி வாழ்வதாகும். தம்மைவிடத் தம்மக்களை அறிவிற் சிறந்தவனாக ஆக்குதல் இவ்வுலக உயிர்க்கெல்லாம் இன்பம் தரும். தன்மகனைச் சான்றோன் எனக் கேட்கும்போது, தாய் அவனை ஈன்றபொழுதைவிட மிக மகிழ்கிறாள். இன்றோ, தனது பணச்செருக்கால் தகுதியற்ற மகனுக்கு எங்கும் முதல் இடத்தைப் பெற்றுக் கொடுக்கிறார்கள். விளைவோ துன்பம் அறியாது பொறுப்பின்றிப் பொழுது போக்குகளை நாடிச் செல்பவர்களாக மக்கள் மாறிவிடுகின்றனர். பெற்றோரைத் தலைகுனியவும் வைக்கின்றனர்.

### 3. சமூக நலம் நாடுதல்

சமூக அமைப்புகளில் காணும் சில தீமைகளும் வள்ளுவரால் சுட்டிக் காண்பிக்கப்பட்டுள்ளன.

### 3.1 ஆட்சி

ஆட்சி புரிவோர் மக்களுக்கு நலம் பயக்கும் பன்னெடுங்காலத் திட்டங்களை வகுத்து, அதற்கான பொருளை நேரிய வழியில் ஈட்டி, எந்தக் குறையும் நேர்ந்திடாவண்ணம் காத்து, உரிய வழிவகைகள் அறிந்து, முறைப்படி பகிர்ந்தளித்து, அரசினை நல்லரசாகவும், வல்லரசாகவும் இயக்குதல் வேண்டும். நல்லாட்சியின் அமைதி குலையும் வண்ணம் மிகக்கொடிய குற்றம் புரிவோரைக் கொலைத் தண்டனைமூலம் தண்டித்துச் சமூகத்தைக் காக்க வேண்டும் என்பதைப் பல்வேறு அதிகாரங்களில் குறிப்பிட்டுள்ளார். ஆட்சியாளரைச் சார்ந்தே குடிமக்கள் அமைவர்; செயல்படுவர். ஆட்சித் தலைவன் தீயவனாக, தவறான முறையில் பொருள் தேட முனைந்தால் கொடியவர்களும் இவனுடன் சேர்ந்து கோடி கோடியாகக் கொள்ளை அடிப்பர். இதனால் நாடும் நாட்டு மக்களும் அல்லல்படுவர் என்பதை,

**அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீரன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை. (குறள்.555)**

என்ற குறளால் உணர்த்துகின்றார்.

### 3.2 ஊழல்

இன்று பல துறைகளிலும் நடைபெறும் முறைகேடுகளை ஊழல் என்கிறோம். எங்கும் எதிலும் ஊழல் நிறைந்து நிற்கிறது. நெஞ்சிலிருந்து பிறக்கும் பேராசையும் பொருளாதார சமத்துவமின்மையும் ஊழலுக்குக் காரணங்கள் எனலாம். அதனால் வரும் கேடுகளை ஊழலைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு உணர்த்த,

**அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை**
**வஞ்சிப்ப தோரும் அவா. (குறள்.366)**

எனக்கூறி எச்சரிக்கின்றார்.

உள்ளவன் இல்லாதவன் என இரு நிலைகளில் சமூகம் வேறுபட்டு இருக்கிறது. அதனால் களவு, கொலை போன்ற அறம் சாராச் செயல்களில் ஈடுபட்டுப் பொருள் ஈட்டச் சிலர் முனைகின்றனர். அதனை,

**ஈன்றாள் பசிகாண்பாள் ஆயினும் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை (குறள்.656)**

என மிகவும் வன்மையாகக் கண்டிக்கிறார் வள்ளுவர்.

இன்று இலஞ்சம் வாங்கி, தொழில் அறிவு இல்லாத, திறனற்ற பணியாளரைத் தேர்வு செய்யும் நிலைமையும் நிலவுகிறது. இவ்வாறு தொழில் அறிவு இல்லாதவர்களிடம் ஒரு தொழிலை ஒப்படைப்பதனால் அது பலவிதமான துன்பங்களை விளைவிப்பதுடன் சமுதாய அமைப்பிற்கு உலையும் வைக்கின்றது. குறிப்பாகக் கல்வித்துறையில் அதன் பாதிப்பை நன்குணரலாம். அதனை,

**தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை**
**தீரா இடும்பை தரும் (குறள்.508)**

என்ற குறள் வாயிலாக உணர்த்துகின்றார். சோர்வும் சோம்பலும் காரணமாகக் கடமையைச் சரிவரச் செய்யாமலும் காலம் தாழ்த்துவதனாலும் பொருள் இழப்பு ஏற்படும். தொழிலாளர்களும் நிர்வாகமும் தம்கடமை உணர்ந்து நேர்மைப்பண்புடன் நடந்து கொண்டால்தான் தொழில் வளரும்; பொருள் வளம் பெருகும்; நாடும் வளம் பெறும். செய்ய வேண்டாதன செய்தாலும் கேடு வரும். செய்ய வேண்டியவற்றைச் செய்யாவிடினும் கேடு வரும் என்பதனை,

**செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க**
**செய்யாமை யானும் கெடும் (குறள்.466)**

எனக்கூறி எச்சரிக்கின்றார் வள்ளுவர்.

### 3.3 கல்விச் செல்வம்

கல்வி அறிவு இல்லாத தனிமனிதனும் சமூகமும் மேலோங்க இயலாது. கல்லாதவரை விலங்கோடு ஒப்புமை கூறி மேற்குடியில் பிறந்தும் கல்லாதவரைவிடக் கீழ்குடியில் பிறந்த கற்றவரே உயர்ந்தவர் என்று எடுத்துக்காட்டி கல்வியின் மேன்மையை உணர்த்துகின்றார். செல்வங்களுள் அழிவில்லாத செல்வம் அவன் பெற்ற கல்வியே ஆகும். இதனை,

**கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடல்ல மற்றை யவை. (குறள்.400)**

எனக்கூறியுள்ளார். கற்பிக்கும் ஆசிரியர், மாணவனின் சிந்தனைத் திறனைத் தூண்டிப் பொறுமையோடும் பொறுப்புணர்வோடும், துணை நின்று மாணவர்கள் சிறந்த சிந்தனையாளர்களாகவும், அறிஞர்களாகவும் உருவாகத் துணை புரியவேண்டும். ஆழ்ந்து அறியும் அறிவார்ந்த மாணவர்களை உருவாக்குவதில் வல்லவர்களாக இருத்தல் வேண்டும். இதனை,

**இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது**
**உணர விரிந்துரையா தார் (குறள்.650)**

என்ற குறள்வழி உணர்த்துகிறார்.

**3.4 தொழில் மேன்மை**

தொழில்களே நாட்டிற்கு வளத்தைத் தரவல்லன. மக்களின் கல்விக்கும் அறிவுக்கும் திறனுக்கும் ஏற்பப் பலவகைத் தொழில்கள் நிறைந்திருக்கும் சமூகமே சிறந்த சமூகமாகும். எக்காலத்திற்கும் அடிப்படையான உழவு, வாணிபம், மருத்துவம் ஆகியன வள்ளுவர் காலத்தும் இருந்தன.

**3.5 உழவு-வாணிபம்-மருத்துவம்**

மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் உணவு முக்கியமானதாகும். கேரளா மாநிலம் நீர்வளம் இருந்தும் உழவு நிலங்கள் சுருங்கிய காரணத்தால் உணவுப் பொருட்களுக்காகப் பிற மாநிலங்களை எதிர் நோக்கி நிற்கிறது. எக்காலத்தும் உழுதுண்டோர் வளமாகவே வாழ்ந்தனர் எனவும் சமூகத்தில் நன்கு மதிக்கப்பட்டனர் எனவும்,

**சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை (குறள்.1031)**

என்ற குறளில் குறிப்பிடுகின்றார். வாணிகத்தின் சிறப்பினை,

**வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோற் செயின் (குறள்.120)**

என்ற குறிளிலும், மருத்துவத்தின் பயனை,

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல் (குறள்.948)**

என்ற குறளிலும் கூறியிருக்கிறார்.

**முடிவுரை**

திருக்குறள் என்றும் கடைபிடிக்க வேண்டிய உயரிய கருத்தாக்கங்களைக் கொண்டு திகழ்கிறது. தனி மனித ஒழுக்கத்தில் தொடங்கி, குடும்பம், சமூகம் எனப் பல நிலைகளையும் பேசி, மேன்மையுறும் வழிமுறைகளை வலியுறுத்துகிறது. குறள் நெறிச்சார் சமூகம் மானுடம் சார் சமூகமே என்பதில் ஐயம் இல்லை.

# வள்ளுவர் கூறும் அன்புடைமை

முனைவர் அ. பரிமளகாந்தம்

**முன்னுரை**

மனிதன் ஒரு சமுதாயப் பிராணி. கூடி வாழும் இயல்புடையவன். வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளைத் தான்ஒருவனே தேடிக்கொள்ள இயலாதவன். ஆகையால் தன்னுடன் வசிப்பவர்களிடமிருந்து தனக்குத் தேவையானவற்றைப் பெற்றும், பிறருக்குத் தேவையானவற்றைக் கொடுத்தும் வாழும் இயல்புடையவன். இத்தகைய வாழ்க்கைக்குக் கூடி வாழ்வோருடன் ஒத்துப் பொருந்தி வாழும் இயல்பு தேவை. சமுதாயத்தில் உள்ளவருடன் ஒத்துப் பொருந்தி வாழ அன்பு ஒரு இணைப்புப் பாலமாக அமையும். அன்பு என்பதைக் க்ரியா அகராதி. "ஒருவரின் மனம் நெகிழும்படியாக மற்றொருவர் அவர் மேல் வெளிப்படுத்தும் நேசமும் நட்பும் கலந்த உணர்வு'' என்கிறது.

உலகில் பிறந்த ஒவ்வொருவரும் தீயநெறியை நீக்கி நன்நெறி வழி நின்று இவ்வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து மறுமை இன்பத்தை அடைய இன்றியமையாத நீதி நூல்களைச் சான்றோர்கள் வழங்கி இருக்கிறார்கள். அத்தகைய சான்றோர்களுள் தலைமகனாகத் திகழ்பவர் தெய்வப்புலவர் எனத் தமிழினம் கொண்டாடும் திருவள்ளுவர். இவர் தாம்இயற்றிய திருக்குறளில் உலகமக்கள் நலம் கருதிச் சொல்லாத நீதிகள் இல்லை. அத்தகைய நீதிகளில் ஒன்றுதான் மனிதச் சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாத அன்பு என்பது.

**நோக்கம்**

இக்கட்டுரையின் முக்கிய நோக்கம். மனிதன் கூடி வாழத் தேவையான அன்பு பற்றி திருவள்ளுவர் தம்திருக்குறளில் கூறியிருப்பதை ஆராய்ந்து விவரிப்பதாகும்.

**அன்புடைமை**

அன்பை விளக்க முன்வந்த வள்ளுவர் அன்புக்கென்று 'அன்புடைமை' என்ற ஒரு அதிகாரத்தையே எழுதியிருக்கிறார்.

அத்துடன் நில்லாமல் அன்பு பற்றிய செய்தியை மற்ற அதிகாரங்களிலும் ஆங்காங்கே விவரித்துச் சென்றிருக்கிறார். அன்புடைமை என்ற அதிகாரத்தில் பத்துக் குறள்களில் அன்புடைமையை விளக்கும் வள்ளுவர் அத்துடன் நின்று விடாமல் மேலும் குறள்கள், 45, 513, 681, 682, 807, 862, 911, 983, 992, 1009 போன்றவற்றிலும் அன்பைப் பற்றி விளக்கிக் கூறியிருக்கிறார்.

**அன்பின் தன்மை**

அன்புடைமை அதிகாரத்திலுள்ள முதல் குறளிலும் மூன்றாம் குறளிலும், அன்பின் தன்மை எத்தகையது என்று விளக்குகிறார். அன்பு எத்தன்மை வாய்ந்தது என்றால் அது இருக்கும் இதயத்தை எவ்விதத் தாழ்ப்பாள் கொண்டும் அடைக்க முடியாது என்றும், அன்புள்ளவர் உள்ளத்தில் உள்ள அன்பை அவர்கண் நின்று வழியும் கண்ணீரே உரைத்திடும் என்பதை,

**அன்பிற்கு முண்டோ அடைக்கும்தாழ்? ஆர்வலர்**
**புன்கண்ணீர் பூசல் தரும் (குறள். 71)**

என்றும்,

அன்பின் தன்மையைக் கூற வந்த வள்ளுவர் அன்பு என்பது அறத்திற்கும், நட்பு செய்வதற்கும் மட்டுமே துணையாகும் என்று அறிவில்லாதவர் நினைப்பர். ஆனால் பகை கொண்ட உள்ளத்தின் பகையைத் தீர்க்கும் கருவியாகவும் அன்பு பயன்படும் என்பதை கீழ்க்கண்ட குறள்மூலமும் விளக்குகிறார் வள்ளுவர்.

**அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை (குறள். 76)**

**அன்பு உயிரின் ஆதாரம்**

அருமையினும் அருமையான உயிருக்கு முதுகெலும்பு எவ்வாறு ஆதாரமாக இருக்கிறதோ, அவ்வாறே அன்பு என்ற இயல்பான குணமும் உயிருடன் இணைந்து உயிருக்கு ஆதாரமாக இருக்கிறதென்று,

**அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு**
**என்போ டியைந்த தொடர்பு**

என்ற குறளில் கூறுகிறார்.

**அன்புடையவர் அன்பிலாதார் இயல்பு**

அன்பு உள்ளவர், அன்பு இல்லாதவர், இவ்விருவர் நிலையினையும் குறள் 72ல் விளக்கும் வள்ளுவர் அன்பு

இல்லாதவர் சுயநலத்தின் மொத்த உருவம் என்றும், எதையும் எல்லாவற்றையும் தமக்கு தமக்கு என்று கொண்டாடுவர் என்றும், அன்புடையார் தன்னிடம் உள்ள அனைத்துப் பொருட்களே அல்லாமல் தன் எலும்பும் கூடப் பிறருக்கே உரியதாகக் கருதுவர் என்பதை,

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறருக்கு**

என்றும் கூறுகிறார்.

**அன்பிலார் நிலை**

வள்ளுவர் குறள் 77இல் அன்பில்லாதவர்களை இயற்கை எவ்விதமாக வறுத்தும் என்பதை விளக்குகிறார். அன்பில்லாத உயிர்களை, பகலவனின் கடுமையான வெய்யில் எலும்பு இல்லாத உயிர்களை எவ்வாறு காய்ந்து கருகச் செய்யுமோ அதேபோல அறம் வறுத்திக் கொல்லும் என்கிறார். இதைப் பின்வரும் குறளில்,

**என்பிலதனை வெய்யில் போலக் காயுமே**
**அன்பி லதனை அறம்**

என்றும், அன்பிலார் நிலையை, கொடிய வெய்யில் காயும் வன்மையான பாலைவனத்தில் பட்டுப்போன மரம் துளிர்ப்பதற்குச் சமம் என்றும் அத்தகையவர்களின் உடம்பு வெறும் எலும்பால் போர்த்தப்பட்டதே அன்றி அன்பால் இயங்கும் உயிரைத் தாங்கிய உடம்பாகாது என்றும் கூறுகிறார். அன்பு என்னும் ஊற்று உள்ளத்தில் ஊறாதவர்கள் வாழும் வாழ்க்கையை,

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரம்தளித் தற்று**

**அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு**

என்றும் விளக்குகிறார்.

**அன்பின் அருமை**

அதேபோல அகமாகிய உள்ளத்தில் அன்பென்னும் அருமை மிகுந்த உணர்வு இல்லாதவர்க்கு அழகிய வடிவங்களுடன் கூடிய புற உறுப்புகளையுடைய யாக்கை இருந்து பயன் என்ன? என்று,

**புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை**
**அகத்துறுப்பு அன்பில வர்க்கு?**

என்ற குறளில் வினவுகிறார்.

**அன்பால் விளையும் நன்மைகள்**

அன்பு என்னும் உணர்வு வாழ்க்கையில் ஒரு பற்றுதலை, ஆர்வத்தை ஏற்படுத்துவதுடன் பிறருடன் சேர்ந்து வாழும் தன்மையை உருவாக்குவதுடன், உடுக்கை இழந்தவனுக்கு உடனே சென்றுதழுவும் கைபோல இடுக்கண் வருங்கால் உதவும் நட்பு என்னும் அரிய உறவு மலரப் பெரும்வாய்ப்பையும் கொடுக்கும் என்கிறார்.

**அன்புஈனும் ஆர்வ முடைமை அதுஈனும்**
**நண்புஎனும் நாடாச் சிறப்பு**

அது மட்டுமல்லாமல் எத்தனையோ அறங்கள், புண்ணியங்கள் செய்து இன்புற்று வாழ்ந்த வாழ்க்கை கொடுக்கும் வீடுபேறு என்னும் இன்பத்தைப் பிறரிடத்தில் அன்போடு வாழும் வாழ்க்கை கொடுக்கும் என்கிறார்.

**அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து**
**இன்புற்றார் எய்துஞ் சிறப்பு**

அன்புடையோர், அன்பிலர், அன்பின் தன்மை அன்பால் விளையும் நன்மை, அன்பற்றோரின் நிலை பற்றி விரிவாக அன்புடைமையில் முத்து முத்தான பத்து குறள்களில் விளக்கும் வள்ளுவர் வீடு பேற்றை அடைய உதவும் இல்வாழ்க்கை பண்புடையதாகவும், பயனுடையதாகவும் இருக்க வேண்டுமானால் கணவன், மனைவி, குழந்தைகள், சுற்றம் சூழல் அன்புடனும் அறத்துடனும் இருக்க வேண்டும் என்பதை,

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

என்ற குறள்மூலம் விளக்குகிறார்.

தனிமனிதன் ஒருவன் அறிவுடையவன். தெளிவானவன், செயலாற்றத் தக்கவன் என்று முடிவு செய்ய அறிவு, துணிவு, ஆசையின்மை இவற்றுடன் அன்பும் சேர்ந்து இந்நான்கும் உடையவனாக இருத்தல் முக்கியம் என்பதை கீழ்க்காணும் குறள் விளக்குகிறது.

**அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு**

தனிமனிதனுக்கு மட்டுமல்லாமல், நாடாளும் மன்னனுக்கு உறுதுணையாக இருக்கும் தூதுவனுக்கும் இருக்க வேண்டிய

பண்பாக அன்புடைமையைக் கூறுகிறார். தூது காரியம் வெற்றியடைய நல்ல உயர்குடியைச் சேர்ந்திருந்தலும், அரசனால் விரும்பக் கூடியவனாக இருப்பதுடன் எல்லோர் பாலும் அன்புடையவனாகவும் இருத்தல் அவசியம் என்றும், அரசன்மீது அன்பு ஆழ்ந்த அறிவு, நல்லநூல் அறிவுடன் ஆராய்ந்து, தக்கது இது தகாதது இது என்று எடுத்துரைக்கும் சொல்வன்மையும் தூதுவனுக்கு இருக்க வேண்டிய மிக முக்கியமான மூன்று குணங்களாகத் திருவள்ளுவர் கீழ்க்கண்ட குறள்மூலம் விளக்குகிறார்.

**அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்**
**பண்புடைமை தூதுரைப்பான் பண்பு**

**அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு**
**இன்றி யமையாத மூன்று**

நட்பு ஏற்படுத்துவதற்கு மட்டுமல்லாமல் பகையை நீக்கவும் உதவும் அன்பு, நீண்ட காலமாக அன்புடன் பழகி நட்புக் கொண்ட நண்பர் தமக்குக் கெடுதலே செய்தாலும் தூய அன்புடன் பழகிய நட்பைவிட்டு விடாமல் இருக்கவும் அன்பு பயன்படும் என்றும் யார் மேலும் அன்பில்லாதவனும், தகுந்த துணையில்லாதவனும், தானும் துணிவு கொண்டவனாக இல்லாதவனும் தன்னைச் சூழ்ந்த பகைவர்களை வெல்லும் திறம் அற்றவன் என்றும் வள்ளுவர் கீழ்க்கண்ட குறள்கள் மூலம் உணர்த்துகிறார்.

**அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்**
**வழிவந்த கேண்மை யவர்**

**அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்**
**என்ப பரியும் ஏதிலான் துப்பு**

அன்புடைமை அதிகாரத்திலும் இன்ன பிற அதிகாரங்களிலும் அன்பைப் பற்றியும் அதன் தன்மை பற்றியும் நன்மை தீமை பற்றியும் கூறும் வள்ளுவர் கைநீட்டி வாங்கும் பொருளுக்காக அன்பை விரும்பாது இன்சொல் கூறுபவர் விலை மகளிர் என்றும் அவர்களின் அன்பு, இன்சொல் ஆகியவை இழுக்கைத் தரும் என்றும் கீழ்க்கண்ட குறள்மூலம் விளக்குகிறார்.

**அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்குத் தரும்**

சால்பு என்னும் பெரும்பாரத்தைத் தாங்க உதவும் நான்கு தூண்களான நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையோடு அன்பும் சேர்ந்து ஐந்து தூண்களாகச் சொல்கிறார் வள்ளுவர். கீழ்க் கண்ட குறள் அதைத் தெளிவுபடுத்துகிறது.

**அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு**
**ஐந்துசால்பு ஊன்றிய தூண்**

பிறர்பால் அன்பு செலுத்தாமலும், தன்னையும் துன்புறுத்தி அறவழி நீங்கி ஈட்டிய பொருளைப் பிறர் கவர்ந்து சென்று பயன் பெறுவர் என்பதைக் கீழ்க்கண்ட குறள் மூலம் விளக்குகிறார் வள்ளுவர்.

**அன்பொரீஇத் தற்செற்று அறநோக்காது ஈட்டிய**
**ஒண்பொருள் கொள்வார் பிறர்**

**முடிவுரை**

அன்பு மனித குலம் ஒற்றுமையாக வாழ்வதற்கு மிகவும் அவசியம் என்று அன்பின் தன்மை, அன்புடையார், அன்பிலர் தன்மை, அவர்களை அறம் தண்டிக்கும் விதம், அன்பால் விளையும் நன்மை, அன்பில்லாததால் விளையும், தீமை, அன்பால் இல்வாழ்க்கையில் விளையும் நன்மை தூதுவனுக்குத் தூது சொல்ல அன்பு தேவை என்பதையும், சால்பு என்னும் பெரும் பாரத்தைச் சுமக்க அன்பு தேவை என்பதையும், பொருட்பெண்டிரின் அன்பு, இன்சொல் ஆகியவை தீமை பயக்கக் கூடியது என்பதையும் திருவள்ளுவர் அன்புடைமையிலும் மற்ற அதிகாரத்திலும் மிகச் சிறப்பாக விளக்குகிறார்.

# குறள் காட்டும் வாழ்வியல் கூறுகள்

**முனைவர் அ.பூலோகரம்பை**

"இறைவன் மனிதனுக்குச் சொன்னது கீதை
மனிதன் இறைவனுக்குச் சொன்னது திருவாசகம்
மனிதன் மனிதனுக்குச் சொன்னது திருக்குறள்"

**முன்னுரை**

திருக்குறள் ஒரு நீதி நூல் மட்டுமன்று. அது ஒரு வாழ்வியல் நூலும் கூட இரண்டாயிரம் நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட மனிதனுக்காக மட்டுமல்ல. இருபத்தோராம் நூற்றாண்டின் புதிய தலைமுறையினர்க்கும் வழிகாட்டும் ஒரு புரட்சி நூல். மாந்தர்கள் தம் அகவாழ்விலும், சமூகமாகக் கூடி வாழும் புற வாழ்விலும் இன்பமுடனும் இசைவுடனும் நலமுடனும் வாழத் தேவையான மாறா அடிப்படைப் பண்புகளை விளக்குகிறது திருக்குறள். இந்நூல் அறம், பொருள், இன்பம் அல்லது காமம் என்னும் முப்பெரும் பிரிவுகளாய் (முப்பால்) பிரித்தும், அழகுடன் இணைத்தும், கோர்த்தும் விளக்கும் பேரழகுடைய இலக்கியப் படைப்பு.

வள்ளுவத்தின் பொருண்மை காலந்தோறும் புதிய புதிய கருத்தாக்கங்களைத் தந்து இனம், மொழி, நாடு என்னும் எல்லைகளைக் கடந்து மனித வாழ்க்கையை வளப்படுத்துகிறது. "அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே யுலகு" என்று தமிழ் நெடுங்கணக்கின் முதல் எழுத்தாகிய 'அ' வில் தொடங்கி 1330 ஆம் குறளாகிய ஊடுதல் காமத்திற்கிடையே அதற்கின்பம், கூடி முயங்கப்பெறின் என்று தமிழ்மொழியின் கடைசி எழுத்தாகிய 'ன்'னுடன் முடித்திருக்கிறார் திருவள்ளுவர்.

**திருக்குறள் குறித்த பல்லோர் கருத்து**

திருக்குறளில் உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் உண்டு என்று செயலூர்க் கொடுஞ்செங் கண்ணனாரும் எல்லாப் பொருளும் இதன்பால் உள இதில் இல்லாத எப்பொருளும்

இல்லையால் என்று மதுரைத் தமிழநாகனாரும் இம்மை மறுமை, எழுமை, அனைத்தும் மும்மையில் (முப்பாலில்) சொன்னார். திருவள்ளுவர் என்ற இழிகட் பெருங்கண்ணனாரும் வள்ளுவர் பொருள் விரியும் சுருங்கிய சொல்லை வைத்துப் பாடியுள்ளார். எனறு அரிசில் கிழாரும் உள்ளுதல் உள்ளி உரைத்தல் உரைத்தவற்றைத் தெள்ளி எடுத்தல் என்கிற முறையில் திருவள்ளுவர் திருக்குறளை அமைத்துச் சிறப்பித்திருக்கிறார் என்று முகையலூர்ச் சிறுகருத்தும்பியாரும் திருக்குறளைப் பற்றி உயர்த்திக் கூறியுள்ளனர்.

**திருக்குறள் ஒரு வாழ்வியல் நூல்**

வள்ளுவம் தான்தோன்றிய காலத்தோடு நின்று விடாமல் இந்த நூற்றாண்டு மனிதனுக்கும் வாழச் சொல்லிக் கொடுக்கிறது. வாழ்க்கையைச் சொல்லிக் கொடுக்கிறது. வள்ளுவம் இலக்கியம் என்னும் நிலையில் நின்று விடாமல் மனித வாழ்வியல் கூறுகளை காட்டும் பதிவுகளாக உள்ளது. சராசரி மனிதன் அன்றாட வாழ்க்கையில் ஒழுக வேண்டிய நெறிமுறைகளின் தொகுப்பாகத் திருக்குறள் படைக்கப்பட்டுள்ளது.

திருக்குறள் ஒரு வாழ்வு நூல். அறநூல் என்பதற்கும் வாழ்வுநூல் என்பதற்கும் நிரம்ப வேறுபாடு உண்டு. அறநூல்கள் பல சமயச் சார்பும் அறநெறியை விதிகளாக வகுத்துக் கூறும் போக்கும் மிக்கன. ஆனால் வாழ்வு நூல் என்பது வள்ளுவர் புதுமையாகக் கண்டது. இது அற்நூலுடன் ஒற்றுமை உடையது என்பதைத் தவிர தனக்கெனப் பல தனித் தன்மைகளை உடையது. இங்ஙனம் திருவள்ளுவர் வாழ்வு நூலாக எழுதுவதற்குத் தமிழ்ப்பண்பாடே அடித்தளமாகும். தொல்காப்பியத்தில் இதற்கான அடிப்படையைக் காண்கிறோம் என்கிறார் தமிழண்ணல். (திருக்குறள் சிறப்பியல் களஞ்சியம் ப.125). எனவே வாழ்வு நூலாகக் கருதப்படும் திருக்குறள் ஒரு குறிப்பிட்ட இனத்தவர், சமயத்தினர், மொழியினர், நாட்டவர் என்ற எல்லைகளைக் கடந்து மனித குலத்தின் வாழ்வு நூலாகக் காணப்படுகிறது.

திருக்குறள் மக்களின் வாழ்க்கை இயல்புகளை மட்டும் அறிவிக்கிறது. அதனால் இலக்கியமாயிற்று. ஒரு குறிக்கோள் வாழ்வின் இலக்கணங்களை அறிவிப்பதால் இதனை இலக்கிய இலக்கணம் என்று கூடக் கூறி விடலாம். இதனைக் கொண்டு உலக மக்கள் தமது வாழ்க்கையைத் திருத்திக் கொள்வர் என்பதே திருவள்ளுவரின் ஆசையாகும். திருவள்ளுவரின் திருக்குறளில் அரசனின் ஆண்மை புலப்படுகிறது. அமைச்சர்

அறிவலை பாய்கிறது. ஒற்றருடைய அரசியல் தந்திரம் ஆழங்காணறப்படுகிறது. தூதருடைய சொல்வண்மை தோன்றுகிறது. எழில் நிறைந்த இளமங்கையோடு நுகரும் இன்பத்தேன் எங்கும் களியூட்டுகிறது. அறவோராகவும் துறவோராகவும் இருந்து செய்யும் அறவுரைகள் ஒளிவிடுகின்றன. செம்பொருள் திகழ்கிறது. இதனாலேயே இந்நூல் எல்லா வாழ்வோடும் கூடி எல்லார்க்கும் இன்பம் பயப்பதாக பொது நூலாக அழியாப் பெருமையுடன் விளங்கிக் கொண்டிருக்கிறது.

**திருக்குறளின் வாழ்வியல் கூறுகள்**

உயிரினத்தின் உச்சியில் வாழும் இன்றைய மனிதனை அவனது வாழ்க்கையைப் பகுத்து நோக்கி அறம், பொருள் இன்பம் ஆகிய முதன்மைப் பயனை அறிய வைத்துப் பயனுடைய வாழ்க்கை வாழ வள்ளுவம் வழி காட்டுகிறது. அறத்தின் பெருமையையும் பயனையும் விளக்குவது அறத்துப்பால். பொருளின் சிறப்பையும் அதைச் சேகரித்து காத்து வகுத்து வழங்கும் முறைகளையும் கூறுவது பொருட்பால் இதில். சமுதாயம் பற்றிய கருத்துகளும், அரசியல் நெறிமுறைகளும் கூறப்பட்டுள்ளன. காமத்துப்பாலில் காதலர்களின் அன்பின் வெளிப்பாடும் ஈடுபாடும். மனப்போக்கும் விழுமியங்களும் சுவையாக விளக்கப்படுகின்றன. தனிமனித நிலை, குடும்ப நிலை, உறவினர் நிலை, சமூக உறுப்பினர் நிலை குடிமக்கள் நிலை என்னும் தளங்களில் மனிதர்கள் பாதுகாக்க வேண்டிய பண்புகள், ஆற்ற வேண்டிய பணிகள் எனப் பன்முகக் கூறுகளை ஒழுங்குற அமைத்து ஒரு முழுமையான வாழ்வியல் கருத்தாக்கத்தை வள்ளுவம் தந்துள்ளது.

மனிதன் மனிதனாக வாழ்வதற்குத் தேவையான வாழ்வியல் கருத்துக்களைக் கூறும் நூல் திருக்குறள். இது மனித சமுதாயத்தின் வழிகாட்டி மனிதர் அனைவருக்கும் பொருந்தும் சமூக நீதிகளை எடுத்துரைக்கிறது. தமிழில் எழுதப்பட்ட திருக்குறளில் ஒரு செய்யுளில் கூடத் தமிழ்நாடு, தமிழர் தமிழ் என்பது பற்றி ஒரு சொல் கூட இடம் பெறவில்லை. எனவே திருக்குறளை உலகிலுள்ள எந்த மொழியில் மொழி பெயர்த்தாலும், அந்த மொழிக்கும், மொழி பேசும் மக்களுக்கும் சொந்தமாகும் பொதுத்தன்மை அதில் அமைந்துள்ளது. இதனைப் பற்றி அறிஞர் பேராசிரியர் வா.செ. குழந்தைசாமி குறள் தமிழ் மறை அன்று அது தமிழ் தரணிக்குத் தந்த மறை” என்று குறிப்பிடுகிறார்.

திருக்குறளின் பொதுத் தன்மையையும், சிறப்புத் தன்மையையும் அறிந்த இத்தாலி நாட்டுக் கிறித்துவப்பாதிரியார் ஜோசப் பெஸ்கி எனும் வீரமாமுனிவர் திருக்குறளை முதன் முதலில் கி.பி.1730ஆம் ஆண்டிலேயே இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்தார். குறள் ஒரு சீர்மை உடையது. தெளிவாக உணர்ந்து அறியத்தக்கது. ஒருமைப் பாட்டினைக் கொண்டிருந்த ஒரு நாகரிகத்தைச் சித்திரித்துக் காட்டும் ஓர் ஒழுங்கு இணைந்த ஓவியம் என்று திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த டாக்டர் ஜி.யு.போப் குறிப்பிடுகிறார்.

மேலும் திருக்குறளின் பெருமையை உணர்ந்த பிரெஞ்சு நாட்டு அறிஞர் ஏரியல் திருக்குறளில் மிக அற்புதமான அம்சமாக விளங்குவது அதன் ஆசிரியர் அதனைச் சாதி, மக்கள், நம்பிக்கைகள் என்று வேற்றுமை பாராட்டாமல், மனித குலம் முழுவதற்கும் பொதுமையாகக் கூறியிருப்பதாகும். எனவே திருக்குறள் மனித இனத்தின் சிந்தனையில் முகிழ்த்த சிறப்பும் தூய்மையும் வாய்ந்த இலக்கியப் பெட்டகம் எனப் பாராட்டுகிறார்.

**கல்வியின் பெருமை**

மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதவர் கீழ்ப்பிறந்து கற்றார் அனைத்தியர் பாடு என எழுந்தது வள்ளுவர் வாக்கு கல்வி கற்காதவர்கள் மேல் வருணத்தில் பிறந்தவர் எனக் கூறப்பட்டாலும் மேன்மையுடையவர் அல்லர். கல்வி உடையார் கீழ் வருணத்தில் பிறந்தாலும் அவர் பெற்ற கல்வியால் மேல் வருணத்தார் அவருக்கு ஈடாகார் என்ற பொருளைத் தருவது இப்பாடல். கல்வியே உயர்வு தாழ்வை நிர்ணயிக்கும் அளவு கோல் என்று வள்ளுவர் உணர்த்துவதை ஊன்றிப் பார்க்க வேண்டும். இக்குறளில் பயின்று வந்துள்ள சிறப்பு உம்மைகள் பொருள் நிறைந்தவை. மேற்பிறந்தோர் கீழப்பிறந்தார் என்பதைத் தான் ஏற்காமல் அவ்வாறு ஏற்கின்றவரை நோக்கி உங்கள் கருத்துப்படி அவ்வாறு எடுத்துக் கொண்டாலும் என்று கூறுவதுபோல் நயமாகக் கூறி கல்வியே உயர்வு தாழ்வை நிர்ணயிக்கும் அளவுகோல் என்று வள்ளுவர் உணர்த்துவதை ஊன்றிப் பார்க்க வேண்டும்.

**வாய்மைப் பண்பு**

திருக்குறள் அன்பு, பண்பு, இன்சொல் நன்றியறிதல் என மனித மாண்புகளை விளக்குகிறது. இவற்றைப் பின்பற்றுவோர். பேற்றினையும் ஒதுக்கியவர் அடையும் இழிவினையும் திறம்படக் காட்டுகிறது. “வாய்மை” என்பதே தலையாய அறம் என்கிறது

வள்ளுவம பொய்மை கோலோச்சும் இக்கால மனித சமுதாயத்திற்கு வள்ளுவர் கருத்துகள் மலர்ச்சியை உண்டாக்கும் மருந்தாகக் கொள்ளலாம். அறங்களில் எல்லாம் வாய்மையே சிறப்புடையது என்பதை

**பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று**

என்னும் குறட்பாவால் அறிய முடிகிறது.

**உழவின் சிறப்பு**

தமிழ்ச் சமுதாயத்தில் காலங்காலமாய் இருந்து வந்த மரபுத்தளைகளை உடைத்து மனிதப் பழக்க வழக்கங்களை மாற்றித் தனிமனிதத் தூய்மையை உருவாக்க வள்ளுவர் முயன்றுள்ளார். பிறப்பினாலும் செய்யுந் தொழிலாலும் மானிடத்தைப் பிரித்துப் பார்க்காதவர் வள்ளுவர் அன்றோ! உழுவோர் உலகத்திற்காணி என்று வள்ளுவர் வாயுரை நிலை நாட்டுகிறது. ஆனால் அந்த உழவுத் தொழில் செய்வோரை இழிந்தவராக மனு கணிக்கின்றார் (மனு 10 34,35) வேளாண்மையினை இழிதொழிலாகக் கருதும் மனு பார்ப்பன சத்திரியர்கள் வாணிபம் செய்து பிழைத்த போதும் உடல் முயற்சியும் பிறர் தயவினை நாடத் தக்கதாயுள்ள விவசாயத்தொழிலை மேற்கொள்ளுதல் கூடாது என்று செய்யுந்தொழிலால் பேதமைப் படுத்துவதோடு உழவர் பிறரை நாடி வாழ்பவர் என்று ஏளனப் படுத்துவதையும் பார்க்க முடிகிறது. மன்னனின் செங்கோல் சிறப்பு ஓங்குவது உழவர் கால் சேற்றில் பதிந்து நிற்றலாலே என்ற புறநானூற்றுக் கருத்து வழிநின்று வள்ளுவர்,

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்**

என்று குறட்பா தந்துள்ளார்.

வாழும் உயிர்களுக்கெல்லாம் உண்டி கொடுக்கும் உழவரே பிறன் கடைச் சென்று நில்லாத நிறைவாழ்வுடையார் என வள்ளுவர் உலகுக்குச் சொல்வதோடு மனுவிற்கும் மறுப்புரை தந்துள்ளார் என்று கொள்வது சாலப் பொருந்துவதாகும். ஆரிய தர்மம் தமிழ் நிலத்தைப் பாழடித்துவிடும் என்ற ஏக்கத்தோடும் அதனைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடும் கருத்துக் கருவூலமாய் திருக்குறளைப் படைத்தளித்துவிட்டுப் போயிருக்கிறார் வள்ளுவர் என எண்ணத் தோன்றுகிறது.

**விருந்தோம்பல்**

விருந்தினைப் பாதுகாத்தல் என்பதற்குச் சான்றாகவே அக்காலத்தில் இல்லத்தின் முன்புறம் திண்ணையினைக் கட்டினார்கள். ஆனால் இக்காலத்தில் நாயைக் கட்டி வைப்பது வழக்காயிற்று விருந்தோம்பல் மருந்துக்குக் கூட இல்லாமல் போய்விட்ட அவல நிலையினைச் சாடும் வகையில் அக்கால வாழ்வு சிறப்புடன் அமைந்திருந்தது.

**வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சில் மிசைவான் புலம்?**

**இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட**
**பெயலும் விளையுளும் தொக்கு**

வீட்டுக்கு வந்த விருந்தினருக்கு உணவு அளித்து விட்டு மிகுதியை உண்பவனின் நிலத்தில் விதையே விதைக்க வேண்டாமாம். தானாகத் தானியம் விளையுமாம். அதே போல அற நூல்களின் படி ஆட்சி செய்யும் மன்னர் நாட்டில் நல்ல மழையும் விளைச்சலும் இருக்குமாம். குறளில் இதை மேலும் வலியுறுத்திச் சொல்கிறார்.

**வழிபாடு**

இறைவனைப் பல வகையான கற்பனை உருவங்களை அமைத்து வழிபடுதலை விடுத்து, பெற விழையும் அறிவை ஊட்டும் குருவே இறைவன் என்பதனை உணர்தல் வேண்டும். இறைவன் நேர்முகமாக உதவுதலின்றி உயிர்கள் வடிவில் தோன்றிக் குருவாக வந்து நன்மை செய்கிறான் என்பது புராணங்கள் வழி நின்றும். சித்தர் வழி நின்றும் அறியமுடியும். தெய்வம் ஒன்றாக இருப்பதனை உணர்வுடையோர் மட்டுமே உணர முடியும் என்பதனை தனிமனிதனுக்கு உரிமையானது இன்ப வாழ்வு அதற்குத் துணையாக உள்ளது பொருளியல் வாழ்வு அவற்றிற்கெல்லாம் அடிப்படையாக விளங்குவது அறவாழ்வு மனதே எல்லாவற்றிற்கும் ஆதார நிலைக்கலன் மனத்துக்கண் மாசிலன் ஆதலே அனைத்து அறம் அறத்தால் வருவதே இன்பம் அறவழியில் நின்று பொருள் ஈட்டி அதனைக் கொண்டு இன்பவாழ்வு வாழ வேண்டும். அவ்வாறு உலக மாந்தரும் இன்பமுறச் செய்ய வேண்டும். பொருளியலாகிய பொது வாழ்வுக்கும் இன்ப இயலாகிய தனிவாழ்வுக்கும் அடிப்படை அறம்தான் என்பது திருக்குறளின் மொத்தமான நோக்கு.

**காதல் அறம்**

காமத்துப்பால் அறவழிப்பட்ட காதலுறவுகளை எடுத்துரைத்துள்ளது. காதலையும், ஆண்=பெண் உறவையும் வள்ளுவர் நெறிப்படுத்தியுள்ளார். காமத்துப்பாலில் காதல், காதலர் உறவு நிலை ஆகியவற்றை இனிமை பயக்கப் பாடி அன்பெனும் நெறிக்குள் மனங்களின் சங்கமத்திற்குள் மாசுபடாத வாழ்வியல் படிநிலையை வடித்துத் தந்துள்ளார். களவையும், கற்பையும் வகைப்படுத்தி "மனிதம்" அடையும் வாழ்க்கை நெறியை வள்ளுவர் தந்துள்ளார். பிறன்மனை நயத்தலையும், பரத்தையர் உறவையும் பெருங்குற்றமாகச் சொல்லி அன்புடைய காமத்தைச் சமுதாய அறமாகத் தந்துள்ளார்.

**குறள் கூறும் அதிசய செய்திகள்**

"தேனினும் இனிய தெள்ளு தமிழில்" வான் புகழ் வள்ளுவன் யாத்த குறட்பாக்களில் பல அதிசயச் செய்திகள் உள்ளன. கவரி மானின் மயிர் நீங்கி விட்டால் அது இறந்து விடும் என்றும் முகர்ந்து பார்த்தாலே அனிச்சமலர் வாடி விடும் என்றும் பத்தினிப் பெண்கள் மழை பெய் என்றால் மழை பெய்யும் என்றும் பல அதிசயச் செய்திகளை அடுக்குகிறார் வள்ளுவர்.

**முடிவுரை**

இங்ஙனம் வள்ளுவர் வாழ்வின் பல்வேறு நிலைகளில் நின்று வாழ்வியல் கோட்பாடுகளைத் தனித்தனி கூறுகளாக தமிழ் மாந்தர்களுக்கேயன்றி உலகம் முழுமைக்கும் எடுத்துரைத்து செம்மாந்து நிற்கின்றார்.

# வள்ளுவர் உணர்த்தும் அறநெறிக் கோட்பாடுகள்

**முனைவர் கு. இராஜ்மோகன்**

**தி**ருக்குறள் ஒரு வாழ்வியல் நூல். அதன் குறட்பாக்கள் ஒவ்வொன்றும் வாழ்வில் பின்பற்றத்தக்கன. தம்முயற்சியால் மனிதன் மேம்பட்டு வாழவேண்டும் எனப் பொதுநெறி கண்டவர் திருவள்ளுவர். மனித வாழ்க்கையை ஆழமாக அலசி, தெளிவாக உணர்ந்து மக்களின் நல்வாழ்வுக்காகப் பல வழிகளை நமக்குக் குறளமுத வடிவில் தந்துள்ளார். ஒவ்வொருவரும் மனத் தூய்மையுடனேயே தமது வாழ்வைத் தொடங்க வேண்டும். இது வள்ளுவர் காட்டும் வருமுன் காக்கும் வழி. இன்றைய தீமைகளுக்குக் காரணமாய் அமைபவை நட்பும் சூழ்நிலையுமே.

**மனத்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்**
**இனத்தூய்மை தூவா வரும்**

ஒருவனுடைய மனம் சுத்தமாக இருப்பது, செய்கை சுத்தமாயிருப்பது ஆகிய இரண்டும் அவன் நெருங்கிப் பழகும் மனிதர்களுடைய இனம் சுத்தமாக இருந்தால்தான் முடியும் எனத் திருக்குறள் குறிப்பிடுகிறது. வருமுன் காத்தலுக்கு இந்நெறி இன்றியமையாதது.

ஒவ்வொருவரின் வாழ்க்கையையும் அவரது எண்ணங்கள் தான் தீர்மானிக்கிறது. எண்ணம்போல் வாழ்க்கை என்ற பழமொழியும் இதனை உணர்த்தும். எண்ணங்களே அனைத்துச் செயல்களுக்கும் முயற்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அடிப்படை. இதனை வழியுறுத்தும் வகையில்,

**உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல் மற்றது**
**தள்ளினும் தள்ளாமை நீர்த்து**

ஊக்கம் கொள்ள வேண்டுமென்பதெல்லாம் உயர்ந்த நல்ல காரியங்களுக்குத்தான் மற்ற கீழான ஆசைகளுக்கு ஊக்கம் வேண்டியதில்லை.

உயிர் வாழ்க்கை என்பது என்றும் இயங்கிக் கொண்டே இருப்பது. இயக்கத்தை மனத்தளவில் தடுக்கும் கால தாமதமும் உடல் சோர்வை உண்டாக்கும் சோம்பலும், உள்ளச் சோர்வை உருவாக்கும் மறதிக் குணமும் எல்லா இயக்கங்களையும் நிறுத்த வல்ல நெடுந்தூக்கமும் நம்மை விட்டு நீக்கப்பட வேண்டிய குறைகள். இதனை வெளிப்படுத்தும் விதமாக வள்ளுவப் பெருந்தகை உலக மக்களுக்கு அளித்துள்ள ஒரு குறள்.

**நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**
**கெடுநீரார் காமக் கலன்**

'ஒப்புரவு' என்னும் சொல் இப்போது பழக்கத்தில் இல்லை என்றாலும் அதனுடைய 'விளக்கத்தை அறிந்து கொள்ள வேண்டும் ஊரெல்லாம் ஒன்று எனக்கருதி ஒருவருக்கொருவர் உதவி வாழ்வதுதான் ஒப்புரவாகும். சமூகத்திற்கு ஒருவன் செய்யும் நன்மைகளே ஒப்புரவு எனலாம். பெருந்தகையாளனிடம் செல்வம் இருந்தால், இந்தச் செல்வம், நோயுடைய மக்களுக்கு அருகிலேயே எளிமையாக எப்போதும் மருந்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் ஒரு வேப்பமரம் போலப் பயன்படும்.

**மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்**
**பெருந்தகை யான்கண் படின்** - என்பது வள்ளுவர் வாக்கு.

ஈகை வேறு, ஒப்புரவு வேறு, ஈகை என்பது வறியவர்க்குத் தருவது. மறு உலகில் நலமாய் வாழலாம் என்ற எண்ணத்தில் செய்வது. ஆனால் ஒப்புரவு என்பது இப்பூமியில் துன்புறுவார் துன்பத்தை துடைக்க எழுவது பயன் எதிர்பாராதது.

திருவள்ளுவருக்கு எல்லா நிலைகளிலும், எல்லா கருத்துக்களிலும் உலகம், உலகமக்கள் என்ற எண்ணம் வேரூன்றிவிட்ட காரணத்தினாலேயே எல்லாவற்றிலும் "வையம்" "ஞாலம்" "நிலம்" என்ற சொல் அமைவதைக் காணலாம். வரும் துன்பங்களைத் தாங்குவதும், பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாமையுமே தவம் என்று கூறியதும், ஈன்றாள் பசி காணும் நிலைவரினும், சான்றோர் பழிக்கும் செயலைச் செய்யாதே என்று கூறியதும் வாழ்வியல் கோட்பாடுகளே. சமுதாய மாற்றம், சமுதாய எழுச்சி, சமுதாயக் காப்பு என்பனவே வள்ளுவர் தம்கொள்கை. வாழ்வின் நோக்கம் மாற்று நெறியை ஒட்டித் தமிழர் தம் மறுமலர்ச்சியை உருவாக்குதலே குறளின் குறி. எந்தக் குறளுக்கு உரை கண்டாலும் வள்ளுவர்தம் சமுதாயப் பொறுப்புணர்ச்சியின் வெளிப்பாடாக மட்டுமே உரைகாண வேண்டும்.

உழை முடிந்தவரை முயற்சி செய் தெய்வத்தாலும் ஆகாதே எனத் திகைக்காதே உடல் வருந்திப் பாடுபடு உரிய பயன்தானே வரும் என வாழ வழிகாட்டியவர் வள்ளுவர். எந்தவொரு செயலுக்கும் எதிர்ச்செயல் இல்லையென்றால் எதிர்ப்போர் தானே வீழ்ந்து விடுவர் அல்லது சோர்ந்து விடுவர் இதைத்தான் அண்ணல் காந்தி அடிகள் அகிம்சைப் போர் நடத்தி வெற்றி கண்டார்.

**அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை**

தன்னைத் தோண்டுபவர்களாக இருந்தாலும், அவர்களைப் பொறுமையுடன் தாங்கிக் கொள்ளும நிலம்போலத் தம்மை இகழ்பவர்களாக இருந்தாலும் அவர்களைப் பொறுத்துக் கொள்ளுதல் ஒருவரின் தலையாய பண்பாகும். மனநலம் மன்னுயிர்க்கும் ஆக்கம், மனக்குறைவின் வெளிப்பாடுகளே குடி, சூது, முறையற்ற பாலுணர்வு போன்றவை. இவை நோய்க்கு அடிப்படையானவை மட்டுமல்ல. வாழ்வைச் சிதைக்கும் வல்லமை பெற்றவை என்பதை வள்ளுவரே வலியுறுத்தியுள்ளார். ஊண் உண்ணாமை உள்ளது உயிர்நிலை போன்ற தொடர்கள் இதனை வலியுறுத்தும்.

மற்றவர் குற்றங்களை எடுத்துச் சொல்லுமுன் தன்னுடைய குற்றங்களிலிருந்து விடுபட்டுக் கொள்ள வேண்டும் இத்தகைய நிலை ஏற்படின் பிற உயிர்களுக்குத் தீங்கில்லை என்பது வள்ளுவர் வகுத்த வழியாகும் இதனை,

**ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னும் உயிர்க்கு**

இன்பம் தானாக வரவேண்டுமேயன்றி இன்பத்தை எதிர்பார்த்து எதையும் செய்யக் கூடாது. ஒவ்வொருவரும் தமக்குரிய கடமைகளைத் தவறாமல் செய்து வந்தால் இன்பம் தானாகவே வந்தடையும் துன்பங்கள் வரும்போது அவற்றைத் துன்பமென எண்ணக் கூடாது இவை இயல்பானவை என்ற எண்ணம் இருக்க வேண்டும். இத்தகையோர்க்குத் துன்பம் இல்லை என்பதனை,

**இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்**
**துன்பம் உறுதல் இலன்**

எனக் குறிப்பிடுகிறார். உள்ளம் அறிந்து மற்றவர்களிடம் பொய் சொன்னால் உனது உள்ளமே உன்னைச் சுட்டுவிடும் என்பது

வள்ளவர் காட்டும் வாழ்வியல் கோட்பாடு நீண்ட நாள் வாழ வேண்டுமென்றால் முன் உண்ட உணவு நன்கு செரித்த பிறகு உண்ண வேண்டிய அளவறிந்து உண்ண வேண்டும் என்பது வாழ்நாள் வளர வள்ளுவர் வழங்கும் நெறி. நினைப்பதைச் சரியாக நினையுங்கள் நினைப்பதை நிறைவேற்ற உறுதியாக நில்லுங்கள், தொடர்ந்து முயலுங்கள், துவளாது செயல்படுங்கள் என்பதை வாழ்வு நெறியாக வழிகாட்டினார் வள்ளுவர். தனிமனிதச் சீரழிவு, இனப்பேரழிவு என அறியாத மக்களுக்கு அறிவுறுத்த விரும்பிய வள்ளுவர் வாழ்க்கை நெறியை அழுத்தமாகக் கூறமுற்பட்டார். அனைத்துத்துறைகளிலும் புதுப்புது வரவுகளுக்கு ஏற்ப நம்மைப் புதுப்பித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பதே வள்ளுவரின் குறிக்கோளாகும்.

காலம் அறிதல் எனும் அதிகாரத்தில் வள்ளுவர் இரு பறவைகளை வைத்து உதாரணம் காட்டுகிறார். முதல் குறளாக "பகல்வெல்லும் கூகையைக் காக்கை" என்பதும் "கொக்கு ஒக்க கூம்பும் பருவத்து" எனக் குறளை வைத்து பறவைகள் மனிதனைவிடக் காலத்தைச் சரியாகப் புரிந்து கொண்டு காரியம் ஆற்றுகின்றன என்பதைத் தெரியப்படுத்திக் காலம் கண்போன்றது என்பதை நன்கு உணர்த்துகிறார். திருக்குறளின் உறுதியும் தெளிவும் பொருளின் ஆழமும் விரிவும் அழகும் வியப்பில் ஆழ்த்துவன. மறைநூலின் மறுநூல் திருக்குறள். அறநெறி உணர்ந்து அந்நெறி நின்று, மனம், மொழி, செயல் இவற்றால் தூய்மை பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழ வழி வகுத்த வள்ளுவ நெறியில் வாழ்ந்து காட்டவேண்டும். உலகத்தின் பல பகுதிகளில் காட்டுமிராண்டித் தனமும், வெறிப்பதே உணர்வும் தலைவிரித்தாடிய நேரத்தில்தான் வள்ளுவப் பேராசான்"

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்** - என்ற குறளால்

**"உலக உயிர்களின் பிறப்பெல்லாம் ஒரே தன்மையுடையதே அவர்கள் செய்யும் நன்மை தீமை எனும் செயற்பாட்டால்தான் அவர்கள் வேறுபடுகிறார்கள் என்று கூறியது எத்தனை வலிமையான கருத்தாகும்''.**

# வள்ளுவர் அறிவுறுத்தும் இல்லறம்

திருமதி த. சித்ரா

**முன்னுரை**

காலத்திற்கும், மொழிக்கும் சொந்தமானதாக இல்லாமல் காலத்தையும் மொழிகளையும் கடந்து இன்றுவரை பொதுவானதாக விளங்குவது திருக்குறள். அதனால்தான் இந்நூல் உலகப் பொது மறையாகப் போற்றப்படுகிறது. அதிகமான மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இன்றுவரை திருக்குறளின் கருத்துக்களுக்கு மாற்றுக் கருத்துக்கள் பெரியதாய்த் தோன்றிவிடவில்லை. திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலில் உலகை அளந்த நூல் மனித மனங்களை வளப்படுத்திய நூல் இந்நூலில் வள்ளுவர் அறிவுறுத்தும் இல்லறத்தைச் சுட்டுவதாக இக்கட்டுரை அமைகின்றது.

மனித வாழ்வியலில் மனிதனை முழுமனிதனாக மாற்றுவது இல்லறம். அதற்கு முந்தைய வாழ்க்கை என்பது தனிமனித வாழ்க்கை. சமுதாயத்தில் மனிதனை அங்கீகரிக்கும் வாழ்க்கை. இல்லறவியலின் அவசியத்தை, தேவையை உணர்ந்த திருவள்ளுவர் இன்பத்துப்பாலில் இதனைக் கூறாமல், அறத்துப்பாலில் கூறியுள்ளார். இல்லறம் என்பது இன்பம் துய்ப்பது மட்டுமல்ல என்பதை உணர்ந்த திருவள்ளுவர் அதனை மனிதர்களுக்கு உணர்த்த அறமாகப் போற்றுகின்றார். இன்பத்துப்பாலில் களவியல், கற்பியல் என இரண்டை மட்டும் கூறிவிட்டு அறத்துப்பாலில் இல்லறவியலைக் கூறியுள்ளார். இல்லறம் சிறந்தால்தான் குடும்பவாழ்க்கை நன்றாக அமையும் என்பதால் இல்லறம் எவ்வாறு அமையவேண்டும் என்பதை இல்லறவியலில் கூறுகின்றார் திருவள்ளுவர்.

**கணவன், மனைவி**

மணம் புரிந்து கொண்டு குடும்பமாக வாழ்வதே இல்லறம். இந்த இல்லறம் இனிது நடைபெற வேண்டுமானால்

கணவனுக்கும் மனைவிக்கும் ஒற்றுமையிருக்க வேண்டும். உள்ளத்திலே, நடத்தையிலே, பண்பிலே தூய்மையிருக்க வேண்டும். மனம் ஒன்றுபட்ட தம்பதிகளின் வாழ்வில் தான் இன்பம் தழைக்கும். அமைதியை விரும்பும் கணவனும், ஆடம்பரத்தை விரும்பும் மனைவியும் ஒன்றுபட்டு வாழ முடியாது. அதுபோல நற்குணங்கள் நிரம்பிய நங்கையும், துர்க்குணங்கள் நிறைந்த கணவனும் சேர்ந்துவாழ முடியாது. இத்தகையவர்கள் ஒன்றாகக் கூடி வாழ்ந்தாலும் அவர்கள் வாழ்க்கை போலி வாழ்க்கையே. அது இன்பமற்ற இருண்ட வாழ்வாகத்தான் இருக்கும் என்று வள்ளுவர் கூறும் அறிவுரைகளால் இவ்வுண்மையை உணரலாம்.

**மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டாள்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை**

இக்குறளில், மனைவியிடம் இல்லறத்திற்கேற்ற சிறந்த குணங்கள் அமைந்திருக்க வேண்டும். அவற்றுடன் குடும்ப வரவு செலவைக் கவனிக்கும் திறமையும் இருக்க வேண்டும், கணவனுடைய வருமானத்தை அறிந்து அதற்குத் தகுந்தவாறு செலவு செய்யக் கூடிய அறிவும் வேண்டும், அவளே சிறந்த மனைவி என்று மனைவியின் இலக்கணத்தைக் கூறுகின்றார் வள்ளுவர்.

**மனைமாட்சி இல்லாள்கண் இல்ஆயின், வாழ்க்கை**
**எனைமாட்சித்து ஆயினும் இல்**

இக்குறளில், இல்வாழ்க்கைக்கு ஏற்ற நல்ல பண்புகள் மனைவியிடம் இல்லாவிட்டால், ஒருவனுடைய வாழ்க்கை வேறு எவ்வளவு சிறப்புக்களை உடையவாயினும் பயன் இல்லை என்று இல்வாழ்வு சிறந்து விளங்குவதற்கு மனைவியின் நல்ல குணங்களே அடிப்படை என்று வலியுறுத்துகின்றார் வள்ளுவர்.

**தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதுஎழுவாள்**
**பெய்எனப் பெய்யும் மழை**

இக்குறளில், மனைவி வேறு தெய்வத்தை வணங்காமல், தன் கணவனையே தெய்வமாக வணங்கி, அவன் விழித்து எழுவதற்குமுன் தான் விழித்து எழுகின்றவளே சிறந்த மனைவி, அவள் வானத்தைப் பார்த்து பெய் என்று சொன்னால் பெய்யும் என்று கூறுகின்றார் வள்ளுவர்.

மனைவியின் மாண்பைக் கூறுவதற்கு வாழ்க்கைத் துணைநலம் என்று ஒரு தனி அதிகாரம் வகுத்திருப்பதைப் போல

கணவன் மாண்பைக் கூறத் தனி அதிகாரம் ஒன்றும் கூறப்படவில்லை. ஆதலால் வள்ளுவர் ஆண், பெண் சமத்துவத்தை ஒப்புக் கொள்ளவில்லை என்று கூறுவோர் உண்டு. இக்கருத்து தவறானது, வாழ்க்கைத் துணை நலம் என்னும் அதிகாரம் சிறப்பாகப் பெண்களுக்குக் கூறப்பட்டிருப்பது போல, பிறன் இல் விழையாமை என்னும் அதிகாரம் ஆண்களுக்காகக் கூறப்பட்டிருக்கிறது. இவைகளை ஆழ்ந்து சிந்தித்தால் பெண்ணுக்கு வேண்டும் கட்டுப்பாடுகளும், நடத்தைகளும் ஆணுக்கும் வேண்டும் என்பதே வள்ளுவர் கருத்தென்பதைக் காணலாம்.

**நன்மக்கட்பேறு**

இல்லற வாழ்வின் தொடர்ச்சியாய் மட்டுமில்லாமல் தன் குடும்பத்தொடர்சியாய் தனது எச்சமாய் நிற்பவை குழந்தைகள்தான். அந்தக் குழந்தைகளுக்குத் தந்தையின் கடமை, தாயின் மகிழ்ச்சி, மகனின் கடமை, பெருமை போன்றவற்றைக் குறித்துக் கூறுகின்றார் வள்ளுவர். தந்தை தன் மகனுக்குச் செய்ய வேண்டிய கடமை கற்றவர் கூட்டத்தில் தன் மகனை முந்திருக்கும் படியாக அவனைக் கல்வியில் மேம்படச் செய்தலாகும் என்று தந்தை தன் மகனுக்கச் செய்ய வேண்டிய கடமையை

**தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி இருப்பச் செயல்**

எனும் இக்குறள் மூலம் சுட்டியுள்ளார் வள்ளுவர்.

தன்மகனை நற்பண்பு நிறைந்தவன் எனப் பிறர் சொல்லக் கேள்வியுற்ற தாய் தான் அவனைப் பெற்ற போது அடைந்த மகிழ்ச்சியை விடப் பெரிதும் மகிழ்வாள். தாயையும், தந்தையையும் மகிழ வைப்பது மகனின் கடமை எனவே நன் மகன் பெற்ற தந்தைக்கு ஆற்றவேண்டிய கடமையை

**மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்நோற்றான் கொல்எனுஞ் சொல்**

எனும் இக்குறள் மூலம் கூறியுள்ளார் வள்ளுவர்.

**பிறனில் விழையாமை**

அறத்துப்பாலில் இல்லறவியலில் உள்ள பிறனில் விழையாமை என்னும் அதிகாரத்தில் பெண்ணைப் போலவே ஆண் மகனும் கற்பு நெறியைப் பின்பற்ற வேண்டும் என்றும், கற்புநெறி தவறிய பெண்களை உலகத்தார் எள்ளி நகைப்பது

போலவே நெறி தவறிநடக்கும் ஆண்களையும் அவமதிப்பர் என்று கூறுகின்றனார் வள்ளுவர்.

**பகைபாவம், அச்சம் பழிஎன நான்கும்**
**இகவாஆம், இல்இறப்பான் கண்**

என்ற குறளில், பகை பாவம், அச்சம், பழி என்று சொல்லப்படும் இந்த நான்கு குற்றங்களும் பிறன் மனைவியிடம் நெறிதவறி நடப்பவனை விட்டு நீங்கமாட்டா அவனோடு எப்பொழுதும் நிலைத்து நிற்கும் என்று கூறுகிறார்.

**அறன்இயலான் இல்வாழ்வான் என்பான் பிறன்இயலாள்**
**பெண்மை நயவா தவன்**

என்ற குறளில், அறத்தின் வழியே நின்று இல்வாழ்க்கை நடத்துகின்றவன் யார் என்றால், பிறன் மனைவியின் பெண் தன்மையை விரும்பாதவனேயாவான் என்று கூறுகின்றார் வள்ளுவர்.

இவ்வாறே பிறனில் விழையாமையில் உள்ள பத்து வெண்பாக்களிலும் அறிவுரைகள் காணப்படுகின்றன. தன் கணவனைத் தவிர வேறு ஆடவனை விரும்பாத பெண்ணே கற்புள்ளவள். அதுபோலத் தன்மனைவியைத் தவிர வேறு பெண்ணை விரும்பாத ஆண்மகனே ஒழுக்கம் உள்ளவன், கற்புள்ளவன் என்று கூறுவதே இவ்வதிகாரக் கருத்தாகும்.

**ஆணெல்லாம் கற்பை விட்டுத் தவறு செய்தால்**
**அப்போது பெண்மையும் கற்பழிந்திடாதோ**

என்று பாரதியார் கேட்கின்றார். இது வள்ளுவர் கருத்தின் விளக்கம் என்றே கூறலாம்.

**பெண்வழிச் சேறல்**

திருவள்ளுவர் ஆண் பெண் சமத்துவத்தை விரும்பவில்லை, பெண்ணை இழிவாகவே எண்ணுகின்றார், என்று கூறுவோர் உண்டு. பொருட்பாலில், பெண் வழிச்சேறல் என்ற அதிகாரத்தில் உள்ள பத்துக் குறள்களும் பெண்களுக்கு ஆண்கள் அடிமைப்படக் கூடாது என்று வலியுறுத்துகின்றன. அவர்கள் சொல்வதுதான் சரியென்று நம்பி நடப்பவன் வாழ்விலே வெற்றிபெற மாட்டான் என்று இயம்புகின்றன.

**இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்**
**நல்லாருள் நாணுத் தரும்**

என்ற குறளில் மனைவியிடத்தில் தாழ்ந்து நடக்கும் இழிந்த தன்மை, ஒருவனுக்கு எப்பொழுதும் நல்லவர்கள் கூட்டத்தில்

இருக்கும் போது நாணத்தையே உண்டாக்கும் என்று கூறுகின்றார் வள்ளுவர்.

**இல்லாளை அஞ்சுவான் அஞ்சம்மாற்றும் எஞ்ஞான்றும்**
**நல்லார்க்கு நல்ல செயல்**

என்ற குறளில் தன்மனைவிக்கு அஞ்சுகின்றவன் நல்லவர்களுக்கு நன்மை செய்வதற்குக் கூட எந்நாளும் அஞ்சுவான் என்று கூறுகின்றார்.

**அறவினையும் ஆன்ற பொருளும், பிறவினையும்**
**பெண்ஏவல் செய்வார்கண் இல்**

என்ற குறளில், அறத்தைச் செய்தலும், சிறந்த செல்வத்தைச் சேர்த்தலும் இவ்விரண்டின் வேறான செயல்களும் தம்மனைவியின் ஏவலைச் செய்வாரிடம் இல்லை என்று கூறுகின்றார்.

இவ்வாறு பத்துக் குறள்களிலும் ஆண்மகன் தனக்கென்ற ஒரு கொள்கையும் இல்லாமல் பெண்ணடிமையாவதை வெறுத்துக் கூறப்படுவதற்குக் காரணம். வள்ளுவர் காலத்திலே பெண்கள் கல்வி கற்காதவர்களாயிருந்தனர். அவர்கள் இல்லறத்திற்குரிய கடமைகளைச் செய்வதற்கே அவர்களுக்கு நேரம் சரியாக இருந்தது. அரசியலிலோ பொதுக்காரியங்களிலோ அவர்கள் தலையிடுவதில்லை. ஆகையால்தான் அரசியலைப் பற்றியோ, பொதுப்பணிகளைப் பற்றியோ ஆலோசனை கூறும் திறமை அவர்களுக்கு இல்லை இதனாலேயே கணவன் தன்மனைவியின் சொல்லுக்கு அடிமையாகக் கூடாது என்று வலியுறுத்தினார் வள்ளுவர்.

**முடிவுரை**

இங்ஙனம், வள்ளுவர் திருக்குறளில் காணலாகும் இல்லறம், கணவன் மனைவி, நன்மக்கட்பேறு, பிறனில் விழையாமை, பெண்வழிச் சேறல் போன்றவற்றைக் கூறி மனிதன் வீட்டிற்செம் நாட்டிலும் சிறந்த குடிமகனாகத் திகழ இந்த இல்லறவியல் அறமாய் நிற்பதைக் கண்டோம், எனவே வள்ளுவமே வாழ்க்கை முறையானால் சமூகம் வளம் பெறும் என்பதை உணரமுடிகின்றது.

# திருக்குறள் காட்டும் அன்புடைமை

**முனைவர் க. அழகர்**

**முன்னுரை**

"நான் படித்தறிந்த அறநெறி நூல்களுள் தலைசிறந்தது திருவள்ளுவரது திருக்குறள்" என்றார் ஆல்பர்ட் சுவைச்சர். உலகில் ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு பண்பு உண்டு. நீரின் பண்பு தன்மை, நெருப்பின் பண்பு வெம்மை, பாலின் பண்பு இனிமை. அவ்வாறே உயிருக்கும் ஒரு பண்பு உண்டு. அவ்வுயிர்ப் பண்பு தான் அன்பு ஆகும். அன்புடைமை என்பது உலக உயிர்களிடத்தில் கொள்ளும் இரக்கமாகும். இந்த அன்பு தம்மைச் சார்ந்தவரிடமோ, பிறரிடமோ மட்டும் காட்டப்படுவதன்று. எல்லா உயிர்களிடத்தும் செலுத்தப்படுவது, அதாவது பிற உயிரைத் தம் உயிர்போல் காப்பது ஆகும். இந்த வகையில் திருக்குறள் காட்டும் அன்புடைமை குறித்து இக்கட்டுரையில் காண்போம்.

**அன்பின் பெருமை**

உலகிலுள்ள உயிர்கள் அனைத்தையும் வாழ வைப்பது அன்பு, அன்பொன்றே இறைவனை அடையும் வழி என மக்கள் வகுத்தனர். தன்னலமற்ற தாயின் அன்பினால் இவ்வுலகம் தழைக்கிறது. ஏசுநாதர் அன்பையே வற்புறுத்தி மக்களுக்குப் போதித்தார். பிறரையும் உன்னைப்போல் நேசி என்பது அவர் போதனையின் உயிர்நாடி. அன்பானது தொடர்புடையாரிடத்து மட்டும் தோன்றுவது. ஆனால் அருள் என்னும் இரக்க உணர்வோ எல்லோரிடத்தும் தோன்றுவது என்பார் வள்ளுவர்.

**அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்**
**துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலுமிழந்த வென்னை**

என்கிறது.

**அருளென்னும் அன்பீன் குழவி** என்பார் வள்ளுவர்.

**அன்புடைமை-பொருள் விளக்கம்**

“அன்பு” என்னும் சொல்லுக்குத் தொடர்புடை யோர் மாட்டு உண்டாகும் பற்று, நேயம், அருள், பக்தி, என்னும் பொருள் கூறுகிறது.

உடைமை என்னும் சொல் உடையனாகும் தன்மை, உடைமைப் பொருள், செல்வம், அணிகலன், உரிமை போன்ற பொருள்களைக் குறிக்கிறது.

அன்பு என்னும் சொல்லுக்கு ஒருவரின் மனம் நெகிழும்படியாக மற்றொருவர் அவர்மேல் வெளிப்படுத்தும் நேசமும் நட்பும் கலந்த உணர்வு எனப் பொருள் கூறுகிறது கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி.

இக்கருத்தையே பரிதியார், புதல்வரிடத்திலே அன்புடைமை, ஆத்மாக்களிடந்தோறும் உண்டாக வேணும், ஆதலால் அன்புடைமையாயிற்று என்பர்.

**அன்பை அடைத்து வைக்க முடியாது**

அன்பு என்னும் உணர்வை பிறர் அறியாமல் தாழ்ப்பாள் போட்டு அடைத்து வைக்க முடியாது. தம்மேல் அன்பு செய்யப்பட்டவரது துன்பத்தைக் கண்டபோது, அன்புடையவர்கள் பொழிகின்ற சிறு கண்ணீரே உள்நின்ற அன்பினை எல்லோரும் அறியக் காட்டி விடும் என்கிறார் வள்ளுவர்.

**அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்**

இக்கருத்தையே பெருங்கதை பின்வருமாறு கூறுவதைக் காணலாம்.

**யாக்கைய தியல்பினும் அன்பினும் கொண்டுதன்**
**காட்சிக் கண்ணீர் கரந்தகத்தடக்கி**

பரதன் எப்பொழுதும் இராமனையே நினைக்கும் தன்மையுள்ள சிறந்த அன்பு மனத்திலே மிகுந்து, அங்கு அடங்காமல் கண்வழியாகத் தாரை தாரையாகப் பெருகிறது. தொழுது நின்ற பரதனை இராமன் தழுவினான்.

இக்கருத்தையே கம்பர் கூறுவதை அறியலாம்.

**உன்னுபேர் அன்புமிக்கு**
**ஒழுகி ஏத்து ஒண்கண்நீர்**

**பன்னுதாரைகள் தர,**
**தொழுது எழும் பரதனை,**
**பொன்னின் மார்பு உற அணைத்து**

அன்புடையவர் யார்?

அன்பு உடையவர் எலும்பை உடைய தமது உடம்பைக் கூடப் பிறருக்கு உரிமையாக்கி விடுவர். ஆனால் பிற உயிர்களிடத்தும் சிறிதும் அன்பு இல்லாதவர், தாம் நேசிக்கும் பொருள் அனைத்தும் தமக்கே எனக் கருதி அனுபவிப்பர். ஆனால் அன்பு உடையவரோ பிறருடைய துன்பத்தைப் போக்கத் தம்செல்வம் அனைத்தையும் செலவழிப்பர். பிற உயிரின் துன்பம் துடைக்கத் தம்உயிரை அளிக்கவும் தயாராக இருப்பர். அத்தகையோரே அன்புடையவர் ஆவர். இக்கருத்தையே வள்ளுவர் மூலம் அறியலாம்.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு**

தசரதன் இராமனின்மீது மிகுந்த அன்பு கொண்டவன். அவன் காடு சென்றால் உயிர் வாழ மாட்டேன் என்றதைக் கம்பர் பாடலின் மூலம் அறியலாம்.

**என்னின் முன்னம் வனம் நீ**
**அடைதற்கு எளியேன் அல்லேன்**
**உன்னின் முன்னம் புகுவேன்**
**உயர் வானகம் யான்**

என்றான்.

**நெகுதற்கு ஒத்த நெஞ்சம்**
**நேயத்தாலே ஆவி**
**உகுதற்கு ஒத்த உடலும்**
**உடையேன், உன்போல் அல்லேன்**

**அன்பு நட்பை உண்டாக்குதல்**

அன்பு முதலில் பிறரிடம் விருப்பத்தை உண்டாக்கும். அந்த விருப்பம் நட்பு என்று கூறப்படும் சிறப்பினை நம்மிடம் உணரச் செய்யும். ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகப் பழக அன்பு அதிகமாகிறது. பின்பு அது அசையாத நட்பை உண்டாக்குகிறது என்கிறார் வள்ளுவர்.

**அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்**
**நண்பென்னும் நாடாச் சிறப்பு**

இக்கருத்தையே இரண்டாம் திருவந்தாதி,

**அன்பே தகளியாக ஆர்வமே நெய்யாக**
**அன்புருகு சிந்தை இடுதிரியாக**

என்கிறது.

**அன்பு இல்லாத உயிரை அறம் எரித்தல்**

எலும்பு இல்லாத உயிரினங்களான புழுக்களை வெயில் துடிக்கச் செய்வது போல, அறக்கடவுள் அன்பு இல்லாத மனிதர்களைத் துடிக்கச் செய்யும் தர்மம், தானம் சேராமல் பாவத்தையும், பழியையும் சேரப் பண்ணி நரகங்களில் விழச் செய்யும் என்பதைத் திருக்குறள் காட்டுவதை அறியலாம்.

**என்பு இலதனை வெயில்போலக் காயுமே**
**அன்பு இலதனை அறம்**

இக்கருத்தையே சிலப்பதிகாரம்,

**அரசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற் றாவதும்**

என்கிறது.

**மனத்தில் அன்பு இல்லாத வாழ்க்கை**

பாலை நிலத்தில் முளைத்துப் பின்பு பட்டுப்போன மரம் மீண்டும் தளிர்க்காது. அதுபோல மனத்தில் அன்பு இல்லாதவரின் வாழ்க்கை செழிக்காது என்கிறார் வள்ளுவர்.

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரம்தளிர்த் தற்று**

**அன்பு உடையார் பிறருக்காக வாழ்வர்**

உலகில் இன்பமாக வாழ்ந்தவர்கள் அடையும் புகழ் எது என்றால் எல்லோருடனும் அன்புடன் பழகி எல்லோர்க்கும் உதவி செய்வது ஆகும். அன்புடையார் பிறருக்காக வாழும் இயல்பினர் தனக்கென வாழாது பிறருக்காக வாழும் அவ்வியல்புடையவரையே உலகம் புகழும். இக்கருத்தையே வள்ளுவர் கூறுவதைக் காணலாம்.

**அன்புற்று அமர்ந்த வழக்குஎன்ப வையக**
**இன்புற்றார் எய்தும் சிறப்பு**

மனித யாக்கையின் உள் உறுப்புகளாகிய அன்பு இல்லாதவர்க்கு, புற உறுப்புக்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவை அழகாக இருந்தும் ஒரு பயனும் இல்லை என்கிறார் வள்ளுவர்.

இக்கருத்தையே காளிங்கர் "ஒருவர் தமது யாக்கையானது புறத்துறுப்பாகிய மார்பும், தோளும், முகமும், மயிர் முடியும் பிறவும் சால நல்லன என்னும், அவை இல்லாமை தோன்றாக் கெடுத்த வல்லது அகத்துறுப்பாகிய அன்பு போல இவர்கட்கு ஒரு நன்மை செய்வதில்லை.

**புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை**
**அகத்துறுப்பு அன்புஇல வர்க்கு**

இக்கருத்தையே கம்பர் பின்வருமாறு கூறுவதைக் காணலாம்.

**யாக்கைக் கென்பிற்சிறந் தாயதோர் ஊற்றமுன் டென்னலாமே**
**அன்பிற் சிறந்த தூயதோர் பூசனை யார்கணுண்டே"**

அன்பின் வழியே நடக்கும் உடலே உயிருடன் கூடிய உடம்பாகும். அந்த அன்பு இல்லாதவர் உடல் எலும்பைத் தோலால் மூடிக்கட்டிய உயிர் இல்லாத உடல் ஆகும். அன்புடன் கூடிய வாழ்க்கைதான் உண்மையான வாழ்க்கை ஆகும். அன்பில்லாத வாழ்க்கை உயிரற்ற பிணம் போன்றது ஆகும் என்கிறார் வள்ளுவர்.

**அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு**

**முடிவுரை**

அன்புக்காகவே வாழ்ந்தவர்கள் அவ்வன்புக்காகவே தமது ஆவியையும் போக்கத் தயங்குவதில்லை. ததீசி என்ற முனிவர் இந்திரனுக்காகத் தனது எலும்பையே கொடுத்தார். புறா ஒன்றின் உயிரைக் காப்பாற்ற துலாக்கோலின்மீது அமர்ந்து தமது உடம்பையே கொடுத்தார் சிபிச்சக்கரவர்த்தி. மக்கள்மீது கொண்ட அன்பினால் சிலுவையில் தன்னை மாய்த்துக் கொண்டார் ஏசுநாதர். ஈ எறும்புகளுக்குக் கூடத் துன்பம் செய்யாமல் அவைகளிடமும் அன்பு காட்ட வேண்டும் என்கிறார் புத்தர்.

"எல்லா உயிர்களிடத்தும் அன்பு வேணும்" என்கிறார் பாரதி. நாமும் பல உயிர்களிடத்தில் அன்பு செலுத்துவோமாக.

# திருவள்ளுவர்: சில வரலாற்றுக் குறிப்புகள்

முனைவர் செ. இராசு

## குறள்வழி ஆட்சி

தமிழக அரசர்கள் மனுநெறிப்படி ஆட்சி புரிந்ததாகவே கூறிக்கொண்டனர். ஆனால் கொங்குநாட்டுப் பாளைக்காரர்கள் வள்ளுவர் கூறிய குறள்வழியில் ஆட்சிபுரிந்தோம் எனத் தம் ஆவணங்களில் எழுதினர்.

**"பூந்துறை நாட்டார் மேலோலை" என்னும் வரலாற்று ஆவணம்,**

**"இன்சொல்லால் இனி தளித்து வன்சொல்லால் மறங்கடித்து**
**வள்ளுவர் உரைத்த முப்பால் மொழியின் படியே**
**அறமே அறிந்து நல்லவை நாட்டி அல்லவை கடிந்து"**

ஆட்சி புரிந்தோம் என்று கூறுகிறது. பல்லடம் செப்பேட்டில் "வள்ளுவர் மரபு காத்து" ஆட்சி செய்த திறம் கூறப்படுகிறது. பழனிமலைச் செப்பேடு, வீருமுடியாளர் செப்பேடு, காரையூர்ச் செப்பேடு ஆகியவற்றிலும் இக்குறிப்பு வருகிறது. கொங்குச் சோழர் மெய்க்கீர்த்தியில் பல திருக்குறள் தொடர்கள் வருகின்றன.

## திருக்குறள் கல்வெட்டு

சேலம் மாவட்டம் மல்லூரை அடுத்துள்ள பொன்சொரிமலை அடிவாரத்தில் தாமரைப்பாழி என்னும் இடத்தில் சமண முனிவர்கள் தங்கிய இயற்கைக் குகையின் மேல்பகுதிப் பாறையில் "புலால் மறுத்தல்" அதிகாரத்தில் உள்ள,

**தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்?**

என்று முதற்குறள் 14ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் கல்வெட்டாக உள்ளது. சமணர்கள் திருக்குறளை "எம் ஒத்து" எனக் கூறுவதைக் காணுகிறோம்.

**எல்லிஸ் கல்வெட்டுகள்**

சென்னை மாவட்ட ஆட்சியர் ஃபிரான்சிஸ் வைட் எல்லிஸ் (Francis Whyte Eliis) 1812இல் திருக்குறள் அறத்துப்பாலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

1818இல் சென்னையில் கடும் தண்ணீர்ப்பஞ்சம் ஏற்பட்டது. வள்ளுவரின் கருத்தை உணர்ந்து எல்லிஸ் 27 கிணறுகளைத் தோண்டிக் கல்வெட்டும் பொறித்தார். நீண்ட அக்கல்வெட்டில் திருக்குறளைப் பற்றிய பகுதி.

"புலவர்கள் பெருமான் மயிலையம் பதியான்
தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்
திருக்குறள் தன்னில் திருவுளம் பற்றி

**இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற் குறுப்பு**

என்பதன் பொருளை என்னுள் ஆய்ந்து" என்பதாகும்.

அலுவல் காரணமாக இராமநாதபுரம் சென்ற போது 09.03.1819இல் எல்லிஸ் மரணமடைந்தார். கல்லறையில் இரங்கற்பாக் கல்வெட்டில் எல்லிஸ் திருக்குறள் பணி மிகவும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

**திருவள்ளுவப்பெயர்த் தெய்வம் செப்பிய**
**அருங்குறள் நூலுள் அறப்பா லினுக்குத்**
**தங்குபல நூலுதா ரணங்கள் தலைப்பெய்து**
**இங்கிலீசு தன்னில் இணங்கமொழி பெயர்த்தோன்**

என்பது அப்பகுதி.

**வள்ளுவநாடு-வள்ளுவப்பாடி நாடு**

தமிழகத்தில் சில பகுதிகட்கு "வள்ளுவநாடு" என்று பெயர் வழங்கியுள்ளது. கல்வெட்டுகளால் தெரியவருகிறது.

**மலைநாட்டு வள்ளுவநாட்டு புருஷோத்தமங்கலத்து**
**துக்கையன் சாத்தன்**

**மமைலமண்டலத்து வள்ளுவநாட்டு முரணோத்த**
**மங்கலத்து வர்த்தகன் செம்மாசெட்டியார்**

**மலைநாட்டு வள்ளுவநாட்டு ரவிமங்கலத்து**
**மலையாளர் ஸ்ரீதரன் குமரன்**

**கரிகாலக்கன்ன வளநாட்டு வள்ளுவப் பாடிநாடு**
**காணியடைய ஸ்ரீகோபாலர்**

என்பன கல்வெட்டுத் தொடர்கள்.

"வள்ளுவநாடாழ்வான் இருங்கோளார்" என்ற தொடரும் கல்வெட்டில் காணப்படுகிறது.

**வள்ளுவர் குலமும், தெய்வமும்**

நாமக்கல் மாவட்டம், கபிலமலைச் செப்பேட்டில் "சம்பந்தமூர்த்தி சிஷ்யன் வள்ளுவரில் பெருமாள் தம்பிரான்" என்ற பெயரும் சோழநாட்டுத் திருப்பூந்துருத்திக் கல்வொட்டொன்றில் "வள்ளுவன்" என்ற பெயரும் காணப்படுகிறது.

**தமிழ்மறை**

பழையகோட்டைப் பட்டக்காரர் மரபில் குமார ரத்தினக் கவுண்டர் ஏற்படுத்திய பள்ளியில் "சங்கீதப் பண்ணுடன் சொல்லுகின்ற தமிழ்மறை சங்கநூல்கள் நிகண்டும்'' கற்றுக் கொடுக்கப்பட்டது. "தமிழ்மறை-திருக்குறள்" என்று ஆவணத்தில் எழுதப்பட்டுள்ளது.

**திருவள்ளுவன் குறள்**

கம்ப இராமாயணம், வில்லிபாரதம், நம்பியகப்பொருள் எனச் சில இலக்கிய இலக்கணங்கள் ஆசிரியர் பெயருடன் அழைக்கப்படுவது போலத் திருக்குறளும், "திருவள்ளுவன் திருக்குறள்" என்று அழைக்கப்பட்டுள்ளது."

**புனிதக் குறள்**

இராசிபுரம் அரசு மருத்துமனையில் 80 ஆண்டுகளுக்கு முன்பு மாவட்ட ஆட்சியர் மனைவி திறந்து வைத்த பிரிவில்,

**மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்**
**பெருந்தகை யான்கண் படின்**

என்ற குறளின் ஆங்கில மொழிபெயர்ப்பை எழுதி 'The Sacret Kural' எனக் கீழே எழுதப்பட்டுள்ளது.

**திருவள்ளுவர் காசு**

1796இல் கிழக்கிந்தியக் கம்பெனிப் பணியில் சேர்ந்த ஃபிரான்சிஸ் வைட் எல்லிஸ் சென்னை மாவட்ட ஆட்சியராகவும், கருவூலத்துறைத் தலைவராகவும் இருந்தபோது (1810-1819) திருவள்ளுவர் உருவமும், ஐந்து முனை

நட்சத்திரமும் பொறித்த "இரட்டை வராகன்-நட்சத்திரப் பகோடா" தங்கக் காசுகளை வெளியிட்டார். அக்காசுகளில் இரண்டு லண்டன் பிரிட்டிஷ் மியூசியத்திலும், இரண்டு கல்கத்தாவிலுள்ள இந்திய அருங்காட்சியத்திலும் உள்ளன.

**நில உரிமை ஆவணங்கள்**

சென்னை மாவட்ட ஆட்சியர் எல்.ஜி.கே. மர்ரே 28.02.1807 அன்று வருவாய் வாரியத்துக்கு அனுப்பிய மானியப்பட்டியலில் 2 காணி 9 குழி நிலம் சாந்தோமில் திருவள்ளுவர் கோயிலுக்கு உரியதாகக் கூறப்பட்டுள்ளது.

17.04.1817இல் சென்னை மாவட்ட ஆட்சியர்ஃபிரான்சிஸ் வைட் எல்லிஸ் நிலமானியப் பட்டியலிலும் திருவள்ளுவர் கோயில் நிலம் குறிக்கப்பட்டுள்ளது.

மயிலாப்பூர் வட்டாட்சியர் அலுவலக நிலவரித்தள்ளுபடிப் பட்டியலில் பிளாக் எண் 17 டி.எஸ்.1815ன் படி 1 காணி 1 குழி நிலமும் (இன்று திருவள்ளுவர் கோயில், கோயில் திருமண மண்டபம் உள்ள இடம்) டி.எஸ்எண்.3746ன் படி 1 காணி 2 குழி நிலமும் டி.எஸ்எண் 2780ன்படி 1 காணி 6 குழி நிலமும் திருவள்ளுவர் கோயிலுக்கு உரியதாகக் கூறப்பட்டுள்ளது. திருவள்ளுவர் கோயிலுக்குரிய நிலங்கள் அரசு ஆணை 3648 தேதி 26.09.1955ன்படி மாநகராட்சிக்கு கிரவுண்டு 900 ரூபாய் வீதம் விற்கப்பட்டது. பதிவு எண் 1080/1957 ஆகும். பின்னர் அவை தனியார் வீட்டு மனைகள் ஆயின.

**திருவள்ளுவர் சிலை**

இன்றுள்ள மயிலாப்பூர் திருவள்ளுவர் கோயில் சிலை 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. 27.04.1973இல் அமைக்கப்பட்ட திருப்பணிக்குழுவின் திருப்பணியின் போது திருவள்ளுவரின் சிதைந்த தொன்மையான சிலையொன்று கிடைத்தது.

# வள்ளுவர் காண விளைந்த சமூகம்

முனைவர் ஞா. சுஜாதா சிவக்குமார்

திருக்குறள் மனித சமுதாயத்துக்குரிய பல்வேறு செய்திகளைக் கூறக் காண்கிறோம். உலக வாழ்வின் எந்தப் பகுதிக்குரிய கண்ணோட்டதிலும் திருக்குறளை அணுகலாம். அவ்வடிப்படையிலேயே சமூக வாழ்வியல் அறக்கருதுக்களையும் அணுக இடமுண்டு.

**எல்லாப் பொருளும் இதன் பால்உள இதன்பால்**
**இல்லாத எப்பொருளும் இல்லையால்**

என்று திருவள்ளுவமாலையில் மதுரைத் தமிழ் நாகனார் கூறியுள்ளார்.

**தனிச் சிறப்பு**

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் பலராலும் பொதுமறையெனப் போற்றப்படுகின்றது. இதன் கருத்துக்கள் பலவும் தமிழ் நாட்டினர் மட்டுமின்றிப் பிற நாட்டினராலும் சிறந்தவையென ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. அதனால்தான் 80-க்கும் மேற்பட்ட மொழிகளில் இந்நூல் முழுமையாகவும் சிற்சில பகுதிகளாகவும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

சமுதாய வாழ்வாகிய அகவாழ்வு, புறவாழ்வு ஆகியவற்றில் மக்கள் பெற்றிருந்த சிறப்பைத் திருவள்ளுவர் நன்கு அறிந்தவர். இந்தக் கோட்பாடுகளை மனத்தில் கொண்டு அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பால்களால் சமுதாயத்தின் ஒட்டுமொத்த நோக்கத்தையும் திருக்குறள் என்ற நூலாக அமைத்துள்ளார்.

**தனிச் சிறப்பு**

இரண்டடிகள் ஆகிய பாவகை குறள் என்பதும், அதனோடு திரு என்ற அடைமொழி இதன் கருத்துகளின் சிறப்பு நோக்கிச் சேர்த்து இந்நூல் திருக்குறள் என வழங்கப்பட்டது. அறத்துப்பால் (38 அதிகாரங்கள்), பொருட்பால் (70 அதிகாரங்கள்),

காமத்துப்பால் (25 அதிகாரங்கள்) என இந்நூல் அமைந்துள்ளது. இந்நூல் அதிகார முறையிலேயே சமுதாய நோக்கம் கொண்ட பொருட்களாலோ 70 அதிகாரங்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இந்நூல் கருத்துகள் தமிழ்மொழியில் எழுதப்பட்டுள்ளதேயன்றி, இந்நூலின் எவ்விடத்திலும் தமிழ், தமிழர், தமிழ்நாடு என்ற சொற்கள் இடம்பெறவில்லை. மாறாக, உலகு, உலகம், வையம், வையகம் என்ற சொற்களே இடம்பெறுகின்றன. வள்ளுவரது சமுதாய கோட்பாடு மட்டுமல்லாது உலகக் கோட்பாடும் இக்கருத்தின் மூலம் புலப்படுகின்றது.

"ஆடவர் மகளிர் அவர் தம்மக்கள் எனப் பலருக்கும் பொருந்துகின்றன. சமுதாயக் கருத்துகள் பலவற்றைக் குறள் கூறுகின்றது. அக்கருத்து ஆடவர் பெண்டிர் நிலைகளையும் சமுதாயத்தில் அவர்களின் பங்கு பற்றியும் எடுத்துரைக்கின்றது.

இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த சான்றோராகிய திருவள்ளுவர் கூறுகின்ற சமுதாயக் கருத்துகள் பல நூற்றாண்டுகளின் மாற்றங்களைப் பெற்று நாகரிகத்தின் உச்ச நிலையில் வாழும் இன்றைய சமுதாயத்திற்கு ஒரு வழிகாட்டியாய் அமைகின்றது என்றால் காலத்தால் வெல்ல முடியாத அக்கருத்துகளின் நன்மையை உணர முடிகின்றது.

ஆகவே தான் திருக்குறள் அழியா இலக்கியம் என்றும், வாழும் இலக்கியம் என்றும், வான்மறை என்றும், சமுதாயப் புதையல் என்றும், மக்கள் இலக்கியம் என்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**நோக்கம்**

மக்களின் இன்ப வாழ்விற்கு இன்றியமையாதவையென திருவள்ளுவர் வகுத்துள்ள உயர்நல கருத்துகள் பல உள்ளன. அக்கருத்துகள் சட்ட நெறிகள் ஆவதில்லை. ஆயினும் வாழ்க்கையின் நலன்களாக அவ்வறப் பண்புகளில் வளர்ச்சிக்கேற்ற சூழ்நிலையை இன்றைய சட்டம் பேணிப் பாதுகாக்கின்றது.

உண்ணும் உணவும், உடுக்கும் உடையும் வாழும் இடமும் மக்கள் வாழ்விற்கு இன்றியமையாதவை. பொன்னும் பொருளும் வேண்டத்தக்கவை எனினும் மனித வாழ்வு புறப்பொருள்கள் அளிக்கும் இன்பத்தை மட்டுமே நாடி நலம் பெறுவதன்று. அன்பு, அருள், காதல், மானம் போன்ற உயர்நல அறப்பண்புகளே

வாழ்வதற்கு வளம் தருகின்றன. ஒருவருக்கு அறிவினை அளிக்கின்றன. இவ்வுயர் நலப் பண்புகள் இல்லையெனில் மனித வாழ்வு பயனற்று போய்விடும்.

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

அன்புடன் வாழ்வதே வாழ்க்கையின் பண்பு அறத்தைப் போற்றி வாழ்வதே வாழ்க்கையின் பயன். அறநெறியில் வாழ்க்கை நடத்தினால் போதும் வாழ்க்கை பொதுவாகத் தொடங்குவது இல்லறத்தில் முடிவது துறவறத்திலாகும். முதலில் தன்னலம் கருதாது அறம் செய்து பின் தன்னலனுக்காக அறம் செய்வதும் உலக வழக்கமாக அமைந்துள்ளது.

திருவள்ளுவர் சமுதாய வாழ்விற்கு மனிதனுக்கு வேண்டிய அத்தனை அறப்பண்புகளையும் மூன்று பால்களில் 133 அதிகாரங்களில் 1330 குறட்பாக்களில் 14,000 சொற்களில் 42,194 எழுத்துகளில் கூறியுள்ளார். அவர் கூறிய அறவழி வாழ்க்கை நடத்தினால் ஒவ்வொருவரும் வீடுபேறு அடைதல் உறுதி.

திருவள்ளுவர் கல்வி கேள்விகளால் உணர்ந்தவற்றையும் பட்டறிவு வாயிலாக அறிந்தவற்றையும் கருப்பொருளாகக் கொண்டு, தாய் மொழியாகிய தமிழில் ஆய்ந்து தேர்ந்து தெளிந்து வீடு சிந்தையும் மொழியும் செல்லா நிலைமையது ஆதலின் அதனை விடுத்து, ஏனைய மூன்றையும் வள்ளுவர் தம்நூலில் விளக்கிக் கூறியுள்ளார். வீட்டைப் பற்றி வெளிப்படையாகக் கூறாமல் இலைமறை காய்போலக் குறிப்பாக முப்பாலிலே அடக்கிக் கூறியுள்ளார்.

திருக்குறள் அறத்தை விரும்புவார்க்கு அறநூல் (பொருளை விழைவார்க்கு ஒப்புயர்வற்ற பொருள்நூல்). அரசியலை நாடுவார்க்கு நல்வழிகாட்டும் அரசியல் நூல், குடும்பத்தை இனிது நடத்து துணை செய்யும் இல்லற நூல். துறவறத்துக்கு உண்மை அறிவை விளக்கி பற்றற்று வீடுபெற வழிகாட்டும் ஞானநூல் மக்கள் வறுமையும், பசியும் நீங்கி நோயும் நொடியும் இன்றி, கல்வி கேள்விகளில் சிறந்து ஒழுக்கத்தில் உயர்ந்து, அன்பு, அடக்கம், இன்சொல், ஈகை, வாய்மை முதலிய பண்புகளை உடையவராய் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ வழி வகுத்துரைக்கும் சமுதாய நூல். சுருங்கக் கூறின் இன்றைய மக்கள் வாழ்வில் ஏற்படும் துன்பங்களுக்கும் சீரழிவிற்கும் அறநெறியில் தீர்வு காட்டி நல்வாழ்வுக்கு வழிகாட்டும் வாழ்க்கைத் துணை நூலாகும்.

திருவள்ளுவருக்குப் பின் நூல் எழுதிய புலவர்களும் கவியரசர்களும் தம்கருத்துகளுக்குப் பாதுகாப்பாகத் திருக்குறளை எடுத்தாண்டுள்ளனர். திருக்குறளைப் பயன்படுத்தாத தமிழ்ப் புலவர்களோ, கவிஞர்களோ, கட்டுரை ஆசிரியர்களோ, பேச்சாளர்களோ தமிழகத்தில் இல்லை எனலாம். திருக்குறளின் மாண்பினையும், அதனை இயற்றிய திருவள்ளுவரின் பெருமையையும் விளக்க, 'திருவள்ளுவமாலை' என்னும் நூல் தோன்றியுள்ளது. இத்தகைய பெருமை வேறு எந்த நூலுக்கும் அமையவில்லை.

திருக்குறளில், கடவுள் வாழ்த்து எல்லாச் சமுதாயத்தவரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் பொதுமையாய் அமைந்துள்ளது. சைவர், வைணவர், பௌத்தர், சமணர், கிருத்துவர், இசுலாமியர் ஆகிய அனைவரும் திருவள்ளுவரிடம் உரிமை கொண்டாடுகின்றனர். எல்லாச் சமுதாயத்தவரும் விரும்பி ஏற்கும் சமயப் பொது நூலாய் திகழ்வது திருக்குறள். இதன் சிறப்பு நோக்கி வீரமாமுனிவர் முதலில் இலத்தீன் மொழியில் மொழி பெயர்த்தார். பின்னர்த்துவருவர், ஜி.யு.போப் ஆகியோர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தனர். அதன் வழி உலகப் பொதுமறையாகி உலகத்தில் சிறந்த அறநூலாகத் திகழ்கிறது திருக்குறள்.

**முடிவுரை**

திருவள்ளுவர் சமுதாயத்தின் நலன் கருதி கூறிய எல்லா அறங்களும் அன்றுமுதல் இன்றுவரை பெருமளவு மக்களும் பின்பற்றி வாழ்ந்து வருகின்றனர். இனி வருங்காலத்வரும் போற்றி வாழ்வதற்கேற்ப எல்லாக் காலத்திற்கும் ஏற்புடைய இனிய நன்னூலாய்த் திகழ்கிறது. ஆடை அணிகலன்களைப் போலக் காலந்தோறும் மாறுபடும் மக்களின் நடை உடைய பாவனைகளையும் பழக்கவழக்கங்களையும் கூறாமல், என்றும் மாறாத நிலையான, அடிப்படையான பண்புகளையே வள்ளுவர் விளக்கிக் கூறியுள்ளார்.

திருவள்ளுவர் மனிதன் எல்லாப் பருவத்திற்கும், எல்லாச் சூழ்நிலைக்கும் பொருந்தும் நல்வழியில் செல்லும் பாதையைக் காட்டுகின்றார். அதே மனிதன் தீய வழியில் செல்வதால் உண்டாகும் தீங்கையும் கடிகின்றார். மனிதனை நல்வழியில் நடந்தால் இச்சமுதாயத்தில் நல்ல மனிதனாய் வாழ்வதற்கான சூழலையும் சுட்டிக்காட்டுகின்றார். தனிமனித நல்வாழ்வே சமுதாயத்தின் வாழ்வாக அமைதலை எடுத்துரைக்கின்றார்.

அவ்வழி நடந்தால் தனி மனிதனும் சமுதாயமும் நல்வழி பெறஇயலும்.

1. சமூகத்தில் புகழ்பெற்றவர் அனைவரும் குறள்வழி வாழ்ந்தவர்களே

2. இன்னலுக்கு உள்ளானவர்கள் நெறி தவறியவர்களே

3. இன்றைய சமூகம் குறள் நெறி நடக்க முயல்வதும், நாளைய தலைமுறையினரை நடக்க வழிகாட்டியாகத் திருக்குறளின் கருத்துகளைச் சிறப்பித்தலையும் திருவள்ளுவருக்கு சிலை எழுப்பி அவரது பெருமையை நிலைநாட்டும் வழியில் நாளைய சமுதாயம் இனிய சமுதாயமாய் மலர வழிவகுக்கும்.

# அமைப்பு வழி திருவள்ளுவர் உணர்த்தும் வாழ்வியல்

**முனைவர் மு. சற்குணவதி**

திருக்குறள் இனம், மொழி, நாடு, காலம் கடந்த கருத்துகளை உள்ளடக்கிய ஓர் அற்புதமான நூல். அதனால் தான் உலக மொழிகள் பலவற்றுள்ளும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. எந்தச் சூழ்நிலையாக இருந்தாலும், எந்த ஒரு கேள்வி மனத்துள் எழுந்தாலும் அதற்குப் பதில் தருகிறது திருக்குறள். அடேங்கப்பா! இந்தத் திருவள்ளுவரால் எப்படித்தான் இப்படிச் சிந்திக்க முடிந்ததோ! என்று மலைக்க வைக்கிறது. திருவள்ளுவர் என்றும் ஞானியின் சிந்தனை ஓட்டம் மனிதவாழ்வின் நெறிகளையே விளக்குகின்றது. ஒரு குறளையே பல்வேறு சிந்தனைகளுடன் ஆய்வு செய்யும் உயர்வு திருக்குறளுக்கு உள்ளது. தமிழரின் அசைக்க முடியாத சொத்தான திருக்குறளின் ஒவ்வொரு குறளையும் தனித்தனியாக ஆய்வு செய்யலாம். திருக்குறளுக்குள் சென்று ஆய்வு செய்வது என்பது ஒரு நிலை. திருக்குறளின் அமைப்பே நமக்கு வாழ்வியலைச் சொல்கிறதா! என்று கேள்வி எழுப்பி ஆய்வு செய்வது மற்றொரு நிலை அந்த வகையில் திருக்குறளின் அமைப்பு உணர்த்தும் வாழ்வியலை இனி நோக்குவோம்.

**உட்பிரிவுகள்**

திருக்குறள் பிரிவுகள், வாழ்வியல்.

**திருக்குறள் பிரிவுகள்**

திருக்குறள் பல்வேறு பெயர்களால் போற்றப்படுகிறது. சான்றாக முப்பால், பொதுமறை, தமிழ்மறை, பொய்யாமொழி, தெய்வ நூல், வாயுறை வாழ்த்து என்றெல்லாம் சிறப்பிக்கப் பெறுகிறது. அதே போன்று திருவள்ளுவரும் தெய்வப் புலவர், முதற்பாவலர், செந்நாப் போதார், பெருநாவலர் என்றெல்லாம் புகழப்படுகிறார். திருக்குறளின் காலத்தையும் வெவ்வேறு நிலைகளில் அறிஞர்கள் சுட்டுகின்றனர். பொதுவாகப் பலராலும் ஏற்றுக் கொள்ளப் பெற்ற காலம் கி.மு. 1 முதல் 3ஆம்

நூற்றாண்டு என்பதாகும். உயரிய கருத்துகளை எடுத்துரைக்கும் தன்மைக்காகத் திரு என்ற அடைமொழியும் ஏழு சீர்களைக் கொண்ட குறள் வெண்பாவால் ஆகிய நூல் என்பதால் திருக்குறள் என்று பெயர் பெறுகிறது. இவையாவும் பொதுவாகத் திருக்குறள் பற்றிய அறிமுகமாக அமைகிறது.

திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என மூன்று பெரும் பிரிவுகளை உடையது. அறத்துப்பால் 39 அதிகாரங்களையம் பொருட்பால் 70 அதிகாரங்களையும் இன்பத்துப்பால் 25 அதிகாரங்களையும் உடையது. ஆக மொத்தம் 133 அதிகாரங்கள் திருக்குறளில் உள்ளன. அறத்துப் பால் அறத்தைப் பற்றிப் பேசுகிற பகுதி. அறம் என்பது மனிதர்கள் ஒருவருக்கொருவர் இசைவாக இணங்கியும், ஒருவருக்கொருவர் இடையூறு இல்லாமல் தனித்தும் வாழ்வதற்கு உரிய நெறியும் முறையும் ஆகும். நெறிமுறை என்பது வழிமுறை என்பதே. ஒவ்வொரு சமயத்தாருக்கும் சில வாழ்க்கை நெறிமுறை உண்டு. ஒவ்வொரு வட்டாரத்துக்கும் சில நெறிமுறைகள் உண்டு ஒவ்வொரு நாட்டிற்கும் சில நெறிமுறை உண்டு ஒவ்வொரு கூட்டத்திற்கும் சில நெறிமுறை உண்டு. பழங்குடி மக்களுக்கென்று சில நெறிமுறை உண்டு. நாடோடிகளுக்கென்று சில நெறிமுறை உண்டு. இவ்வாறு வேறுபட்டு விளங்கும் நெறிமுறைகளைப் பற்றித் திருக்குறள் பேசவில்லை. மாறாகப் பொதுவாக உள்ள நெறிமுறைகளைப் பற்றியும் உயர்ந்த குறிக்கோள் உணர்ச்சியோடு பேசும் பகுதியே அறத்துப்பால்.

இந்த அறத்துப்பால் 4 இயல்களாகப் பிரிக்கப்ட்டுள்ளது. கடவுள் வாழ்த்துப் பகுதி எல்லாக் காலத்தும் எல்லா மக்கள் தொகுதிக்கும் முழு முதற் பொருளாக வழிபடப்படும் கடவுள் பற்றிக் கூறும் பகுதி, வானத்திலிருந்து பொழியும் மழையின் இன்றியமையாமையைப் பற்றி கூறும் பகுதி வான்சிறப்பு யான், என்ற அகப்பற்றும் எனது என்ற புறப்பற்றும் தன்னலமும் நீத்த துறவு பற்றிப் பேசும் பகுதி நீத்தார் பெருமை. உலகம் கைக் கொள்ள வேண்டிய நல்லறங்களை வலியுத்திப் பேசும் பகுதி அறன் வலியுறுத்தல். இந்த நான்கு அதிகாரங்களும் அறத்துப்பாலிலுள்ள பாயிரவியலுள் வருகின்றது. இல்வாழ்க்கை என்னும் குடும்பம் பற்றிய செய்திகளை இல்லறவியல் தருகிறது. துறந்தார்க்கு உரிய ஒழுகலாறுகளைத் துறவறவியல் தருகிறது. உரிய ஒழுகலாறுகளைத் துறவறவியல் தருகிறது. ஊழைப் பற்றிப் பேசுகிற பகுதி ஊழியல், இத்தகைய செய்திகள் அறத்துப் பாலில் இடம் பெற்றுள்ளன. அறம் பொருள் இன்பம் ஆகிய சூழல் அமைவதற்குக் காரணமான ஊழ் வலி அறத்துப்பாலின்

ஈற்றிலும், பொருளின்பப் பால்களுக்கு முன்பும் குறளில் இடம் பெற்றுள்ளது.

பொருட்பால் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்ற மூன்று இயல்களாக அமைந்துள்ளன. பரிமேலழகருக்கு முன்னர் திருக்குறளுக்கு உரை எழுதிய பரிப்பெருமாள் பரிதியார், மணக்குடவர், காளிங்கர் ஆகியோர் பொருட்காலை அரசியல், அமைச்சியல், பொருளியல், நட்பியல், துன்பவியல், குடியியல் என்று ஆறு பிரிவுகளாகப் பிரித்தனர். பரிமேலழகர் மட்டும் அரசியல், அமைச்சியல், ஒழிபியல் என்று மூன்றாகப் பகுத்தார். இப்பகுப்பு பலராலும் இன்றுவரை பின்பற்றப்பட்டுவருகிறது. மனித வாழ்க்கையில் மனிதன் உருவாகிப் பின்பற்ற வேண்டிய பருப்பொருள், நுண்பொருள் பற்றிப் பேசுகிற பகுதியே பொருட்பால், இதில் அரசியல் என்பது தலைமைப் பொறுப்பிலுள்ள அரசனது இயல்பு பற்றியும் அரசு என்ற அமைப்பு இயங்க வேண்டிய முறைமை பற்றியும் பேசுகிறது. அரசுக்கு உரிய அங்கங்களைப் பற்றிப் பேசுவது அங்கவியல், அறத்துப்பாலுக்கும் பொருட்பாலுக்கும் இன்பத்துப் பாலுக்கும் பொதுவான, ஒழிந்த செய்திகளைக் கூறும் பகுதியே ஒழிபியல்.

இன்பத்துப்பால் களவியல், கற்பியல் என்ற இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. தலைவன் தலைவியிடையே திருமணத்திற்கு முன் நிலவும் உறவினைக் களவியலும் பிறகு தலைவன் தலைவியிடையே நிலவும் உறவினைக் கற்பியலும் சொல்கின்றன.

இவ்வாறு திருக்குறளின் மையப்பிரிவுகள் அமைந்துள்ளன.

**வாழ்வியல்**

திருக்குறளின் பிரிவுகள் மனிதர்களுக்குக் கூறும் வாழ்வியல் நெறிகளை இனிநோக்குவோம். அறத்துப்பாலை முதலில் பொருட்பாலை அதற்கடுத்த நடுவிலும் இன்பத்துப்பாலை இறுதியிலுமாக வைக்கப்பட்டுள்ளன. மனித வாழ்க்கை அறவழியில் அமைய வேண்டும் என்பதற்காகவே முதலில் வைக்கப்பட்டுள்ளது.

**பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை**
**வழியெஞ்சல் எஞ்ஞான்று மில்**

பழிபாவங்களுக்கு அஞ்சி, முறையாகப் பொருள் ஈட்டி அப்பொருளை முறையாகப் பகுத்து அளித்துத் தானும் அனுபவிப்பானாயின் அவனுடைய வாழ்க்கை நிறைவுடையதாகி முழுமைபெற்று என்றும் நின்று நிலவும் அப்படிப்பட்ட

வாழ்க்கை குறைபட்டு அழிதல் இல்லை என்கிறார் வள்ளுவர். இதுதான் அறம், வாழ்க்கை இப்படியான நெறியில் இருக்க வேண்டும் என்று வரையறுத்து வழிகாட்டுவது அறம். எனவே அறத்தை முதலில் வைத்தார். இதில் 38 அதிகாரங்கள் உள்ளன. இறைநம்பிக்கை, வான்சிறப்பு, இல்வாழ்க்கை, இனியவை பேசுதல், நடுவுநிலைமை, ஒழுக்கம் உடைமை, அடக்கம் உடைமை, பொறையுடைமை, புறங்கூறாமை, ஈகை, வாய்மை, கொல்லாமை முதலான வழிமுறைகளை அறத்துப்பால் சுட்டுகின்றது.

அடுத்ததாகப் பெருட்பால் அமைந்துள்ளது. இதில் 70 அதிகாரங்கள் வைக்கப்பட்டுள்ளன. மனித வாழ்க்கை அறவழியில் சென்று பொருள்பட வாழவேண்டும் என்பதற்காகத் தான் பொருட்பால் இடையில் வைக்கப்பட்டுள்ளது. மனித வாழ்வுக்காக மனிதன் உருவாக்கிக் கொண்ட பருப்பொருள், நுண்பொருள் ஆகியவற்றைப் பற்றி இப்பகுதி பேசுகிறது. மனித வாழ்வில் பொருள் செல்வம் மட்டும் வந்து போனால் போதாது. பொருள்படவும் வாழவேண்டும் என்பதையே இப்பகுதி எடுத்துரைக்கின்றது. கல்வி, அறிவுடைமை, சிற்றினம் சேராமை, ஊக்கம் உடைமை, முயற்சி உடைமை, அவை அறிதல், நட்பு, கூடா நட்பு, உட்பகை பெண்வழிச் சேரல் கள்ளுண்ணாமை முதலான பல பொருள்கள் பற்றி இப்பகுதி எடுதததுரைக்கின்றது.

**ஆய்ந்துஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை**
**தான்சாம் துயரம் தரும்**

இவர் நட்புக்குரியவரா! இல்லையா! என்று ஆராய்ந்து நட்புக் கொள்ளவில்லை என்றால் இறுதியில் அவன் உயிருக்கே ஆபத்தாய் முடியும் என்று தவறான நட்பு உறவை எடுத்துறைக்கிறார். இன்றைய காலத்திலும் எக்காலத்திலும் இளைஞர்களும், வாழ வேண்டியவர்களும் அழிவுக்குள்ளாவது இந்தக் கூடா நட்பினாலே என்பதை எவரும் மறுக்க இயலாது. எனவே பொருள்பட வாழ வேண்டியது அவசியமான ஒன்று என்பதில் அப்பகுதியில் 70 அதிகாரங்கள் உள்ளன. இதிலுள்ள கடைசி 13 அதிகாரங்கள் ஒழிபியல் என்ற பகுதியில் வருகின்றது. இதில் கடைசியாக வைக்கப்பட்டுள்ள கயமை என்ற அதிகாரம் மனிதர்களுள் பாதகர்களைப் பற்றிப் பேசுகிறது. அய்யகோ! இப்படியெல்லாம் கூட மனிதர்கள் இருப்பார்கள்! என்று வேதனைப்பட வைக்கிறது. கயவர்களைப் பற்றித் தெளிவாக எடுத்துரைக்கும் வள்ளுவர்,

**எற்றிற்கு உரியர் கயவர்ஒன்று உற்றக்கால்**
**விற்றற் குரியர் விரைந்து**

என்கிறார். எல்லாத் தீமைகளையும் செய்துவிட்டு எந்தக் கவலையும் இல்லாமல் இருக்க அவர்களால் (கயவர்) மட்டுமே முடியும் என்று கூறிவிட்டு நான் என்னதான் கயவரைப் பற்றி கூறுவது, தமது சுயநலத்திற்காகத் தம்மையே விரைவாக விற்றுக் கொள்ளவும் தயங்கமாட்டார்கள் என்று கூறிச் சமுதாயத்தில நல்லவர் வேடமிட்டுப் பாதங்களை ஓசைப்படாமல் செய்துவிட்டு நடமாடும் கயவர்களை இனம் காட்டுகிறார் வள்ளுவர்.

இறுதியாக வைக்கப்பட்டுள்ளது இன்பத்துப்பால் இதில் 25 அதிகாரங்கள் உள்ளன. நல்ல நெஞ்சம் கொண்ட தலைவனும் தலைவியும் சந்தித்து மனம் ஒன்றி, குறிப்பறிந்து, சந்தித்து, ஒருவரை ஒருவர் பாராட்டி, திருமணம் செய்து கொள்ள திட்டமிடுதல் பற்றிப் பேசுகிறது களவியல். மனித வாழ்க்கை இப்படித்தான் அமையும் என்பதல்ல, இப்படியும் அமையலாம் என்பதை களவியல் சுட்டுகிறது. கற்பியலில் 18 அதிகாரங்கள் உள்ளன. அது தலைவன் தலைவி திருமணம் செய்து வாழும் அகவாழ்க்கை பற்றிப் பேசுகிறது. அகவாழ்வில் ஏற்படும் மகிழ்ச்சியைப் பற்றி எடுத்துரைக்கிறது. ஒருவரைஒருவர் பிரியும் போது ஏற்படும் துன்பம், நினைந்து புலம்புதல், ஊடல் முதலானவற்றைச் சுட்டுகிறது.

**ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்**

ஊடுதல் என்பது அகம் சார்ந்தது. இது கணவன் மனைவி என்ற இருவருக்கு மட்டுமே புரிதலாக இருக்கும்போது அகவாழ்க்கை இன்பமாக அமையும் என்பதையே திருவள்ளுவர் சுட்டுகின்றார்.

**முடிவுரை**

திருக்குறளின் அமைப்பை நோக்குகிறபோது அறம் பொருள் இன்பம் பற்றி கூறிய வள்ளுவர் வீடு பற்றிக் கூறாதது போன்று தோன்றும். ஆனால் இந்த மூன்றினுள்ளும் அறநெறி வழி வாழ்ந்தாலே அது வீடுபேற்றைத் தரும் என்பதால் தனியாக வீடு பற்றி அவர் பேசவில்லை. அகம் பற்றிக் கூறும் இன்பத்துப்பாலை முதலில் வைத்து, அதற்குப்பின் பொருளை வைத்து இறுதியாக அறத்தை வைத்திருக்க வேண்டும். ஆனால் வள்ளுவர் இன்பத்தை இறுதியாக வைத்தார். அதுவும் 25 அதிகாரம் மட்டுமே. காரணம் அக இன்பத்திற்காக மட்டுமே மனிதன் பிறக்கவில்லை. அந்த இன்பம் சந்ததியைப் பெருக்க மட்டுமே இயற்கை தந்தது.

# திருக்குறள் போற்றும் மானுடம்

**வே. பாரதி**

**முன்னுரை**

உலகில் இதுவரை தோன்றிய தலைசிறந்த நூல்களுள் ஒன்றாகத் திருக்குறள் விளங்குகிறது. திருக்குறளில் 'இலக்கியச் சிந்தனை' இருக்கலாம். ஆனால் அது இலக்கிய நூல் அன்று. திருக்குறளில் 'நீதிக் கருத்துக்கள்' இருக்கலா். ஆனால் அது நீதிநூல் அன்று திருக்குறள் ஒரு புரட்சி நூல், அரசியல், சமுதாய, பொருளாதாரத் துறைகளில் மாற்றங்கள் ஏற்படுத்தி, மனிதன் மனிதனாக வாழவழிகாட்டும் வழிகாட்டி நூல், மக்கள் வாழ்க்கையில் உள்ள குற்றங்கள் கலையப்பட வேண்டும். துன்பங்கள் தீர்க்கப்பட வேண்டும். அதற்குரிய வழிமுறைகளை வள்ளுவர் வகுத்துக் காட்டுகின்றார். குறள் கூறும் கருத்துக்கள் இரண்டாயிரம் ஆண்டுகளாக நடைமுறைப் படுத்தப்படாமலேயே இருந்து வந்துள்ளன. திருக்குறள் தமிழில் எழுதப்பட்டிருந்தாலும் அது உலகம் முழுவதும் உள்ள அனைத்து மக்களின் வாழ்க்கைக்கும் வழிகாட்டும் நூலாகத் திகழ்கின்றது. மானுட சமுதாயத்தில் பலவகையான தீமைகள் இருந்தாலும் 1. அழுக்காறாமை, (AVOID ENVY), 2. கள்ளுண்ணாமை (NOT DRINKING LIQUOR), 3. கள்ளாமை, (ABSENCE OF FRAUD), 4. கொல்லாமை (NOT KILLING), 5. சூது (GAMBLING), என்னும் ஐந்து வகையான தீமைகள் மக்கள் வாழ்க்கையிலிருந்து அகற்றப்படவேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்திக் கூறுகின்றார். இத்தீமைகளை எவ்வாறு நீக்க வேண்டும் என்று திருக்குறள் மிக விரிவாக எடுத்துரைக்கிறது. அத்தகைய மானுடக் கருத்துகளை இக்கட்டுரை எடுத்துக் கூறுகிறது.

**அழுக்காறாமை** (AVOID ENVY)

திருவள்ளுவர், மனித வாழ்விலிருந்து 'பொறாமை' என்னும் இழிகுணம் முற்றாக அழித்தொழிக்கப்படவேண்டும் என்று கருதினார். பொறாமை கொண்டவனையும் அவனைச் சேர்ந்த பிறரையும் சேர்த்தே அழித்துவிடும். ஒவ்வொரு மனிதனும்

பொறாமை இல்லாத மன நிலையை வளர்த்துக் கொள்வதோடு அதைத் தன்இயல்பாகவும் கொள்ளவேண்டும் என்பதை,

**ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து**
**அழுக்காறு இலாத இயல்பு**

என்னும் குறள் எடுத்துரைக்கின்றது. பொறாமை என்னும் கொடிய பாவி மனிதனுடைய செல்வத்தையெல்லாம் அழித்துவிடும், அஃதன்றியும் பொறாமை என்னும் தீய குணம். மனிதனைக் கொடிய வறுமை என்று இருளில் தள்ளிவிடும். இதனை,

**அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்து விடும்**

என்னும் குறளில் வள்ளுவர் சுட்டிக் காட்டுகின்றார். பொறாமை, கொண்டவன் வாழ்ந்ததும் இல்லை, பொறாமை இல்லாதவன் வீழ்ந்ததும் இல்லை. இக்கருத்தை,

**அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃதுஇல்லார்**
**பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்**

என்னும் குறள் கூறுகிறது. எனவே மனிதர்கள் வாழ்க்கையில் பொறாமையின்றி வாழ்வதே மிகச்சிறந்த வாழ்க்கை நெறியாகும் என்று திருவள்ளுவர் கூறுகின்றார்.

**கள்ளுண்ணாமை** (NOT DRINKING LIQUOR)

மனிதனை மதிமயங்கச் செய்து, அவனை இழிநிலைக்குக் கொண்டு செல்வது குடிப்பழக்கம் ஆகும். குடிப்பழக்கம் மனித இனத்திடம் பல்லாயிரம் ஆண்டுகளாக இருந்து வரும் அன்பு, ஈகை, கருணை, நேர்மை, வாய்மை போன்ற அனைத்துப் பண்புகளையும் சுட்டுப் பொசுக்கி விடும். மனித வாழ்க்கையிலிருந்து இப்பழக்கம் அறவே நீக்கப்படவேண்டும் என்று வள்ளுவர் கருதுகின்றார். மனிதன் மது அருந்துதல் கூடாது. சான்றோர்களின் தொடர்பு வேண்டாம் என்றும் நினைக்கின்றவர்கள் வேண்டுமானால் மதுவை அருந்தலாம் இதனை,

**உண்ணற்க கள்ளை, உணில்உண்க சான்றோரான்**
**எண்ணப் படவேண்டா தார்**

என்ற குறளில் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். குடிப்பழக்கம் என்றும் பெருங்குற்றத்தைச் செய்பவரை விட்டு "நாணம்" என்ற நல்லவன் நீங்கி விடுவான் என்பதை,

**நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்என்னும்**
**பேணாப் பெருங்குற்றத் தார்க்கு**

என்ற குறளில் திருவள்ளுவர் சுட்டிக்காட்டுகின்றார்.

மதுப்பழக்கம் கொண்டவரைத் திருத்துவது எளிதான செயல் அல்ல. அது மிகவும் கடினமானதாகும். குடிப்பழக்கத்தின் தீமைகளை விளக்கிக் கூறிக் குடிகாரனைத் திருத்த முயல்வது, தண்ணீரில் மூழ்கியவனைத் தீப்பந்தம் கொண்டு தேடுவதைப் போன்று வீணான செயல் ஆகும். இக்கருத்தை,

**களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்**
**குளித்தானைத் தீத்துரீஇ யற்று**

என்ற குறளில் வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

**கள்ளாமை (ABSENCE OF FRAUD)**

பிறர் பொருளைத் திருடி வாழும் தீய எண்ணத்தை மனிதர்கள் அடியோடு மனத்தில் இருந்து நீக்குதல் வேண்டும். களவு என்பது பாவச் செயல்களில் எல்லாம் கொடியதாகும். பொருள் என்பது நேரிய வழியில் சம்பாதித்ததாக இருத்தல் வேண்டும். திருட்டுத்தனமாகப் பொருளைக் கைப்பற்றக் கருதுதல் கூடாது. திருட்டுத்தனமாகப் பிறர் பொருளைக் கவர மனத்தில் நினைத்தல். கூடக் குற்றமாகும். இதனை,

**உள்ளத்தால் உள்ளலும் தீதே, பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்**

என்னும் குறளில் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மனத்தளவில் நினைப்பதே குற்றம் என்றும் பிறர் பொருளைக் கைப்பற்ற நினைப்பது அதைவிடப் பெரிய குற்றமாகும் என்று இக்குறள் கூறுவதை உய்த்துணர வைக்கின்றார். தவறான திருட்டுவழியில் தேடிய செல்வம் கோடி, கோடியாக நிறைந்து வழிவதைப்போலத் தெரியும். ஆனால் வந்த வேகத்திலேயே அவை அழிந்துவிடும் என்பதை,

**களவினால் ஆகிய ஆக்கம் அளவிழந்து**
**ஆவது போலக் கெடும்**

என்னும் குறள் குறிப்பிடுகிறது. திருட்டு வழியில் ஒருவன் தேடிய செல்வம் தீய விளைவுகளை ஏற்படுத்துவதோடு தீராத துன்பத்தையும் தரும். இக்கருத்தை,

**களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமம் தரும்**

என்ற திருக்குறள் சுட்டிக்காட்டுகிறது.

**கொல்லாமை (NON - KILLING)**

உலகில் உள்ள அனைத்து உயிர்களையும் கருணையோடு நேசிக்க வேண்டும். எந்த உயிரையும் கொல்லுதல் கூடாது. கொல்லாமை என்னும் அறத்தை மனிதர்கள் கடைப்பிடித்தல் வேண்டும் என்ற கருத்தை வள்ளுவர் வலியுறுத்துகிறார். ஆறறிவு உடைய மனித உயிர்களை மட்டுமல்லாது ஓர்அறிவு, ஈரறிவு உடைய மற்ற உயிர்களையும் மனிதன் நேசிக்க வேண்டும். அவற்றைத் துன்புறுத்துதல் கூடாது, கொல்லுதல் கூடாது என்பதை மிகச் சிறந்த அறமாக வள்ளுவர் குறிப்பிடுகின்றார். உயிர்க்கொலை செய்யாதிருத்தலே மிகஉயர்ந்த அறமாகும். கொலை பாவத்திற்குள் பிற பாவச் செயல்கள் எல்லாம் அடங்கிவிடும் என்பதை,

**அறவினை யாதுஎனில் கொல்லாமை கோறல்**
**பிறவினை எல்லாம் தரும்**

என்று வள்ளுவர் எடுத்துரைக்கின்றார். இருப்பதைப் பகிர்ந்து கொண்டு எல்லா உயிர்களும் இன்பமாய் வாழ்வதே உலக வாழ்க்கையின் நோக்கம் என்று உயர்ந்தோர் எழுதிய நூல்கள் கூறுகின்றன. இதனை,

**பகுத்துண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை**

என்னும் திருக்குறள் கூறுகின்றது. கொல்லாமை நோன்பை உறுதியோடு கடைப்பிடிப்போரின் உயிருக்குச் செயற்கையாய் வரும் நேர்ச்சிகள் (Accidents) ஏற்படுவதில்லை. இக்கருத்தை,

**கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லாது உயிர்உண்ணும் கூற்று**

என்னும் குறளில் திருவள்ளுவர் கூறுகின்றார்.

**சூது (GAMBLING)**

மகாபாரதக் காலத்திலிருந்து இன்று வரை சூதாட்டத்தினால் மனித சமுதாயம் சீரழிந்து போன வரலாற்றைப் பார்த்து வந்திருக்கிறோம். எனவே வள்ளுவர் சூதாட்டத்தை மிகக் கடுமையாகக் கண்டிக்கிறார். வெற்றியே கிடைக்குமாயினும்

சூதாடுவது தவறு. இவ்வெற்றி தூண்டில் முள் மீது உள்ள புழுவை விழுங்கித் தன் உயிரை இழக்கும் மீனின் நிலைக்கு ஒப்பானதாகும். இதனை,

**வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்**
**தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று**

என்னும் குறள் கூறுகின்றது. உடை, செல்வம், உணவு, புகழ், கல்வி என்னும ஐந்தும் சூதாடுபவனை நெருங்காது என்னும் கருத்தை

**உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்**
**அடையாவாம் ஆயம் கொளின்**

என்னும் குறளில் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். சூதாட்டத்தின் பொருளை இழப்பவனுக்கு மேலும் மேலும் ஆசை ஏற்படும். ஒருமுறை ஈடுபட்டவனை விட்டு இவ்வழக்கம் விரைவில் நீங்குவது இல்லை. சூதாடி மானத்தையும் (Honour), நாணத்தையும் (Shame), இழந்து விடுகின்றான். துன்பம் ஏற்பட, ஏற்பட உயிர் மேல் ஆசை அதிகரிப்பதைபோல பணத்தை இழக்க, இழக்க சூதாட்டத்தின் மேல் ஆசை அதிகரிக்கும் இதனை,

**"இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்**
**உழத்தொறூஉம் காதற்று உயிர்"**

என்ற திருக்குறள் எடுத்துரைக்கிறது.

**முடிவுரை**

உலகத்தில் தோன்றிய ஈடு இணையற்ற மாபெரு சிந்தனைச்சிற்பிகளுள் ஒருவர் திருவள்ளுவர். இவருடைய நெறிமுறைகள் இன்றைய மக்கள்வாழ்க்கைக்கு வழிகாட்டிகளாகத் திகழ்கின்றன. இன்றைய இளைஞர்களும், மாணவர்களும் பின்பற்றத் தக்க நெறிமுறைகளை வள்ளுவர் திருக்குறள் முழுவதும் வலியுறுத்திக் கூறியுள்ளார். எனினும்.

ஐந்து வகையான தீமைகளான 1. அழுக்காறாமை, 2. கள்ளுண்ணாமை, 3. கள்ளாமை, 4. கொல்லாமை, 5. சூது. ஆகியனவற்றை நீக்கி வாழும் வழிமுறைகளை வள்ளுவர் எவ்வாறு கூறியுள்ளார் என்பதை இக்கட்டுரை விளக்கிக் கூறியது. இவ் ஐந்து தீமைகளையும் நீக்கி வாழ்ந்தால் எதிர்கால மக்கள் சமுதாயம் உயர்ந்த சமுதாயமாக மலர்ச்சி அடையும் என்று உறுதியாகக் கூறலாம்.

# திருக்குறள் வெளிப்படுத்தும் அறிவியல்

**சு. சிவக்குமார்**

**முன்னுரை**

தமிழின் கண் இம்மணணுலகு அழியும் மட்டும் நிலைத்து நிற்கப் போகும் இறவாத் புகழுடைய இன்னூல்களுன் தலைசிறந்தது திருக்குறள்தான். ஏனெனில் யாவரும் ஏற்றுக்கொள்ளும் உயிரியல்புகளையும், உணர்வுத் திறங்களையும் அறிவியற் கருத்துகளையும் நவிலுகின்றதே ஆகும்.

**அறிவிற் பார்வை**

திருவள்ளுவர் கூடா நட்பு என்ற அதிகாரத்தில் 828ஆவது குறட்பாவில் தொலைநோக்குப் பார்வையும் அறிவியற் பார்வையும் அறியலாம்.

> **தொழுதகை யுள்ளும் படையெடுங்கும் ஒன்னார்**
> **அழுதகண் ணீரும் அனைத்து**

பகைவர் வணங்கித் தொழுத கையினுள்ளும் கொலைக்கருவி மறைந்திருக்கும். பகைவர் அழுது சொரிந்த கண்ணீரும் அத்தன்மையானதே என்கிறார். இக்குறட்பாவின் வாயிலாகத் திருவள்ளுவர் ஓர் அறிவியற் வித்தகர் என அறியலாம்.

**வள்ளுவர் ஓர் அறிவியல் வித்தகர்**

நவீன படைக்கருவிகள் இல்லாத காலத்தில் "தொழுத கையினுள்ளும் படை ஒடுங்கும்" என்று முற்றும் உணர்ந்த யோகியான வள்ளுவர் கூறக் காரணம், எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டே கூறியுள்ளார். பகைவன் கையினுள் அடங்கும் படியான மிகநுட்பமான கருவிகள் உருவாகும் என்பதனை உணர்ந்தே அறிவுறுத்தியிருக்க வேண்டும்.

"ஒன்னார் அழுத கண்ணீரும் அனைத்து" என்று அடிகளால் பகைவர் எந்த அளவிற்கு அழுது புலம்புகின்றார்களோ, அந்த அளவிற்கே அவரை

நம்புகின்றவர்களுக்குப் பெரும்இன்னல்கள் ஏற்படும் என்பதனைத் திருவள்ளுவர் 2000 ஆண்டுகளுக்கு முன்னரே கூறி இருப்பதின் வாயிலாக இவர் ஓர் அறிவியற் வித்தகர் என அறியலாகின்றது.

**ஆதாரம்**

மகாத்மா காந்தி, இந்திராகாந்தி, ராஜீவ் காந்தி இம்மூவரையும் வணங்கியவர் கையினுள் அழிவதைத் தரக்கூடிய படைக்கருவிகள் அடங்கி இருந்ததையும் வணங்கிய அளவிலே, மூவரும் பெரு இன்னலுக்கு ஆளாகி உயிர்துரந்த நிலையையும் அறிய முடிகின்றது.

**ரிமோட்கண்ட்ரோல்**

ராஜீவ் காந்தியைத் தொழுது வணங்கிய பெண்ணின் கையினுள் ஒடுங்கியிருந்த நுட்பமான படைக்கருவியான ரிமோட்கண்ட்ரோல் என்ற கருவியின் வாயிலாக உடலினுள் கட்டியிருந்த வெடிகுண்டை வெடிக்கச் செய்த கொடிய நிகழ்வையும், தமிழகமே கண்ணீர் வடித்த அவலநிலையையும் நாம் மறந்துவிட முடியாது. இக்குறட்பாவினால் திருவள்ளுவர் ஓர் தீர்க்கத்தரிசி என்பதை அறியலாகின்றது.

**வான்சிறப்பு**

வான்சிறப்பு என்ற அதிகாரத்தின் வாயிலாகத் திருவள்ளுவர் உலகிற்கோர் அறிவியற் உண்மையை உணர்த்தியுள்ளார்.

**நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி**
**தான்நல்கா தாகி விடின்**

மேகம் கடலிலிருந்து நீரைக் கொண்டு அதனிடத்திலே பெய்யாமல் விடுமானால், பெரிய கடலும் தன்வளம் குன்றிப் போகும் என்கிறார்.

**நீரின்றி அமையா உலகு**

நீரின்றி இவ்வுலக உயிரினங்கள் உயிர் வாழா நிலையை, இன்றைய அறிவியற் அறிஞர்கள் கூற்றான சூரிய வெப்பத்தால் நீர்நிலைகளிலிருந்து நீரானது மேகம் வானில் படிந்து, பின்னர் மேகம் மழையாகப் பொழிகின்றது. மேகம் மழை நீரைப் பொழியவில்லை என்றால் நீர் நிலைகள் வற்றிப்போகும் என்பதனை 2000 ஆண்டிற்கு முன்னரே வள்ளுவர்! நெடுங்கடலும் வற்றிப் போகும், மேகம் மழையைப் பொழியவில்லை என்றால் என அறிவுறுத்துகின்றார்.

**வள்ளுவர் ஓர் விஞ்ஞானி**

அரண் என்ற அதிகாரத்தின் வாயிலாகத் திருவள்ளுவர்தான் மெஞ்ஞானி மட்டுமல்ல ஒரு விஞ்ஞானி.

**மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்**
**காடும் உடையது அரண்**

மணிபோல் தெளிந்த நீரும், வெட்ட வெளியான நிலமும், மலையும், அழகிய நிழல் உடைய காடும், ஆகிய இவை நான்கும் உடையதே அரண் என்கிறார்.

**பாரதநாடு பலம் பொருந்திய நாடு**

இந்திய திருநாடாகிய பாரத நாடு வள்ளுவர் வகுத்த எல்லைக்குள் உட்பட்டு இருப்பதால்தான், இன்றுவரை பகைவர் எளிதில் அணுக முடியா அரணாக விளங்குகின்றது. வள்ளுவர் மெஞ்ஞானி மட்டுமல்ல ஓர் விஞ்ஞானி என்பது அறியலாகின்றது.

**வள்ளுவர் ஒரு சித்தமருத்துவர்**

மருந்து என்ற அதிகாரத்தின் மூலமாகத் திருவள்ளுவர்,

**மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று**

என்ற குறளில் மருத்துவ நூலோர் வாதம், பித்தம், சிலேத்தும் என எண்ணிய மூன்றும் அளவுக் மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் உண்டாக்கும் என அறிவுறுத்தியுள்ளார்.

**நெடுங்கால் வாழ்வாங்கு வாழ**

வள்ளுவர் கூறும் மருத்துவ நூலோர் கூற்றை ஆராய்ந்து கடைபிடித்தால் நோயின்றி வாழ்வாங்கு வாழ முடியும் என அறியலாகின்றது.

**நெடுங்காலம் சீரஞ்சீவியாக வாழ**

செரித்த பின்னரும் பசித்த பின்னரும் உணவு உண்பதால் மட்டுமே சிரஞ்சீவியாக வாழ முடியும் என்பதனை,

**அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு**
**பெற்றான் நெடிதுய்க்கு மாறு**

இக்குறட்பாவின் வாயிலாக உணர்த்துகின்றார்.

**வள்ளுவர் நாடி மருத்துவர்**

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல்**

என்ற அடிகளால் நோய் இன்னதென்று ஆராய்ந்து, நோயின்காரணம் ஆராய்ந்து, அதைத் தணிக்கும் வழியையும் ஆராய்ந்து, உடலுக்குப் பொருந்தும் படியாகச் செய்ய வேண்டும் என்கிறார்.

இன்றைய மருத்துவ வல்லுநர்களுக்குச் சவாலாகவும் வழிகாட்டியாகவும், நாடி மருத்துவனாக வள்ளுவர் வாழ்வாங்கு வாழ்கின்றார். நாடியைப் பிடித்துப் பார்க்கின்ற போதே நோய் என்னதென்று அறியும் மகத்துவத்தை, இன்றைய மருத்துவர் சிலர் நோயாளியிடம் என்ன நோய் என்று கேட்ட பின்னரே மருத்துவம் அளிக்கின்றனர். இந்நிலை மாற வேண்டும். நாடியை நாடி பார்ப்பதே மருத்துவர்க்கு அழகு என்பதனை உலகறிய இக்குறட்பாவின் வாயிலாக அறியலாகின்றது.

**முடிவுரை**

மேற்கண்ட குறட்பாக்களின் வாயிலாக வள்ளுவர் தலையாய அறிவியல் அறிஞர் என்பது அறியலாகின்றது.

# வள்ளுவர் காண விளைந்த சமூகம்

**முனைவர் பா. சங்கரேஸ்வரி**

தன்னுடைய எண்ணத்தை வெளிப்படுத்தி நன்னெறிப் பாதையில் சமூகம் நடப்பதற்கும் வித்திட்டவர் திருவள்ளுவர். இழந்து கொண்டிருக்கும் ஒழுக்கங்களையும் மனித விழுமியங்களையும மீட்டுருவாக்கம் செய்தல் வேண்டும். மீட்ருவாக்கத்தில் அடிப்படை என்பது உயர்ந்த பண்புகளை வலியுறுத்துவது, அறிவைத் தேடும் மனம் தனது சுயத்தை முழுமையாக மெல்ல மெல்ல தனக்குத் தெரியாமலேயே இழந்து கொண்டிருக்கின்றது என்பதுதான் உண்மை. நேசிப்பிற்கான கருத்துருவாக்கம் வேறுவேறு பரிமாணங்களைப் பெற்றுள்ளதே. பின்னடைவிற்கான காரணமாக அமைகின்றது.

- உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் மனநிலை பரவிக்கிடத்தல்
- அறிவியலின் அசுர வளர்ச்சியும் அதன் வழியாக நிகழ்ந்து வரும் பண்பாட்டின் வீழ்ச்சியும்
- பற்று வெறியாக வெறியுடன் சுற்றித் திரியும் கலாச்சார சீரழிவுதான் பண்பாட்டின் உச்சம் என்று கருதும் நிலை.

மேற்கண்ட நிலைகள் மனிதனை மனிதனாக ஆகவிடாமல் செய்யும் காரணிகள் எனலாம். உயர் விழுமியங்களை மதிக்கவும், போற்றவும், வளர்க்கவும் தவறி விட்டோம். இந்நிலை நமக்கு வரக் கூடாது என்பதை உணர்ந்துதான் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே திருவள்ளுவர் திருக்குறளை இயற்றியுள்ளார். நாம் அதைப் பாடத்திட்டமாகத்தான் பயில்கிறோமே தவிர வாழ்க்கைத் திட்டமாக பயில மறுக்கிறோம் என்பது நிதர்சனமான உண்மை. வள்ளுவர் காண விளைந்த சமூகம் எப்படிப்பட்டது? என்பதைக் காண்பது இக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது.

**அன்பு**

இந்தச் சமூகம் நிலைபெற்றிருக்க முக்கியமான காரணிகளில் ஒன்று அன்பு, அன்பு என்ற ஒரு நிலை

இல்லையெனில் மனிதன் காட்டுமிராண்டித்தனமாகத்தான் வாழ்ந்து கொண்டிருப்பான். 'புலிக்கு பல் ஒன்றுதான்'. அது இறையை பிடிப்பதற்கும், தன் குட்டிகளை இடம் மாற்றுவதற்கும் அதே பல்லைத்தான் பயன்படுத்துகிறது. இது பலருக்கும் புரிவதில்லை' மிருகத்திற்குக் கூடத் தன் குட்டியிடம் அன்பு செலுத்தத் தெரிந்திருக்கிறது.

ஏதோ ஒரு வகையில் உறவுமுறையைப் புதுப்பித்தும், புதிதாக உருவாக்கவும், எல்லா வகையான கொள்கலனுக்கும் உடைமையாக இருப்பதுதான் அன்பு, அதை எப்படி உணர்வது? எப்படி உள்வாங்குவது என்ற கேள்வி நம்மிடையே எழுகின்றது. தனிமனிதன்-குடும்பம்-சமுதாயம் என்ற தொடரமைப்பில் குடும்பமாக இருக்கும் இல்வாழ்க்கையே சில வாழ்க்கைப் பாடங்களைக் கற்றுச் சமுதாயத்திற்கு நம்மை அடையாளப்படுத்துகின்றது. இந்த இல்வாழ்க்கையின் பயன் அன்பும், அறனும் உட்கூறுகளாக இருப்பதேயாகும். மனிதனுக்கு மிஞ்சிய சக்திதான் கடவுள் என்ற கோட்பாட்டை உடைக்கிறார் வள்ளுவர். பாசத்துடன், அன்புடன் வணங்கும் கணவன்மீது கொள்ளும் அன்பே நேயத்தின் முழுமையாகும் எனப் பதிவு செய்கிறார். இந்த உயிரும் உடலும் இயைந்த மனித வாழ்வு அனைத்து உயிர்களின்மீதும் அன்பு செலுத்துவதற்கேயாகும் (குறள்.73) அறம் செய்து வாழ்வதற்கும் அன்பே அடிப்படையாகின்றது (குறள்.72) என்றெல்லாம் அன்பின் பரப்பு விரிவடைகின்றது. இந்நிலை மாறும்போது அன்பின் பரப்பு பழுதடைந்து விடுகிறது.

**அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**
**மக்கட்பண் பில்லா தவர்**

எனவே சமூகம் என்பது பல மனிதர்களின் கூட்டம். இந்தக் கூட்டம் செழுமையாக வாழ்வதற்கு அன்பு என்ற ஆயுதத்தை எடுத்தோமேயானால் பகைமை விலகும். நன்னெறி பிறக்கும் என வள்ளுவர் வலியுறுத்துகிறார்.

**மனித நேயம்**

அன்பின் பரிணாம வளர்ச்சிதான் ஜீவகாருண்யம். அன்பு என்னும் தாயும் அருள் என்னும் சேயும் இருந்தால் மட்டுமே ஜீவகாருண்யத்தைப் போற்ற முடியும். அனைத்து உயிர்கள் மீதும் அன்பைச் செலுத்தும் நிலை, அது ஈகையாக, கருணையாக, பரிவாக எனப் பல கிளைகளைத் தோற்றுவிக்கிறது. மற்ற

உயிர்களின் மீதும் அன்பு செலுத்தும் மனப்பக்குவம்தான் இன்னும் மனிதனைத்தன் நிலையில் இருந்து தாளாமல் மனிதனாகவே அடையாளப் படுத்துகின்றது. நேயம் என்பது ஒழுக்கத்தைக் கடைபிடிப்பதோடு மட்டுமல்லாமல் தவறுகளைத் தட்டிக்கேட்கும் மற்றொரு நிலையும் ஆகும். நமக்கென்ன என்று ஒதுங்கிச் செல்லும் சுயநலமும், கொடுமைகளைக் கண்டு பொறுத்துக் கொள்ளும், கோழைத் தனங்களுமே நேசத்தளர்வின் செழுமை இன்மைக்கு ஏதுவாகக் கருதலாம். இதுபோன்று தவறு நடக்கும்போது தட்டிக்கேட்டுத் தோழமையை வளர்த்துக்கொள்ள வள்ளுவத்தில் வழிமுறைகள் காணப்படுகின்றன.

- பிறர் சுகதுக்கங்களை உள்வாங்கிக் கொள்வது மட்டுமல்லாமல் இதனைத் தனதாக்கிக் கொண்டு உணர்தல் வேண்டும்
- அஞ்சுவதற்கு அஞ்சல் வேண்டும்
- அஞ்சக் கூடாததற்கு அஞ்ச வேண்டாம்.
- பிறர்பழி எப்பொழுது தன்பழியாக மதிக்கப்படுகின்றதோ அப்பொழுது காயமாகும் நேயம் கூட செழிப்புறும்

எனவே இதுபோன்று தோழமை உணர்வு, நேய உணர்வு தொடர்ந்து மிளிர்வதற்கு அடிப்படைப் பண்புகளை மக்கள் யாருடைய திணிப்புமின்றி இயல்பாக உள்வாங்கிக் கொண்டு செயலாக்கத்தில் ஈடுபடுத்த வேண்டும் என்பதை வள்ளுவர் பதிவு செய்கிறார்.

**நட்பு**

வேறு வேறு கிளைகளில் இருக்கும் மனிதச் சமூகத்தை ஒரே கிளையாகப் பிணைத்துப் பார்ப்பது நட்பு மட்டுமே.

**புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
**நட்பாம் கிழமை தரும்**

உணர்ச்சிதான் நட்பின் வலிமையாகக் கருதப்படுகிறது. மன உணர்வின் மிகப்பெரிய பாலமாக அமைவதே கேண்மைநெறி. இந்த நட்பைப் பகிர்ந்து கொள்ளும்போது வெறுமனே மகிழ்வதற்காக மட்டுமல்லாமல், தவறு நேரும்போது மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற் பொருட்டு என்று நட்பின் விசாலத்தை வள்ளுவர் குறிப்பிடுகின்றார். நடபின் தன்மையைக் குறிப்பிடும்போது உடுக்கை இழந்தவன் கைபோலவே என்று குறிப்பிடுகின்றார். யாருடைய முயற்சியின்றியும் அமைதியின்றியும் உதவுதல் என்பதுதான் நட்பின் பலம் நட்பின்

ஆழத்தையும் அகலத்தையும் குறிப்பிடும் பொழுது விசம் கூட நட்பிற்கு இனிமையைத் தரும் என்கிறார் வள்ளுவர்.

**பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்**

உள்ளன்போடு கொண்ட கேண்மையை வளமை எப்போதும் தோற்றுப்போவதில்லை. எனவே சமூகம் பகைமையிலிருந்து விடுபட நட்பு என்ற ஆயுதத்தில் போரிட்டால் தீமைகள் களைந்து நன்மை பயக்கும் என்பதில் ஐயமில்லை எனக் கருதுகிறார் வள்ளுவர்.

**காதல்**

மனிதர்களிடையே உட்பிணைப்பை ஏற்படுத்துவதும், நேயத்தை மேன்மையுறச் செய்வதும் காதல் என்கின்ற நேசிக்கும் பண்புதான். இந்தக் காதலை மென்மையாகவும், ஆழமாகவும் குறிப்பிடுகிறார். காதலின் வளர்நிலையை மலர் மலர்வதைப் போல என ஒப்பிடுகிறார். காதலின் மென்மையைப் பற்றிக் குறிப்பிடும்போது மலரினும் மெல்லியது என்று கூறுகின்றார். கள் போன்ற மயக்கம் தரும் வலிமை கொண்டது காதல் உணர்வு சாதி, மதம், இனம், மொழி என்ற குறுகிய எல்லைகடந்து மனிதநேயத்தை வளர்க்கும் மாபெரும் சக்தி காதல், எனவே இனவேறுபாடு இல்லாமல் வாழ்வதற்குக் காதல் வழிசெய்கிறது. சமூகத்தில் காதல் என்கிற சக்தியால் சாதி என்கின்ற போரை எதிர்க்கலாம் என்பதில் ஐயமில்லை.

சமூகம் என்பது தனிமனிதன் கூட்டம் கூட்டமாக சேர்ந்து வாழும் அமைப்பாகும். இந்தச் சமூகம் ஒழுக்கத்தோடு வாழவேண்டும் என்பதற்காக வள்ளுவர் உயர்பண்புகளைப் பதிவு செய்கிறார். சங்ககாலத்திலும், அதற்கு முந்தையக் காலத்திலும் மனித உயிர்கள் மலிவாக எடுக்கப்பட்டதன் விளைவாக, மனிதனை மனிதன் நேசிக்கவும், உயர்பண்புகளை நிலைநிறுத்தவும், சமூகத்தை மேன்மையடையச் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இந்தக் கட்டாயத்திற்குள் தள்ளப்பட்டவர் வள்ளுவர் எனின் அது மிகையாகாது.

# வள்ளுவர் வகுத்த வாழ்வியல் நெறி

ஆ. கெஜலட்சுமி

**முன்னுரை**

நாம் வாழும் காலம் 21ஆம் நூற்றாண்டு, இந்நூற்றாண்டில் எத்தனை பேர் மகிழ்ச்சியோடும் வாழ்வின் நெறிகளோடும் வாழ்கின்றோம் என்றால் விரல் விட்டு எண்ணக் கூடிய அளவோடு தான் இருக்கின்றோம். காரணம் வாழ்க்கையின் உள்ளத்தை நன்கு உணராததே. மனிதன் என்பவன் வலிமை வாய்ந்த சக்தியினைப் பெற்றவன். ஒவ்வொரு மனிதனிடத்தும் ஒரு வித சக்தி வெற்றிப் பாதைக்கு அவனை அழைத்துச் செல்கிறது. தன்னிடம் இருக்கும் சக்தியை நன்கு உணர்ந்து செயல்படுபவன் உலகில் மேதையாகக் கருதப்படுகிறான். வெற்றி பெற்றவர்களிடம் அணுகினால் தெரியவரும் அவர்கள் கையாண்ட நெறிமுறைகள்.

கி.பி. 2ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளுவர் தந்த குறள்கள் கணினி யுகத்தில் வாழும் மனிதனையும் தன்வழியே கொண்டு செல்கிறது. இன்றை நிலையில் மனிதன் வாழ்வில் நெறி இல்லாமல் தறிகட்டு மனிதன் நிலை மாறி மாக்களாய் திரிகின்றான். மனிதன் எல்லோரும் குறுகிய 'பா' வான 'குறள்பாவை' தன் கண்ணோட்டத்தில் நிறுத்தினால் வாழ்க்கை நெறிபடும். வள்ளுவர் தன்குறளில் காட்டிய வாழ்க்கை நெறிகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அறன் வலியுறுத்தல்**

ஒரு மனிதன் தன் மனத்தினைக் குற்றம் இல்லாமல் வைத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு ஒருவன் தன்மனத்தினை வைத்துக் கொள்வதே சிறந்த அறம்.

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற**

அறத்திற்கான நான்கு உறுதிப் பொருளான நிலையாய் அழுக்காறு (பொறாமை), அவா (ஆசை), வெகுளி (பிறர்பர் வரும் வெகுளி) இன்னாச்சொல் (கடுஞ்சொல்) இந்நான்கினையும் ஒருவர் விட்டுவிட்டால் அதுவே அறம் என்கிறார்.

அறத்தால் வரக்கூடிய இன்பமே ஒருவருக்கு நிலையான இன்பமாகும். மற்ற வழியில் வரக்கூடியவை எல்லாம் உடனடியாக துன்பத்தையே தரும் என்று வாழ்வில் மனிதன் அறத்தினைக் கைகொள்ள வேண்டும் என்கிறார்.

அன்பும் அறனும் இல்வாழ்க்கையில் பெற்று இருந்தால் பண்பும் அதற்கான பயனும் வந்து சேரும்.

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

இல்லறத்தோடு கூடி உலகில் வாழ்பவன் வானில் இருக்கும் தேவர்களோடு ஒப்பிடப்படுவார்.

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்**

வாழ்கின்றபோது எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்த வேண்டும். பிற உயிர்களின்மீது அன்பு இல்லாமல் இருப்பவர் தளிர் இல்லாத மரத்தைப் போன்றவராகக் கருதப்படுவார்.

**என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**அன்பில தனை அறம்**

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று**

**விருந்தோம்பல்**

இன்றைய காலக்கட்டத்தில் விருந்தோம்பல் என்ற சொல்லிற்கே பொருள் மாறிக் காணப்படுகிறது. ஆண் பெண் ஆகிய இருவரும் வேலைக்குச் செல்லுகின்ற நிலை தன்இல்லத்திற்கு வரும் விருந்தினரை எப்படி அவர்களால் கவனிக்க முடிகிறது என்றால் உணவு விடுதியில் இருப்பதை வாங்கிக் கொடுப்பதே உபசரிப்பாகி வருகிறது.

வள்ளுவர் இதற்கு நெறியினைக் குறிப்பிடுகிறார். இல்லறத்திற்குச் சேர்க்கப்படும் செல்வங்கள் விருந்தோம்பல் முறையாலே அறம் பெறும் என்பதனை,

**விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா**
**மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று**

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது பழமொழி சில இல்லங்களில் சிலர் தன் இரத்தம் சார்ந்த உறவினர் வந்தால் முகம் மலர்ந்தும் பிறர் வருகை தந்தால் முகம் வாடியும் காண்பர். இது இன்றைய வாழ்வியலில் நாம் நேரடியாக காணக் கூடியவை.

விருந்தோம்பல் என்பது எவ்வளவு மென்மை தன்மை உடையது என்பதை வள்ளுவர் அனிச்சப்பூவை வைத்து உணர்த்துகிறார். அதாவது அனிச்சப்பூ நுகருகின்ற போதே வாடக்கூடியத் தன்மை பெற்றது. அதுபோலத்தான் முகம் கண்டபோதே விருந்தினர் குழைவர். அதாவது அனிச்சப்பூவைக் காட்டிலும் மென்மை உடையது விருந்தோம்பல்.

**மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து**

வாழ்க்கையில் இனிமையான சொற்கள் அவனை உயர்த்திக் காட்டுவன. அவை தவிர்த்துத் தீய சொற்களைக் கையாண்டாள் கனி இருக்கின்ற நிலையில் காய் பறிப்பதற்கு சமமாகும்.

**இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று**

**செய்ந்நன்றி அறிதல்**

இன்றைய வாழ்வில் பெரிய உதவியே செய்தாலும் என்ன செய்துவிட்டீங்க? என்ற வினாக்கள்தான் எழுப்புகின்றனர். ஒரு சிலரே ஒருவர் செய்த நன்றியினை உயிர் உள்ளவரை மறக்காமல் எண்ணி வருகின்றனர்.

ஒருவர் நமக்குத் தக்க இடத்தில் தக்க உதவியினைச் செய்து இருந்தால் அவை சிறியவை எனினும் இந்த உலகத்தை விடப் பெரியதாக எண்ண வேண்டும் என்பதை,

**காலத்தினாற்செய்த நன்றி சிறிதெனினும்**
**ஞாலத்தின் மாணப் பெரிது**

என வள்ளுவர் பெருந்தகை கூறுகிறார். மேலும் ஒருவர் 'தினை' அளவு உதவி செய்து இருந்தாலும் அதனை 'பனை' அளவாக எண்ண வேண்டும் என்கிறார்.

**நட்பு**

குற்றம் இல்லாதவனுடைய நட்பினை ஒரு பொழுதும் மறக்காமல் இருக்க வேண்டும். தனக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கியவனின் எழுவகை பிறப்பிலும் மறக்காமல் இருக்க வேண்டும் என்பதை,

**எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்**
**விழுமம் துடைத்தவர் நட்பு**

என்ற குறளின் மூலம் உணர்த்கின்றார். உணஒருவர் நமக்கு செய்த நன்மையை ஒருபொழுதும் மறக்கக் கூடாது. ஆனால் அவர் செய்த தீமையினை உடனடியாக மறந்துவிட வேண்டும் என்கிறார். அறங்கள் சிதைத்தவருக்குப் பாவங்களில் இருந்து நீங்கும் வழி உண்டு. ஆனால் தனக்கு செய்த நன்றியினை மறப்பவர்களுக்குப் பாவங்களிலிருந்து நீங்கும் வழி இல்லை என்று செய்ந்நன்றியினை மறக்காமல் வாழ்க்கையில் இருக்க வேண்டும் என்கிறார்.

**அடக்கம் உடைமை**

இடம், பொருள், ஏவல் என்பார் நன்னூலார் ஒருவன் தன் வாழ் நாளில் ஐம்புலன் அடக்கம் காத்தல் வேண்டும் என்கிறார். ஐம்பொறிகளையும் அடக்கி ஆண்டாள் ஏழு பிறவிக்கும் அரண் வந்து சேரும் என்கிறார்.

ஒருவர் தன் நாவினை அடக்கி ஆளவேண்டும என்கிறார். நாவினை அடக்காவிட்டால். அவர் துன்பத்திற்கு ஆளாக்கப்படுவர்.

**யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்**
**சோகாப்பர் சொல்லிழுக்கப் பட்டு**

மேலும், ஒருவருக்கு தீயினால் சுட்டப்புண் ஆறி விடும் நாவினால் சுட்டப்புண் ஆறாது ஆகையாலே பிறர் மனம் துன்பம் அடையும் படி எந்த விதமான கடுமையானச் சொற்களை உரைத்தல் கூடாது என்கிறார்.

**தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே**
**நாவினாற் சுட்ட வடு**

**ஒழுக்கம்**

ஒழுக்கம் இல்லாதவன் வாழ்வில் உயர்வு அடையாது. ஒழுக்கம் உயரைவிடவும் மேலானது. தான் ஒரு மனிதனை நல்ல பண்புடையவனாகக் காட்டுவது ஒழுக்கமே.

**ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்**

ஒருவருக்கு பொறுமை என்னும் குணமானது இருத்தல் வேண்டும். எப்போது என்றால் தன்னை ஒருவர் இகழ்வாகப் பேசுகின்ற போதும் கூட நிலம் போல் பொறுமையயைக் காத்தல் வேண்டும் என்கிறார்.

இன்று பல பேர்களுக்கு பொறுமை என்பது இல்லாமல் போகின்ற காரணத்தால் தான் அடி, கொலை, சண்டை போன்ற சம்பவங்கள் நிகழ்கின்றன. இப்படிப் பட்டவர்களை நெறிபடுத்துகின்ற நிலையில் தான் இதனைக் குறிப்பிடுகிறார்.

**அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை**

ஒருவர் தன் வாழ்நாளில் வாய்மையினைக் கையாள வேண்டும் பிறருக்கு துன்பம் தரும் சொற்களைக் கூறாமல் இருத்தல் வேண்டும். சில நேரங்களில் பொய் வார்த்தையால் பிறருக்கு நன்மை கிடைக்குமானால் அவ்விடத்தில் பொய்மையும் வாய்மையாகக் கருதப்படும் என்கிறார்.

**இறைமாட்சி**

அரசன் என்பவன் ஆறு அங்கங்களான படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகியவற்றைப் பெற்று இருக்க வேண்டும் என்கிறார்.

**கல்வி**

கல்வியினை எந்நிலையிலும் கற்க வேண்டும் என்பர் நம் சான்றோர். 'பிச்சை புகியினும் கற்கை நன்றே' கற்றவருக்கு சென்ற இடமெல்லாம் சிறப்பு என்பன நம் இலக்கியம், வள்ளுவர் கல்வியின் சிறப்பால் மனிதன் வாழ்வு நெறிபடும் என்ற போக்கிலே 'கல்வி' என்னும் தலைப்பில் கல்வியின் அழகை வெளிப்படுத்தியுள்ளார். மனிதனின் மனமானது கற்க கற்க மணற்கேணியைப் போல் அறிவு தோன்றும் என்கிறார்.

**செயல் வகை**

'பதறிய காரியம் சிதறும் என்பது பழமொழி' ஒரு செயலைச் செய்வதற்குமுன் பலமுறை எண்ணி பின்பே செய்ய வேண்டும். ஒரு சிலர் செய்து முடித்த பின் அய்யோ! இப்படி செய்து இருந்தால் இப்படி இருந்து இருக்குமோ? என்று

வருந்துவர். இதனாலே வள்ளுவர் ஒரு செயலை செய்வதற்கு முன் பல முறை எண்ண வேண்டும்.

**எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்**
**எண்ணுவ மென்ப திழுக்கு**

**ஊக்கம்**

எந்த ஒரு செயலைச் செய்வதற்கும் ஊக்கத்தைக் கையாள வேண்டும். ஊக்கம் உடையான் வாழ்வு உயர்வு பெறும்.

**வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத் தனைய துயர்வு**

உருவத்தில் பெரிய யானையாக இருப்பினும் அதைவிட உருவத்தில் சிறிய புலிக்கு அஞ்சும், காரணம் யானை ஊக்கம் குறைவாக இருப்பதே என்று அஃறிணைவழி மனித நெறிப்படுத்துகிறார்.

**பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை**
**வெரூஉம் புலிதாக் குறின்**

**முடிவுரை**

வள்ளுவர் குறள் யாவும் மனிதனை நெறிப்படுத்தக் கூடியவை. குறளைக் கல்லாதவன் மனிதன் இல்லை. குறளைச் சுட்டாதவன் கவிஞன் இல்லை. என்னும் அளவிற்கு வள்ளுவரின் குறள் உலகெங்கும் ஓங்கி நிற்கின்றது. ஆகையாலே 'உலகப் பொது மறை' எனத் திருக்குறள் போற்றப்படுகிறது.

# திருவள்ளுவர் காட்டும் கற்புக் கோட்பாடு

முனைவர் பெ. சுமதி

## முன்னுரை

ஆண்கள், பெண்களை அடிமைப்படுத்தி அவர்களுக்குப் பல இன்னல்களை உண்டாக்குவதென்பது ஆண்பகள் சமூகத்தின் கூறுகளுள் ஒன்று. சமுதாயம் குழந்தைப் பருவத்திலிருந்தே பெண், ஆணை விடத் தாழ்ந்தவள் என்ற உணர்வையும், ஆண், பெண்ணைவிட உயர்ந்தவன் என்ற சிந்தனையையும் கற்பித்து ஊட்டி வளர்த்து வருகின்றது. அதற்குக் காரணம் பெண்கள் உடல் வலிமை ஆண்களின் அளவிற்கு இல்லையென்பது பெண்களைத் தாழ்வடையச் செய்த காரணமாகும். பெண் குழந்தைகளை எதிர்கால குடும்ப வாழ்விற்கு மனரீதியாகத் தயார்செய்யும் முயற்சிக்கே முன்னுரிமை தரப்படுகின்றது. ஆண் குழந்தை வளர்ப்பில் அன்னையர் இவ்வறெல்லாம் கவலைப்படுவதில்லை. ஆதலால் பெண் குழந்தை வளர்ப்பில் படுக்கையை விட்டு விரைவாகத் துயிலெழுதல், எதிர்த்துப் பேசாமை, சமைக்கக் கற்றுக் கொள்ளுதல், அடிக்கடி வெளியே செல்லக் கூடாது. அதிர்ந்து நடக்கக் கூடாது, தேவையற்ற எவரிடமும் அறிமுகம் வைத்துக் கொள்ளக் கூடாது என்பது போன்ற கட்டுப்பாடுகள் அறிவுரைகளாக அவர்களது பெற்றோர்களால் தரப்படுகின்றன.

பெண்கள் குடும்பப் பொறுப்பை ஏற்பதற்கென்றே பிறந்தவர்கள் என்னும் உணர்வுதான் இக்கட்டுப்பாடுகளுக்கும் காரணமாகும். போற்றி வாழ்தல் வேண்டும் என்னும் அறிவுரை பெண்களுக்குத் தவறாமல் கற்பிக்கப்படுகின்றது. காரணம் கற்பு என்பது பெண்களுக்கு மட்டும் என்று வலியுறுத்தப்படுவது தான் கணவன் முறைகேடாக நடந்து கொண்டாலும் மனைவி அதனை எதிரொலிக்கக் கூடாது, கணவன் வன்முறையில் ஈடுபட்டாலும் மனைவி அதனை இயன்ற வரை பொறுத்துக்கொள்ள வேண்டும், கணவனைப் பிரியும் மனநலை எந்நிலையிலும் பெண்ணிற்கு

வரக்கூடாது என்னும் மனோநிலையில் தான் பெண்களின் வாழ்க்கை தன்குடும்பத்தைச் சார்ந்தவர்களால் வழிநடத்தப்படுகிறது. சங்க காலம்முதல் இக்காலம் வரைதான் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. சங்க காலத்தில் தலைவன் பரத்தையரை தேடிச் செல்வதை யாரும் கண்டிக்கவில்லை. தலைவி, தலைவனின் வருகைக்காகக் கண்ணீர்விட்டு காத்துக் கொண்டிருக்கக் கூடிய அவலநிலையைத்தான் சங்க இலக்கியங்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன. ஆனால், விதிவிலக்காகத் திருவள்ளுவர் கற்பு என்பது பெண்களுக்கு மட்டுமல்லாமல் அது ஆண்களுக்கும் உண்டு என்று வலியுறுத்துகின்றார். கற்பு என்பது ஆண், பெண் இருவருக்கும் தேவை என்பதைத் திருவள்ளுவர் எங்ஙனம் வலியுறுத்துகின்றார் என்பதை ஆய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கற்புக் கோட்பாடு**

கற்பு என்பது பெண்களுக்கு மட்டும் தான் என்பது தொல்காப்பியர் காலத்திலிருந்தே வகுக்கப்பட்டு வந்த நெறியாகக் காணப்படுகின்றது. தொல்காப்பியர் பெண்களுக்கென்று சில பண்புகளை வரையறை செய்கின்றார்.

**கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்,**
**மெல்லியற் பொறையும், நிறையும், வல்லிதின்**
**விருந்து புறந்தருதலும், சுற்றம் ஓம்பலும்,**
**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்**

என்று தலைவியின் கற்புடைமை, நல்வழி ஒழுகுதல், மென்மைச் சாயலுள்ள பொறுமை, மனத்தைக் கட்டுப்படுத்தும் நிறை, முடியாத போதும் வருந்தி விருந்து புறந்தருதல், சுற்றத்தாரைக் காத்தல் இவை போன்ற பண்புகள் தலைவியின் நற்குணங்களாகக் கூறப்படுகிறது.

**உயிரினும் சிறந்தன்று நாளே நாணினும்**
**செய்தீர் காட்சி சிறந்த றெனத்**
**தொல்லோர் கிளவி**

பெண்ணின் உயிரைவிட நாணம் பெரியது அந்த நாணத்தைவிட அவளது கற்பு மிகவும் உயர்வானது என்று தொல்காப்பியர் பெண்களின் கற்பை வரையறை செய்கின்றார்.

சங்க இலக்கியமாகிய பரிபாடல்,

**தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்**
**இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்**

கற்பென்னும் தகுதியுடையவரான பெண்டிர் சான்றாண்மை உடையோருள் எல்லாம் உயர்ந்தோர் ஆவர். அவர், தன் கணவர் தம்மை இகழ்ந்து ஒதுக்கிய காலத்திலும் அவரைப் போற்றி வழிபடுபவர் என்று முதுபெண்டிர் தலைவன் பரத்தையிடம் சென்று வந்தாலும் அந்த ஒழுக்கக் கேட்டை சிறந்த கற்புடைய தலைவி பொறுத்துக் கொள்ள வேண்டும். அது தான் தலைவிக்குரிய நற்பண்பாகும் என்று அறிவுரை கூறுகின்றாகள். இலக்கியங்கள் பெரும்பாலும் ஆண்கள் தவறு செய்தால் அதை பொறுத்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு பெண்களுடையது என்று வலியுறுத்துகின்றது. ஆனால் திருவள்ளுவர் கற்பு என்ற ஒரு ஆயுதத்தை ஆண் சமூகம் பெண்கள் மேல் எவ்வாறு திணித்து தங்களை கட்டுப்பாடற்றவர்களாக நடந்து கொள்கின்றார்கள் என்பதையும் அந்தக் கட்டுப்பாடானது ஆண்கள் மட்டும் பெண்கள் மேல் திணித்தால் போதாது கற்பு என்பது பெண்கள் நினைத்தால் மட்டுமே கட்டிக் காக்க முடியும் என்பதை தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

**சிறைக்காக்குங் காப்புஎவன் செய்யும்? மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை**

மகளிரைக் காவல் வைத்துக்காக்கும் முறை என்ன பயனைச் செய்யும்? அவர்கள் நிறை என்னும் பண்பால் தம்மைத் தாம் காக்கும் காப்பே சிறந்தது. பெண்களை வீட்டிற்குள் வைத்துப் பூட்டி வைக்கும் ஆண்களை கடுமையாக கண்டித்து எச்சரிக்கின்றார். பெண்கள் நினைத்தால் மட்டுமே கற்பைக் காக்க முடியும். ஆண்களால் ஒன்றும் செய்ய முடியாது என்று ஆணாதிக்கச் சமூகத்தை எதிர்க்கக் கூடியவராக திருவள்ளுவர் திகழ்வதை அறியமுடிகின்றது.

**பெண்ணின் பெருமை**

அச்சம், நாணம், மடம் போன்ற பண்புகள் பெண்களுக்குரிய குணங்களாகக் கருதப்பட்டது. இதை தொல்காப்பியர்.

**அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப**

காதலி அஞ்சுவதற்கு அஞ்சி நாணம் பேணி, இளமையால் மடப்பம் உடையவளாய், அடக்கத்தோடிருத்தல்

வேண்டும். இவற்றைக் கொண்ட நற்பண்புகள் என்றென்றும் பெண் மகளுக்குரியன என்று கூறுகின்றார்.

**வினையே ஆடவர்க்குயிரே வாணுதல்**
**மனையுறை மகளிர்க் கவ்வாடவர் உயிர்**

வினை செய்தல், ஆடவர்க்கு உயிர் போன்றது. மனையில் இருக்கக் கூடிய மகளிர்க்கு அவர்தம் கணவர் உயிர் போன்றவர் என்று குறுந்தொகை பெண்களுக்கு அறிவுரை வழங்குகின்றது. கணவனைத் தவிர பெண்களுக்கு வேறு உயிர் இல்லை என்று ஆண்களுக்கு அடங்கி வாழக்கூடிய அடிமை வாழ்க்கையை பெண்களுக்கு குறுந்தொகை போதிக்கின்றது.

ஆனால் திருவள்ளுவர் ஒரு ஆண்மகன் எவ்வளவு சிறப்பை உடையவனாக இருந்தாலும் தன்னுடைய மனைவியின் கற்பினால் மட்டுமே பெருமையுடையவனாக வாழமுடியும் என்கின்றார்.

**பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மையுண் டாகப் பெறின்?**

கற்புநெறியுடைய பெண் ஒருவனுக்கு மனைவியாக வாய்த்தால் அதைவிடச் சிறந்த பெருமை அவனுக்கு வேறு இல்லை என்று விளக்கம் கூறப்படுகின்றது. ஓர் ஆண்மகன் பெருமை மிக்கவனாக திகழ்வதற்கு ஒரு பெண்தான் காரணம். சிறந்த கற்புடைய மனைவியை அடைந்தவன் பேறு பெற்றவன் என்று கணவனின் பெருமைக்குக் காரணம் மனைவியாகிய பெண்தான். ஆணிற்கு என்று பெருமை இல்லை. பெண்தான் ஆணின் பெருமை என்று பெண்ணின் பெருமையை வள்ளுவர் சிறப்பாக எடுத்துரைக்கின்றார்.

**உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்**
**ஒள்ளமர்க் கண்ணாள் குணம்**

ஒளியுடையனவாய்ப் போர் செய்கின்ற கண்களையுடைய இவளுடைய நற்பண்புகளை நான் ஒருபோதும் மறந்ததில்லை. அப்படியிருக்க நினைத்துப் பார்க்க வழியேது? என்று பெண் என்பவளை மிகச்சிறந்த நற்பண்புகளைக் கொண்ட பெருமைமிக்க பெண்ணாக வள்ளுவர் படைத்துக் காட்டியிருப்பதை அறியமுடிகின்றது.

**ஆண்களுக்குரிய கற்புக்கோட்பாடு**

பெண்களுக்கு மட்டும் கற்பு என்பது இல்லை அது ஆண்களுக்கும் உண்டு. அதை ஆண்கள் கடைப்பிடித்து இல்லற

வாழ்க்கை வாழவேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துகின்றார். தொல்காப்பியர் ஆடவர்களின் பண்புகளை குறிப்பிடும் பொழுது,

**பெருமையும் உரனும் ஆடூஉ மேன**

என்று பெருமையும் வலிமையும் ஆண்களுக்குரிய பண்புகளாக கூறுகின்றார்.

தலைவன், பரத்தை காரணமாகப் பிரிந்து சென்று திரும்பி வருவதாகக் கலித்தொகை மருதக்கலிப்பாடல் கூறுகின்றது.

**வாராய் நீ துறத்தலின், வருந்திய எமக்கு ஆங்கே,**
**நீர்இதழ் புலராக் கண் இமை கூம்ப இயைபவால்**

என்று எம் நலன் எம்மைவிட்டுப் போகும்படி நீ துறந்தனை, நீ அருள்செய்யாது கைவிட்டதனால் பல நாள்கள் எம்கண்கள் துயிலாது வருந்தி இரங்கின என்று தலைவி, தலைவனின் வருகை எதிர்நோக்கிக் கண்ணீர் மல்கக் காத்திருப்பதாகக் கூறப்படுகிறது. தலைவன் ஒழுக்கக் கேடானவனாக இருந்தாலும் அவனுக்காகக் காத்திருக்கும் பெண்கள்தான் சங்க இலக்கியங்களில் காணப்படுவார்கள். கற்பு என்பது பெண்களுக்கு மட்டும்தான் ஆண்களுக்கு இல்லை என்ற கோட்பாட்டைச் சங்க இலக்கியங்கள் பின்பற்றியதுதான் இதற்குக் காரணம்

ஆனால் வள்ளுவர் கற்பு பெண்களுக்கு மட்டுமல்லாமல் ஆண்களுக்கு வேண்டும் என்று எடுத்துரைக்கின்றார்.

**ஒருமை மகளிரை போலப் பெருமையும்**
**தன்னைத் தானே கொண்டொழுகின் உண்டு**

கற்புடையப் பெண்கள் நிறையின் வழுவாமல் தம்மைத் தாம் காத்து ஒழுகுவதுபோலப் பெருமையாகிய குணமும் ஒருவன் தன்னைத்தான் காத்து ஒழுகுவானாயின் அவனிடம் உண்டாகும். கற்புடைய பெண்களைப் போன்று ஒருவன் தன்னடக்கம் உடையவனாக தவறான ஒழுக்கம் இல்லாதவனாக இருந்தால் எல்லாப் பெருமையும் வந்து சேரும் என்று கற்பு என்பது இங்குப் பொதுவில் வைக்கப்படுவதுடன் ஆண்கள் கற்புநெறியுடன் வாழவேண்டும் என்று அறிவுரையையும் கூறுகின்றார்.

**பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு**
**அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு**

*பிறன் மனைவியை விரும்பிப் பார்க்காத பெரிய ஆண்மை சான்றோர்க்ளகு அறம் மட்டும் அன்று, நிறைந்த ஒழுக்கமாகிய கற்பு நெறியும் அதுதான் என்று வள்ளுவர் கூறுகின்றார். பிறனுடைய மனைவியை விரும்பாதே. ஆகவே நீ கொள்ள வேண்டிய "பேராண்மை" என்னும் கற்பு என்று கூறப்படுகின்றது.*

**விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்**
**தீமை புரிந்தொழுகு வார்**

*சந்தேகப்படாமல் தெளிந்து நம்பியவருடைய மனைவியை விரும்புதலாகிய தீமையைச் செய்பவர் செத்தவரைக் காட்டிலும் வேறுபட்டவர் அல்லர் என்று கூறுகின்றார். தன்மேல் நம்பிக்கை வைத்தவனுடைய மனைவியை விரும்புவது பிணத்திற்குச் சமம் என்று மிகவும் கடுமையான எச்சரிக்கை ஆண்களுக்குக் கூறுவதாக இக்குறள் காணப்படுகின்றது.*

**பகைபாவம் அச்சம் பழியென நான்கும்**
**இகவாவாம் இல்இறப்பான் கண்**

*பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கு தீமைகளும் பிறன் மனைவியை நாடிச் செல்பவனிமிருந்து என்றும் நீங்காது. பழி, பாவத்திற்கு அஞ்சி ஒருத்தன் ஒழுக்கமுடையவனாக வாழவேண்டும் எனறு கூறப்படுகிறது.*

**நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்**
**பிறற்குரியாள் தோள்தோயா தார்**

*கடல் சூழ்ந்த இவ்வுலகில் நன்மைக்கு உரியவர் யார்? என்றால் பிறனுக்கு உரியவனின் தோளைத் தழுவாதவரேயாவர் என்று கூறப்படுகின்றது. ஒரு ஆணின் நன்மை அவனுடைய கற்பு ஒழுக்கத்தில்தான் இருக்கின்றது.*

**அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று**

*அறம் செய்யவில்லை என்றாலும் பிறன்மனைவியை விரும்பாமல் இருப்பதுதான் மிகச் சிறந்த அறமாகும் என்று கூறப்படுகின்றது.*

**பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணர்தழீஇ யற்று**

*பொருளையே விரும்பும் பொதுமகளிரை நாடித் துய்ப்பவன் இருட்டறையில் முன்னறியாத பிணத்தைத் தழுவியதற்கொப்பாவான் என்று இழித்துரைக்கிறார்.*

**வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப் பூரியர்கள் ஆழும் அளறு**

பொருட் பெண்டிராகிய பரத்தையைத் தேடிச் செல்லக் கூடிய ஆண் நரகத்தை தேடிச் செல்பவர்களுக்கு ஒப்பானவர்கள் என்று ஆண்களின் ஒழுக்கக் கேடான வாழ்க்கையை நரகம் போன்றது என்று வள்ளுவர் கூறுகின்றார்.

பரத்தையரைப் பொருட் பெண்டிர், மாய மகளிர், பொருட்பொருளர், பொதுநலத்தால், நிறைநெஞ்சம், இல்லவர், புன்னலம், பாரிப்பார், மாணிழையார், இருமணப் பெண்டிர் போன்ற சொற்களால் அவர்களுடைய இயல்புகளைச் சுட்டி இழித்துரைக்கின்றார். பரத்தையர் பிரிவைச் சாடி பெண்கள் மட்டும் கற்போடு இருந்தால் போதாது ஆண்களும் பெண், கள், சூது போன்ற கேடுகள் இல்லாதவனாக வாழவேண்டும் என்று வள்ளுவர் ஆண்களுக்கு அறிவுரை கூறுவதோடு மட்டுமல்லாமல் எச்சரிக்கவும் செய்கின்றார்.

**முடிவுரை**

பெண்ணுக்கு மட்டுமே கற்பு என்று வகுக்கப்பட்ட கட்டுப்பாட்டை உடைத்து அந்தக் கட்டுப்பாடு ஆண்களுக்கும் வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். பரத்தை ஒழுக்கம் கண்டிக்கப்படாத சங்கச் சமூகத்திலிருந்து மாறிப் பரத்தையர் பிரியும் ஆண்களை நரகத்திற்குத் தான் செல்வார்கள் என்று கடுமையான தண்டனை வழங்கக் கூடியவராகக் காணப்படுகின்றார். பிறன் மனைவியை விரும்புகின்றவர் பிணத்திற்கு ஒப்பானவன் என்று இழித்துரைக்கின்றார். சமூகம் ஒழுக்கமுள்ளதாக இருக்க வேண்டுமானால் அதில் இருக்கக்கூடிய பெண் மட்டுமல்லாமல் ஆணும் கற்புடையவனாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்றாா. பெண்களின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு அவர்களைத் துன்பத்திலிருந்து மீட்டெடுக்க வேண்டும் என்ற கருத்து அவருடைய குறளில் எதிரொலிக்கின்றது. பெண்களுக்காகக் குரல் கொடுக்கக் கூடியவராகத் திருவள்ளுவர் திகழ்கின்றார்.

# திருக்குறள் காமத்துப்பாலில் தோழியின் உளப்பாங்கு

-முனைவர் சோ முத்தமிழ்ச்செல்வன்

அகத்திணையில் தலைமக்களுக்கு அடுத்த சிறப்பிடம் தோழிக்கே உண்டு. அகத்திணைத் தலைமக்களைக் களவுக் காலத்தே நெறிப்படுத்தி வழிநடத்திச் செல்வதுடன், களவைக் கற்பாற்றுப் படுத்தும் செவ்விய அகத்திணைப் பணி தோழியின் இன்றியமையாப் பொறுப்பும் கடமையும் ஆகின்றது.

> **பிற அகமாந்தர்களின் மன உணர்வுகளைத் துலக்கமாக எடுத்துக் காட்டவும், அவர்தம் மனப் போராட்டங்களுக்கு உளவியல் வழித் தீர்பு காணவும் எனப் படைக்கப்பட்ட படைப்பாகவே தோழி தோன்றுவதை நம்மால் உய்த்துணர முடிகிறது**

என அகத்திணையில் தோழியின் சிறப்பிடத்தைத் தெளிவுபடுத்துகிறார் ஆ. இராமகிருட்டிணன்.

இத்தகு கடமைப் பொறுப்புமிக்க தோழி, தலைமகக்களின் உள்ளங்களை நுணுகி ஆராய்ந்து அறிந்து, உளவியல் அடிப்படையில் தலைமக்களுக்கு உளவியற் பாடம் புகட்டும் உளவியற் பேராசிரியராகத் திகழ்கின்றாள் என்பதை வள்ளுவர், வழிநின்று நிறுவுதலே திருக்குறள் காமத்துப்பாலில் தோழியின் உளப்பாங்கு என்ற இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அகத்திணை நாடகத்தின் பெண் இயக்குநர்**

தோழி இல்லையேல் தலைமக்களின் காதலே நிறைவேறாமல் போய்விடுமோ என ஐயுறும் அளவிற்கு அகத்திணையில் தோழியின் சிறப்பிடத்தைச் சங்கப்புலவர் முதல் அகத்தினை பாடிய எண்ணற்ற தமிழ்ப்புலவர்கள் பாடியுள்ளனர்.

அகத்திணை மாந்தர்களுள் தோழி, சிறந்த உளவியல் அறிவுடன் தலைமகளின் காதல் வாழ்விற்குப் பேருதவி புரிகின்றாள். தலைவனது உள்ளக் குறிப்புகளையும், தலைவியின் உள்ளக் குறிப்புகளையும், தாய், ஊரவர் உள்ளங்களையும் சூழ்நிலைக்கேற்ப ஆராய்ந்துணர்ந்து, தலைமக்களிடையே இன்பக்

கூட்டம் கூட்டுவித்தல் தோழியின் மிகச் சிறந்த பணியாக நம் அகத்திணை காட்டுகிறது. எனவே, தோழி சிறந்த உளவியல் அறிவுத்திறன் உடையவளாகத் திகழ்ந்துள்ளார்.

தொல்காப்பியர் தோழியின் இயல்பு பற்றி,

**"சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே"**

என்ற நூற்பாவில் கூறியுள்ளார். இதில் பலரது உள்ளக் குறிப்புகளையும் ஆராய்ந்து தெளிவதாகிய 'சூழ்தல்' என்ற இயல்பைத் தோழியின் இயல்பாக்கிப் பாடுகின்ற திறம் புலப்படுகின்றது.

களவுக் காலத்திலும் கற்புக் காலத்திலும் தலைமக்கள் உள்ளக் குறிப்பறிந்து அவர்களை செம்மையான அகத்திணைப் பாதையில் நடத்திச் செலுத்தும் உளவியல் அறிவு நிரம்பியவளாகத் தோழி திகழ்வதால், அகத்திணை நாடகத்தின் இயக்குநர் போலத் திகழும் தோழிக்கு அகத்திணையில் இன்றியமையாத தனித்த இடம் உண்டு.

**உள்ளக் குறிப்பறியும் உளவியல் அறிவினள்**

பிறரது உள்ளக் குறிப்பை உய்த்தறியும் அறிவுத்திறன் படைத்தோரைத் தெய்வத்தோடு ஒப்பிட்டுக் கூறுவார் திருவள்ளுவர். இதன் அடிப்படையில், தோழி தலைமக்களுக்கு உண்மையில் ஒரு கண் கண்ட தெய்வமாகவே செயல்படுகின்றாள்.

தலைவன் உள்ளம், தலைவி உள்ளம் ஆகிய உள்ளங்களின் குறிப்புகளைப் புறச் சூழலுக்கும், மனச் சூழலுக்கும் ஏற்பக் குறிப்பாக உய்த்தறிந்து அகத்திணை நாடகத்தை நெறிப்படுத்தும் நெறியாளராகத் தோழி திகழ்வதைக் 'குறிப்பறிவுறுத்தல்' 'புணர்ச்சி விதும்பல்' என்ற அதிகாரங்களில் நாம் அறியமுடிகிறது.

**"குறிப்பறிவுறுத்தல்" என்னும் அதிகாரத்தில்,**

**தொடிநோக்கி மென்றோளும் நோக்கி அடிநோக்கி**
**அஃதாண் டவள்செய் தது**

என்னும் தோழி கூற்றால், அமையும் திருக்குறளுக்கு உரை வகுத்த பரிமேலழகர்,

**தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத்**
**தலைமகற் கறிவித்தது**

எனக் கூறுவது தோழியின் உள்ளக் குறிப்பறியும் உளவில் திறனைத் துறை விளக்கத்தின் வாயிலாகப் புலப்படுத்துகிறார்.

புணர்ச்சி விதும்பல் எனும் அதிகாரத்தில்,

**இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்**
**கள்ளற்றே கள்வநின் மார்பு**

என்னும் தோழி கூற்றுத் திருக்குறளுக்கு உரை வகுக்கும்போது,

**தலைமகள் புணர்ச்சி விதுப்பறிந்த தோழி**
**தலைமகற்குச் சொல்லியது**

எனக் கூறுகின்றார். இதில் தோழியின் உள்ளக் குறிப்பு அறியும் திறன் புலப்படுகின்றது.

தோழி, மனித உளவியல் நுட்பத்தைத் தெள்ளிதின் அறிந்து 'நிழலின் அருமை வெயிலில் தெரியும்' என்ற உளவியல் அடிப்படையிலான பழமொழிக்கிணங்கத் தலைவியின் அருமையைத் தலைவன் உணரும்படி செய்யும் உளவியல் அறிவு உடையவள். காதல் திட்டங்களை உளவியல் அடிப்படையில் வகுத்துத் தோழி இங்ஙனம் செயற்படுதலை,

**தலைவனொடு தலைவியின் உறவை அறிந்து கொண்ட பின்னும், தோழி தலைவனுக்கு இடையூறு போலக் காட்டிக் கொள்வாள். அவனது பொங்கிய காதலுக்குச் செவிசரியாள், அவன் அரிதுமுயன்று ஆர்வத்தோடு கொண்டுவரும் கையுறையை ஏற்க மறுப்பாள். வேண்டுமென்றே கூட்டம் நிகழாவாறு நாட்கடத்துவாள். தலைவியின் அருமையைத் தலைவன் உணரவேண்டும் என்பதும், தலைவனின் உறுதியைத் தான் உணர வேண்டும் என்பதுமே தோழி இங்ஙனம் செய்வதன் நோக்கம்**

என்னும் அகத்திணை ஆய்வுக் கருத்து தெள்ளத் தெளிவாகப் புலப்படுத்துகின்றது.

காதல் திட்டங்களை உளவியல் அடிப்படையில் வகுத்துச் செயற்படுத்தும் வள்ளுவத் தோழி, தலைவன் மாட்டுத் தலைவியின் அருமையை உணர்த்துவிக்கச் செய்யும் முயற்சிகளைப் பரிமேலழகரின் துறை விளக்கம் தெளிவுபடுத்துகின்றது.

**உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்**
**ஒல்லை உணரப் படும்**

என்ற திருக்குறளுக்கு.

**தோழி சேட்படுத்த வழி அவள் குறிப்பறிந்த**
**தலைமகன் தன்னுள்ளே சொல்லியது**

எனப் பரிமேலழகர் துறைவிளக்கம் தருகின்றார். தலைவியை அடைய இயலாதவாறு தலைவனைத் தோழி செயல்படுத்தித் தலைவியின் அருமைகளைத் தலைவன் உணரும் வண்ணம் உளவியல் நுட்ப அணுகுமுறையுடன் தோழி செயல்படுத்தற்கு ஈடு இணை எதுவும் கிடையாது.

**நெஞ்சூர்தி சொல்லன்று, கண்ணே!**

ஒருவரது நெஞ்சினுள் நிலவும் எண்ணங்களை வெளிப்படுத்திக் காட்டும் திறன் சொற்களைவிடக் கண்ணுக்கே மிகுதியும் உண்டு. சொற்களுக்கு ஓரளவே உண்டென்பதை,

**"உள்ளக் கருத்தினை வெளிக்காட்டும் வன்மை சொல்லுக்கு**
**ஓரளவுதான் உண்டு...... ஓரளவேனும் உட்கருத்தையும் புறப்படுத்துவது கிடக்க, 'வினைவேறு சொல்வேறுபட்டார் தொடர்பு' (189)இ 'எனைத்தொன்றும் சொல்லினால் தேறற்பாற்றன்று (825)**

என்ற குறட் பகுத்திகளால், அகத்தை ஒளித்துக் காட்டும்

**பொய்த்திறமும் சொல்லிற்கு உண்டு காண். எனவே சொல்லெனப்படுவது யாதெனின். மக்கள் நெஞ்சூர்தியன்று கருத்தூர்தி என்பதுவே உண்மை"**

என்ற வ.சுப. மாணிக்கத்தின் கூற்றுத் தெளிவுபடுத்தும். எனவே உள்ளத்தை முழுமையாக வெளிப்படுத்தவல்லது கண்ணே. இதனைத் தெளிந்த வள்ளுவத் தோழி,

**ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே உள**

என்பதை உணர்ந்து, தலைமக்களின் காதல் நெஞ்சத்தை அவர்தம் கண்கள் காட்டும் பொதுமைப் பார்வையால் நுட்பமாக உணர்ந்து, 'காதலார் கண்ணே உள' எனத் தேற்றேகாரமிட்டுக் கூறுகிறாள். இக்குறட்பாவுக்குப் பரிமேலழகர் தரும் உரை விளக்கம்.

**தோழி மதியுடம் படுவாள் தன்னுள்ளே சொல்லியது**

என்பதாகும். இவ்உறைவிளக்கத்தால் தலைமக்களின் காதல் உணர்வை உளவியல் அடிப்படையில் தோழி உடன்படும் திறன் புலனாகிறது.

**கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல**

என்னும் வள்ளுவத் தோழியின் கூற்று, 'கருத்தூர்தியான சொற்கள் நெஞ்சக் கருத்தைக் காட்டப் பயன்படுவனவேயன்றி, நெஞ்சை முழுமையாகக் காட்டும்திறன் பெற்றனவல்ல, நெஞ்சூர்தியான கண்களே நெஞ்சை முழுமையாகக் காட்டும் திறன் பெற்றவை' என்னும் நுண்ணிய உளவியலை உணரமுடிகின்றது.

**கற்பியல் தோழி**

தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதுங்கால் அவள் மனக் குறிப்பறிந்து, தலைவியின் பிரிவாற்றா நிலையை உணர்த்திச் செலவழுங்குவித்தல், தலைவனின் பிரிவால் ஆற்றாமைத் துயரில் வாடும் தலைவியைத் தேற்றுதல், வாயில் தேர்தல் முதலாய பெரும் பணிகளைத் தலைமேற்கொண்டு கற்புக் காலத்தே தோழி செய்யும் இல்லறத் தொண்டுகள் அளவிடற்கரியன.

கற்புக் காலத்தே தலைவனின் பிரிவை ஆற்றாமல் வாடும் தலைவிக்குத் தோழி ஆறுதல் கூறி ஆற்றவிக்கும் பெரும்பணி, தலைவியின் உயிரைக் காக்கும் அரும்பணியாய் அமைகிறது எனலாம். ஆற்றுவித்த தோழிக்குத் தலைவி கூறும் மறுமொழியாகக் கற்பியல் ஐம்பத்தேழு பாடல்களுக்குப் பரிமேலழகர் உரை வகுத்துள்ளமை, கற்பியலில் தோழி கொள்ளும் அளப்பரிய பெரும்பங்கினை நமக்குப் புலப்படுத்துகிறது.

தோழி, தலைவியின் மன உணர்வுகளுடன் இரண்டறக் கலந்து ஒன்றி நிற்பதை அவளது கூற்றுகள் மெய்ப்பிக்கின்றன.

**தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்**
**கௌவை எடுக்குமிவ் வூர்**

எனவும்,

**சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி**
**நறுமலர் நாணின கண்**

எனவும், வள்ளுவத் தோழி 'யாம்' எனவும், 'நமக்கு' எனவும் தன்னையும் தலைவியையும் உளப்படுத்தித் தன்மைப் பன்மை வாய்பாட்டாற் பேசுதல், தலைமக்களின் இல்வாழ்வில் அவள் காட்டும அளவற்ற கடமைப் பொறுப்பையும், உரிமைச் சிறப்பையும் நமக்குக் காட்டிநிற்கின்றன.

இவ்வாறு தோழி தன்னையும் உளப்படுத்திப் பேசுதலை உளவியல் நோக்கில் அ. இராமகிருட்டிணன்

> தலைவியின் நிலையில் தன்னை நிறுத்தித் தலைவியின் மன ஓட்டங்களை முழுதுமாக உற்றுநோக்கும் உள்ளார்வமே தோழி இங்குத் தன்னை மையப்படுத்திப் பேசுதற்குக் காரணமாகலாம்... தலைவனுடன் இன்புற்ற தலைவி அவனது பிரிவால் வருந்தி நிற்கிறாள் என்பதைத் தான் உணர்ந்து கொண்டதைத் தலைவிக்கு உணர்த்த விரும்பி, அதனை 'நம்' என்னும் தன்மை உளப்பாட்டுப் பன்மைச் சொல்லைப் பயன்படுத்தி விளக்க முனைதலைக் காண்கிறோம்.

என விளக்கிக் கூறுதல் ஈண்டு நினைவு கூரத்தக்கது.

வள்ளுவத் தோழி, தலைவியுடன் தன்னை உளப்படுத்திக் கூறுவதோடு மட்டுமன்றி, தானே தலைவிபோல் நின்று, தலைவன் பொருள் வயிற் பிரிதற் குறிப்பறிந்து, செலவழுங்குவிக்கும் நோக்குடன் கூறும் கூற்றையும் நாம் காண்கிறோம்.

**செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க் குரை**

என்று வள்ளுவத் தோழி 'எனக்கு' என்ற தன்மை ஒருமைச் சொல்லைப் பெய்து கூறுதல், தலைவியின் நிலையில் தோழி தன்னை நிறுத்திப் பேசுவதை நமக்குத் தெளிவுப்படுத்துகிறது. இக்குறட்பாவிற்கு உரை வகுக்கும் பரிமேலழகர்,

**தலைமகளை ஒழித்து 'எனக்' கென்றாள்.**
**தான் அவள் என்னும் வேற்றுமையின்மையின்**

என்று உரைவிளக்கத்தில் கூறுதல், தலைவியின் மன உணர்வுகளை உற்றுநோக்கித் தானே தலைவிபோல் நின்று பேசும் தோழியின் உள்ளார்வத்தைப் புலப்படுத்துகின்றது.

**தொகுப்புரை**

அகத்திணை நாடகத்தை உளவியல் அடிப்படையில் இயக்கி நெறிப்படுத்தும் பெரும்பங்கு தோழிக்கு உண்டு. தலைமக்களின் உள்ளக் குறிப்புகளை நுட்பமாய் உணர்ந்து, அவற்றுக்குத் தக்க அகத்திணையைச் செம்மைப்படுத்தி நடத்திச் செல்லும் உளவியல் அறிவுமிக்கவள் தோழி, வாய்ச் சொற்களைவிட நெஞ்சத்துணர்வுகளைத் தெளிவாக வெளிப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தவை கண்களே என்னும் உளவியல் அடிப்படையை உணர்ந்து செயல்படும் திறன் வள்ளுவத் தோழிக்கு உண்டு. களவியலில் தோழி மதியுடம்பட்டுக்

கூறும் கூற்றும், தலைமக்களை உடன்போக்கு நயப்பக் கூறும் கூற்றம் தலைமக்களின் மனநிலைகளையும், சமுதாயக் கண்ணோட்டத்தையும் தன்மனத்துட் கொண்டு செயல்படும் உளவியல் அறிவுமிக்கவள் தோழி என்பதைப் புலப்படுத்துகின்றன. தலைவனின் பிரிவுக் குறிப்பறிந்து அவனைச் செழுங்குவித்துக் கூறுதல், பிரிவால் வாடும் தலைவியின் உள்ளக் குறிப்பறிந்து அவளைத் தேற்றிக் கூறுதல் ஆகிய தோழியின் கற்பியல் கூற்றுகள், தோழி பிறரது உள்ளத்து உணர்வுகளைக் குறிப்பால் உணரும் உளவியல் நுட்பம் செறிந்தவள் என்பதைப் புலப்படுத்துகின்றன.

# திருவள்ளுவர் பகரும் பொருட் பகுப்புகள் ‘ஒரு சமூகவியல் நோக்கு’

முனைவர் நா. சிவா

**முன்னுரை**

‘பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை’ எனும் வான்புகழாரின் வாக்குப்படி மனிதகுல வளர்ச்சிக்கு உயிர் நாடியாக இருந்து குமுகாயத்தை வாழ்வித்துக்கொண்டிருப்பது மனித முயற்சியால் உருவாக்கிய, பொருளேயாம், மனிதகுல வருமானத்தை அடித்தளமாகக் கொண்டுள்ள நிதிநிலைப் பெருக்கமே பொருளாதாரம் என்னும் மக்கள் ஆதாரமாகும். மனிதனின் பொருள் தேவையை நிறைவு செய்யும் துறையாகிய ‘பொருளியல்’ துறை (Economics) வளர்ச்சியே நாட்டின் முழுமையான வளர்ச்சியாகிறது. இங்ஙனம் தனிமனித பொருளாதார நிலையே மனிதரின் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு படிநிலைகளில் மனிதத்தை வாழ்வித்துக் கொண்டிருக்கிறது என்பதைத் திருவள்ளுவர் தம்முப்பாலில் நூல் பரக்க யாத்துள்ளார். பொய்யா மொழியார் ‘பொருள்’ என்னும் பொருளில் வழங்கும் பல்வேறு நிலைப்பாடுகளை முந்நூற்று நான்கு இடங்களில் நேரிடையாக முன்மொழிகின்றார். அத்தகைய பொருள் பற்றிய வகைதொகைகளையும் அவற்றிற்கான ஏதுகளையும் செந்நாப்போதார் எங்ஙனம் தம்பனுவலில் பதிவு செய்துள்ளார் என்பதை ஈண்டு ஆய்ந்து நோக்கலாம்.

**முப்பாலில் முப்பொருளும் ஒன்றே**

அறம், பொருள், இன்பம் ஆகிய இவற்றில் பொருளைப் பெற்றுவிட்டால் அறத்தையும், இன்பத்தையும் எட்டிவிடலாம் என்பதை வள்ளுவரின், ‘ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு

எண்பொருள் ஏனை இரண்டும் ஒருங்கு' என்ற குறட்பாவால் அறிகிறோம். எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே, எல்லாப் பொருளும் இதன்பாலுள, இதன் பாலில்லாத எப்பொருளும் இல்லையால் என்ற தொடர்களில் உள்ள 'பொருள்' என்பது அறப்பொருளின்பத்தையே குறிக்கிறது 'அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின் திறம்தெரிந்து தேறப்படும்', 'அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து தீதின்றி வந்த பொருள், ஈத்துவக்கும் இன்பம்,. அறியார்கொல் தாமுடைமை வைத்தி முக்குவன் கணவர், அறத்தான் வருவதே இன்பம், அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை போன்ற குறட்பாக்கள் பொருளினாலே அறவின்பம் அடைய முடியும் என்கின்றது. ஆகவே, பொருளைக் கொண்டே உலக இயக்கம் நடைபெறுவதால் அறம், இன்பம் வீடு இவற்றைப் பொருட்செல்வத்தால் அடையலாம் எனத் திண்ணமாகக கூறுகின்றார் வள்ளுவர்.

**'பொருள்' எனும் பல்வேறு வள்ளுவப் பதங்கள்**

பொருள், பொருள்தீர்ந்த, பொருட் பயன், செம்பொருள், பொருளல்லது, விலை பொருட்டால், சினத்தைப் பொருளென்று, பொருளல்லவற்றை, மெய்ப்பொருள், ஒண்பொருள், எண்பொருள், பொருள் மாலையாளரை, சொற்பொருள், நற்பொருள், பொருட் பெண்டிர் பொருட்பொருளார், வேண்டாப் பொருள், வான்பொருள், பொருளென்னும் பொய்யா விளக்கம், பொருளல்லவர். எல்லாப் பொருளும், அரண்பொருள், பிறன் பொருளாள், பொருளுடைமை, பொருட்செல்வம், அறம் பொருள் பெரும்பொரு, பொருள்செயல்வகை, பொருள் தெரியா, பொருளாட்சி, பொருளாயம், பொருளென்னும் செல்வச் செவிலி, தம்பொருள், அவர் பொருள் போன்ற 'பொருள்' என்ற சொற்கள் செய்தி, சொற்பொருள், செய்கை, அறிவு, தத்துவம், மெய்ம்மை, கொள்கை, பொன், தந்திரம், மகன், நிலையாமை, விலை, கருத்து, விளக்கம், விலைமகள், வரி, முட்டாள், துணை. பிறருடைய மனைவி, சொத்து, பொருட்கள், சொற்கருத்து, இலாபம், தாய் போன்ற பல பொருட்களில் கையாளப்படுகிறது.

**'உடைமை' - விளக்கம்**

உடைமை அறிவுடைமை, ஆர்வமுடைமை நிறையுடைமை, துணிவுடைமை, நலனுடைமை, நாணுடைமை, பண்புடைமை, ஆள்வினை உடைமை, அருளுடைமை, ஊக்கமுடைமை, அன்புடைமை, அடக்முடைமை, ஒழுக்கமுடைமை, பொறையுடைமை, திருவுடையார்,

உடைமையுள் இன்மை, உடையரெனப்படுவதூக்கம், உள்ளமுடைமை, கைத்துடையார், எல்லாம் உடையார், உடையார், உடைச்செல்வம் போன்ற உடைமை எனும் பதங்கள் மேற்கூறிய பல பொருள்களில் கையாளப்படுகிறது.

**செல்வம்-விளக்கம்**

செல்வம், செல்வர்க்கே செல்வம், பெருஞ்செல்வம், நெடுஞ்செல்வம், கேடில்செல்வம், சீருடைச் செல்வர், செவிச் செல்வம், அருட்செல்வம், நன்றியில் செல்வம், செல்வச் செவிலி, மக்கட்பேறு, மாடு, பெருக்கம்.

திரு-திரு, திருவினை, திருவுடையார், திருச்செற்று, திருநுதல், திருநீக்கப்பட்டார், தாளுளாள் தாமரையினாள்,

**ஆக்கம்**

பொருளாக்கம், ஆக்கம், அறனாக்கம், ஆக்கமும் கேடும், மன்னுயிர்க்காக்கம், உவந்தாரை ஆக்கல்

**மறைமுகப் பொருள்சார் சொற்கள்**

தன்நீர்மை, வானம்வறக்குமேல், வளத்தக்காள், வாணிகம், வெட்குதல், சீர்மை, மதிப்பு, பேரறிவாளன், நயனுடையான், பெருந்தகையான், ஈகை, ஒப்புரவு, ஓம்பி, காத்த, நில்லாதவற்றை, இல்லை, இல், வேண்டிய, பெருமிதம், முதல், செயல்வகை, ஊதியம், ஆகாறு, போகாறு, வாரி பொருக்கி, வளம்படுத்து, பெருங்கொடையான், கொடை, அளி, உவகை, கண்ணோட்டம், செருக்கு முயற்சி, காதல், அவா, பற்று, அற்றா, இயற்றல், ஈட்டல், வகுத்தல், ஒப்புரவாண்மை, உருளாயம், அறம், இன்பம், தொழில், உழவு வழங்குதல், துப்பார்க்கு, புயலென்னும், இரத்தல், பெற்றான், வறியார், இல்லார், புகழ், கொடுத்தல், நல்கூர்ந்தார், நிரம்பிடும்பை, தாளாண்மை, வேளாண்மை, ஆளவினை, நலம், நன்மை, நன்னயம், நன்றி, உதவி, ஊன், பாத்தூண், பகுத்துண்டு, காமப்பொருள், இன்பப்பொருள், மானம், வெற்றி, ஆகூழ், போகூழ், துய்த்தல், கூலி, துப்பிரவில்லார், இழத்தல், இகழமை, பகை போன்ற பிறவும் பொருட்செல்வத்தைக் குறித்து நின்றன. மேற்சொன்ன அனைத்துப் பொருள்கூறுகளும் உலகமே பொருளில்தான் அடங்கியுள்ளமையைக் காட்டி நிற்கின்றன.

**குடும்பத்தின் உயிராதாரம்**

வள்ளுவர், ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன் மகனே வறுமையுற்றபோது தாய் அவனை மாற்றானைப் போல

வெறுப்பாள் (1047) என்கிறார். துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இற(ர)ந்தார்க்கும் இல்லறத்தான் (பொருளையுடையவன்) துணையாவான். தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்பொருட்டு என உழைத்துப் பெற்ற செல்வம் உதவிக்கே என்கிறார். நல்லாண்மை என்பது இல்லாண்மை இல்லாரை எள்ளுவர், பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும், குடும்பத்தைக் குற்றம் மறைப்பான், அருளென்னும் அன்பீன் குழவி, வீழ்நாள் படாஅமை நன்றாற்றல் ஆகியவற்றிற்குப் பொருள் உயிர்நாடியாக இருக்கிறது. மேலும் அறத்தான் வருவதே இன்பம் என்பதால் வாழ்க்கை என்பது பிறர்வாழவும், நாம் வாழவும் பொருளே உயிராதாரம் என்கிறார் முப்பாலார்.

**நாட்டின் மூலாதாரம்**

உறுபசி, ஒவாப்பிணி, செறுபகை, இம்மூன்றும ஒழியவும், பொருளென்னும் பொய்யாவிளக்கம் (பகைவரை) இருளறுக்கவும், இயற்றலும், ஈட்டலும், காத்தலும், வகுத்தலும் செய்யவும், பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம், ஏமம் (காவல்) ஆகியவற்றிற்கும், நல்லரசு அல்லது வல்லரசு என்பது 'பொருளரசே' என்பதை நிலைநாட்டவும் ஒரு நாட்டிற்கு மூலாதாரமாகவும் ஜீவாதாரமாகவும் பொருள் செயலாற்றுகிறது.

**உலகாதாரம்**

சுழன்றும் ஏர்பின்னது உலகம், உழுவார் உலகத் தார்க்கு ஆணி, உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் போன்ற குறட்பாக்களின் மூலம் உழவர்கள், உணவுப் பொருட்களை உருவாக்குவதல்லால் உலகத்தையும் உருவாக்குகிறார்கள் என்கிறார். பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் பண்புடை செல்வமாக மாற, மக்கட் பண்பு கொண்டு அச்செல்வந்தர் ஒப்புரவாற்ற வேண்டும் இதைத் தான் வள்ளவர் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்கிறார் செல்வர் பணிவோடு இருந்து வறுமையர்க்கு வாரி வழங்கினால் 'ஐயம்' நீங்கி மக்கள் இன்புறுவர். எனவே செல்வர் ஊருணி போல வாரி வழங்கினால் 'ஐயம்' நீங்கி மக்கள் இன்புறுவர். எனவே செல்வர் ஊருணி போல வாரி வழங்கினால் உலகம் பரந்து கெடாது நிலைத்திருக்கும். செல்வரும் அழியார். இல்லெனினல் ஏழைகள் அழுகின்ற கண்ணீரிலே செல்வருடைய செல்வம் கரைந்து போகும் எனச் சாபமிடுகின்றார். எனவே உலகம் நிலைத்து நிற்க பொருளைப் பெற்றோர் உலகை வாழ வைக்க மழைபோன்று ஒப்புரவாற்ற வேண்டும். ஆகவே செருநர் செருக்கறுக்ககவும்

பயன்படும் உலகப் பொருளாதாரம் என்னும் மூலாதாரத்தைக் கொண்டு உலகு இயங்குகிறது என்கிறார்.

**பொருளின் சமூகநோக்கு**

'முயற்சி' திருவினையாக்கும். ஊழையும் உப்பக்கம் காண்பர், மெய்வருத்தக் கூலி தரும் என்பதால் வேளாண்மை என்னும் செருக்கிற்கு ஆள்வினையோடு ஒவ்வொருவரும் உழைக்க வேண்டுகின்றார். செல்வம் பெற்றவர் மருந்து மரம், உள்ளுவர் பயன்மரம் ஆகியன போன்று மற்றவர்க்கு ஈந்து வாழ வேண்டும். இல்லையெனில் செல்வர் செத்தவராகவும், பூமிக்கு பாரமாகவும், நச்சுமரமாகவும் இருந்து அழிந்தொழிவர் எனச் சபிக்கிறார்.

**அறப்பொருள்**

பொருளால் அறம் செய்யும் போது அறம் இன்பமாகிறது. அறம் என்பது நன்னெறி, இல்லறம், துறவறம், கற்பு, நல்வினை, புண்ணியம், வீடு பயக்கும் மெய்ப்பொருள் போன்ற பொருளில் ஆளப்படுவதால் அறத்தைப் பொருளறம் என்றே கூறலாம். அறம்செய்தல் என்பது பொருளால் உதவி செய்தல், வறுமை நீக்கல், இன்பம் பெறச் செய்தல், நல்வழி செல்லத்துணை புரிதல் ஆகிய நிலைகளைக் குறிக்கும், வறுமையாளன் அறச்செயல்களைச் செய்யான். அவன் பொய், திருடுதல், வஞ்சனை, புறங்கூறுதல், தீச்சொல், தீவிரவாதம், வன்முறை, ஏமாற்றுதல், பொறாமை, கோபம், ஆசைத்துன்பம், மன உலைச்சல், மனநோய் போன்ற சமூகச் சீரழிவிற்குக் காரணமாவான். அவனை நன்னெறி படுத்த ஒப்புரவாளன் முன்வர வேண்டும். பணம் படைத்தவனும் கொடுதது வாழ்வதால் செருக்கு, பணிவின்மை, அடக்கமின்மை, அன்பின்மை, பொறையின்மை, ஒழுக்கமின்மை, நன்னயமின்மை, கயமை, சால்பின்மை, சான்றாண்மையின்மை போன்ற பல குற்றங்களிலிருந்து நீங்கப் பெற்ற மனத்துக்கண் மாசிலனாக வாழ்ந்து புகழடைவான்.

**மெய்ப்பொருள்**

பொருளின்மீது பற்றற்றவர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வான்வீடையவர், செம்பொருள், மெய்ப்பொருள், பிறப்பென்னும் பேதைமை நீங்குதல், அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை, தவம் புரிந்து மெய்யுணர்வர், மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்துவிடின், எனவே, செல்வம் நிலையானதல்ல என்பதை உணர்ந்து நிலையான மெய்ப்பொருள் பெறச் செல்வத்தைப் பகிர்ந்துண்ண வேண்டும்.

**முடிவுரை**

மேற்கண்ட வள்ளுவப் பொருளினால் பொருளின் முதன்மையும் பொருளே அனைத்தையும் ஆக்கவல்லது என்பதையும் கண்டோம். சமூகத்திற்குத் தேவைப்படும் பதினாறு செல்வங்களான கல்வி, அறிவு, ஆற்றல், ஆயுள், இளமை, துணிவு, பொருள், பொன், பொருள், புகழ், நிலம், நன்மக்கள், நல்லொழுக்கம், நோயின்மை, முயற்சி, வெற்றி போன்ற அனைத்தையும் வள்ளுவத்தில் இணைத்துப் பார்த்தால் பொருட் செல்வமே *16* செல்லவங்களாகவும் வேறுபல துணைப்பொருளாகவும் விரிந்துள்ளமை திண்ணம் *304* இடங்களில் நேரடிப் பொருட்செல்வத்தைக் கூறிச்செல்லும் வள்ளுவர் மறைமுகமாகவும் பல இடங்களில் பொருளியலைச் சுட்டுகின்றார். திருக்குறள், திருவள்ளுவர் என்பதன் முதனிலையாகிய ‘திரு’ என்பது உயர்ந்த என்ற பொருளைக் குறிக்கின்றது ஆகவே திருக்குறளின் படி, முயற்சித்து, உழவுத் தொழில் போன்ற பலவினை செயல்வகை புரிந்தால், பொருள்செயல்வகை இனிது கிட்டும், வறுமை மாயும் இருப்போர் கொடுப்பர். இல்லார் இன்பமெய்துவர். எனவே உலகை இயக்கும் பொருளைப் பெற்றுவிட்டால் அறத்தையும் இன்பத்தையும் இனிதாகச் செய்து வைத்துள் வாழ்வாங்கு வாழலாம். ஆக, வள்ளவர் பொருட்படி வாழ்ந்தால் சமுதாயம் வானளவு உயரும். உழைத்து உண்போம், தழைத்து வாழ்ந்து பிறரை வாழவைப்போம்.

# வள்ளுவர் போற்றும் இயற்கை

**இரா. சுந்தரமூர்த்தி**

மானிடப்பண்புகள் சிறக்கப் பல வழிகள் உள்ளன. அறமும் பொருளும் அப்பண்பை அளக்கும் கருவிகள். மனித மேம்பாடு அவற்றால்தான் சுடர்விட்டு ஒளிரும். அவையிரண்டும் நலமான வாழ்விற்கு நற்றுணையாவன அறம் மனித மேம்பாட்டுச் சிந்தனையாகவும், பொருள் உலகியல் வாழ்விற்கு வழி கோலுவதாகவும் திருக்குறட்கண் செறிந்து காணப்படுகின்றன. இருப்பினும் மானுட சமூகம் மட்டுமின்றி உலகில் தோன்றிய உயிர்கள் அனைத்தும் இயற்கையின் பாற்பட்டது என்பதில் ஐயமில்லை. இயற்கையின் அரவணைப்பின்றி செயற்கையிங்கு செயல்படுவதில்லை. அந்தவகையில் வானம், பூமி, ஞாயிறு, திங்கள், மழை, காற்று, ஆறு, கடல் முதலிய இயற்கைப் பொருள்களையும், ஆற்றல்களையும் குறித்து வள்ளுவர் யாது கருதினார் என ஆய்வது நன்று. ஆயினும் வள்ளுவர் வியந்து போற்றியது வான்மழை ஒன்றையே அத்தகைய சிறப்புடைய மழையைக் குறித்து வள்ளுவன் யாது கூறினார் என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**வான் சிறப்பு அதிகார முறைமை**

வள்ளுவர் வான்சிறப்பைப் கடவுள் வாழ்த்துக்கு அடுத்தபடியாக வைத்தார். ஆயினும் கடவுளுக்கும் அச்சிறப்புள்ள வானுக்கு (மழைக்கும்) என்ன தொடர்பு என்பதை அவர் தெளிவாகக் கூறவில்லை உரையாசிரியர்களே இவ்விரண்டையும் தொடர்புப்படுத்த முயன்றனர். அஃதாவது அக்கடவுளது ஆணையால் உலகமும் அதற்கு உறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்துதற்கு ஏதுவாகிய மழையின் சிறப்புக் கூறுதல் எனப் பரிமேல் அழகர் வான் சிறப்புக்கு விளக்கம் தந்தார். "இயற்கை தன் உயிராகிய கடவுளை உணர்த்துதற்குக் கருவியாக நின்று துணை செய்வது" என்றும் இயற்கை

கடவுளின் உடலாதலால் கடவுள் வாழ்த்துக்குறிப்பு இயற்கையை வாழ்த்துவது அறம் என்றும் திரு.வி.க. கூறியது நினைக்கத்தக்கது. இறைவனின் கருணையினாலேயே மழை **ஒல்லாது வானம் பெயல்.**

இக்குறள்களில் முன்னிரண்டும் பொதுமக்கள் வாழ்க்கை குறித்தனவாயும் பின்னிரண்டும் அரசு குறித்தனவாயும் உள்ளன. குடும்பத்தில் அறம் நிலவுமாயின் குடும்பத்தலைவி தன் கணவன் மீது அன்பும் நன்மதிப்பும் பொருந்திய நினைவுடன் நாள் தோறும் எழுத்தக்க ஒற்றுமை குடும்பத்தில் நிலவுமாயின் வேண்டிய போது மழை பொழியும் சமூகத்தில் ஈகையும் நட்புரவும் செய்து புகழ்பட வாழ்வோர் இல்லாவிடின் நிலத்தின் குற்றமற்ற நல்லபயன் குன்றும். வசையிலா வண்பயனில் மழைவளமும் அடங்கிற்று ஏனெனில் மழையின்றி நிலம் பயன் தருவதில்லை அவ்வாறே அற நூல்களில் சொல்லப்பட்ட இயல்பினால் கோலோச்சும் நல்லரசன் நாட்டின் பெயலும் விளைளும் சிறக்கும் எனவும் முறை கோடி அரசு செய்யும் மன்னவன் நாட்டில் வானம் மழையைப் பொழியாது எனவும் கூறப்பட்டது. மக்களின் அறவாழ்வே மழையைத் தருவிக்கும் என வள்ளுவர் கருதி மழையை அறத்தொடு ஒப்பிடுகின்றார்.

**முடிவுரை**

ஈரடியில் ஈரேழ் உலகையும் அளந்தவன். ஓரறி உயிர்முதல் ஆறறி உயிர் வரையிலுள்ள மனங்களுட் புகுந்து மதி தெளிவுறுவதற்குரிய மருத்துவம் செய்தவன். வாழ்வியல் நெறியுடன் சமூகம், அன்புடைமை, நன்றிமறவாமை நட்புடன் அரசியல் நெறியென அள்ள அள்ளக் குறையாத அமுதசுரபியெனும் ஐயன் வள்ளுவப் பெருந்தகை இயற்கையின் திறம்பற்றி இனிதே எடுத்தோதியது கன்னல் சாறுடனே கற்கண்டுப்பாகன் இனித்தது.

**பார்வை நூல்கள்**

1. முனைவர் இரா. குமரவேலன், இலக்கியச் சுவடுகள், தழாய்வுக் கழக வெளியீடு, டிசம்பர், *1994.*
2. அ.ச.ஞானசம்பந்தன், புதியகோணம், கங்கை புத்தகநிலைய வெளியீடு, மே, *1997*
3. காமாட்சி சீனிவாசன் குறள் கூறும் சமயம் மதுரைக் காமராசர் பல்கலைக்கழக வெளியீடு.

# வள்ளுவர் காட்டும் அரசியல்

**முனைவர் தி. சாமுண்டீஸ்வரி**

திருவள்ளுவர், பொருள் பற்றிக் கூறும்போது எல்லா நாட்டினர்க்கும் பொருந்தும்படியாகக் கூறியுள்ளார். இல்லற வாழ்க்கை இனிதே நடைபெறுவதற்கும் உலகியல் நடப்பதற்கும் பொருள் இன்றியமையாதது ஆகும். பொருளில்லார்க்கு இவ்வுலகு இல்லையல்லவா? இன்று காணும் பணம் மட்டும் பொருளாகா! அரசன் மக்களுக்குச் சிறந்த செல்வனாவான். அந்த அரசன் இருப்பதும் நாட்டைக் காப்பதற்கே நாடு தான் எல்லா செல்வங்களையும் மக்களுக்குத் தருகிறது. நாடு வாழ்ந்தால், நாமெல்லாம் வாழ்வோம்.

அரசனைப் பற்றியும், நாட்டைப் பற்றியும் தவிரப் பொருள் என்பது வேறில்லை. திருவள்ளுவர் காலத்தில் முடியாட்சி இருந்தமையின் மன்னரைக் குறிப்பர். குடியாட்சி உள்ள இந்நாளில் மன்னன் இருக்கும் இடத்தில் குடியரசுத் தலைவர் இருக்கின்றார். ஆதலால் நாட்டை ஆளும் நற்பண்புடைய தலைவர்களை நாட்டின் செல்வமாகவே கருத வேண்டியுள்ளது. முடியாட்சி காலத்தில் கூட, குடியாட்சி பண்புகள் பின்பற்றப்பட்டு இருக்கின்றன. குடியாட்சியுள்ள இக்காலத்திலே கூட, முடியாட்சிக் கூறுகள்போல நடைமுறைப்படுத்தப்படுகின்றன. மிக மிகச் சரியான சட்டம் இருந்தாலும் கூட நிர்வாக ஆளுமைத் திறன் குறைவால் பெருத்த தீங்குகளும் ஏற்படலாம் (A bad law can be better administed by a good person., while a good law cannot be better administed by a bad person).

**பண்டைய அரசன்**

( அரசனின் அரசாட்சியில் ஆறு உறுப்புகளின் முன்னுரிமை முக்கியத்துவ அமைப்பு திருவள்ளுவரால் மிகச் சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையாள் அரசருள் ஏறு**

ஒரு நாட்டிற்கு அடிப்படையானவன் அரசனே ஆவான். அவன் உள்நாட்டில் ஏற்படக்கூடிய குழப்பங்களைக் களையும் திறனும், பகைநாட்டுப் படையெடுப்பினைத்தடுத்து எதிர்த்துப் போரிடும் வீரமும் பெற்றிருக்க வேண்டும். பண்டைய குடியாட்சி, பெயரளவில் மாறுபட்டுக் குடியாட்சி முறையில் நடைபெற்றுள்ளது. குடியாட்சி முறையில் நடைபெற்றாலும் அரசனைத் தேர்ந்தெடுக்கவோ நீக்கவோ மக்களுக்கு உரிமை இல்லாமற் போயிற்று பண்டைய மன்னன் தானாகவே அரச பதவியை விட்டு விலக வேண்டும் அல்லது போரில் இறக்க வேண்டும். அப்போதுதான் வேறு தலைவன் வரமுடியும். அங்ஙனம் வேறு தலைவன் வர நேர்ந்தால் தன்னாட்சிச்குப் பின்னர் அதற்கு உரியவனையும் அரசன் தன் குடித் தோன்றல்களுள் ஒருவனைப் பலவகைப் பயிற்சிகளையும் கொடுத்து ஆயுத்தம் செய்து வைத்துவிடுவான் அவனே அடுத்த மன்னனாக வருவான் எனவேதான், அரசகுடி அரசமரபு இடையறாது தொடரலாயிற்று அரசகுலம் என்று தனிப்பிரிவும் அமையலாயிற்று.

**அரசனுக்குரிய தகுதிகள்**

வான்மறை வகுத்த வள்ளுவப் பெருமான், நாடாளும் தலைவனை, அரசன், அரசு, இறை, மன்னவன், வேந்தன், கோன் என்று பல பெயர்களால் குறித்துச் சென்றுள்ளார். பல பெயர்கட்கும் உரிமை பூண்ட நாடாளும் தலைவனின் இயல்பினை, பண்பினை, வள்ளுவர் மிகவும் தெளிவாக விளக்கிச் சென்றுள்ளார். பண்டைய முடியாட்சி, தெய்வப் புலவர் அரசனுடைய இயல்புகளைத் தெளிய உரைத்துள்ள இறைமாட்சி அதிகாரத்தையடுத்தாற்போன்று பல்வகைப் பண்புகளுக்கும் இடமான மூலமான கல்வியினை விரிவாக உரைத்து பின்னர்க் கல்லாமையால் இடமான மூலமான கல்வியின் விரிவாக உரைத்து பின்னர்க் கல்லாமையால் உண்டாகும் இழிவுகளைக் கூறி அதனையடுத்துக் கேள்வியாகிய செல்வத்தையும் அரசனுக்குரியதாக அமைத்துச் சென்றுள்ளார். இளவரசர், கல்வி, கேள்வி, அறிவால், பெரியோர் உறவால் மாட்சியுடைய மன்னராதல் வேண்டும் என வள்ளுவர் வழிகோலுகின்றார். அவை கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங்கடிதல் பெரியோரைத் துணைக்கோடல் சிற்றினம் சேராமை.

இங்குக் கல்வி, கல்லாமை இரண்டும் ஒரு பொருள் பற்றியன உடன்பாட்டிலும், எதிர்மறையிலும் அப்பொருள் கூறப்படுகிறது. கல்வியோடு உறவுடையதுதான் கேள்வி, இவற்றோடு உறவுடையதுதான் அறிவுடைமை, கேள்வி, நூற்பொருளைக் சுற்றறிந்தார் கூறக் கேட்டல், அறிவுடைமை, கல்வி, கேள்விகளையே அறிவோடு உண்மையறிவு உடையனாதல், குற்றங்கடிதல் தன்னைத்தானே பண்படுத்தல் ஆகும். சிற்றினம் சேராமை, பண்பட்டதைப் பாதுகாத்தல் பற்றிக் கூறுவது 'பெரியோரைத் துணைக்கோடல்' பெரியோரால்தான் பண்படுதல் ஆகும். ஆதலால், கல்வி முதல் அறிவுடைமைவரை படித்தல் கூறுவது "குற்றங்கடிதல்" முதல் சிற்றினம் சேராமை வரை பண்படுதல் கூறுவது இதனை,

**விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோடு ஏனை யவர்**

**கேட்பினும கேளாத் தகையவே கேள்வியால்**
**கேட்கப் படாத செவி**

**அறிவு அற்றம் காக்கும் கருவி செறுவர்க்கும்**
**உள்அழிக்கல் ஆகா அரண்**

**செருக்கும் சினமும் சிறுமையும இல்லார்**
**பெருக்கும் பெருமித நீர்த்து**

**ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து**
**வேந்தனும் வேந்து கெடும்**

**நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்**
**பண்புபா ராட்டும் உலகு**

என்ற குறட்பாக்களில் முறையே கல்வி, கேள்வி, அறிவு, குற்றங்கடிதல், பெரியோரைத் துணைக் கோடல், சிற்றினம் சேராமை போன்றவற்றை வள்ளுவர் குறள்வழி அறியலாம்.

**அரசனின் பணிகள்**

அரசு நடத்தும் பணிகள் பல்வேறானவை. இவற்றுள் இவ்வாட்சிப் பணியும் ஒன்று. இதனை வள்ளுவர் விளையாடல் (வினையை ஆடல், ஆள்தல்) எனப் பேசுகிறார். இப்பணி ஆராய்ந்தே ஆள்தல் வேண்டும் எனவும், அவர் கருதுவதால், 'தெரிந்து விளையாடல்' என அதிகாரத்தின் தலைப்பை அமைத்துக் கொண்டுள்ளார். ஐம்பெருங்குழு உறுப்பினர்

அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், ஏற்றல்) எண்பேராயத்தின் உறுப்பினர் (கரணத்தியவர், கருமகாரர், கனகசுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானை வீரர், இவள மறவர் அல்லது குதிரைப்படையின் தலைவர்) போன்ற குழுக்கள் இருந்ததை குறள் குறிப்பிடவில்லை. குறளிலிருந்து அரசுப் பணிகளை மேற்கொண்ட மாந்தர்களாக அரசு அலுவலர்கள் எனப்படுவர் பெரியோர் அமைச்சர், ஒற்றர், தூதுவர், படைக்கள் என்பராவார்கள். இவர்கள் யாவரும் நாட்டு நடப்பியலுடனும், அன்றாட அரசு நடவடிக்கைகளுடனும் தொடர்பு உடையவர்கள். அமைச்சர், தூதுவர், ஒற்றர் பற்றித் தனித்தனி அதிகாரங்கள் அமைந்துள்ளன.

(அரசன் தன் ஆட்சி பற்றிய எல்லா விளைகளிலும், சிறப்பாகப் போர் விளைகளிலும் தனக்கு உதவி செய்யும் அமைச்சர், தூதுவர், ஒற்றர், படைத்தலைவர் முதலிய துணையதிகாரங்களை இயக்கும் போது, அவர்களுடைய தகுதி, திறமைகளை ஆராய்ந்து அறிந்து நியமித்தல் தெளிந்து தெளிதலாகும்.

**அறம் பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்**
**திறம்தெரிந்து தேறப் படும்**

அறம் பொருள் இன்பம் உயிரச்சம் என்னும் நான்கின் திறத்தால் தெளிதலைக் குறிப்பிடுகின்றது. குடிப்பிறப்பும், குற்றமின்மையும் பழிக்கு நானுதலும் தெளிதலுக்குத் தகுதி என பின்வரும் குறள் உரைக்கின்றது.

**குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வரப்புரியும்**
**நாணுடையான் கட்டே தெளிவு**

ஓர் ஆட்சியில் தலைமை பெற்றுப் பணி செய்வது என்பது கடினமான சிக்கலான பணியாகும். எவரெவரை எவ்வெவ் பணிகளில் அமர்த்தலாம், எச்செயலை எவர் செம்மையாகச் செய்து முடிக்கும் திறனுடையோர் என ஆராய்ந்து அதற்கேற்ப அலுவலர்களை நியமித்து நிர்வாகம் செய்ய வேண்டுமென்பதை வள்ளுவப் பெருந்தகை தம் குறட்பாக்களில் விளக்கியுள்ளார்.)

**படை வகைகள்**

வள்ளுவர் காலத்தில் படைத் தலைவர்களைத் 'தலைமக்கள்' என்றும், படைவீரர்களை 'நிலைமக்கள்' என்றும் குறிப்பிட்டனர். காலாட்படை, தேர்ப்படை, குதிரைப் படை,

யானைப்படை எனும் நான்குபடைகளையும் உடைய அரசன் மிகச் சிறந்தவனாகக் கருதப்பட்டான். இதனை,

**உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்.**
**வெறுக்கையுள் எல்லாம் தலை**

இதில் இடம் பெறும் 'உறுப்பு' என்ற சொல்லுக்குப் பரிமேலழகர், நால்வகைப்படை என உரை தருகிறார். திருக்குறளில் இந்த நால்வகைப் படையமைப்பு இருந்தது என்பதற்கான தெளிவான சஈன்று இல்லை இருப்பினும் சில இடங்களில் காணப்படும்.

**காவற் பணி**

குறிக்கோள் என்னும் விளக்கின் ஒளியாக விளங்கும் அரசனுடையப் பணிகளில் குறிப்பிடத்தக்கது காவற்பணி. இதுவே தலையாய பணி என்றும் கூறலாம். காவற்பணி என்பது சிறப்பாக நாடு காவற் பணியையே குறிக்கும். அதாவது வெளிநாடுகளில் இருந்தும், அண்டை, அயல் நாடுகளிலிருந்தும், பகை நாடுகளில் இருந்தும் தோன்றி வரும் தாக்குதல்களிலிருந்து அரசன் தன் அரசையும், மக்களையும், காப்பதாலேயே அவள் 'காவலன்' என வழங்கப்படுகின்றான்.

**இறைகாக்கும் வையகம் எல்லாம்**

**காவலன் காவான் எனின்**

**முறைசெய்து காப்பாற்றும் மண்ணவன்**

என்னும் தொடர்கள் மன்னவரின் காவற் கடமையை எடுத்துரைக்கின்றன. அரசுகளின் கடமைகளில் தலையானவை புறப்பகை, அகப்பகை ஆகியவற்றிலிருந்து தத்தம் நாடுகளைக் காத்தலாகும். புறப்பகையிலிருந்து காத்தலுக்குப் படைகளும், அகப்பகைகளிலிருந்து காத்தலுக்குக் காவற் படைகளும், அரசுகளால் அமைக்கப்பட்டிருந்தன.

அரசு என்ற சொல் திருக்குறள் மூன்று இடங்களில் பயின்று வந்துள்ளது.

**அறன்-இழுக்காறு அல்லவை நீக்கி மறன்-இழுக்கா**
**மானம் உடையது அரசு**

**இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு**

**கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு**

இங்கெல்லாம் அரசு என்னும் சொல்லுக்கு அரசாட்சி என்றே பொருள் கொள்ளப்படுகிறது. ஆனால் பண்டை உரையாசிரியர்கள் அனைவரும் அரசன் என்றே பொருள் வகுத்துள்ளனர். குடியும் நாடும் ஆட்சியும் இறைமையும் இணைந்ததே முழுமைபெற்ற அரசு என இன்றைய அறிஞர்கள் எடுத்துக் காட்டுகின்றனர். இந்நான்கு கூறுகளும் வள்ளுவர் குறளில் தெளிவுற இடம்பெற்றுள்ளன. ஆதலால் வள்ளுவர் கண்ட அரசியல் முழுமை பெற்ற அரசியலாகும் என்பதில் ஐயமில்லை.

# திருக்குறள் காட்டும் தனிமனிதனின் சமூக உரிமைகள்

முனைவர் கா. காந்தி

சமூக உரிமை என்பது தனிமனிதனின் சுயமதிப்பு தொடர்பான உரிமையாகும். சமூகத்தில் பொருளின் அடிப்படையில் உயர்ந்தவர், தாழ்ந்தவர், உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி, என்ற ஏற்றத் தாழ்வின்றி எல்லா மனிதர்களும் அவர்களின் பண்புகள் மற்றும் சுயமதிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் மதிக்கப்பட்டு மரியாதை வழங்கப்படுவதை உறுதி செய்வதே இதன் நோக்கமாகும்.

இச்சமூக உரிமையில் பல்வேறுப்பட்ட இயற்கை மற்றும் அடிப்படை உரிமைகளின் கூறுகள் அதிகளவில் இடம்பெற்றுள்ளன. அவை,

* சமத்துவ உரிமை
* சுதந்திர உரிமை
* சுதந்திரமாக சிந்திக்கவும், கருத்துகளைச் சொல்லவும் உரிமை
* கல்வி உரிமை
* தனித்துவ உரிமை
* திருமண மற்றும் விவாகரத்து உரிமை
* அடிமைத்தனம் மற்றும் வதை செய்வதிலிருந்து விடுபட உரிமை
* மகளிர் மற்றும் குழந்தைகளுக்கான உரிமை
* பண்பாட்டு உரிமை
* குடிபெயரும் உரிமை
* அமைதியான குழுமத்தில் / சபையில் இருந்திட உரிமை

மேற்கூறிய உரிமைகள் பொதுப்படையாகக் கூறப்பட்டவையாகும். வள்ளுவர் சமூக உரிமைகளாகக் கூறுவதை,

**கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு**
**என்ஆற்றும் கொல்லோ உலகு**

என்கிறார். மழைத்துளி இன்றி உயிர் வாழ முடியாது. அந்த மழை கொடுக்கும் மாரிக்கும் உயிர்கள் பிரதியுபகாரம் செய்ய முடியாது. மாரியின் இயல்பு மழை பெய்தல் மாரி உயிர்கள் உதவி செய்யும் என்பதை எதிர்பார்ப்பதில்லை. அதுபோலவே நல்லோர் தங்களின் அருள் உள்ளத்தால், கடமையாக உணர்ந்து இயல்பாகவே நல்லதைச் செய்கிறார்கள். பிறர் தங்கட்குத் திரும்பி என்ன நன்மை செய்வார் என்று எதிர்பார்ப்பதுமில்லை. எனவே எந்தவொரு பிரதிபலனும் எதிர்பார்க்காமல் உணர்ந்து செய்வது அறமாகும். இவைபோல் சமூகத்திலுள்ள உரிமைகளைத் திருக்குறள் எடுத்துரைக்கிறது.

தனிமனித ஒழுக்கமும், எதிர்பார்ப்பும் ஒரு நல்ல சமூகக் கூட்டமைப்பிற்கு இன்றியமையாதது. மனிதன் பிறக்கும்போது தன்னலத்தோடும் தன் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதில் ஈடுபாடு உள்ளவனாகவும் இருக்கிறான் என்றும், அவர் படிப்படியாக குறிக்கோள்கள், விழுமியங்கள், விருப்பு வெறுப்புகள் ஆகியவற்றை உண்டாக்கிக் கொள்கிறான் ஒரு மனிதன் விலங்கு நிலையிலிருந்து மனித நிலைக்கு அவன் முன்னேறுகின்றான். குழந்தை நிலையிலிருந்து சமூக கல்வி பெறுவதன் வாயிலாக ஒரு மனித ஆளுமையை எய்துகிறது. அறிவு, ஒழுக்கம் முதலாகிய விழுமியங்களை அறிந்து கொண்ட நிலையிலேயே குழந்தை மனிதனாகி உயர்திணையாகக் கருதப்படும் நிலையைக் காண்கிறோம்.

பண்டைத் தமிழ்ச் சமூகத்தைக் குறிக்கும் இடங்களிலெல்லாம், அதன் விருந்தோம்பல், ஈகை, ஒப்புரவு, ஆகிய எதிர்ப்புகளை நோக்குவதைக் காணலாம். இவை அச்சமூகத்தை அடையாளங் காட்டுவனவாகும். எல்லாச் சமூகங்களுமே உயர்ந்த பண்பாடுகளையும், ஒழுக்க நெறிகளையும் கொண்டிருப்பதில்லை. ஏனெனில் ஒவ்வொரு சமூகமும் ஒழுக்கமும் பண்பாடும் உடையதாக இருக்க வேண்டுமென்பதில்லை என்று புலனாகிறது. சமூகவியல் என்பது ஒழுக்கச் சார்பற்றது. சமூகவியல் காணப்படுகின்ற ஒரு சில நிகழ்ச்சிகள் விரும்பத்தக்கனவா என்பதைப் புலப்படுத்தாது. களவுத் தொழிலாகப் பயமுறுத்திப் பணம் பறிப்பவர்களும் ஒன்றாக ஒரு அமைப்புக்குட்பட்டுச் செயல்படுவதன்மூலம் தங்களுக்குள்ளே சுமூகமான சமூக மதிப்பை உடையவர்களாக இருப்பார்களேயானால் அவர்கள் சமூக இயல்புடைய மனிதர்களே.

ஆனால் அவர்களைச் சமூக இயல்பினர்கள் என்று கூற முடியாது. சமூகத்தின் ஒட்டுமொத்த நன்மைக்கும் அவர்கள் பாடுபடும் திறம் அற்றவர்கள். எனவே சமூக வாழ்க்கையின் உண்மைகளான உரிமை, எதிர்பார்ப்பு ஆகியவற்றைப் பயன்படுத்தி, அன்பு, நம்பிக்கை ஆகிய நடைமுறைப்பகுதிகள் ஒன்றாகச் செயல்படச் செய்தது. ஒழுக்கப் பண்புகளே என்று சமூகவியலறிஞர் குறிப்பிடுகின்றார்.

சங்க கால மக்கள் தங்களைச் சமூக இயல்புடையவர்களாக ஆக்கிக் கொண்டிருந்தனர் என்பதை இலக்கியங்களிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. இல்லறத்தோடு கூடி வாழ்பவன் என்று சொல்லப்படுபவன் இயல்பாகவே தன்னைச் சார்ந்து இருக்கும் பெற்றோர், மனைவி, மக்கள் ஆகிய மூன்று திறத்தார்க்கும் நல்லொழுக்க நெறியில் நின்று சிறந்த துணையாக இருப்பவனாவான் என்றும் இளைஞர், துறவி, தன்னைப் போன்ற இல்வாழ்வான், ஆதரவில்லாதவர். ஏழை, இறந்தவர் என்ற அறுவகையில் உலகிலுள்ள அனைவரும் அடங்குவர். இவ்வறுவகையினருக்கும் உதவி செய்து அன்பை வளர்த்துக் கொள்ளவே, இல்லானோடு கூடி மனையறம் தனிமனிதன் தொடங்க வேண்டும் என்ற உண்மை இந்த இரண்டு குறளிலும் சமூக எதிர்பார்ப்பை வள்ளுவர் உணர்த்துகின்றார். எதிர்பாக்காமல் உணர்ந்து செய்வது அறம் என்பதாகும். இவைபோல சமூகத்திலுள்ள, தனிமனிதனின் பொருளாதாரம், அரசியல், சட்ட உரிமைகளையும் தனது கடமைகள், குறிக்கோள்களும் திருக்குறள்மூலம் எடுத்துக்காட்டுவதே இவ்வாய்வுக் கட்டுரை உயர்ந்த குறிக்கோள்களாகத் தெளிவுபடுத்துகிறது.

# களவியலின் வழி வள்ளுவர் உணர்த்தும் அறநெறிக் கோட்பாடுகள்

**முனைவர் அ. தேவகி**

**முன்னுரை**

பண்டையோர்கள் ஐந்திணைக்குரிய ஒழுக்கத்தை தனிப்பிரிவாக அமைத்திருந்த போதிலும் கூட அவையனைத்தும் களவு வாழ்க்கை கற்பு வாழ்க்கைக்கு உரிய நெறிகளாகவே அறியப்படுகின்றன. களவு வாழ்க்கைக்கு அடிப்படையாக காதல்வாழ்க்கை விளங்குவதையும் எடுத்துக் காட்டியுள்ளனர். அகப்பொருள் இலக்கணத்தை வகுத்த தொல்காப்பியரும் இதையேதான் வலியுறுத்தியுள்ளார். அவ்வகையில் வள்ளுவரும் திருக்குறளை இலக்கியமாக அமைத்த போதிலும் காமத்துப்பாலைப் பற்றிக் கூறுமிடத்து அதை இலக்கணமாகவும் அணுகியிருப்பதைக் காணமுடிகிறது. இதிலிருந்து காமத்துப்பால் இலக்கண வரம்புகளை உள்ளடக்கியுள்ளது தெரியவருகிறது. இங்ஙனம் வள்ளுவரால் களவியலுக்குக் கூறப்பட்ட இலக்கண வரம்புகள் அறநெறிக் கோட்பாடுகளுக்கு உரியதாகும் நிலையில் இக்கட்டுரை உயிர்ப்புப் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

வள்ளுவர், களவியலின் வழி உணர்த்தும் அறநெறிக் கோட்பாடுகள் இளமைக்கு உரியதாகி, இனிமை நிறைந்ததாகி, கற்றலுக்கு இடமளிக்கிறது. களவியல் இயற்கையின் எழுச்சியாகி மரபின் சிறப்பினை உரைக்கிறது. மேலும் களவியல் இயற்கை ஒழுகலாற்றின் வடிவமாகவும், உளவியலின் நுணுக்கமாகவும மானிட வாழ்வின் மீது வள்ளுவர் கொண்டிருக்கும் பற்றாகவும் வடிவம் பெற்றுள்ளது. இங்ஙனம் களவியல் இளமை நகர்விற்கு உரியதாயினும் கூட வரையறைகளுக்கு உட்பட்ட நிலையில் அது அறநெறிக் கோட்பாடுகளுக்கும் உரியதாகிறது. இதை தெளிவுபடுத்துவதையே இக்கட்டுரை தன்னுடைய நோக்கமாகக் கொண்டுள்ளது.

இதன் பொருட்டு காமத்துப்பாலில், களவியல் பகுதியில் "தலையணங்குறுத்தல்" அதிகாரத்திலிருந்து முதல் ஐந்து குறட்பாக்களை எடுத்துக் கொண்டு, அதைப் பகுப்பாய்வு செய்து அதன்வழி பெறப்பட்ட கருத்துகளும், அறநெறிகளும் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. திருக்குறளுக்கான பல்வேறுபட்ட உரைகள் முதன்மை ஆதாரங்களாய் எடுத்துக் கொள்ளப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**1. காமத்துப்பால் - களவியல் - குறள் எண் 1081**

**அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு**

**குறள் விளக்கம்**

இவள் பெண்தானோ? என்று வியந்து பேதுற்று நிற்கும் பித்தநிலைதான் காதலின் முதல் தோற்றம், "தெய்வமகளோ?" என காதலியை உயர்த்தும் பக்தனாகவும், "ஆய்மயிலோ?" என இரசிக்கும் கலைஞனாகவும். "கனங்குழையைக்'' குறித்து அவளது பேரழகில் மயங்கும் பித்தனாகவும் தலைவன். தலைவியின்பால் ஈடுபாடு கொள்ள வேண்டும். இதுவே உண்மைக் காதலாக உறைக்கப் படுகிறது. காதல் என்பது முதல் காட்சியிலேயே தலைவன் முற்றிலும் தலைவிக்கு முற்றிலுமாக அடிமையாகிவிடும் நிலையில்தான் பிறக்க வேண்டும்.

ஒரு ஆண்மகன், ஒரு பெண்மகளைப் பார்த்து ஐயுற்று நிற்பது போல், பெண்மகளுக்கும் ஒரு ஆண்மகனைப் பார்த்து இங்ஙனம் தோன்றலாமா? எனில் அது முறையான காதலாக அமையாது. பெண்மை குணங்களான அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு நிரம்பப் பெற்ற பெண் முந்த எண்ணுதல் என்பது இயல்பன்று.

தலைவிக்கு இவர் யாரோ? என்ற அச்சம் காரணமாகவே இது நிகழலாமே அல்லாது ஆவல் காரணமாக நிகழ்தல் இல்லை. ஆணுக்கு ஆவல். பெண்ணுக்கு-அச்சம் இதுவே முறையான காதலின் அடையாளமாகக் குறள் உரைக்கிறது.

**குறள் உணர்த்தும் அறநெறிகள்**

* தலைவனிடமே காதலின் ஈடுபாடு முதலில் தோன்ற வேண்டும்.
* தலைவன் முற்றிலும் தலைவிக்கு அடிமையாகும் நிலையிலேயே காதல் தோன்ற வேண்டும்.

* தலைவி அச்சம், மடம், நாணம், பயிர்ப்புக்கு உரிய மரப் பண்புகளைப் பெற்றிருத்தல் வேண்டும்.
* ஆணுக்கு-ஆவல், பெண்ணுக்கு-அச்சம் இதுவே முறையான காதலின் அடையாளமாகக் காட்டப்படுகிறது.

**2. களவியல் குறள் எண் 1082**

**நோக்கினால் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு**
**தானைக் கொண்டன்ன துடைத்து**

**குறள் விளக்கம்**

தன்னை வைத்தகண் வாங்காமல் பார்க்கும் பித்தனை, தலைவனை தலைவி சினத்துடன் பார்க்கிறாள்.

அந்தப் பார்வையை சந்திக்கும் முன் அவன் கண்பார்வை அப்படியே தளர்ந்து, வெலவெலத்துப் போகிறான். தனி பேரழகால் தலைவி தன்னைத் தாக்குவதோடு அல்லாமல், கண்ணாகிய வேல் படையை துணைக் கொண்டு என்னை மேலும் தாக்குகிறானே என்று தலைவன் கலங்குகிறான்.

இப்படிப்பட்ட காட்சியில் மயங்கிய அவன், அவன் சுண்ணம்பு வேறு தைக்கவும் நொந்து புண்ணாகி நொடிக்கு நொடி அவன் தன் சக்திகளை இழந்து தோற்றுப் போகிறான். பெண்மை முடிவாக ஆண்மையை வெல்கிறது. தானே தாக்கி வருத்தும் சக்தியுடைய பெண்ணுக்கு படை எதற்கு? என்று புண்பட்ட, நெஞ்சம் புலப்படுகிறது. இதுவே காதலின் நெறியாக உரைக்கப்படுகிறது. ஆண்மகன் வெறித்தனம் கொள்வது காமம். ஆண்மகன் பெண்ணைப் பார்த்த மாத்திரத்தில் தளர்ச்சியடைய வேண்டும் என்பதே காதலின் நெறியாக அறியப்படுகிறது.

**குறள் உணர்த்தும் அற நெறிகள்**

* காதலில் முதலில் தோற்பவனாக ஆண்மகன் சித்திரிக்கப் படுகிறான்.
* பெண்மையே, தன்தன்மையினால் முதலில் ஆண்மகனை வெல்ல வேண்டும்.
* காதலில் காமத்திற்கு இடமில்லை.
* முதலில் தளர்ச்சியுற்று, பின் வெல்வதே ஆண்மையின் அடையாளமாக அறியப்படுகிறது.

**3. களவியல் - குறள் எண் 1083**

**பண்டறியேன் கூற்றென் டதனை இனி அறிந்தேன்**
**பெண்டகையால் பேரமர்க் கட்டு**

**குறள் விளக்கம்**

உடலில், உயிர் நிலை பெறாத நிலை ஏற்படின் அது கூற்றின் செயலேயாகும். தலைவியின் அழகு, கவர்ச்சி, கண் பார்வையும் தலைவனின் உடல், உயிர் வேறாகும் அளவிற்கு தளரச் செய்துவிட்டன. இனி அவள் மனமிரங்கி அருளாவிட்டால் தன் உயிரே போய்விடும் என்ற கவலை உணர்ச்சி அவனுக்கு மேலோங்குகிறது.

கூற்றினைப் பற்றித் தலைவன் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் இதுவரை நேரில் கண்டதில்லை, இப்பொழுது நேரில் கண்டு விட்டான். அது பெண் தகைமையைப் பெற்று, பெரியனவாக அமர்த்த கண்களை உடையது என்கிறான்.

தலைவியின் பால், தலைவனின் உள்ளம் காமுற்று வெதும்ப ஆண்மகன், பெண்மகளைக் கூற்றோடு ஒப்பிடும் நிலைக்கு ஆளாகிறான்.

**குறள் உணர்த்தும் அறநெறிகள்**

* பெண்மை நலன்கள் சிறப்பாகப் பேணுவதன் மூலமே ஆண்மகன் கூற்றினால் உண்டாகும் துன்பத்தை அனுபவிக்க நேரிடும்
* ஒரு தலையாகப் பெறும் காதல் உணர்வு உயிரையும், உடலையும் பிரிக்குமளவிற்கு துன்பத்தைத் தரவல்லது.
* ஓர் ஆண்மகன் காமுறும் நிலையில், ஒரு பெண் மகளின் அழகியத் தோற்றம் கூட அவனைத் துன்பப்படுத்துவதாக அமைகிறது.
* பேராற்றல் உடையவனும், பெண்மையின்முன் தோற்க வேண்டும். அதுவே காதலின் வளர்ச்சியாகும்.

**4. களவியல் - குறள் எண் 1084**

**கண்டார் உயிருண்ணும் தோற்றத்தான் பெண்தகைப்**
**பேதைக்கு அமர்ததன கண்**

**குறள் விளக்கம்**

பெண் மெல்லியலும், பேதைமையும் உடையவளாதலின் அவள் ஒருவேளை தனக்கு அருள் செய்யக் கூடும் என்ற எண்ணம் தலைவனுக்கு ஏற்படுகிறது. உடலினும் முதன்மையான உயிர்தான் காதல் உணர்வால் பெரிதும் பாதிக்கப்படுகிறது என்ற உண்மை இங்கு வெளிப்படுவதோடு தமிழ்க் காதலாகவும் இது உரைப்படுகிறது.

எனவே காதல் வாழ்வில் ஈடுபடுவோர் உயிர் கலந்து ஒன்றுபட்ட வாழ்வினை வாழ வேண்டுமே தவிர, வெறும் உடலின் வெறியின் காரணமாகப் பெண்ணைத் தேடுதல், நினைத்தல் கூடாது.

உளவியல் கூறும் மனோசக்தியினை கண்நோக்குதல் போல் பிறர்பால் பதிய வைத்து செயலிழக்கச் செய்யும் ஆற்றல் பெற்றவராகத் தலைவி விளங்குகிறாள். தன்னை முற்றிலும் இழந்தது போன்றதொரு உணர்வு தன் உயிர் தன் உடலின் கண் நின்றும், போகிறதா? என்று ஒரு வித மயக்கம், இதுவே தலைவனின் நிலையாக உணரப்படுகிறது.

**குறள் உணர்த்தும் அறநெறிகள்**

* பெண்மகளின் மென்மையும், பேதமையுமே அவளைத் தலைவன்மேல் அன்பு கொள்ளச் செய்கிறது.
* உயிரினும் மேலானதாகத் தமிழ்க் காதல் கூறப்படுகிறது.
* உயரியக் காதல் உடலினை அடிப்படையாகக் கொண்டு எழுவதில்லை.
* ஆண்மகனின் ஆற்றல் முழுமையும் காதலுக்குமுன் காணாமல் போய்விடுவதைக் காணமுடிகிறது. உயிரற்ற உடலுக்கு உரியவனாக நிலைகுலைந்தவனாகக் காட்டப்படுகிறான்.

**5. களவியல் - குறள் எண் 1085**

**கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கம் இம்மூன்றும் உடைத்து**

**குறள் விளக்கம்**

முதலில் தலைவனைச் சினத்துடன் நோக்கும் தலைவியிடம் பின் அவனது அழகு நலனும், பருவமும் கண்டு அவள் உள்ளத்தினுள் காதல் உணர்ச்சி மெல்ல மெல்ல அரும்பத் தொடங்குகிறது.

அதனையடுத்து தலைவன் தன்னைக் கைவிட்டுவிட்டால் அல்லது பெற்றோருக்குத் தெரிந்து விட்டால் என்ற நினைவு எழ அச்சம் கூடவே பிறக்க கண்கள் மருட்சியுடன் தோன்றுகின்றன.

மடவரல் என்றது, "பேதைமை என்பது மாதர்க்கு அணிகலன்" அதனை வியந்து கூறியதாகும். கூற்றம் -சினப்பார்வை, கண்- இயற்கை பார்வை, பிணை, அவளின் தோற்ற நிலைகாட்டும் வெருவிய தளர்ச்சிப் பார்வை.

**குறள் உணர்த்தும் அறநெறிகள்**

* பெண்மகள் முதலில் சினப் பார்வையையே வெளிப்படுத்த வேண்டும்.
* ஆண்மகனைப்போல அவள் பார்த்தவுடன் காதலை வெளிப்படுத்துதல் கூடாது.
* ஆண்மகன்மீது கனிவு தோன்றும் நிலையில் அவள் பேதைமைக்கு உரியவளாதல் கூடும்
* பெண்மகளிடம் காதல் உணர்வுகள் படிப்படியாகவே தோன்றுதல் வேண்டும்.

**முடிவுரை**

மேற்கண்ட ஆய்வின்வழி, களவியல் உணர்த்தும் கட்டுப்பாட்டிற்குரிய காதல் நெறிகளை செவ்வனே அறியமுடிகிறது. காதலின் தன்மை, தலைவன், தலைவியின் மனநிலைகள், அவர்களின் உடல் தோற்றங்கள், மாற்றங்கள் ஆகியவை ஆரோக்கியமான முறையில் அணுகப்பட்டு உண்மையான காதல் அடையாளம் காட்டப்பட்டு வழிப்படுத்தப்படுகிறது. இன்றைய இளைய சமுதாயத்தினர் உண்மைக் காதலுக்கும், உடல் சார்ந்த காதலுக்கும் வேறுபாடு அறியாத நிலையில் தங்களைப் பாழ்படுத்திக் கொள்வதை நெறிப்படுத்த இது போன்ற ஆய்வுகள் துணைநிற்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை.

ஆகவே எதிர்கால ஆய்வாளர்கள் களவியலை நுணுகி ஆராய்ந்து அதன் நன்மை, தீமைகளை வெளிப்படுத்தி வள்ளுவப் பெருமான் நம்முடன் வாழ்ந்து கொண்டிருப்பதை உறுதிப்படுத்த வேண்டும்.

**பார்வை நூல்கள்**

1. மு.சண்முகப்பிள்ளை, “திருக்குறள் ஆராய்ச்சி 6, அகப்பொருள் மரபும், திருக்குறளும்,” சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மு.ப. 1980.
2. புலியூர் கேசிகன் “குறள் தந்த காதல் இன்பம்”, அருணா பப்ளிகேசன்ஸ், சென்னை 17, மு.பதிப்பு 1959.

# திருக்குறள் போற்றும் மானுடம்

எஸ்.எஸ். சிவவடிவு

**முன்னுரை**

மக்களிடையே அறியாமையும் வறுமையும் மண்டும்போது சான்றோர் பெருமக்கள் தோன்றி வாழ்வின் செம்மைப்பக்கத்தை மக்களுக்கு உணர்த்தப் பாடுவதே இலக்கியத்தின் நெறியாகும். இதன் அடிப்படையில் எழுந்ததே திருக்குறள் எனலாம். மனித வாழ்வின் நுண்மான் நுழைபுலன்களை நுவலும், நூல், ஒழுக்க நெறியை வலியுறுத்தும் நூல்.

தமிழ்நாட்டுச் சுவடிச் செல்வங்களுள் தலைசிறந்தது திருக்குறள். தாமே அதற்கு உரியவர் என்னும் தமிழரே அல்லாமல், அயலவரும் உரிமை பாராட்டிப் பயன் எய்துதற்கு மிக்க துணையாவதே இந்நூல். தான் தோன்றிய நாள் முதல் தலைமுறை தலைமுறையாக, எத்துணையோ நாட்டவரும், மரபினரும், மொழியினரும், சமயத்தினரும் நுகர்ந்து பய்னபெறுமாறு செய்தும், தேய்வும் திரிவும் இன்றி, அசல் அழியாச் செல்வமாகத் திகழ்வது திருக்குறள் ஒன்றேயாகும். உலகத்தை உய்வித்து மானுடம் தழைக்கத் தோன்றிய அரும்பெரும் நூல் திருக்குறள் எனில் மிகையாகாது.

**குறள் பெருமை**

திருவள்ளுவர் உலகப் பெருஞ்சான்றோர் வரிசையில் தலைமை பூண்டு நிற்பவர் என்பது உயர்ந்தோர் கூற்று, 'பாம்பறியும் பாம்பின் கால்' என்பது பழமொழி.

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**

என்று பாரதியார் கூறியிருப்பதில் உலகினுக்கே ஒரு புலவராய்த் திகழத் திருவள்ளுவரைத் தந்தமையாலேயன்றோ தமிழ்நாடு மிக்க புகழைப் பெறுவதாயிற்று என்ற உண்மை உணர்த்துப்பட்டுள்ளது.

அண்மைக் காலத்துப் பாரதியாரேயன்றி, ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பலரும்

திருக்குறளையும் திருவள்ளுவரையும் ஒரு முகமாகப் பண்டைக்காலத்திலேயே பாராட்டிப் புகழ்ந்துள்ளனர் என்பது போற்றியுணர்ந்து கொள்ளும் தன்மைத்தேயாகும்.

ஐயந்திரிபற எல்லா நூல்களையம் ஓதியுணர்ந்த, பண்டைத் தமிழ்சான்றோருள் சிறப்பும் தலைமையும் சேர்ந்திலங்கிய மதுரைத் தமிழ் நாகனார் என்பார்,

**எல்லாப் பொருளும் இதன்பால் உள இதன்பால்**
**இல்லாத எப்பொருளும் இல்லை**

எனத் திருக்குறளைச் சுட்டிச் சிறப்புரை பகர்ந்திருக்கின்றார். இவ்வாறு இவர் கூறியிருப்பதன் கருத்துநயம் உணர்ந்து இன்புறற்பாலது, வாலறிவின்

**வள்ளவரும் தம்குறள் வெண் பாவடியால் வையத்தார்**
**உள்ளுவஎல்லாம் அளந்தார் ஓர்ந்து**

என்று பரணரும்,

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தினோடு பகர்ந்த தற்பின் - போயொருத்தா
வாய்க் கேட்க நூல் உளவே மன்னு தமிழ்ப்புலவ
ராய்க் கேட்க வீற்றிருக்கலாம்

என்று நத்தத்தனாரும்,

சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும்
போற்றி உரைத்த பொருளெல்லாம்-தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பா வலர் ஒப்பார்
எப்பா வலரினும் இல்

என்று செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனாரும் திருவள்ளுவரையும் திருக்குறளையும் பற்றிச் சிறப்பித்துக் கூறியிருக்கும் உரைகள், மதுரைத் தமிழ்நாகனார் கூற்றுக்கு அரண் செய்வன ஆகும்.

"தண்டமிழ் ஆசான் என்னும் தனிப்பெருஞ் சிறப்புடைய மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்பார் காவிரிப்பூம்பட்டினத்து சதுக்கத்துப் பூதம் எனப்பெறும் தெய்வத்தின் வாய்மொழியாக.

**தெய்வம் தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை**

என்று கூறுமிடத்துத் திருக்குறள் நூலின் நடுநாடியாகத் திகழும் திருக்குறளை அப்படியே எடுத்தாண்டு, அதனை அருளிச் செய்த

திருவள்ளுவர் பெருமானைப் பொய்யில் புலவன் எனப் புகன்றிருப்பது அவர்தம் நூலுள் ஒரு குறளேனும் ஐயந்திரிபான பொய்க் கருத்துடையதன்று எல்லாக் குறள்களும் ஐயத்தின் நீங்கிய தோற்றம் திரிபின் நீங்கிய உண்மையும் பொருந்தியனவே என்பதை வெள்ளிடை மலையாக விளக்குவதாகும்.

**கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்**
**குறுகத் தறித்த குறள்**

என இடைக்காடனாரும், இன்னும் சிறக்க,

**அணுவைத் துளைத் தேழ் கடலைப் புகட்டிக்**
**குறுகத் தறித்த குறள்**

என ஔவையாரும் வியந்துரைத்திருப்பான். இத்திருக்குறளின் முழுப்பயனும் பெறவிரும்புவார் அதனை எவ்வளவு ஆழ்ந்து பயிலுதல் வேண்டும் என்பதை வலியுறுத்துவனவாகும்.

**உறுதி உணர்த்தியமை**

தமிழில் தோன்றிய திருக்குறள் மேல்நாடர் அயல்நாட்டு மொழிகளிலன்றி நம் அண்டை மொழிகளிலும் பெயர்த்துப் பாராட்டப்பெற்றிருக்கும் இத்தகைய சிறப்பு வேறு எம்மொழி யிலும், சமயச்சார்பற்ற எந்நூலுக்கும் இல்லவேயில்லை என்பது பன்மொழியும் பயின்றார் தம் துணிபுரையாகும்.

இவ்வாறாகவும் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என வகுத்து, மானுடத்திற்குரிய அறம், இன்பம் என்ற மூன்று உறுதிப் பொருள்களை மட்டும் அன்றே திருக்குறள் உணர்த்தியுள்ளது. "அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே" என அறைந்திருக்கின்றனர் சான்றோர். அறம் முதலிய நான்கு உறுதிப் பொருள்களையும் அறிவிப்பதன்றோ நூலென அழைப்பதற்கு உரியது! நான்கும் கூறாது, மூன்றே கூறும் திருக்குறள் நூலாமாறு யாங்ஙனம்?

அன்பின் நூல்களுள் சிறந்ததும் தலையாயதும் திருக்குறள் என்று கூறுவது எவ்வாறு அறிவுடைமையாகும் என்று ஒரு சிலர் கூற, அவர் கூற்றைக் கேட்கும் பலர் மதி மருண்டு, தமக்கிருக்கும் மதிப்பையும் பறிகொடுத்துப் பயனடையாது ஏமாற்றம் அடைகின்றனர். பால்கள் மூன்றாகக் காணப்படுவது மட்டுமே கொண்டு, நான்கு பொருள்களும் திருக்குறளில் இல்லையென்பர்க்கு அவை நான்கும் இதன்பால் உள என்று காட்டி அவரைத் தெளிவிப்பது நம் கடமையாகும்.

அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் எனக் கூறியிருப்பது போன்று, வீட்டுப்பால் எனக் கூறியிருக்க வேண்டும்.

அவ்வாறு திருக்குறள் கூறவில்லை என்பது உண்மையே! அறம் முதலிய நான்கினையும் கூறுவதே நூல் எனப்படும் என்பதும் உண்மையே! ஆனால், பால்கள் மூன்றாக வகுத்துக் கூறும் திருக்குறள் நான்காவதான் வீட்டைப் பற்றி ஒன்றுமே கூறவில்லை என்பது அதனை நுனிப்புல் மேய்தலாகப் படித்தவர் கூறும் கூற்றாவதன்றி, ஆழ்ந்து பயின்று சுவைத்தார் கூறும் கூற்றாவதில்லை. ஆழ்ந்து பயிலாதவர்க்குத் திருக்குறள் 'நாற்பொருள் பயக்கும் நடை நெறி' யுடையதாக இல்லை என்ற திரிபுணர்ச்சி ஏற்படுவது இயல்பேயாகும் என்பதைப் பண்டைச் சான்றோர்களே எண்ணி உணர்ந்திருக்கின்றனர்.

திருக்குறளைப் பல்கால் ஓதி வீடுபற்றி என்னவெல்லாம் உணர்த்த வேண்டுமே, அன்னவெல்லாம் அஃது உணர்த்தியிருக்கின்றது என்று தெளிந்து, தாம் தெளிந்த உண்மையை மற்றவரும் அதைப் பயிலும் முன்னரே அறிந்து திருக்குறளில் ஈடுபாடு கொண்டு, அதைப்பயின்று பயனடைய வேண்டும் என்ற பெருநோக்கத்தால், திருவள்ளுவர் முப்பாலில் நூற்பால் மொழிந்திருக்கின்றனர். திருக்குறள் அறம் முதலிய மூன்றனோடு நாலாவதாகச் சிறந்த சிறப்பென்னும் வீடும் மொழிந்திருக்கின்றது.

**தொகுப்புரை**

திருக்குறளின் அரும் பெருஞ்சிறப்பு உலகத்தை உய்விக்க வந்தமையேயாகும். கருத்தாழம் மிக்கதும் நுண்மையும், சுருக்கமும், ஒளியுடைமையும், எண்மையும் கொண்ட அறிவின் வெளிப்பாடே திருக்குறள்.

அமைப்பு முறையில் திருக்குறளுக்குப் பல் பெருமைகள் உண்டு. திருக்குறள் காட்டும் சமூகத்தில், மக்கள் வாழ்க்கை முறையில் நிகழும் குற்றங்கள் எவை என்பதைக் காட்டி, அவை வராமல் வாழ வேண்டுமானால், தனி மனிதனின் கல்லாமையே அனைத்துக்கும் அடிப்படை என்பதை உலகுக்கு உணர்த்திய குறளின் பெருமைகளை இக்கட்டுரை பறை சாற்றுகின்றது.

திருக்குறள் மானுடம் தழைக்க மக்களின் வாழ்க்கை நெறிமுறைகள் எப்படி இருக்க வேண்டும் என்பதை தெள்ளிதின் உரைக்கிறது. திருவள்ளுவர் மிக உயர்ந்த மெய்யுணர்வாளர், உலக மெய்யுணர்வாளர்களுள் தலைசிறந்தவர். உலக மெய்யியல் சிந்தனைகளை எல்லாம் மானுடத்திற்கு கருத்தினை நேரடியாக உணர்த்தாமல், உவமைகள் மூலம் உவமேயங்களை உணர்த்தி, மானுட உணர்வாம் மனித நேயத்தை நிலைநாட்டுகிறார் என்பதை ஈண்டு அறிய முடிகிறது.

# திருவள்ளுவர் காட்டும் பொருள் செயல்வகை

**முனைவர் கு. அ. மகேஸ்வரி**

'**பொ**ருளிலார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு' என்றும், 'நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது' என்றும் கூறிய வள்ளுவப் பெருந்தகை ஈதல் இசைபட வாழ்தல் வேண்டி பொருள் செயல் வகையை அறந்தாற்றின் நின்று உரைத்தும் உள்ளார். அவ்வாறுரைத்த கூற்றுகளைக் குறுந்தலைப்புகளில் வகைப்படுத்திப் புலப்பாடுகள் கொள்வோம்.

**பொருள் பெற்றார் மாட்சி**

**இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை**
**எல்லாரும் செய்வர் சிறப்பு**

கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங்கு எதிர்கொள்வர்-இல்லானை
இல்லாளும் வேண்டாள் மற்று ஈன்றெடுத்த
தாய்வேண்டாள்
செல்லாது அவன்வாயிற் சொல்

என்னும் முதுமக்கள் முதுமொழியாய்க் காண்கிறோம் இருந்தன, கிடந்தன பற்றி ஆங்காங்கே வாழ்ந்து தீர்ந்த மனித நாள்கள் பொருள்பல பதுக்கியவாறே பூமியை ஆளுகை செய்யத் தொடங்கிய ஞான்று, பொருள் செயல் பற்றிய அறமும் புலவோர் மொழிதலின் ஊடே முகிழ்த்தல் இயல்பே. ஓரொரு நூற்றியாண்டுகளிலும் நுகர்பொருள் நிலை பல்கிப் பெருகலும் மாந்தர் அதற்கெனத் தாளாற்றித் தொகை ஈட்டலும் வாழ்வியலானது. அறிவினான் ஆகிய சான்றோரே ஆயினும் பொருளிலர் ஆயின் பெருமைகள் கூடா. புல்லறிவாளர் பொருள்வளம் உடையராயின் அன்னோர் பெருமைக்குரியராய் வாழவும் இயலும். ஆதலினாலன்றோ இஃதுணர்ந்த வள்ளுவப் பேராளன்.

**பொருளல்ல வரைப் பொருளாகச் செய்யும்**
**பொருள்ளல்ல தில்லை பொருள்**

என்றார். பொருளில்லாரைப் பொருட்படுத்துவார் என்றும் இல்லை என்பதே மெய்.

**படித்தவன் சொல்லெல்லாம் சபையேறுமா?-பணம்**
**படைத்தவன் சொல்லென்றால் சபைமீறுமா?**

என்னும் கவியரசு கண்ணதாசன் பாடல்பதங்களும், குணம் குப்பையிலே, பணம் பந்தியிலே' என்னும் ஊரார் பதங்களும் பொருள் படைத்தார் மாட்டே உலகியல் சாரச் சாரும் என உணர்த்தி நிற்பனவே, சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கென உரைத்த பெருந்தகை பொய்யாமை ஆற்றி வாழ பொருளும் துணையாம் என்பது கொண்டே பொருளைப் பொய்யா விளக்கம் என்றார் என்பதும் இங்கே கருதலாம்.

**பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்**
**எண்ணிய தேயத்துச் சென்று**

காணும் நிலைகளை இங்கே சாலப் பொருத்திக் காணலாம். கடமைக்கும் மேலாயக் கையூட்டைக் கரந்து கறத்தல், கடமை ஆற்றாது வெறுமனே ஒழுகியிருந்து ஊதியம் ஏற்றல், மதிப்புறு பொருளிடை குறைமதிப்புறு பொருள்களைக் கலப்படம் செய்து பிறர் உடல் ஊறு கொள்ளுமாறு விட்டு, தாம்பொருள் கொள்ளல், பிறர் பொருள் வலிந்து வெஃகல் என்றவாறு பொருளீட்டுவோரும் உள்ளனர். தன்னெஞ்சே தன்னைச் சுடுமாறும் அல்லது அஃதுமறியாப் புல்லறிவுடனும் வாழ்வோர் பல்லோர். இத்தக வாழ்வினால் ஆகுலம் தோன்றலாமே அன்றி ஆவது ஒன்றுமில்லை.

**அருளிசெவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்**
**பேய்கண் டன்ன துடைத்து**

என்னும் குறளால் வள்ளுவர் தீதாற்றி வந்த பொருளின் நிலை பகர்ந்தார் ஆயின் எவ்வாறு பொருளை அடையலாம்.

**அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்**
**புல்லார் புரள விடல்**

என்று பெருந்தயே கூறியாங்கு. அருளின் வழியிலும், அன்பின் நெறியிலும் பொருள் வரவு கொள்ளலே ஏற்புடைத்தாம்.

**தீயவை தீய பயத்தலால் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும்**

**ஈன்றாள் பசிகாண் பாளாயினும் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை**

போன்ற பாக்களாலும் தீவழி விலக்கி நன்னெறிக் கண் நின்று பொருளீட்டலை வள்ளுவர் மேற்கொண்டும் நமக்குரைத்தார்.

தீவழி விலக்கம் ஏனாம் என்பதற்கு ஏதுக்கள் நல்வழி தப்பி, மிக பொருள் ஈட்டின் எந்நிலைப் படுவர் மாந்தர்? இதற்கும் வள்ளுவம் விடைவரைந்து விளங்குகின்றது.

**அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்**
**பிற்பயக்கம் நற்பா லவை**

என்று தீதின்றி வந்த பொருள் வந்த பிற்பாடு வழங்கும் இன்பத்தையும், பிறரை அழவிட்டுப் பற்றிய பொருள்கள் பற்றியோரையும் அந்நிலைப்படுத்தியே அகலும் என்பதையும் அறிவுறுத்திய வள்ளுவர்,

**பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்**

**நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்**
**நோயின்மை வேண்டு பவர்**

என்னும் குறள்களைக் கொண்டு தீவினை ஆற்றுவோர் அவ்வினைக்குள் அகப்படுவர் என்பதை உறுதி செய்துள்ளார். நியூட்டனின் 'ஒவ்வொரு விசைக்கும் எதிர்விசை உண்டு' என்னும் விதியின் உண்மையை வள்ளுவம் கொண்டிருப்பதை உணர்தல் வேண்டும். இன்பம் விழைவார் யாராயினும் நல்வழியில் பொருளீட்டி அதனை அடைய முயலல் வேண்டும்

**விலக்கற் குரிய பொருள்களும் உள்**
**பொருள் செயல்வகை இத்திறத்த**

என்றாங்கு உரைக்கும் வள்ளுவப் பெருந்தகையார்,

**உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள்**

என்ற குறளில் விலக்கற்குரிய பொருள்களையும் உரைத்துள்ளார். தானாக நம்மிடம் எப்பொருள்கள் வந்துற்றாலும், சுங்கம் சார்ந்து அயலகப் பொருள்கள் வந்துற்றாலும், மாற்றாரின் பொருள்கள் போரகத்து வந்துற்றாலும் அவற்றை அரசுக்குரியனவாக்கி இல்வாழ்வான் அவற்றினின்றும் விலகியிருத்தலை வேண்டினார் வள்ளுவர். இக்கூற்று அன்றைய காலத்தால் மட்டுமின்றி இந்நாட்பொழுதிலும் ஏற்புடையதே எனலாம். அரசப் பொருள்களை விலக்கித் தன் தாளாற்றியே பொருளீர்ப்பு செய்ய வேண்டும் இல்வாழ்வான்.

**பொருளீட்டற் குரிய நல்லாறுகள்**

சிறுபொருள் கொண்டுள்ளார் யாரேயாயினும் அவற்றைப் பெரும் பொருள் ஆக்க முனைதல் தவறன்று அஃது உலகியலுமாம் ஆயின் பெரும்பொருள் தேடலை,

**குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று**
**உண்டாகச் செய்வான் வினை**

என்று வள்ளுவர் கூறியாங்கு மேற்கொள்ள வேண்டும். கடன் கொள்ளாமல் கைப்பொருள் கொண்டு தொழில் தொடங்குவோர் குன்றின் மேல் நின்று யானைப் போர் காண்பார் போல் துலக்கமும், காப்பும் ஒரு சேரக் கொண்டிருப்பார் என்பதையே பெருந்தகையார் இங்கே ஆண்டுள்ளார்.

பொருளீட்டுங்கால் ஒருவரை அவர்வழியே ஏக, இவ்வுலகு விடுமா? விடுவதில்லை என்பதே காலகால வரலாறுகள் எனில் இடையூறுகள் செய்வோரை என்ன செய்யலாம்? எதிர்ப்புக்கு எதிர்ப்பாற்றி காலமும் பாழாய், உள்ளமும் பாழாய், உடலும் பாழாய் முடித்தல் பொருட்டா மாந்தர் புறப்பாடு கொள்ள வேண்டும்? வேண்டியதன்று இவ்வாறு செறுநர் எவரோ அவரே வியக்குமாறு பொருளீட்டி வளம் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யின் மாற்றார் அடங்குவர். எனவேதான் எதிரிகளின் இடையூறுகளை எதிர்கொள்ள எஃகாயுதமாய் இதனை நமக்களித்தார் வள்ளுவப் பெருந்தகை,

**செய்க பொருளை; செறுநர் செறுக்கறுக்கும்**
**எஃகதனிற் கூறியது இல்**

கைப்பொருள் தன்மைக்கேற்ப முதலிட்டு தொழில் தொடங்குதலும், எதிர்ப்பாளர்க்கு எதிர்வினையாற்றியே காலம் முடிக்காமலும் பொருளீட்டல் செய்வோம். இவையே வள்ளுவ வழிமுறைகள்.

**வாழ்வைப் பொருள்படச் செய்க**

**யாதெனின் யாதெனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்**

என்னும் குறள்மொழியையும் மனத்தில் கொண்டு எளிய வாழ்வின் ஊடே,

**தெண்ணீர் அடுபுற்கை யாயினம் தாள்தந்த**
**துண்ணலின் ஊங்கினிய தில்**

என்னும் அறவழியில் பொருள் செய்து மிளிர்வோம்.

# வள்ளுவர் உணர்த்தும் நீதி நெறிகள்

ப. மோகன்தாசு

**முன்னுரை**

உலக மக்கள் தங்கள் வாழ்வில் பின்பற்ற வேண்டிய அறநெறிகளை வள்ளுவர் தனக்கே உரித்தான தனிப்பாணியில் திருக்குறளில் வடித்துள்ளார். அந்த அறநெறிகளை சட்ட வடிவமைப்பாளர்களும் நீதிபரிபாலனம் செய்பவர்களும் பல்வேறு வகையில் பின்பற்றி உள்ளார்கள். அக்கால மன்னன் நீதிபரிபாலனம் செய்வதை முறைசெய்தல் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். வள்ளுவர் காட்டும் நீதிநெறிகள் சட்டம் மற்றும் நீதித்துறைகளில் எவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**நடுவுநிலைமை**

திருக்குறள் அதிகாரம் 12 நடுவு நிலைமை பற்றிக் குறிப்பிடுகிறது. மக்களிடையே பாரபட்சம் காட்டாமல் நடுவுநிலைமை வகிக்க வேண்டியதின் அவசியம் இதில் வலியுறுத்தப்படுகிறது. குறள் எண். 118 "சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபால் கோடாமை சான்றோர்க்கு அணி" என்று உணர்த்துகிறது. இன்றைய உலகு போட்டிகள் நிறைந்த ஒன்று. அனைத்துத் துறைகளிலும் நடக்கும் போட்டிகளில் சிறந்த தகுதியாளரைத் தேர்ந்தெடுக்க நடுவரை நியமிக்கிறோம். அவர் நடுவுநிலைமை வைக்க வேண்டியவர் என்பதாலேயே நடுவர் எனப்படுகிறார். நீதிபதிகளையும் நடுவர் என்றுதான் குறிப்பிடுகிறோம். திருக்குறள் கூரிய உயர்ந்த அறத்தை அவர்களும் பின்பற்றக் கடமைப்பட்டுள்ளார்கள். வழக்கில் ஒரு தரப்பினர் பக்கம் சாய்ந்து தீர்மானம் அளிக்கக்கூடாது. அதைத்தான் சட்டத்துறையில் இயற்கையாக நீதிக் கோட்பாட்டில் நடுநிலை வகிக்க வேண்டும்: ஒரு சாராருக்கு சாதகமாக இருக்கக்கூடாது என்று மிகவும் வலியுறுத்தப்பட்டுள்ளது. பெரியார் திராவிடக் கழகம் தமிழக அரசுக்கு எதிராகத் தொகுத்த

வழக்கில் பெரியார் சுயமரியாதை இயக்கத்தைக் கொள்கையாக ஏற்றுக் கொண்ட அரசு பிராமணர் ஒருவரைக் கூடுதல் அரசு தலைமை வழக்குரைஞராக நியமித்தது செல்லாது என்று வாதிடப்பட்டது. அப்போது மேதகு சென்னை உயர்நீதிமன்றம் எந்த இனத்தைச் சேர்ந்தவராயினும் தகுதி பெற்றவராயின் நியமனம் செய்யலாம் என்று கூறி இறுதியில் திருக்குறளில் நடுவுநிலைமை அதிகாரத்தில் உள்ள மேற்கூறிய குறட்பாவை அடியொற்றி அரசின் செயலை ஏற்றுக் கொண்டு மனுதாரரின் வழக்கைத் தள்ளுபடி செய்தது.

**அடக்கம் உடைமை**

திருக்குறள் அதிகாரம் 13 அடக்கம் உடைமை பற்றிக் கூறுகிறது. ஒவ்வொரு குடிமகனும் அடக்கத்தை உறுதிப்பொருளாகக் கொண்டு போற்றிக் காக்க வேண்டும் என்பது வள்ளுவரின் வாக்கு. அடக்கமின்றித் தான்தோன்றித்தனமாக வன்சொல் கூறுவதன் வினை குறள் எண். 129இல் "தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே நாவினால் சுட்ட வடு" என்று செப்பியுள்ளார். தொழிற்சாலையின் மேலதிகாரி ஒருவரை கடுஞ்சொற்களால் திட்டியமைக்காக வேலை நீக்கம் செய்தது சரியானதா என்ற வினா எழுந்தது. சட்டக் கோட்பாட்டினைக் குறள் நெறியின் அடிப்படையில் ஆய்வு செய்த மேதகு சென்னை உயர்நீதிமன்ற நீதியரசர் ஜெ. கனகராஜ் மேலே குறிப்பிட்ட திருக்குறளைச் சுட்டிக்காட்டி தொழிலாளியை வேலை நீக்கம் செய்தது சரியான தண்டனையே என்று தீர்ப்பளித்தார்.

**அருள் உடைமை**

அருளாகிய செல்வமே செல்வங்களுள் சிறந்த செல்வம் என்று அதிகாரம் 25 அருள் உடைமையில் கூறும் வள்ளுவர் குறள் எண். 244இல் "மன்னுயிர் ஓம்பி அருள்வார்க்கு இல்லென்ப தன்உயிர் அஞ்சும் வினை" என்று அனைத்து உயிர்களையும் போற்றி வாழும் நீதி நெறியை விளக்குகின்றார். நமது சட்டங்களின் தலைமைச் சட்டமான அரசியல் அமைப்புச் சட்டத்தின் பகுதி 4-அ-வில் பிரிவு 51அ-வில் குடிமக்களின் அடிப்படைக் கடமைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. உயிரினங்கள் அனைத்துடனும் பரிவுடன் நடந்து கொள்ள வேண்டிய வள்ளுவர் உணர்த்தும் அருளுடைமை என்ற நீதிநெறியும் அதில் அடங்கும் என்பது செவிக்கு இனிய செய்தியாகும்.

**புலால் மறுத்தல்**

ஓர் உயிரைக் கொன்று உடம்பைப் புசித்தல் அறமல்லாதது என்பது வள்ளுவர் வகுத்த நீதிநெறி. புலால் மறுத்தல் அதிகாரம் 26-ல் குறள் எண்.260-ல் "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா உயிரும் தொழும்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஜெய்கோபால் கரோடியா பவுண்டேஷன் எதிர் சீனிவாசன் வழக்கில்*3 பக்தர்கள் ஆலயங்களுக்கு நன்கொடையாக வழக்கும் பசுக்களைப் பாதுகாப்பது தொடர்பான பிராணிகள் வதைத் தடை சட்டம், 1960-ன் கீழ் சில வழிகாட்டு நெறிமுறைகளை சென்னை உயர்நீதிமன்றம் உருவாக்கியது. அப்போது மேதகு நீதியரசர் கற்பகவிநாயகம் மேற்சொன்ன திருக்குறளை ஆதாரமாக் காட்டியுள்ளார்.

**கொல்லாமை**

எந்த உயிரையும் கொல்லாமை என்ற சிறந்த அறத்தை அதிகாரம் 33-ல் படம் பிடித்துக் காட்டுகிறார் வள்ளுவர். குறள் எண். 327 "தன்உயிர் நீப்பினும் செய்யற்க, தான்பிறிது இன்னுயிர் நீக்கும் வினை" என்று கூறுகிறது. வி. கிருஷ்ணன் எதிர் ஜி. ராஜன் என்கிற மடிப்புராஜன் வழக்கில்*4 மனுதாரர் தன் மகனின் கருவைக் கலைப்பதற்கு அனுமதி கோரியபோது மேற்கூரிய திருக்குறளை வலியுறுத்தி மனுதாரரின் கோரிக்கையை மேதகு சென்னை உயர்நீதி மன்றம் நிராகரித்தது.

**கல்வி**

கற்கத்தகுந்த நூல்களை குற்றமறக் கற்று அதன் பிறகு கற்ற கல்விக்கு தக்கவாறு நெறியில் நிற்க வேண்டும் என்பது வள்ளுவரின் அறநெறி. பதிவாளர், சென்னைப் பல்கலைக்கழகம் எதிர் இந்திய அரசு வழக்கில்*5 கல்வி கற்பதற்கு நுகர்வோர் பாதுகாப்பு சட்டம், 1986 பொருந்துமா என்ற கேள்வி எழுந்தபோது மேதகு சென்னை உயர்நீதிமன்றம் கல்வி வியாபாரப் பொருளல்ல என்பது பற்றி விவரிக்கும் குறட்பாவை மேற்கோள் காட்டியுள்ளதை கேள்விப்படும் போது இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே என்ற மகாகவி பாரதியின் பாடல் நினைவுக்கு வருகின்றது. குறள் எண். 398 "ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு எழுமையும் ஏமாப்பும் உடைத்து".

**அறிவு உடைமை**

மனத்தைச் சென்ற இடத்தில் செல்லவிடாமல் தீமையானதிலிருந்து நீக்கிக் காத்து நன்மையானதில் செல்ல விடுவதே அறிவு என்ற உயர்ந்த நீதிநெறியை வள்ளுவர்

போதித்துள்ளார். ஜானக்சிங் வழக்கு*6 முன்னாள் சென்னை உயர்நீதிமன்ற வழக்குரைஞர் சங்கத் தலைவர் மீதான நீதிமன்ற அவதூறு வழக்காகும். அதில் அதிகாரம் 43 அறிவுடைமையில் உள்ள குறள் எண். 428-ல் கூறப்பட்டுள்ள "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை; அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்" என்ற நீதி நெறி வலியுறுத்தப்பட்டுள்ளது.

**கொடுங்கோன்மை**

குடிகளை வருத்தும் தொழிலை மேற்கொண்டு, முறையில்லாதச் செயல்களைச் செய்து நடக்கும் அரசன் கொலைத் தொழிலைக் கொண்டவரைவிடக் கொடியவன் என்பது வள்ளுவரின் அறவுரை. அதிகாரம் 56- கொடுங்கோன்மை-யில் குறள் எண். 553-ல் "நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன் நாள்தொறும் நாடு கெடும்" என்று சாபமிட்டுள்ளார். பழனி மலைப்பாதுகாப்பு சங்கம் எதிர் தமிழ்நாடு வழக்கில்*7 மனுதாரர் சங்கமானது விதிமுறைகளுக்கு புறம்பாக கொடைக்கானலில் கட்டப்பட்ட "பிளஸண்ட் ஸ்டே" என்ற ஒட்டலை இடிக்க வேண்டுமென உத்தரவிடக் கோரி வழக்கு தொடுத்தது. அடிப்படை விதிமுறைகளைக் கூட பின்பற்றாத ஓட்டல் நிர்வாகத்திற்கு வரம்பு மீறிக் கட்டப்பட்ட கட்டிடத் தளங்களுக்கு வரன்முறை செய்து அரசு அனுமதி அளித்தது செல்லாது என்று மேதக சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்தது. தீர்ப்பின் இறுதிப் பத்தியில் மேற்கூரிய திருக்குறளை அரசின் கவனத்திற்கு நீதிமன்றம் சுட்டிக்காட்டியுள்ளது.

**கள் உண்ணாமை**

ஏ.ஜே.ஜாப் எதிர் தமிழ்நாடு அரசு வழக்கு*8 மதுபானக்கடைகளில் மது விற்பது தொடர்பான உரிமத்தில் கட்டுப்பாடு விதிக்கும் தமிழக அரசின் ஆணை தொடர்பானது. அதில் கள் உண்ணாமை அதிகாரத்தில் வருகின்ற "ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்: என்மற்றுச் சான்றோர் முகத்துக் களி?" என்ற குறள் எண். 923-ஐ மேதகு. சென்னை உயர்நீதிமன்றம் சுட்டிக் காட்டியுள்ளது.

### திருக்குறள் வழியிலான சட்ட அமலாகத்தில் அரசு நிர்வாகத்தின் பாங்கு

அரசு நிர்வாகமானது நிறைய சட்டங்களின் கீழும் சட்டங்களின் அடிப்படையில் அல்லாத நிர்வாகத் திட்டங்கள் மற்றும் கொள்கையின் கீழும் பல்வேறு விதிமுறைகளை வகுக்கும் சூழ்நிலை ஏற்படுகின்றது. அங்கன்வாடி மையங்களில் உதவியாளராக அல்லது மதிய உணவுத் திட்ட அமைப்பாளாராக நியமனம் செய்தது தொடர்பாக தமிழக அரசின் சமூக நலம் மற்றும் மதிய உணவுத் திட்டத்துறையின் இயக்ககம் வகுத்துள்ள வழிக்காட்டு நெறிமுறைகள் இலக்கியம் சார்ந்த சட்ட விதிமுறைகள அரசு அமுல்படுத்துவது தொடர்பான சிறந்த எடுத்துக்காட்டாகும். அந்தவிதிமுறைகளில் நியமனம் செய்யப்படுவோர் தமிழ் தெரிந்திருக்க வேண்டும் என்பதும் திருக்குறளில் நன்கு புலமை பெற்றிருக்க வேண்டும் என்பதும் அடங்கும். வசந்தா எதிர் மாவட்ட ஆட்சியர் வழக்கில்*9 சென்னை உயர்நீதிமன்றம் மேற்படி அரசு விதிமுறைகளை அங்கீகரித்துள்ளது.

#### முடிவுரை

அரசியல் அமைப்புச் சட்டப் பிரிவு 372-ன் படி நீதி, நேர்மை மற்றும் நன்மனச் சான்று என்ற கோட்டுபாடுகளின் அடிப்படையில் சட்ட விதிகள் முரண்படாத போது இலக்கியக் கோட்பாடுகளை மேற்கொள்காட்டி இந்திய நீதிமன்றங்கள் வழக்குகளில் தீர்ப்பினை வழங்கலாம். மேலும் சட்ட விதிகளும் நிர்வாக உத்தரவுகளும் (சமூகப்) பொதுநலக் கருத்துக்கு உகந்ததுஎன என்பதைக் கண்டறியத் தேவையான இடங்களில் இலக்கியங்களின் துணையை நாடலாம். மரண தண்டனையை ஒழிக்கக்கூடாது என்பதற்கு, “கொலையிற் கொடியாரை வேந்தெறுத்தல் பைங்கூழ் களை கட்டதனொடு நேர்”*10 என்ற வள்ளுவரின் அடியொன்றில் பொது மக்களின் கருத்து சட்ட அமலாக்கத்தில் மதிக்கப்படுகிறது என்பதை இத்தருணத்தில் சுட்டிக்காட்டலாம்.

# திருக்குறள் போற்றும் பெண்ணியம்

**செல்வி ஆ.நந்தினி தேவி**

உலகப் பொதுமறை எனப் போற்றப்படும் திருக்குறளில் நமது தனிமனித வாழ்க்கை பற்றியும், சமூக வாழ்க்கை பற்றியும் வள்ளுவப் பெருந்தகை எடுத்து இயம்பியுள்ளார். திருக்குறளில் பெண்களின் நிலை பற்றி மிகச் சிறப்பாகக் கூறியுள்ளார். திருக்குறள் போற்றும் "பெண்ணியம்" எனும் தொடர் திருக்குறளில் கூறப்பட்டுள்ள பெண் விடுதலை பற்றிய கருத்துகளை எடுத்துரைப்பதாக உள்ளது.

**வள்ளுவர் கூறும் பெண்ணின் பெருமைகள்**

ஒரு பெண்ணின் சிறப்புகளைத் திருக்குறளில் அறத்துப்பால் என்ற பகுதியில் மிகச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார்.

**பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்புஎன்னும்**
**திண்மை உண்டாகப் பெறின் (குறள். 54)**

இக்குறளில் வள்ளுவர் கற்பு என்னும் மனஉறுதி ஒரு பெண்ணிடம் அமைந்திருந்தால், அப்பெண்ணை விடப் பெருமை உடைய பொருள் இவ்வுலகில் எதுவும் இல்லை எனப் போற்றியுள்ளார்.

இல்லாள் என அழைக்கப்படும் மனைவியின் நற்பண்புகளை வாழ்க்கைத் துணைநலம் எனும் அதிகாரத்தில் மிக அழகாகவும், ஆழமான கருத்தைக் கொண்டதாகவும் கூறப்பட்டுள்ளது.

**மனைத்தக்க மாண்புஉடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை (குறள். 51)**

என்ற குறளில் தன் கணவனின் வருவாய்க்கு தகுந்த வாழ்க்கையை அமைத்துக் கொள்பவளே சிறந்த வாழ்க்கைத் துணைவி என்று பெண்ணின் பெருமையைக் கூறியுள்ளார்.

**திருக்குறள் கூறும் பெண்ணின் ஆற்றல்**

பெண் என்பவள் திருமணத்திற்குப்பின் தெய்வங்களை வணங்காது தனது கணவனை மட்டுமே வணங்கிடும் பொழுது,

"பெய்" என்ற உடன் மழை பெய்விக்கும் ஆற்றல் கொண்டவளாகத் திகழ்கின்றாள் எனத் தன் குறளில் தெளிவாகக் கூறியுள்ளார்.

**தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதுஎழுவாள்**
**பெய்எனப் பெய்யும் மழை (குறள். 55)**

**பெண்ணால் ஏற்படும் மங்கலம்**

மனைவியின் நற்பண்பே குடும்பத்திற்கு மங்கலம் என்றும், அத்தகைய பெண் நல்ல மக்களைப் பெறுதல் அதற்கு சிறந்த அணிகலன் எனவும் தன் குறளில் விவரித்துள்ளார்.

**மங்கலம் என்ப மனைமாட்சி, மற்று அதன்**
**நன்கலம் நன்மக்கள் பேறு (குறள். 60)**

என்னும் குறள்வழி இக்கருத்தினை உணரலாம்.

**வள்ளுவர் கூறும் பெண்ணின் பண்புகள்**

பெண்ணின் குண நலன்களை அவர்களின் இயல்புகளாலும், செயல்களாலும் வகைப்படுத்தியுள்ளார். அவர்கள் இல்லறப் பெண்கள், இல்லறத்திற்கு ஒவ்வாத பெண்கள், விலக்கத்தக்க பெண்கள் என வரிசைப்படுத்தியதால் அறிய முடிகிறது.

இல்லறப் பெண்களின் பண்புகளாக கூறப்படுவது கற்பு நிலை, கணவனைத் தொழுபவள், தன் குடும்பப் புகழை நிலை நாட்டுபவள், வருவாய்க்கேற்ப செலவு செய்பவள் ஆகியனவாகும்.

இல்லறத்திற்கு ஒவ்வாத பெண்ணின் குணநலன்களாகக் கற்பினைக் காக்காத மகளிர், பரத்தையர் ஆகியோரைக் குறிப்பிட்டுள்ளார்.

விலக்கத்தக்க பெண்கள் எனும் வரிசையில் பண்பில் மகளிர், பொருளை மட்டுமே விரும்பும் மகளிர், வஞ்சனையுடைய மகளிர் எனக் கூறியுள்ளார்.

**பெண்ணின் கற்பு நிலை**

பெண்ணின் கற்பு நிலை மற்றும் பத்தினித் தன்மை பற்றிய வள்ளுவரின் கருத்து எக்காலத்திற்கும் ஏற்புடையதாகவும், இந்தியப் பண்பாட்டை பறைசாற்றுவதாகவும் அமைந்துள்ளது. மகளிர்க்குப் பிறரால் ஏற்படுத்தப்பட்ட சிறை போன்ற காவலால் பயன் இல்லை. அவர் தம் மனவலிமையால் கற்பினைக் காப்பதே சிறந்த காவலாகும் என்பதை,

**சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும்? மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை (குறள். 57)**

என்ற குறட்பாமூலம் அறியலாம்.

எனவே பெண் என்பவள் தனது கற்பு நிலையிலிருந்து வழுவாது வாழ வேண்டும் என்பதையும், கற்பை விட உயர்ந்த பொருள் இவ்வுலகில் இல்லை என்பதையும் வள்ளுவர் தெளிவுபடுத்தியுள்ளதை உணரலாம். இவருடைய இக்கருத்தைத்தான் இந்தியப்பண்பாடு அடிப்படையாகக் கொண்டுள்ளது. இன்று உலகமே இந்தியப் பண்பாட்டை வியந்து நோக்கக் காரணம் "ஒருத்திக்கு ஒருவன்", "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற தலைசிறந்த ஒழுக்க நெறியே என்பதற்கு இக்குறளே சான்றாக விளங்குகிறது எனலாம்.

**அறிஞர்களின் வள்ளுவப் பெண்ணிய கருத்துகள்**

திருக்குறள் பற்றிய பெரும்பாலான ஆய்வுகள் பெண் கற்புடன் திகழ்வதை வலியுறுத்திக் கூறியுள்ளன. "மனைவி என்பவள் கற்புடைமையிலிருந்து கெட்டுவிடுதல் கூடாது. பெண்ணுக்கு கற்பென்பது திண்மை உண்டாகப் பெற்றிருத்தல் தவிர வேறு சிறப்பு உடையது எதுவுமில்லை. கணவனைப் போற்றும் மனைவி புத்தேளிர் வாழும் உலகில் பெருஞ்சிறப்பு எய்துவாள்" என்று அ.சி.பரந்தாமனார் போன்ற அறிஞர்கள் கூறியுள்ளனர்.

வள்ளுவர் கூறும் பெண்ணின் குணநலன்களில் முதன்மையாகக் குறிப்பிடுவது பதிவிரதா தருமத்தையே. இந்த தருமம் ஆண்களுக்கும் பொருந்தும்.

**சமூகத்தில் பெண்ணின் நிலை**

வள்ளுவர் கூறும் கருத்துகளிலிருந்து அக்காலப் பெண்கள் தனது குடும்பத்தையும், தன் கணவனையுமே தெய்வமாக எண்ணி வாழ்ந்து வந்துள்ளனர். சமூகத்தில் பெண்களுக்கு ஆணுக்கு இணையாக உரிமைகள் வழங்கப்படவில்லை. இருப்பினும் வள்ளுவர் ஆணாதிக்கம் உச்சமாக இருந்தக் காலக்கட்டத்தில் அதாவது கைம்பெண், உடன்கட்டை ஏறுதல் போன்ற நிலையில இவர் தமது கருத்துகளை பாலியல் அறமாகக் கூறியுள்ளார். ஆனால் இதனை அக்காலச் சமூகம் ஏற்றுக் கொள்ளவில்லை.

வள்ளுவர் தன் குறளில் கூறியுள்ள "பெய்யெனப் பெய்யும் மழை" என்ற கருத்து வள்ளுவர் வாழ்ந்த காலத்தில் இருந்த

சமூக நிலையைக் குறிக்கிறது. அதாவது மழை தரும் ஆற்றல் பெண்ணின் கற்பு நிலையோடு இணைத்துக் கூறப்பட்டுள்ளது.

**திருக்குறள் கூறும் பெண்ணிற்கான அறிவுரைகள்**

ஒரு குடும்பப் பெண்ணின் சிறப்புகளைப்பற்றி எடுத்துரைத்துள்ள வள்ளுவர் பெண்ணின் விலக்கத்தக்க குணங்களையும் கூறியுள்ளார்.

**இல்லதுஎன் இல்லவள் மாண்பானால்? உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை? (குறள். 53)**

மனைவி நல்ல பண்புகளை உடையவளாக இருந்தால், அவ்வாழ்க்கையில் எல்லா நன்மைகளும் அமையும். அவ்வாறின்றி மனைவி பண்பற்றவளாக இருந்தால் எல்லாம் அழிந்து விடும் எனப் பெண்ணின் பண்பு நலன்பற்றி விளக்கிக் கூறியுள்ளார்.

கணவன் இறந்தவுடன் மனைவி உடன்கட்டை ஏறுதலையும், கைம்மை நோற்றலையும், வள்ளுவர் ஏற்கவில்லை. மாறாகக் கணவனை இழந்த பெண்கள் சமயத்துறவு மேற்கொள்ளல் என்பது அனுமதிக்கப்பட்டது. அதனை வள்ளுவர் ஆதரித்தார். கணவனோடு வாழும் பெண் பத்தினி நிலையை அடையமுடியும் என்ற கருத்தையும் வள்ளுவர் ஆதரித்தார். இதனை அறிய நமக்குள்ள சான்று அக்காலத்தில் கொண்டாடப்பட்ட கண்ணகி வழிபாடே ஆகும். வள்ளுவர் பிற்காலப் புலவர்களுக்கு முன்னோடியாகவும், வழிகாட்டியாகவும் திகழ்ந்துள்ளார்.

# திருக்குறள் காட்டும் காவல் நிர்வாகம்-ஓர் ஆய்வு

**இ. இனநலப் பெரியார்**

**திருக்குறள்-ஓர் அறிமுகம்**

திருக்குறள் 2000 ஆண்டுகளுக்கும் முற்பட்ட பழமையான நூல் ஆகும். திருவள்ளுவர் 133 அதிகாரத்தின்கீழ் பத்துப் பத்துப் பாடல்களாக 1330 பாடல்கள் எழுதியுள்ளார். அவற்றின் மொத்தத் தொகுப்பே திருக்குறள் ஆகும். அகம், புறம் ஆகிய எண்ணங்களின் தலையூற்றாய் விளங்கிய சங்கச் சான்றோர்களின் இலக்கியங்களுக்குப்பின்- வையப்புலவர் திருவள்ளுவர் திருக்குறளை எழுதினார். இந்நூல் சமயக் கோட்பாடுகளுக்கு அப்பாற்பட்டு உலகம் முழுமைக்கும் ஏற்கத்தக்க வாழ்க்கை வழிகாட்டியாக விளங்குகிறது. இரண்டாயிரம் ஆண்டுகள் கழிந்து விட்டன. இருபத்தோறாம் நூற்றாண்டும் நடைபெறுகிறது. இன்றளவும் திருக்குறளுக்கு ஓர் ஈடு இணையான நூல் வெளிவரவில்லை என்பதே உலகறிந்த மெய்மை.

**புதிய முயற்சி**

காலங்காலமாகத் திருக்குறளை மேற்கோள் காட்டிப் பேசுவதும், எழுதுவதும், மரபாக உள்ள சூழலில், "திருக்குறள் காட்டும் காவல் நிர்வாகம்" என்ற தலைப்பில் திருக்குறளை ஒரு புதிய கோணத்தில் காண முற்படுவதே இவ்வாய்வின் நோக்கம் ஆகும்.

அன்றைய சூழலில் ஒரு நாட்டின் அரசனே அந்நாட்டு குடிமக்களின் "காவலன்" ஆவான். மேலும், அரசன் தனது கட்டுப்பாட்டின் கீழ் அமைச்சர்கள், ஒற்றர்கள், தூதுவர்கள் எனப் பல பிரிவினரைக் கொண்டு ஆராய்ந்து, குற்றங்களைத்தடுத்து தம்மக்களைப் பாதுகாத்தனர். அத்தகைய அரசன், அமைச்சர்கள், ஒற்றர்கள் மற்றும் தூதுவர்கள் அனைவருமே காவல் துறையின் ஒவ்வொரு அங்கம் ஆவார்கள்.

**திருக்குறளில் காவல்துறை**

திருவள்ளுவர் திருக்குறளில் நாட்டின் அரசனே அந்நாட்டு மக்களின் காவலன் ஆவான் என்கிறார். திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என, முப்பால்களை உள்ளடக்கியது. இதில் திருவள்ளுவர், காவல்துறை பற்றிப் பொருட்பாலில் மிகத்தெளிவாக விளக்கியுள்ளார். இப்பொருட்பாலில்,

அரசியல், அமைச்சியல், காப்பியல், நட்பியல், குடியியல், மேலாண்மை அறிவியல், காவலர்களின் தகுதிகள், காவலர்களின் பணி, ஒன்று அறிதல், ஆராய்தல், தூது செல்லுதல், கள்ளுண்ணாமை, நடுநிலையான ஆட்சி, எதற்கும் அஞ்சாமை, உயிர்தியாகம், ஊழல் செய்யாமை, உட்பகை கொள்ளாமை, சூது கொள்ளாமை, வரைவின் மகளிர், பெண்வழிச் சேராமை, கண்ணோட்டம், சான்றாண்மை, குடிசெயல் வகை, காலம் உணர்தல் மற்றும் காலம் தாழ்த்தாமை எனக் காவலர்களின் தன்மைகள், சூழ்நிலைகள் பற்றிப் பல பாடல்களில் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். இப்பாடல்களையும் மற்றும் அதன் விளக்கங்களையும் பற்றியும் இங்குக் காண்போம்.

**காவலரின் தகுதிகள்**

திருக்குறளில் தொகுதிகள் *39,55,56,57* ஆகிய பாடல்களில் காவல் நிர்வாகத்தின் தலைமைக்கு இருக்க வேண்டிய மாண்புடைய குணங்கள், கடமைகள், ஆட்சி செய்யும் முறை, அரசியலில் பிழை செய்வதால் ஏற்படும் கேடுகள் போன்றவை தொகுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றது. இவைகளைப் பற்றி இறைமாட்சி என்னும் தொகுதி *30*இல் காவலரின் தகுதிகளைக் கூறுகின்றார்.

**விளக்கம்**

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்று கூறப்படும் ஆறு அங்கங்களையும் உடையவனே காவலர்களுள் “ஆண்சிங்கம்” போன்றவன் ஆவான்.

**அறனிழுக்கா அல்லவை நீக்கி மறனிழுக்கா**
**மானம் உடைய தரசு**

**விளக்கம்**

ஆட்சி முறைக்கு உரிய அறத்தில் தவறாமல் அறமல்லாதவற்றை நீக்கி, வீரத்தில் குறைபடாத மானத்தை உடையவனே சிறந்த (காவலன்) ஆவான்.

**நடுநிலையான ஆட்சி நடத்துதல்**

காவலர்கள் தங்கள் மக்களின் வாழ்க்கைக்கு ஏற்றவாறு குற்றங்களைத் தீர ஆராய்ந்து நடுநிலையான ஆட்சி செய்தல் வேண்டும் என்று திருக்குறளில் தொகுதி 55 "செங்கோண்மை" என்னும் தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது. அவற்றில் சில:

**ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்**
**தேர்ந்துசெய் வஃதே முறை**

**விளக்கம்**

யாரிடத்திலும் (குற்றம் இன்னதென்று) ஆராய்ந்து, கண்ணோட்டம் செய்யாமல் நடுவுநிலைமை பொருத்தி (செய்யத்தக்கதை) ஆராய்ந்து செய்வதே நீதிமுறையாகும். குற்றங்களைத் தடுக்கும் பொருட்டு வழங்கப்படும் தண்டனைகள் பழி ஆகாது. அதுவே காவலரின் தொழில்.

**குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்**
**வடுவன்று வேந்தன் தொழில்**

**விளக்கம்**

தன் மக்களை பிறர் வருத்தாமல் காத்து தானும் அவர்களை வருத்தாமல் காப்பாற்றி, அவர்களுடைய குற்றங்களைத் தக்க தண்டனையால் ஒழிப்பது, ஒவ்வொரு காவலருடைய தொழில் தானே தவிர பழி அன்று.

**இன்றைய கால காவல் வேட்டை**

இன்றைய காலங்களில் வன்முறைகள் மக்களிடையே பாதுகாப்பைக் குறைத்து மதிப்பிடவைக்கிறது. எனவே இன்றைய காலக் காவலர்கள் "வளைத்து பிடிக்கக்கூடிய ஆட்களைக் கூடக் சுட்டுப் பிடிக்கிறார்கள். இதனை ஆங்கிலத்தில் "என்கெளண்டர்" (முறையானவை) என்று கூறுகின்றனர். இதன் அடிப்படையில் மும்பையைச் சேர்ந்த சஞ்சய் காட்டியா, புதுக்கோட்டை முருகேசன், அயோத்திக் குப்பம் வீரமணி என்று பட்டியல் நீண்டு சமீபத்தில் குழந்தை கடத்தல்காரன் எனச் சுட்டுக் கொல்லப்பட்டவர்கள் ஆவார்கள். இம்முறையை கூட 2000 ஆண்டுகளுக்கு முன்னரே திருவள்ளுவர் "செங்கோண்மை" என்னும் அதிகாரத்தில்,

**பாடல் 550**

**கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்**
**களைகட் டதனொடு நேர்**

**விளக்கம்**

கொடியவர் சிலரைக் கொலைத்தண்டனையால் காவலர் ஒழித்தல், பயிரைக் காக்கும் பொருட்டு களையைப் பிடுங்கி களைவதற்கு, நிகரான செயலாகும் என்று தெளிவுபட விளக்கியுள்ளார்.

**வேலியே பயிரை மேய்தல் கூடாது**

'வேலியே பயிரை மேய்வது' என்பது சட்டத்தைக் காக்கும் காவலர்களே, அச்சட்டத்தை மீறுதல் ஆகும் என்பதனை திருவள்ளுவர் தொகுதி 56 "கொடுங்கோண்மை" என்னும் அதிகாரத்தில், கூறுகின்றார்.

## பாடல் 551

**கொலைமேற்கொண் டாரி கொடியதே அலைமேற்கொண்டு**
**அல்லவை செய்தொழுகும் வேந்து**

**விளக்கம்**

குடிமக்களை வருத்தும் தொழிலை மேற்கொண்டு முறையற்ற செயல்களைச் செய்து வரும் காவலன், கொலைத் தொழிலைத் தானாகக் கொண்டவரை விடக் கொடியவன் என்கிறார்.

**ஊழல் செய்தல் கூடாது**

காவலர்கள் தாங்கள் காக்க வேண்டிய மக்களிடமே தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்திப் பணம் பறிப்பது ஊழல் செய்வது ஆகும்.

## பாடல் 552

**வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்**
**கோலொடு நின்றான் இரவு**

**விளக்கம்**

ஆட்சிக்குரிய கோலை ஏந்தி நிற்கின்ற காவலர்கள் குடிகளைப் பொருள் கேட்டல், போகும் வழியில் தனியே வேல் ஏந்தி நின்ற கள்வன் 'கொடு' என்று கேட்பதைப் போன்றது என்று தெள்ளத்தெளிவாக விளக்கியுள்ளார்.

**ஒற்றர்களின் காவல் தன்மை**

காவலர்களில் ஒற்றர்கள் என்ற பிரிவும் உண்டு. அவர்களை ஆங்கிலத்தில் 'இன்பார்மர்' என்பர். அதாவது

மறைவான செய்திகளை, நிகழ்ச்சிகளைப் பிறர் அறியா வண்ணம் தெரிந்து ஆய்ந்து காவலர் தலைவனுக்கு தெரியப்படுத்துதல் ஆகும். இவ்வொற்றர் பிரிவைப் பற்றி திருவள்ளுவர் திருக்குறளில் தொகுதி 59 "ஒற்றாடல்" என்ற தலைப்பில் மிக அழகாகக் கூறியுள்ளார். அவை,

**பாடல் 585**

**கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்**
**உகாஅமை வல்லதே ஒற்று**

**விளக்கம்**

ஐயுற முடியாத உருவத்தோடு, பார்த்தவருடைய கண் பார்வைக்கு அஞ்சாமல் மனத்திலுள்ளதை வெளிப்படுத்தாமல் இருக்க வல்லவனே "சிறந்த ஒற்றன்" ஆவான்.

**பாடல் 584**

**வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு**
**அனைவரையும் ஆராய்வது ஒற்று**

**விளக்கம்**

தம்முடைய காவல் தொழிலைச் செய்கின்றவர், தம் சுற்றத்தார், தம்பகைவர் என்று கூறப்படும், அனைவரையும் நடுநிலையாக ஆராய்வதே ஒற்றரின் தொழிலாகும்.

**உதவி காவலர்களின் தகுதிகள்**

குடிமக்களின் காவலனான தலைவனுடன் தோள்சேர்ந்து நின்று, அவர் செய்யும் செயலுக்கு உறுதுணையாய் இருப்பவனே உதவிக்காவலன் ஆவான் என்று திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். உதவிக் காவலர்களின் தகுதிகளைப் பற்றித் தொகுதி 64 "அமைச்சு" என்ற தலைப்பில் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். அவை,

**பாடல் 635**

**அறனறிந்து ஆன்றமைந்து சொல்லான்எஞ் ஞான்றும்**
**திறனறிந்தான் தேர்ச்சித் துணை**

**விளக்கம்**

அறத்தை அறிந்தவனாய், அறிவு நிறைந்து அமைந்த சொல்லைக் கொண்டவனாய், எக்காலத்திலும் செயல் செய்யும் திறன் உடையவனாய் உள்ளவன், ஆராய்ந்து கூறும் துணையாவான்.

### காவல்துறை தேரின் அச்சாணி போன்றது

உலகத்தில் மொத்த மக்கள்தொகையைக் கணக்கிடும்போது, மொத்த காவல் துறையினரின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு. இருப்பினும் இவர்களே அனைத்துக் குற்றங்களையும் தடுக்கின்றனர். எனவேதான், திருவள்ளுவர் தொகுதி 67. "வினைதிட்பம்" என்ற தலைப்பில் காவல்துறையினரை உருண்டு செல்லும் பெரிய தேரின் "அச்சாணிக்கு" ஒப்பர் என்று கூறியுள்ளார். அதற்கான,

**பாடல் 667**

**உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு**
**அச்சாணி அன்னார் உடைத்து**

என்கிறது.

**விளக்கம்**

உருளும் பெரிய தேர்க்கு, அச்சில் இருந்து தாங்கும் "சிறிய ஆணி" போன்றவர்கள் (காவலர்கள்) உலகத்தில் உள்ளனர். அவர்களுடைய உருவின் சிறுமையைக் கண்டு இகழக்கூடாது என்கிறார்.

**உயிர் தியாகம் செய்தல்**

தூது செல்லும் பணியினை உடைய காவலர்கள் தங்கள் பணிக்காகவும் தன் தலைவனுக்காவும் "உயிர் தியாகம்" செய்யக் கூட தயங்குதல் கூடாது என்று திருவள்ளுவர், தொகுதி 69, "தூது" என்ற தலைப்பில் தெளிவுறக் கூறியுள்ளார். அப்பாடல்,

**பாடல் 690**

**இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு**
**உறுதி பயப்பதாம் தூது**

**விளக்கம்**

தன்உயிருக்கு அழிவே தருவதாக இருந்தாலும், அதற்காக அஞ்சிவிடாமல், தன்தலைவனுக்கு நன்மை உண்டாகுமாறு செய்கின்றவனே தூதுவன் (காவலன்) ஆவான்.

### காவல்துறை - களைய வேண்டியவை

திருக்குறளில் திருவள்ளுவர் காவல்துறையினரின் பணிகள், தகுதிகள், சூழ்நிலைகள் மற்றும் பங்களிப்புகள் ஆகியவற்றைப் பற்றிக் கூறியதோடு மட்டுமின்றி, காவல்துறை

சமூகத்தில் களைய வேண்டிய குற்றங்களைப் பற்றியும் தெளிவுபட விளக்கியுள்ளார். அவைகளைப் பற்றிக் கீழே காண்போம்.

**காவல்துறை சமூகத்தில் களைய வேண்டிய குற்றங்களாக**

| வ.எண். | தொகுதி | சமூகத்தில் களையப்பட வேண்டிய குற்றங்கள் | பாடல்கள் |
|---|---|---|---|
| 1 | 29 | கள்ளாமை | 281-290 |
| 2. | 84 | பேதமை | 831-840 |
| 3. | 86 | இகல் | 851-860 |
| 4. | 89 | உட்பகை | 881-890 |
| 5. | 92 | வரைவின் மகளிர் (விலைமாது) | 911-920 |
| 6. | 93 | கள்ளுண்ணாமை | 921-930 |
| 7. | 94 | சூது | 931-940 |
| 8. | 108 | கயமை | 1071-1080 |

இதுபோன்றவற்றை குறிப்பிட்டுள்ளார். சமூகத்தில் நடைபெறும் குற்றங்கள் என்பவை சமூகத்தைப் (பொது மக்களை) பாதிப்பதாகச் செய்யப்படும் செயல்களே ஆகும். இவற்றை ஒழித்துச் சமூகம் நல்ல முறையில் இயங்க, தன்னை நிலைபடுத்திக் கொள்வதே காவல்துறையின் முக்கியப் பங்காகும். மேலே குறிப்பிடப்பட்டுள்ள ஒவ்வொரு பத்துப் பாடல்களும் அந்தக் குற்றங்களைக் களைய வேண்டிய வழிமுறைகளையும், தடுக்காவிடின் அதனால் ஏற்படும் விளைவுகளைப் பற்றியும் விளக்கியுள்ளார்.

**முடிவுரை**

காவல்துறை சமூகத்தின் பாதுகாப்புத்துறை ஆகும். அன்றைய காலத்தில் நிகழ்ந்த குற்றங்களின் அளவுகளுக்குத் தகுந்த தண்டனை, நீதிமுறை மட்டுமின்றி இன்றைய காலச் சமூகத்தில் நடைபெறும் குற்றங்களின் அளவுகளுக்குத் தகுந்த தண்டனையான கடுத்தண்டனை, “நேர்மோதல்கள்” (என்கவுண்டர்) என அனைத்து கால தக அமைவுகளுக்கும், பொருந்துமாறு தண்டனைகளையும், காவல்துறை செயல்பட வேண்டிய வழிமுறைகள், தகுதிகள் பற்றியும் 2000

ஆண்டுகளுக்கு முன்னரே திருவள்ளுவர் திருக்குறளில் குறிப்பிட்டுள்ளார். இதனையே பாரதியார்,

**காலத்திற்கேற்ற வகைகள் அவ்வக்**
**காலத்திற்கேற்ற ஒழுக்கமும் நூலும்**
**ஞாலமுழுமைக்கும் ஒன்றாய் என்னாளும்**
**நிலைத்திடும் நூலொன்றும் இல்லை**

என்ற பாடலில் உலகம் உள்ளவரை காலங்களுக்குத் தகுந்த வகைகளையும், ஒழுக்கங்களையும் நிலைநிறுத்தும் நூல் 'திருக்குறளே' தவிர வேறு நூல் இல்லை எனக் குறிப்பிட்டுள்ளார்.

திருக்குறள் காவல்துறை மட்டுமின்றி, அனைத்துத் துறையினருக்கும் பொருந்தும் வகையில் எழுதப்பட்டுள்ளது. இதில் காவல்துறை முக்கியப் பங்கு வகித்துள்ளது.

# திருக்குறள் காட்டும் அன்புடைமை

பெ.மோகனப்பிரியா

உலகில் பிறந்த விலங்குகள், பறவைகள் முதல் மனிதன் ஈறாகவுள்ள அனைத்து உயிர்களுமே "அன்பை" வாழ்க்கையின் தத்துவமாகக் கொண்டு இயங்கி வருகின்றன. பாசம், இரக்கம், விட்டுக்கொடுத்தல் இன்னபிற செயல்களும் "அன்பு" என்ற கருவிக்குள்தான் அகப்பட்டுக் கிடக்கிறது. அக்கருவியானது இலக்கம் கொள்ளும் பொழுதுதான் சாதனைகள், வெற்றிகள் பிறக்கிறது. இச்சாதனைகளுக்கு அடிப்படையாகத் திகழும் அன்பு பற்றித் திருவள்ளுவர் கூறியுள்ளதை இந்த ஆய்வுக் கட்டுரை விளக்குவதாய் அமைகிறது.

**இலக்கியங்கள் கூறும் அன்புடைமை**

சங்க காலத்தில் ஆட்சிபுரிந்த மன்னர்கள் தம்பக்கத்தில் நல்வழிப்படுத்தும் சான்றோர்கள், புலவர்கள் ஆகியோரை வைத்து இருந்தனர். அவர்கள் அவ்வப்பொழுது மன்னனைத் தனது அன்பின் மிகுதியால் இடித்து உரைத்து, நல்லாட்சி புரிய வழிகாட்டியதோடு, அன்புடன் வாழ்ந்து வந்துள்ளனர். இதனைச் சங்க இலக்கியங்கள் நமக்கு பறைசாற்றுகின்றன. கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் நட்பும், வள்ளல் பாரிமேழலகர் நட்பும் அன்பின் வழியது உயிர் நிலையாய் இருந்ததை நமக்கு அறிவிக்கின்றன. அத்தோடு அன்பு பற்றி போற்றாதவரும் பேசாதவரும் உண்டோ? அன்புடையார் இறைவனுக்கு ஒப்பாவர். அன்பை இலக்கியங்கள் மதிப்பு மிக்க அறமாக பாராட்டுகின்றது. அன்பில்லா ஒன்றினை உலகம் மதிப்பதில்லை. சமய நெறிகளும் அன்பை சுற்றியே சுழல்கின்றது. "அன்பு" உயிரின் உன்னதமான பண்பு.

**சான்றோர் கூறும் அன்பு**

"அன்புடையவராக இருத்தல்" எனப் பொருள்படும் அன்புடையவராய் வாழும் வாழ்வே மக்களின் வாழ்வில் மிக நிறைவுற்ற வாழ்க்கை. மானுட வாழ்வில் வெற்றிக்கு அடிப்படை "அன்பு" என்கிறது பரிமேலழகர் உரை.

ஒருவரது இல்லறம் அன்புமிக்கதாக அமைந்தால் அவரது வாழ்க்கை புண்ணிய பலன் பெற்றது போல் இன்பமாய்த்திகழும். இவ்வாறு திகழும் இல்லறத்தில் துணையும், புதல்வரும் பிற உயிர்களையும் அரவணைத்து அனைவரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்துவர்.

"அன்பு" என்பது தன்னை சார்ந்தவர்களை மட்டும் அரவணைப்பது அன்று. மற்றவரிடத்தும் அதே போன்று நடந்து கொள்வதே அன்பாகும் என்பது மணக்குடவர் உரை. இந்த அண்டத்தினுள் அனைத்து உயிர்களிடத்தும் பாகுபாடின்றியும் தன்னலம் இன்றியும் உயர்திணை, அஃறிணை என்று அனைத்து உயிர்களிடத்தும் காட்டும் கருணையே அன்பு என்பர்.

**திருவள்ளுவர் காணும் அன்புடைமை**

மனிதனின் வெற்றிக்கு அடிப்படை அன்பாகும். இல்லற வாழ்க்கை இனிதே நடப்பதற்கு பிற உயிர்களிடத்து இரக்கம் கொள்வதற்கும் இது தேவையாய் அமைகிறது. இவ்வன்பினைப் பற்றிக் கூறும் திருவள்ளுவர்,

**அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்**
**புன்கணீர் பூச றரும்**

என்ற குறள்மூலம் தெளிவுபடுத்துவார். அன்பினை அடைத்து வைப்பதற்கு தாழ்ப்பாள் எதுவும் உண்டு என்று கூறுவாரும் உண்டோ? அவ்வாறு அடைத்து வைக்கும்கால் தம்மீது அன்பு செலுத்துபவரும் தம்மால் அன்பு செலுத்தப்படுபவரும் கண்ணீர் சிந்தும் பொருட்டு தன் உள்ளத்தைக் கட்டுபடுத்த முடியாமல் வரும் கண்ணீரே தம் அன்பை வெளிப்படுத்தும். இவ்வாறு கண்ணீர் சிந்தும் உயிரையே வள்ளுவர் அன்புடை நெஞ்சுடையது என்கிறார்.

**அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்**
**என்பு முரியர் பிறர்க்கு**

நெஞ்சத்தில் சிறிதும் அன்பில்லாதவர்கள் மிகுந்த சுயநலவாதிகளாகத் தம்மிடம் உள்ள அனைத்துப் பொருள்களையும் அனுபவித்து மகிழ்ச்சியடைவார்கள். ஆனால் அன்புடையவர்கள் தம்முடைய பொருட்கள் மட்டுமன்றித் தம் எலும்பையும் உடம்பையும் கூடப் பிறர்க்குக் கொடுத்து மகிழ்ச்சியடைவார்கள். அன்பால் கொடுப்பதே சிறப்பு என்னும் கருத்தை இங்கே உணர்த்தியுள்ளார்.

ஒருவரிடம் இருக்கும் பொருள் மற்றும் எல்லாவற்றையும் தாமே பயன்படுத்துவது புதைந்து கிடைக்கும் புதையல் மக்கி

மண்ணாவது போன்றது ஆகும். பிறர்க்கு பயன்படுமாறு பகிர்ந்து கொடுப்பது விருச்சக மரம் போன்றது. புண்ணியங்களும் மன நிம்மதியும் வந்து சேரும்.

ஒருவருடைய உயிர்க்கும் உடலுக்கும் பெற்றுள்ள தொடர்பு எவ்வளவு நெருங்கியதோ அத்தகைய நெருக்கத்திற்கு உரியது அன்பும் வாழ்க்கையும்.

**அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்**
**கென்போ டியைந்த தொடர்பு**

உடலில் உள்ளவரை மனிதன் மனிதனாக மதிக்கப்படுகின்றான். உயிர் பிரிந்த அடுத்த நொடியில் மனிதன் நஞ்சாகிறான். நச்சுத்தன்மை பரவாமல் இருக்கவே விரைந்து அதை அப்புறப்படுத்துகின்றோம். ஆதலால் உயிரை உடலோடு இருக்க சிறப்புடன் வாழ வள்ளுவர் வழிகாட்டுகிறார். இதை அவ்வாறே அன்பு இல்லாத வாழ்க்கையும் நச்சுத்தன்மை வாய்ந்தது, பிறருக்குக் கேடும் விளைவிக்கக் கூடியது.

உலக மக்கள் இன்பத்தோடு சிறப்பையும் பெறக் காரணமாக இருப்பது அன்பாகும். ஆர்வத்தோடு கூடிய அன்பு பிறரிடத்து விருப்பத்தை உண்டாக்கும். அவ்விருப்பம் நாளடைவில் எல்லோரையும் நண்பர்களாக்குவதோடு நட்பு என்னும் சிறப்பையும் பெற்றுத்தரும்.

**அன்பீனு மார்வ முடைமை யதுவீனும்**
**நண்பென்னும் நாடாச் சிறப்பு**

ஒரு விலங்கிடத்து அன்பு செலுத்தும் பொருட்டு அது நம்மை விட்டு எச்சூழலிலும் செல்லாது. நன்றியோடு இருக்கும். ஒரு பூச்செடியிலும் கூட அன்பைக் காணமுடியும்.

மிகுந்த அன்போடு அதற்குத் தண்ணீர் விடும்பொழுது விழா நாட்களில் அதிகப் பூக்களை கொடுத்து மகிழ்ச்சியை வெளிப்படுத்தும். ஓரறிவு முதல் ஐந்தறிவு வரை அன்பின் ஆற்றலை உணரும் பொழுது ஆறறிவு கொண்ட மனிதன் மட்டும் விதிவிலக்கா?

அன்பு மிக்க உள்ளத்தைத் தேடி நண்பர் கூட்டம் எறும்புகள் இனிப்பைத் தேடி வருவதுபோல தேடிக் கூடி மகிழ்வார்கள்.

* மனித இன்பத்திற்கும் சிறப்பிற்கும் காரணமாக அமைவது அன்பாகும். அவ்வன்பைக் கொண்டு வாழ்வதையே வழக்கமாகக் கொண்டால் மற்றவர்களால் மதிக்கப்படுவார்.

**அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்**
**தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு**

அன்பு மிக்கவரால் அனைவரையும் ஊக்குவித்து வாழும் ஆளுமை பெற்ற நெஞ்சத்து அன்பு இல்லார் இன்பமாக வாழ்வை நினைப்பது அரிது என்று கூறுவது சிந்திக்கத்தக்கதாக உள்ளது. தூய்மையான அன்பு மிக்கவரிடத்து விஷமும் அமிழ்தமாகும். அன்போடு, இயைந்த சிறிதளவு கூழானாலும் அதுவே அறுசுவை விருந்து சாப்பிட்டதற்கு ஒப்பாகும் என்று கூறுவதைக் காணலாம்.

அன்பாக நடக்கும் ஆசிரியரை ஒரு மாணவன் முதலில் ஒரு நோக்காகப் பார்க்கின்றான். சிறந்த மாணவனாகிறான், சிறந்த துணையாகிறான், அதேபோல் அன்புடைய தந்தை ஒரு சிறந்த பிள்ளையை உருவாக்குகிறான். இவ்வாறு ஒருவர் சிறந்த அன்பு மிக்கவராக இருக்கும்பொழுது, அவன் பரம்பரையே சிறந்து விளங்குகிறது.

* அன்பு செய்வார்க்கும், வீரம் கொண்ட மறவர்களுக்கும் "அன்பு" மிகச்சிறந்த கருவியாகும். இவ்அன்பால் உலகையே அடக்கியாண்ட செயலை நாம் அறிவோம்.

**அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்**
**மறத்திற்கு மஃதே துணை**

அறியாதவர் அன்பு அறத்திற்கு மட்டுமே சாரும், ஆனால் நன்கு ஆராய்ந்து பார்க்கும் பொழுது, உற்றார்க்கு துன்பம் வரும்போது தவறான பாதையை தேர்ந்தெடுக்கக் கூடாது என்று எச்சரிக்கை செய்யவே திருவள்ளுவர் மறத்திற்கும் அன்பு என்று குறிப்பிட்டுள்ளார்.

அன்புமிக்கவருக்கு தீமை வரும் போதுதான் மறைந்திருக்கும் வீரமும் பொங்கி எழும். இவ்வாறாக அன்பு அறத்தைமட்டும் பறைசாற்றாமல் அன்பு மிக்கவருக்குத் துன்பம் வரும் பொழுது முன்நின்று உதவும் பொருட்டு வீரத்திற்கும் அதுவே துணை நிற்கும் என்று தெளிவுபடுத்துகிறார்.

**என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**யன்பி லதனை யறம்**

எலும்பு இல்லாத உடம்பைச் சுமக்கும் உயிர் வெயில் கொடுமையால் துடிப்பதைப்போல் அன்பில்லாதவர் வாழ்க்கையும் மிகவும் துன்புறும். நிறைந்த செல்வங்களையுடைய ஒருவன் அதிகமான வேலை ஆட்களை வைத்துக் கொண்டும் நேரத்திற்கு ஒரு காரில் சென்றும் உணவு,

உடை, பாதுகாப்பு, ஆரோக்கியம் என எல்லாவற்றையும் நிறைவுறப் பெற்றிருப்பினும் அன்பு இல்லையென்றால் அவனது வாழ்க்கை எலும்பில்லாத உடலுக்குச் சமமாகும் என்பதை இதனால் அறியலாம்.

**அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று**

மனிதன் உயிர் வாழ்வதற்கு உயிர்க்காற்று மிகவும் அவசியமாகிறது. மனிதன் எப்பொழுது மூச்சின்றி இருக்கின்றானோ அப்போதே அவன் அஃறினைக்கு தள்ளப்படுகிறான். அதுபோன்றே சிறிதும் அன்பில்லாதவனை அஃறிணையுடன் ஒப்பிட தகுதி இல்லாவன் என்றே கூறலாம். அதாவது மரத்துடனும் ஒப்பிட இயலாத கல், மண் போன்றவற்றுடனே ஒப்பிடத்தக்க வாழ்க்கை வாழ்வான் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

* அன்பில்லாவர் வாழ்க்கையானது தான் மட்டுமல்லாது தன்னைச் சார்ந்தோராலும் இகழப்படுவார்கள். பின்பு பயனின்றி அழிவார்கள் என்பதைத் திருவள்ளுவர் மிகத் தெளிவுடன் கூறியுள்ளார். இதனை,

**புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை**
**அகத்துருப்பு அன்பி லவர்க்கு**

என்ற குறளால் அறியலாம். அதாவது,

அன்புடையவர்கள் தன்னிடமுள்ள பொருளை அன்பின் மிகுதியால் பிறர்க்குக் கொடுக்கும் பண்புடையவர்களாகத் திகழ்வர். அவர்களே தன் உயிரையும் கொடுக்க முன்வருவர் என்பதை வள்ளுவர்,

**அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்**
**கென்புதோல் போர்த்த வுடம்பு**

என்று குறிப்பிட்டுள்ளார். அதாவது, தன்னுயிரைக் கொடுத்தாவது பிற உயிரைக் காப்பாற்றும் குணம் உடையவர்களையே அன்புடையவர் எனவும், மற்ற குணப் பண்புடையவர்களையே தோலால் போர்த்திய எலும்புடையவர் என்றும், “அன்பிலார்” என்றும் வள்ளுவர் வழங்குகிறார்.

இவ்வாறாக அன்புடைமை உடையர் உலகில் அனைவராலும் தெய்வத்தின் தெய்வமாகப் போற்றிப் பாராட்டப்படுவர்.

# வள்ளுவர் காட்டும் அரசியல் நெறி

முனைவர் அ.கணேசன்

**முன்னுரை**

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே நாட்டின்மீதும், மக்களின்மீதும் அக்கறை கொண்ட திருவள்ளுவர் அதற்கான நெறிகளை தம்நூலில் யாத்துள்ளார். நாட்டுப் பாதுகாப்பிற்கான படைகளையும், மக்கள் வாழ்வியல் முறைகளையும், மன்னவன் ஆட்சித் திறனையும் அதற்கான தகுதிகளையும் முறைப்படுத்திக் காட்டியதோடு, எத்தகைய நிலையில் மன்னவன் இருக்கப் பெற்றால் நாடு செழிப்புறும் என்பதை அவர்தம் "அரசியல்" மூலம் சித்தரித்துக் காட்டியுள்ளார். பொருட்பாலில் அமையப் பெற்ற இறைமாட்சி அதிகாரம் மட்டுமின்றி இன்னபிற அதிகாரங்களும் மன்னவனின் அரசியல் நெறியைப் பறைசாற்றுவனவாய் அமைந்துள்ளன. நாட்டினை ஆளுவோருக்கு இருக்க வேண்டிய அறிவாற்றலும், நற்குணங்களும், நற்செய்கைகளுமே ஓர் இலட்சிய அரசனுக்குப் புகழ் என்றும் விளிக்க இடமுண்டு. அதன்வழி "வள்ளுவர் காட்டும் அரசியல் நெறி" எத்தகையது என்பதை விளக்குவதாக இவ்வாய்வுக் கட்டுரை அமைகிறது.

**அரசியல் விளக்கம்**

அரசியல் என்பது ஒரு வலிமை வாய்ந்த, இறுகியதொரு சமூக நிறுவனமாகும். அதனை உடைத்து மக்கள் தமக்குத் தாமே ஆட்சிகொள்ளும் முறை வரவேண்டும் என்ற கொள்கையுடைய காரல்மார்க்சின் கொள்கை நனவாகும் பொழுது, தனியுடைமை இராது, தனிப் பொருளுடைமை இராது, பொதுவுடைமை மட்டுமே இருக்கும். இன்றைய அரசு அமைப்புகள் நீடிக்கின்றவரை நிலவுடைமையும் தனிவுடைமையும் ஏற்றத் தாழ்வும் நீடித்தே தீரும். ஆதலால் பொதுவுடைமை நோக்கில் அமைகின்ற கொள்கையே இன்றையத் தேவையாய் இருத்தல் வேண்டும். ஒரு நாடு செழிப்புற்று வளர வேண்டுமென்றால் அங்கே பசி, பிணி, பகை, வன்முறை ஆகியன இல்லாதிருக்க வேண்டும். இவைகளெல்லாம் இல்லாது

அமையப்பெற்ற பொழுதும் சரியான முறையில் ஆட்சி செய்வோர் இல்லையெனில் அந்நாடு நாடாகாது. எனவே ஒரு நாட்டிற்கு இயற்கையாகவே வளங்கள் அமைவதுபோலச் சிறந்த ஆட்சியாளன் அமையவேண்டும். அவ்வாட்சியாளன் முடிசூட்டப் பட்டவனாகவோ, குடிமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவனாகவோ இருக்கலாம். ஆனால் இவ்விரு ஆட்சி முறைகளிலும் வள்ளுவருக்கு உடன்பாடு கிடையாது. மெத்த அறிஞர்கள், இடித்துரைக்கும் பண்புடையோர், நன்னெறி கூறிப் பெரியோரைத் துணைக்கொள்ளல் ஆகியோரைக் கொண்ட "அறவோர் அரசு" தான் மக்களுக்குத் தேவையென்று நெறிப்படுத்தியுள்ளார் திருவள்ளுவர்.

**வள்ளுவர் காணும் நன்னாடு**

ஒரு நாடு பெருமைமிக்க நாடாகத் திகழ வேண்டுமாயின் நல்லாட்சியும், வீரமிக்க அரசனும் தேவை. அவ்வரசன் குடிமக்களின் தேவையறிந்து ஆட்சிசெய்தால் அவர்களால் புகழப் படுவான். அவ்வாறு விளங்க விளைச்சல் குன்றாமல் பயிர்செய்யும் விவசாயிகளும், நன்மை தீமையறிந்து நடுநிலைமை தவறாத சான்றோர்களும், எக்காலத்தும் குறைவுபடாத செல்வத்தை யுடையவர்களும் ஒரு நாட்டில் மிகுந்து காணப்பட வேண்டும். அதுவே நன்னாடு என்பார் வள்ளுவர். இக்கருத்தை,

> **தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்**
> **செல்வரும் சேர்வது நாடு (குறள். 731)**

என்ற குறள்வழி தெளிவுபடுத்துவார். அதுமட்டுமல்ல, மக்களுக்கு இன்னல்தரும் பசியோ, நீண்டகாலம் நீங்காத நோயோ, பிற நாடுகளின் பகை பற்றிய அச்சமோ இல்லாதிருந்தால் மட்டுமே சிறப்பு வாய்ந்த நாடாகும். இதனைத் திருவள்ளுவர்,

> **உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
> **சேராது இயல்வது நாடு (குறள். 734)**

என்னும் குறட்பாமூலம் அறியச் செய்கிறார். ஒரு நாடு வளமிகு நாடாக உயர்வடைய வேண்டுமாயின் கொடியும், சின்னமும் ஒன்று மட்டுமே இருந்தால் நல்லது. மாறாகப் பல்வேறு கொடிகளும், சின்னங்களும், நாட்டின் அமைதியைக் கெடுக்கும் உள்பகையும் அமைந்து இருந்தால் அது நாடாகாது என்னும் கருத்தினை,

> **பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்**
> **கொல்குறும்பும் இல்லது நாடு (குறள். 735)**

என்னும் குறள் மூலம் புலப்படுத்தியுள்ளார். ஆகவே பல்வேறு சிந்தனையுடைய மக்களைப் பெற்றிருந்த போதிலும் செயலால் ஒன்றுபட்டுத் திகழ வேண்டும் என்பதை அறியச் செய்கிறார். மேற்கூறிய அனைத்தும் அமைந்து, மக்களின் திறனறிந்து ஆட்சிசெய்யா மன்னவன் அமைந்துவிட்டால் பயனின்றி போய்விடும் என்பதை,

**ஆங்குஅமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே**
**வேந்துஅமைவு இல்லாத நாடு (குறள். 740)**

என்னும் குறள் தெளிவாக்குகிறது. இதனால் நல்லாட்சி மலர வேண்டுமென்றால் நற்குணமுடைய மன்னவன் தேவை என்று கூறலாம்.

**ஆளுவோனுக்குறிய அணிகள்**

நாட்டை ஆளுவோன் தன்னருகே அறிவார்ந்த அறிஞர்கள், நுண்திறன்வாய்ந்த அமைச்சர்கள் ஆகியோரைப் பெற்ற போதிலும் தனக்கான பண்புகளிலிருந்து குறைவுபடக் கூடாது என்பதை இறைமாட்சியால் கூறியுள்ளார் திருவள்ளுவர். அதில் அஞ்சாமை, தூங்காமை, ஊக்கம், குடியோம்பல், காட்சிக்கு எளிமை, கடுஞ்சொல் இல்லாமை போன்ற இன்னபிற செயல்களே ஆளுவோருக்கு உரிய அணிகள் எனவும் வலியுறுத்திக் கூறியுள்ளார்.

நீதி நெறிமுறைகளில் சிறிதும் வழுவாமலிருந்து, அறம் மாறிய செயல்கள் தமது நாட்டில் நடக்காவண்ணமும், வலிமையில் சற்றும் குறையாமல் விளங்குபவனே சிறந்த அரசன் என்னும் கருத்தை,

**அறன் இழுக்காது அல்லவைநீக்கி மறன்இழுக்கா**
**மானம் உடையது அரசு (குறள். 384)**

என்ற குறள்மூலம் அறியலாம். மேலும், பல்வேறு செல்வங்களில் உயர்வாக விளங்கும் அரசனாக இருந்தாலும் மக்களின் வாழ்க்கைத் தரம், அவர்களது எளிமைக்கு இரக்கம், குடிமகனைப்போல் தம்மை மாற்றிக் கொள்ளும் பண்புடைய அரசனே மிகச் சிறந்தவனாகப் பாராட்டப்படுவான் என்பதைத் திருவள்ளுவர்,

**காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம் (குறள். 386)**

என்னும் குறட்பாமூலம் அறியச் செய்கிறார். மேலும், பொருளுடையான்-இல்லான் ஆகியோருக்கென்று தனித்தனியே நீதி வழங்காமல் தராசுக்கோலாகத் தீர்ப்பு வழங்குபவனும்,

மக்களுக்கு ஏற்படும் துன்பங்களை வராமல் காத்து நின்று சிறப்புச் செய்பவனுமே அரசாட்சி புரிபவர்களில் சிறந்தவனாகவும், பேசுகின்ற கடவுளாகவும் காட்சியளிப்பான். இக்கருத்தை,

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும் (குறள். 388)**

என்ற குறள்வழி புலப்படுத்தியுள்ளார். அரசன் நீதி தவறாமல் தீர்ப்பு வழங்கியும், மக்களின் பார்வையில் எளியவனாக காட்சியளித்தும், இரக்கம் கொண்டவனாகவும் விளங்கினால் அவனே "இறை" என்கிறார் திருவள்ளுவர்.

மன்னவன் தன்நாடு மட்டுமல்லாது உலகத்தையே தன் ஆளும் முறைமையால் தன்வசமாகும்படி காத்தல் வேண்டும். அங்ஙனம் காத்தானாயின் மலைபோல் வருகின்ற தடைகளெல்லாம் தகர்க்கப்பட்டு, எந்நிலையிலும் அவனைக் காத்து நிற்கும். இதனை,

**இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை**
**முறைகாக்கும் முட்டாச் செயின் (குறள். 547)**

என்ற வரிகளால் புலப்படுத்தியுள்ளார். இந்தக் குறட்பாவிற்குச் சான்றாக மனுநீதி சோழன் வரலாற்றையும், பொற்கை பாண்டியன் வரலாற்றையும் குறிப்பிடலாம். தண்டனைக்குரிய குற்றங்களைச் செய்யும் ஒருவனுக்காகச் சிறிதும் பிறழ்வு ஏற்படாதவாறு குடிமக்களைக் காத்து, தன்னையும் பாதுகாத்தவாறு அரசன் இருக்க வேண்டும். குற்றம் செய்வோரைக் கண்டிப்பதாலும், தண்டனைக்கு உள்ளாக்குவதாலும் ஒரு மன்னவனுக்கு பழி என்பது வராது. அது அவனது தொழிலாகும் என்பதை,

**குடிபுறம் காத்துஓம்பிக் குற்றம் கடிதல்**
**வடுஅன்று வேந்தன் தொழில்**

என்னும் குறள்வெண்பா வாயிலாக அறியச் செய்து, சிந்தனையைத் தூண்டுகிறார் திருவள்ளுவர். அக்காலத்தில் குற்றம் செய்வோருக்கு அடி முதலாயின் தண்டனை தந்து துன்பப்படுத்துதல், அவனது பொருட்களைக் கைப்பற்றுதல், அவனைக் கொன்றுவிடுதல் என மூவகைத் தண்டனைகள் இருந்து வந்துள்ளன என்பதை இதன் மூலம் அறியலாம்.

**மன்னவன் தவிர்க்க வேண்டியவை**

அதிகார பலத்தால் குடிமக்களுக்கு இன்னல்களை உண்டாக்கிய மன்னவன், அக்குடிகளின் துன்பங்களை இன்பமாக

ஏற்றுக் கொள்வானாகில், அவன் கொடுங்கோலன் எனவும், அவ்வாட்சி கொடுங்கோலாட்சி எனவும் அழைக்கப்படும். கொடுங்கோலாட்சியாவது முறை தவறி ஆட்சி செய்தலும், குடிமக்களிடம் இரக்கப் பண்பு காட்டாததும், மக்கள் வாழ்வு நலியாமல் காக்கத் தவறுதலும் ஆகும்.

அரசன் மக்களைத் தொடர்ந்து துன்புறுத்தி, அவர்களுக்கு வேண்டாத ஒரு செயலைச் செயல்படுத்தினால் கொலையையே தன் தொழிலாகக் கொண்டு விளங்கும் கொலைகாரனைவிடக் கொடியவனாவான். இவ்விழிவைப் பற்றித் திருவள்ளுவர்,

**கொலைமேற் கொண்டாரின் கொடிதே அலைமேற்கொண்டு**
**அல்லவை செய்துஒழுகும் வேந்து (குறள். 551)**

என்ற வரிகளால் காட்டியுள்ளார். குடிகளைத் துன்புறுத்தும் அரசன் "கொலையாளி" என இகழப்படுவான் என்ற உண்மையை இதன்கண் அறியலாம். நாள்தோறும் நடைபெறும் செயல் பாட்டினை ஆராய்ந்து பார்க்காமல், மனம் போன போக்கில் சென்று, நீதிநெறி பிறழ்ந்து ஆட்சி செய்யும் மன்னவனுக்கு நிதியில்லாமலும், குடிமக்களின் ஆதரவு இல்லாமலும் கெடுவான் என்பதை,

**கூழும்குடியும் ஒருங்கு இழக்கும் கோல்கோடிச்**
**சூழாது செய்யும் அரசு (குறள். 554)**

என்னும் குறள்மூலம் தெரிவிக்கின்றார். குறளில் வரும் கூழ் என்பதற்கு மழை எனப் பொருள் கொள்வார் பரிமேலழகர். மனம் போன வழியே சென்று, "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்று முறை தவறி ஆட்சி செய்பவன் மக்களின் ஆதரவும் இல்லாமல் போய்விடுவான் என்பதை இக்குறள்வழி அறியமுடிகிறது.

அரசியலைக் கருவியாக்கி, அரசாட்சி புரியும் மன்னவனுக்குரிய ஆளுமைத் தகுதியை தக்கமுறையில் எடுத்துரைத்து, தவறிழைக்கும் நேரத்தில் தருணம் கண்டு இடித்துரைத்து, நல்வழிப்படுத்தும் நெறியாளர்களை தன்னருகே வைத்துக் கொண்டு, மனம்போனபடி ஆட்சி செய்யாமல் மக்களின் தேவையறிந்து, மக்களின் குடியுயரச் செய்யும் போக்குகள் அக்கால அரசியலில் இருந்தன. அத்தோடு, நீதியுரைத்ததில் தவறு என்றுணர்ந்த மன்னவன் மானம் கருதி உயிர்துறந்த வரலாற்றையும் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இவ்வழி நின்று அரசாட்சி செய்கின்ற அதாவது "அரசியலில் நேர்மை கொண்ட ஆட்சியே" வள்ளுவர் காணும் அரசியல் நெறியாக அறியப்படுகிறது.

# வள்ளுவர் வகுத்த வாழ்வியல் நெறி

முனைவர் மு.சுதா

பொற்காலமாம் சங்ககாலத்திற்குப் பிறகு களப்பிரர் பாண்டிய நாட்டைக் கைப்பற்றிய காலம் முதல் சங்கம் மருவிய காலம் தொடங்குகிறது. களப்பிரர் ஆட்சியால் தமிழர் நாகரீகத்தில் ஏற்பட்ட மாற்றத்தினால் உண்டாகிய புதிய சிந்தனைகள் அறநூல்களாக உருவாகின. அவ்வாறு தோன்றிய நூல்களுள் காலத்தால் முற்பட்டது திருக்குறள். சங்க இலக்கியங்களிலிருந்து மாற்றம் பெற்று ஒழுக்கநெறியைப் போதிப்பதை முதன்மையாகக் கொண்டு தோன்றிய நூல்களுள் மிகச்சிறந்த நீதிநூல் எனப் புகழப்படுவது. உலகப் பொது மறையாய் விளங்குவது. 1330 குறள் வெண்பாக்களால் மூன்று அதிகாரங்களாய் அமைந்தது. பழந்தமிழர் மரபைப் பின்பற்றி அறம், பொருள், இன்பம் பற்றி எடுத்துரைப்பது. இருளகற்றும் விளக்காய் இந்நூலுள் காணக்கிடப்பது எண்ணவியலா கருத்துகள். இதற்குக் கருத்தரங்க ஆய்வுத்தலைப்புகளைச் சான்றாகக் காட்டலாம்.

இக்கட்டுரை இச்சிறப்புடைய நூலிலிருந்து ஆய்ந்து எடுக்கவுள்ளது "வள்ளுவர் வகுத்த வாழ்வியல் நெறி" என்பதாகும். அகமும் புறமுமாக சங்க இலக்கியங்கள் பண்டைத்தமிழரின் வாழ்வியல் நெறிகளைப் பதிவு செய்துச்செல்ல பின்வந்த அறநூல்களும் அம்மரபைப் பின்பற்றி அதே நேரத்தில் வாழ்வியலுக்கு வேண்டிய நெறிகளையும் எடுத்துரைத்தன. அவற்றுள் திருக்குறள் எல்லா காலத்தும் எல்லா மக்களுக்கும் ஏற்ற வகையில் அறத்தை எடுத்துரைத்தது. அதன் சிறப்பை உலகளாவ வைத்தது. எண்ணற்ற கருத்துகளுள் ஒன்று பெண்மையைப் பேணுதல் என்பதாகும். ஆண், பெண் என்ற இரண்டு உலக இயக்கத்தில் நிகழும் அகவாழவு சங்ககாலத்துப் போற்றப்பட்டது. அந்த அகவாழ்வில் கடைபிடிக்க வேண்டிய வாழ்வியல் நெறிமுறைகளைத் திருக்குறள் எடுத்தோதியது.

கடலன்ன கருத்துகளைத் தன்னகத்தே கொண்ட திருக்குறளில் வாழ்வியல் நெறிமுறைகள் பல எடுத்துரைக்கப்பட்டாலும் வாழ்வியலின் முக்கிய அங்கமான பெண்மையின் சிறப்பை அதனைப் பேணும் முறையினை இல்லறம் நல்லறமாய்ச் சிறக்க வேண்டிய நெறிமுறைகளை வகுத்தளித்திருப்பது எல்லா காலத்தும் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படவேண்டிய ஒன்றாகும். "பெண்வழிச்சேரல்" என்ற அதிகாரத்தில் திருவள்ளுவரால் படைக்கப்பட்டப் பத்துக் குறட்பாக்கள் இங்கு ஆய்வுக்குரியனவாகின்றன. இப்பத்துக் குறட்பாக்களுக்கு உரிய உரைகள் முரண்பாட்டைத் தருகின்றன. வள்ளுவரின் உளநிலை அறியாது போனதோ என்ற தோற்றத்தைத் தருகின்றன. இப்பத்துக்குறட்பாக்களின் உரைப்பொருள் அனைத்தும் பெண்மையைத் தாழ்த்தி உரைப்பனவாய் உள்ளன. யாவும் அறிந்த உலகப் பொதுமறைக் கருத்துகளை அருளிய வள்ளுவர் பெண்மையை இழித்துரைப்பாரா என்பது வினவுதற்குரியது. "பொய்மையும் வாய்மை இடத்து" என்று கூறியபோதும் அதன் பின்னே "தன்னெஞ்சறிவது பொய்யற்க" என்றும் அறிவுறுத்துகிறார்.

ஏற்கவேண்டியது, ஏற்கக்கூடாதது எதுவென இடித்துரைக்கும் வள்ளுவர், பெண்மைபற்றி உரைக்கும்போதும் ஓர் இல்லறம் நல்லறமாய்ச் சிறக்கச் செய்ய வேண்டியவற்றையும் செய்யக் கூடாதனவற்றையும் இவ்வதிகாரத்தில் சுட்டிச் செல்கின்றார் என்பதே சரியானது. தன் வழி ஒழுகற்பாலளாய இல்லாள் வழியே ஓர் ஆண்மகன் எவ்வாறு ஒழுகுதல் வேண்டும் என்பதை இப்பத்துப்பாக்களுள் வரையறுத்துள்ளார்.

எந்த ஒன்றிலும் நாணயத்தின் இருபக்கம்போல் நன்மை தீமை என்றிரண்டு உள்ளதைப்போல் வள்ளுவரும் இப்பாக்களுள் ஓர் சிறந்த தலைவன் என்பவன் இல்லறத்தில் எது நன்மை எது தீமை என்றுணர்ந்து வாழ வேண்டும் என எடுத்துரைத்துள்ளதுடன் சிறந்த அறங்களுள் ஒன்றான இல்லறம் சிறக்க, எவ்வாறிருக்க வேண்டும் என்பதையும் உணர்த்துகிறார். இங்கு எங்கும் பெண்மையை இழித்துரைப்பது போன்ற கருத்தில்லை என்பது குறிப்பிடத்தகுந்தது. வாழ்வியல் நெறி மட்டுமே இங்கு போதிக்கப்படுகின்றது. பெண்ணைச் சார்ந்து வாழும் இல்லற வாழ்க்கையில் எவ்வாறு வாழவேண்டும் என்பது எடுத்துரைக்கப்படுகிறது.

**வினையே ஆடவர்க்கு உயிரே - வாணுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்**

என்று குறுந்தொகை சமூகத்தில் ஆண் பெண் வாழ்ந்தமையை எடுத்துரைக்கின்றது. இக்கருத்தை வள்ளுவரும் இவ்வதிகார முதல் குறளிலேயே போற்றுகிறார்.

**மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்**
**வேண்டாப் பொருளும் அது**

என்கிறார். ஓர் ஆண்மகனுக்கு கடமையே பெரிது. அவன் மனை போற்றுதலைவிட வினைபோற்றுதலே பெருமையுடைத்து. மனைக்குரிய பெண்மை மனை போற்றுவதோடு தன் மனைக்குரியவனையும் போற்றுதல் அவர்களது கடமை என முதலில் எடுத்துரைக்கிறார்.

ஓர் ஆணின் கடமையை எடுத்துரைத்த வள்ளுவர் அடுத்து அத்தகைய தலைவன் வினைத்திறன் உடையவனாய் மட்டுமல்லாது சிறந்த இல்வாழ்க்கை உடையவனாகவும் இருக்க வேண்டும் என்பதைக் கூறுகிறார். அதற்கு எவ்வண்ணம் இருக்க வேண்டும் என்றும் கூறுகிறார்.

**பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்**
**நாணாக நாணந் தரும்**

தன் கடமை உணர்ந்து செயல்படாது பெண்விழைவான் செயல் நாணத்தைத் தரும் என்கிறார். ஆதலால் ஒருவன் சிறந்து விளங்க நாட்டை மட்டுமல்லாமல் வீட்டை, தன்னைச் சார்ந்த தன் இல்லாளைப் பேணுதல் வேண்டும். அவ்வாறு பேணாது பெண்மையை மட்டும் விரும்பும் செயல், நாணத்தை உண்டாக்குவது என்கிறார். அதேநேரத்தில் தன்னைப் போற்றும் இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை அதாவது விட்டுக் கொடுத்து வாழாத தன்மை எப்பொழுதும் நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத்தும் கொடுக்கும் என்றும் அறிவுறுத்துகிறார். இல்லாளுடன் வாழ வேண்டிய முறைமையைக் கூறியவர், அப்பெண்மையிடத்து எவ்வாறு இருத்தல் கூடாது என்ற நெறியையும் கூறிச் செல்கிறார். இல்லாளிடத்து அஞ்சி நடத்தல் கூடாது. அவ்வாறு நடப்பவன் மறுமைப்பயன் இலாதவன், அவன் எப்பொழுதும் நல்லார்க்கு நல்லது செய்ய அஞ்சுவான் என்கிறார். "இல்லானை அஞ்சி விருந்தின் முகங்கொன்ற நெஞ்சின் புல்லாளனாக" என்ற சீவக சிந்தாமணி கருத்து இங்கு நோக்கத்தக்கது. மேலும்,

**இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்**
**அமையார்தோள் அஞ்சு பவர்**

என்கிறார். தம் இல்லாளுடைய வேய் போன்ற தோளினை அஞ்சுபவர் இமையோரைப் போல வாழ்ந்தாலும் பெருமையில் என்கிறார். இல்லாளிடத்து அஞ்சி நடத்தல் ஓர் ஆண்மகனுக்கு

எவ்வாறு நாணத்தைத் தருவதோ அந்த அளவிற்கு அப்பெண்மையை ஏவல் செய்வதும் நாணம் தரும் செயலே என்று அடுத்த நான்கு குறட்பாக்களுள் தெளிவுபடுத்துகிறார்.

**பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்**
**பெண்ணே பெருமை உடைத்து**

என்கிறார். பெண்ணை ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின் நாணுடைப் பெண்மையே மேம்பாடு உடையது என்கிறார். நல்நுதலாளிடத்து பொய் சொல்லி ஒழுகுபவர் தம்மோடு நட்புச் செய்தாரின் குறை முடிக்கமாட்டார். நன்றும் ஆற்றார் என்கிறார். மேலும்,

**அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்**
**பெண்ணேவல் செய்வார்கண் இல்**

என்கிறார். பெண்ணை ஏவல் செய்வாரிடத்து அறச்செயலும் அது முடித்தற்கு ஏதுவாகிய பொருட்செயலும் பிற வினையும் இல என்றுரைக்கிறார். இம்மூன்று குறட்பாக்களில் ஏவல் செய்வது குற்றம் என்கிறார். இறுதியாக,

**எண்சேர்ந்த நெஞ்சத்து இடனுடையார்க்கு எஞ்ஞான்றும்**
**பெண்சேர்ந்தாம் பேதைமை இல்**

என்று முடிவும் கூறுகிறார். இல்லறத்திற்கு வேண்டிய காமத்தின் பாற்பட்ட ஆக்கம், சிதைத்தல், அழிவுதலைத்தருதல் என்னும் தொழில்களுக்குக் காரணமான செயல்களான விழைதல், அஞ்சல், ஏவல் என்ற மூன்று பொருள் பற்றிக் கூறிய வள்ளுவப் பெருமான் இறுதியில் நன்றாக எண்ணிச் செயல்படக்கூடிய நெஞ்சத்தை உடைய நிலைத்த தன்மை உடையவனிடத்து எப்போதும் பெண் சேர்ந்ததால் அறியாமை உண்டாயிற்று என்ற கருத்திற்கே இடமில்லை என்று அறுதியிடுகிறார். எண்ணுதல் உடைய, வள்ளுவர் மேற்உரைத்த இல்லறத்தில் எவ்வாறு ஒழுக வேண்டும் என்ற தன்மைகள் அறிந்த தலைவனிடத்து அறியாமை என்பதற்கே இடமில்லை. மேலும் அவன் பெண்மையைச் சேர்ந்ததால் இவ்வாறு உண்டாயிற்று என்ற கருத்திற்கே இடமில்லை என்பது வள்ளுவரின் வாக்கு.

இவ்வாறு பெண்வழிச்சேரல் என்ற இந்த அதிகாரத்தில் அமைந்துள்ள பத்துக்குறட்பாக்களின் வாயிலாக இல்லறம் எனும் நல்லறம் சிறந்து விளங்க எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும், ஒரு சிறந்த தலைமகனுக்கு அழகு தருவது எது, அவன் எப்படி நடந்து கொள்ளக் கூடாது, தன்னை ஒழுகும் இல்லாளிடத்து தான் ஒழுக வேண்டிய முறைமை என வாழ்வியலுக்குத் தேவையான நெறிகளை வகுத்துரைத்துள்ளார்.

# வள்ளுவர் காட்டும் நட்பு

**முனைவர் பே.நடராசன்**

**முன்னுரை**

ஒரு காலத்தில் தோன்றிய நீதி நூல்கள் இன்னொரு காலத்திற்குப் பொருந்தாமல் போகக் கூடும். சட்ட நூல்கள் எப்படிக் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்ப மாற்றம் அடைகின்றனவோ அவ்வாறே நீதி நூல்களும் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்ப மாறுபடுகின்றன. எல்லாக் காலத்துக்கும் இடத்துக்கும் பொதுவான அடிப்படை நீதிகளும் உண்டு. தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் பொருந்தக் கூடிய நீதிகள் எல்லாம் ஒருங்கே அமைந்த நூல் திருக்குறளாகும். இத்தகைய திருக்குறள் நூலில் திருவள்ளுவர் நட்பின் இலக்கணத்தைக் கூறுகிறார். ‘நட்பு’ தனி மனிதர்க்கும் அரசியல் முதலானவற்றில் இருப்போர்க்கும் மிக முக்கியமான ஒன்றாகும். தமிழ் அறஇலக்கியப் படைப்பாளிகள் அனைவருமே தோழமை எனும் நட்பைப் பொதுமாந்தர்க்கு வேண்டும் என எழுதியுள்ளனர். நீதி இலக்கியமான திருக்குறளில் கூறப்பெறும் நட்பின் சிறப்புக் குறித்து ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**நட்பின் அடிப்படை பண்பு**

அன்பினால் ஆர்வமும் அதனால் நட்பும் ஏற்படும் என்கிறார் வள்ளுவர். இதனை,

**அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்**
**நண்பென்னும் நாடாச் சிறப்பு (குறள். 74)**

என்னும் அடியால் அறியலாம். அன்பு ஆர்வம் இரண்டும் இல்லறவியலில் கூறப்பட்டுள்ளதால் இல்லறத்தை மேற்கொள்ளும் அனைவருக்கும் இது உரியதாகும்.

**“ஆரொடும் ஆர்வம் விட்டார் அதனினும் செற்றம் விட்டார்” (4வது பெருந்திரட்டு) ஆர்வமும் செற்றமும் விடுதலை குறித்தவை. இவையிரண்டும் துறவிகட்கு உரியனவாகும்.**

**நட்பு சிறப்பு**

துறவிகட்கு நண்பரும், பகைவரும் இல்லை எனலாம். அரசியலின் இறைமாட்சி என்னும் அதிகாரத்தில் உள்ள,

**பகைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண்ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு (குறள். 381)**

He is a lion among kings who has a powerfull army a loyal subjects infinite resources for seeing ministers good friends and impregnable fortifications.

என்னும் குறள் அரசனுக்குரியவைகளாக ஆறு உறுப்புகள் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒன்று நட்பாகும். பரிமேலழகர் கருத்தின்படி நட்பு, நட்பாராய்தல், பழமை, தீநட்பு, கூடா நட்பு என்னும் ஐந்தும் விதிமுக அதிகாரங்களாகும். திருக்குறளில் நட்பைப் பதினேழு அதிகாரங்களில் காணமுடிகிறது.

**அன்பின் மாட்சி**

**திருக்குறளில் இல்லறவியலில் இல்வாழ்க்கை என்னும் அதிகாரத்தில்,**

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது (குறள். 45)**

"If the light of love and virtue illmunies a home, it becomes perfect and all its ends fullfilled." என்னும் குறள் உள்ளது.

இதனால் அன்பு இல்லறத்துக்கு இன்றியமையாதது என்பது தெரிகிறது. அன்பு என்பது இல்லறத்தில் தான் தொடங்குகிறது என உணர முடிகிறது. துறவியலில் அன்பு என்பது துறவிகளுக்கு மட்டும் உரியது என ஒரு சிலர் கருதுவர். ஆனால் அன்பு என்பது இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் பொதுவான ஒன்றாகும் என்பது அறிஞர்களின் எண்ணமாகும்.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு (குறள். 72)**

**மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல்லென்ப**
**தன்னுயிர் அஞ்சும் வினை (குறள். 244)**

என்னும் இரண்டு குறட்பாக்களையும் கூர்ந்து கவனித்தால் அன்பும் அருளும் தன்னலம் கருதாத குணங்கள் என்பது புலப்படும். அன்பு உயர்திணை மக்களிடத்தும், அருள் உயர்திணை, அஃறிணை உயிர்களிடத்தும் பிறக்கும் என்பது புலனாகின்றது. அன்பினை சைவ சித்தாந்திகள் ஆன்மாவினது

இச்சா சக்தியின் காரியம் என்பர். சமணர் உடல்கொள் உயிர்க்குணம் என்பர். கந்தபுராணம் ஆசிரியர் அறம் செய்ததாக அன்பு விளையும் அன்பிலிருந்து அருள் என்னும் குழவி தோன்றும் என்று கூறியுள்ளார். இதனையே வள்ளுவரும் "அருள் என்னும் அன்பு ஈன்குழவி" என்கிறார்.

**நட்பினைப் பற்றி வள்ளுவர் கூறும் செய்திகள்**

நட்பு அன்பினாலும், அறியாமையாகிய இருளின் மயக்கத்தினாலும், காமத்தினாலும் தோன்றக்கூடும். ஆனால் அன்பினால் நற்பண்புடையாரிடத்தே தோன்றும் நட்பே நலம் பயக்கும் நட்பாகும். திருவள்ளுவர் நட்பு என்னும் அதிகாரத்தில் நட்பின் சிறப்பு, பயன், நட்பு விளைவதற்குரிய காரணங்கள், நட்பின் இலக்கணம் முதலியவற்றைக் கூறுகிறார். நட்பாராய்தல் (80) என்னும் அதிகாரத்தில் உண்மை நட்பையும் போலி நட்பையும் கூறுகிறார். பழைமை (81) என்னும் அதிகாரத்தே பழைய நண்பர்களைப் பற்றியும் அவர்களிடம் கடைபிடிக்க வேண்டிய நட்பு முறைமைகளையும் பற்றிக் கூறுகிறார். மேலும் தீ நட்பு, கூடா நட்பு முதலியவற்றையும் எடுத்தியம்புகிறார்.

**நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்**
**பண்பு உடையாளர் தொடர்பு (குறள். 783)**

படிக்கும் தோறும் சிறந்த நூலின் நயம் மேலும் மேலும் புலப்பட்டுக் கொண்டே இருக்கும். அதுபோல பழக பழக இன்பம் தரக்கூடியது நல்லவரோடு கொண்டிருக்கும் நட்பாகும்.

**நட்பு விளைவதற்குரிய காரணங்கள்**

நட்பு செய்வதற்கு தொடர்பும் பழக்கமும் வேண்டாம். ஒத்த உணர்ச்சி நட்பு ஏற்படுவதற்குரிய உரிமையைக் கொடுக்கும். இதனை வள்ளுவர்,

**புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
**நட்பாங் கிழமை தரும் (குறள். 785)**

என்று கூறியுள்ளார்.

"பிறப்பு X இறப்பு என்பது போல புணர்ச்சி X உணர்ச்சி எதிர்மறைப் பொருளது. ஐரோப்பிய ஆடவரும் பெண்டிரும் முத்தம் கொடுத்துக் கொள்ளுதல் போன்ற புறநிகழ்ச்சியில் நேரம் போக்குவர். அதைவிட அகஉணர்ச்சி முதன்மையானது என்பது பரிமேலழகர் கருத்து. கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் நேரில் சந்திக்காது இருந்த நட்பை

சான்றாகக் குறிப்பர். சோழ பாண்டியர் இருவரும் ஒருங்குகூடி இருந்ததைப் பார்த்து 'இன்றே போல்க நம் புணர்ச்சி' என்றார் சங்ககாலப் புலவர் (புறம் 58) கரிக்கண்ணனார் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி ஒத்தல் என்னும் மூன்றினுள் மூன்றாவதே முதன்மையானது என்பர் பரிமேலழகர். (க.ப.அறவாணன் திருவள்ளுவம். 458)

சுக்ரிவனும் விபீடணனும் ஒருவரை ஒருவர் கண்டு நட்புற்ற நிகழ்ச்சியைக் கம்பராமாயணத்தில் காணலாம்.

**"தொல்பொருள் காலமெல்லாம்,**

**எல்லியும் பகலும் போலத்**
**தழுவினர் எழுவின்றேனார்" (கம்பராமா-விபீடணன் அடைக். 120)**

என்னும் அடிகள் நட்பின் பண்பினைக் குறிக்கின்றது.

**தீநட்பு கூடா நட்பு**

அன்பும் அறிவும் இல்லாதவர்களுடைய நட்பு பகைவரின் கொடும் பகையினும் கொடியது. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவோர் உறவு கலவாமை வேண்டும் என்று பாடியுள்ளார் வள்ளலார்.

"நட்பு ஆராய்தற்கண் சுருங்கச் சொல்லிய துணையான் அடங்காமையின் 'தீ நட்பும் என்றும் கூடா நட்பும்' என்றும் இரு அதிகாரங்களாகக் கூறுவார் என்பர் பரிமேலழகர். பகைமையான் அகத்தால் கூடாது இருந்தே தமக்கு வாய்க்கும் இடம் பெறுந்துணையும், புறத்தால் கூடி ஒழுகுவார் நட்பு என்பர் பரிமேலழகர்" (க.ப.அறவாணன் திருவள்ளுவம் பக்.464)

நட்பின் தன்மையைப் பார்க்காமல் தமக்குக் கிடைக்கும் பலனை மட்டும் எதிர்பார்க்கும் நண்பரும், அன்பிற்கு இடம்கொடுக்காமல் அவரிடம் பொருளை மட்டும் எதிர்பார்க்கும் விலைமகளிரும் கள்வரும் ஒரே தன்மையுடையவர் ஆவார்கள் என்கிறார் திருவள்ளுவர்.

**உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது**
**கொள்வாரும் கள்வரும் நேர் (குறள். 813)**

Friends having an eye on their profirs harlots bent on their gains robbers lying in wait for plunder are of the same ilk.

**இன்றைய நட்பு நிலை**

இன்றைய நட்பின் நிலை உள்ளத்தோடு ஒன்றியதாக அமையவில்லை. பயன்கருதிய நட்பாகத்தான் விளங்குகின்றது.

பொருளாதார அடிப்படையில் வாழ்க்கையின் தரத்தை உயர்த்துவதற்காக நட்பு பயன்படுத்திக் கொள்ளப்படுகின்றது. நட்பு என்றென்றும் போற்றுதலுக்குரியதாக விளங்க வேண்டும்.

**உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு (குறள். 788)**

என்பதுபோல நட்பு விளங்க வேண்டும் என்கிறார் திருவள்ளுவர்.

**முடிவுரை**

உலகில் நட்புப்போலச் சிறந்ததில்லை; நட்பு செய்வோர் நன்கு ஆராய்ந்து தேர்ந்து எடுத்துக்கொள்ள வேண்டும் என்பது போன்ற கருத்துக்கள் இங்கு விளக்கப்பட்டுள்ளன. பழகிய நண்பர் தவறு செய்தபோதிலும் பொறுத்துக் கொள்ளவேண்டும்; எந்த நேரத்திலும் தீயோர் நட்பை விலக்கிக் கொள்ள வேண்டும் என்பது போன்ற நட்பு பற்றிய விளக்கங்களைக் குறள்வழிச் சிந்தனைமூலம் நாம் அறிய முடிகிறது.

# வள்ளுவர் வகுத்த வாழ்வியல்நெறி

**முனைவர் வெ.கலைச்செல்வி**

தனிமனிதர்கள் அடங்கிய சமுதாயம் நல்வாழ்க்கை வாழ வகுக்கப்பட்ட வாழ்வியல் விதிப் பெட்டகமாகத் திருக்குறள் எக்காலமும் திகழ்வதைக் காணலாம். வாழ்க்கை என்பது குறிக்கோள் உள்ளதாக இருக்க வேண்டும். உயர்வான வாழ்க்கையே உன்னத வாழ்க்கை. அவ்வாழ்க்கையில் ஒவ்வொருவரும் கைக்கொள்ள வேண்டிய வாழ்வியல் நெறிகளைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே வள்ளுவர் வகுத்துள்ளார். அது மொழி, இனம், நாடு கடந்து உலக சமுதாயத்தினருக்கு முக்காலமும் பொருந்துவதாய் உள்ளது. திருக்குறள் தனிமனித வாழ்க்கையைப் பயனுள்ளதாகவும் பண்பட்டதாகவும், பொருளுடையதாகவும் ஆக்குகிறது. வள்ளுவருக்குச் சமுதாயத்தின்மீது இருந்த ஆர்வம், அக்கறை, பிடிமானம், பொறுப்புணர்ச்சி ஆகியவைகளை திருக்குறள் வழி உணரலாம். மக்கள் தம்மன மாசுக்களைக் களைந்து செம்மையான நெறிகளைக் கடைப்பிடித்து வாழ்ந்து இம்மை மறுமைப் பயன்களை அடைய வள்ளுவம் துணைநிற்கிறது.

திருவள்ளுவர் திருக்குறள் முழுவதுமே வாழ்வியல் நெறிகளை பசுமரத்தாணி போல் மனதில் பதியுமாறு விளக்கமாய் எடுத்துரைத்துள்ளார். அவற்றைச் சுட்ட இக்கட்டுரை முனைகிறது.

**வள்ளுவத்தில் வாழ்வியல் நெறிகள்**

பொருள் மட்டுமே முதன்மைப்படுத்தப்படும் இன்றைய சமுதாயம் அடிப்படை மனிதப் பண்புகளை இழந்து, மனிதநேயத்தைத் தொலைத்துக் குறிக்கோளற்ற வாழ்க்கை நெறியைக் கொண்டுள்ளதைக் கண்கூடாகக் காணலாம். கொலை, கொள்ளை, ஊழல், பாலியல் பிறழ்வுகள் பெருகிவிட்ட சூழலில் இன்று கட்டாயம் கைக்கொள்ள வேண்டிய வள்ளுவரின் வாழ்வியல் நெறிகளை நாம் ஒவ்வொருவரும் அறிந்து பின்பற்ற வேண்டியது இன்றியமையாதது. திருக்குறள் முழுவதுமே வாழ்க்கை நெறிகள் புதைந்துள்ளன. அன்புடைமை,

அடக்கமுடைமை, அருளுடைமை, அவை அஞ்சாமை, அழுக்காறாமை, அறிவுடைமை, இனியவை கூறல், இன்னா செய்யாமை, ஒழுக்கமுடைமை, கள்ளுண்ணாமை, காலம் அறிதல், கொல்லாமை, சான்றாமை, சொல்வன்மை, தெரிந்து செயல்வகை, நாண் உடைமை, பண்புடைமை, பிறன் இல் விழையாமை, புலால் மறுத்தல், பெரியாரைத் துணைக்கோடல், பொச்சாவாமை, வாய்மை, விருந்தோம்பல், வினை செயல்வகை, வினைத்தூய்மை, வெகுளாமை, வெஃகாமை, வெகுவந்த செய்யாமை ஆகிய அதிகாரங்களில் வள்ளுவர் தெற்றென எடுத்துரைத்த வாழ்வியல் பதிவுகள் மனிதர்களை நெறிப்படுத்த வழிகாட்டுகின்றன. அன்றாட வாழ்க்கையில் மனிதர்கள் ஒழுக வேண்டிய நெறிகளின் தொகுப்பாகத் திருக்குறள் விளங்குகிறது.

**வாழ்வியல் நெறிகளின் அடிப்படை**

மனிதர்கள் அறத்தின் வழி பொருளீட்டி அதன்வழி இன்பத்தைத் துய்த்து விட்டு பின்னர் வீடுபேறு அடையலாம் என்பதே இலக்கியங்களின் வாழ்க்கைத் தத்துவமாக உள்ளது. தமிழ்ச் சமுதாயம் பண்புள்ள சமுதாயமாக, ஒழுக்கமுள்ள சமுதாயமாக வாழ வேண்டும். உலகினருக்குச் சான்றாக எடுத்துரைக்கும் உன்னதமான தமிழ்ச்சமுதாயம் உலகில் புகழ்பெற்று என்றும் பேசப்படவேண்டும் என்ற வள்ளுவரின் தமிழ்ச் சமுதாயப் பற்றினை அவர் கருத்துக்களின் வழி நாம் அறியலாம். தனிமனிதத் தூய்மையே நல்ல சமுதாயத்தைக் கட்டிக் காக்கும் அரண் என்பதை உணர்ந்த அறிஞராக வள்ளுவர் விளங்குகிறார். தனிமனிதன் சிறந்து விளங்கினால் நாடு சீரும் சிறப்புமடையும் என்ற வள்ளுவரின் தொலைநோக்குப் பார்வையே அவர் சுட்டிச்சென்ற வாழ்வியல் நெறிகளுக்கு அடிப்படையாகும்.

**அன்புடைமை**

வாழ்க்கையின் சிறப்பினைக் கூற விழையும் வள்ளுவர் வாழ்வின் தலையாய பண்பாகவும் பயனாகவும் அன்பினையும் அறத்தினையும் எடுத்துரைக்கிறார். அன்பின் சிறப்பை எடுத்துரைக்கும் வள்ளுவர் அன்பில்லா வாழ்க்கை வாழ்க்கையல்ல, அன்பில்லா உடல் வெறும் தோல் போர்த்த உடம்பு என்கிறார். இன்று உலகம் முழுவதும் நடக்கும் தீவிரவாதத்திற்குத் தனிமனித அன்பு இல்லாததே காரணம். அன்பற்ற சமூகம் அழிந்து போகும். வன்முறை நிறைந்த தலைமுறை பெருகும். அன்பு இல்லாத தனிமனித வாழ்க்கை அழிவிற்கே வழிவகுக்கும். எனவே வாழ்வின் உயிர்நிலையான அன்பை அனைவரும் பேண வேண்டும் என்பது வள்ளுவரால் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு (குறள் 72)**
**அன்பீனும் ஆர்வமுடைமை (குறள் 174)**

**அன்பின் வழியது உயர்நிலை அஃதிலார்க்**
**கென்புதோல் போர்த்த உடம்பு (குறள் 80)**

**விருந்தோம்பல்**

இல்வாழ்க்கையின் தலையாயப் பண்பாக வள்ளுவர் விருந்தோம்பலை எடுத்துரைத்துள்ளார். விருந்தினர்களை அகம் குளிர முகம் மலர உபசரிக்க வேண்டும். ஒருவன் பெறும் தவப்பேறு விருந்தோம்பல். விருந்தினர்களை உபசரிக்காது விடுவது மடமை என்றெல்லாம் வள்ளுவர் வலியுறுத்துவதன் மூலம் உறவினர்களை ஓம்பி வாழவதால் மட்டுமே ஒருவன் சிறந்து வாழ முடியும். கூடி வாழும் பண்பு மேலோங்கும். சுற்றத்தினர் தனிமனித வாழ்க்கை சிறந்து விளங்கத் துணைசெய்வர்; குற்றம் கடிவர்; இடித்துரைப்பர்; நல்வாழ்க்கை வாழ வழிகாட்டுவர்; எனவே விருந்தோம்பல் நல்ல இல்லறத்தின் சிறப்பு என்கிறார் வள்ளுவர். இன்று தனிக்குடும்பங்கள் பெருகி விட்டன. விருந்தினர்களை உபசரித்து கூடிக்குலவும் நடைமுறையும் குறைந்து வருகிறது. உறவினர் வட்டம் சுருங்கிக் கொண்டே வருகிறது. குடும்பத்தில் உள்ள குழந்தைகள் உறவினர்களின் உறவினைக் கூட அறிந்து உறவாட முடியாத நிலையை இன்றைய சமுதாயத்தில் காண முடிகிறது. குடும்பச் சிக்கல்கள், மணமுறிவுகள், தனிமனித ஒழுக்கமின்மை ஆகியவை பெருகி வருவதற்கு விருந்தோம்பல் பண்பு இன்று குறைந்து வருவது ஒரு காரணம் எனலாம்.

**வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**
**பருவந்து பாழ்படுதல் இன்று (குறள் 83)**

**இனியவை கூறல்**

பேசும் வார்த்தைகளுக்கு வலிமையுண்டு. சொற்களே செயலாக உருமாறும். நற்சொற்கள் நன்மை விளைவிக்கும். உறவினைப் பலப்படுத்தும். உறவினர்களைப் பெருக்கும். புகழ் விளைவிக்கும். நல்ல சொற்களைத் தேர்ந்தெடுத்துப் பேசுவதே அறம். பேசும் வார்த்தைகளே நன்மைக்கும், தீமைக்கும் காரணம். ஆயிரம் நல்லசொற்கள் இருக்கும்பொழுது தீயசொற்களை, கடினச் சொற்களைப் பேசுபவனை உலகம் ஒதுக்கும். இழித்துரைக்கும். இதையே திருவள்ளுவர் நல்ல சுவையான கனி இருக்கும்பொழுது காயை உண்ணக் கூடாது என்கிறார். எனவே ஒவ்வொருவரும் இனிய சொற்களைப் பேசுவதால் அனைவரும்

இன்புறுவர். இன்சொல் பேசுபவர் மட்டுமல்லாது, அதனைக் கேட்பவரும் நல்ல உளநலத்துடன் விளங்குவர். எனவேதான் மட்டுமன்றி, தன்னைச் சார்ந்தவர்களும் மகிழ்ச்சியுடன் வாழ இன்சொல் மட்டுமே பேசவேண்டும் என்ற வள்ளுவரின் அவா போற்றத்தக்கது.

**துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்**
**இன்புறூஉம் இன்சொ லவர்க்கு (குறள். 94)**

**சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்**
**இம்மையும் இன்பம் தரும் (குறள். 98)**

ஒருவர் பேசிய நற்சொல்லைவிடத் தீச்சொல்லே மனத்தில் நிற்கும். தீச்சொற்களால் இன்று மனிதர்கள் பிளவுபட்டு நிற்கின்றனர். பேசிய சொற்களை ஒருவர் திரும்பப் பெற முடியாது. பலநேரங்களில் பேசும் தீச்சொற்களால் கொலையே செய்யும் அளவிற்கு மனிதர்கள் சென்று விடுகின்றனர். எனவே அடக்கத்துடன் சொற்களைப் பேசுவது அனைவருக்கும் நல்லது என்று வள்ளுவர் அறிவுரை பகர்கிறார்.

**ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்**
**நன்றாகா தாகி விடும்**

**தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு. (குறள் 129)**

**பிறன் இல் விழையாமை**

ஒருவனின் அழிவிற்குப் பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை ஆகிய மூன்றும் காரணம் என்பர் ஆன்றோர். பெண்ணாசையால் பெரிய சாம்ராஜ்யங்கள் மண்மேடுகளாக மாறியதை வரலாறு கூறும். வாழ்க்கையின் தலையாய நோக்கம் ஒழுக்கம் என்றுரைத்த வள்ளுவர் ஒழுக்கமுடைமை அதிகாரத்தை அடுத்து பிறன் இல் விழையாமையை வைத்துள்ளார். பிறருக்குரிய பொருட்கள் எதையும் ஆசைப்படக் கூடாது. பழிபாவங்களுக்கு அஞ்சி வாழ்வதே உண்மையான வாழ்க்கை. பிறன்மனை நோக்காப் பேராண்மை, பழியற்ற வாழ்க்கை வாழ வலியுறுத்தும் வள்ளுவர் தனிமனித ஒழுக்கத்தை எடுத்துரைப்பது இன்றைய சமுதாயம் பிணியற்ற சமுதாயமாக விளங்க உதவும். பிறன் பொருளான, பிறன்மனை, பிறன் வரையாள் என்ற சொற்களின் மூலம் உரிமை மீறும் குற்றத்தை யாரும்செய்யக் கூடாது என்று எச்சரிக்கும் வள்ளுவர் பெண்களின் பாதுகாவலனாக, சமுதாயப் பார்வையாளனாக விளங்குகிறார்.

**வள்ளுவரின் வாழ்வியல் நெறியில் உளவியல் சிந்தனை**

பொறுமை, பொறாமையின்மை, சினமின்மை, புறங்கூறாமை, பயனற்றவைகளைக் கூறாமை, கள்ளாமை, வெகுளாமை, இன்னா செய்யாமை ஆகியவைகளை வலியுறுத்தியுள்ளார் வள்ளுவர். இவை ஒன்றுடன் ஒன்று தொடர்புடையவை. பிரிக்க இயலாதவை. மனிதர்களுக்கு உண்டாகும் வாழ்வியல் சிக்கல்களுக்கு மனவெழுச்சிகளே காரணம். மனவெழுச்சிகளான கோபம், பொறாமை, பயம், மகிழ்ச்சி, பொறுமை, பொறுமையின்மை ஆகியவை தனிமனித மேம்பாட்டில் முக்கியப் பங்காற்றுகின்றன. மனவெழுச்சிகளைக் கட்டுப்படுத்தி நிலைப்படுத்தி வாழ்பவனே உளநலத்துடனும், உடல்நலத்துடனும் வாழ இயலும். எனவே அதற்குப் பொறுமை அவசியம். அதுவே அடிப்படை என்பதை உணர்ந்த உளவியல் அறிஞர் வள்ளுவர்,

**ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ் (குறள் 156)**

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒருவர் கொள்ளும் கோபமே அனைத்துச் சிக்கல்களுக்கும் காரணம். எனவே சினத்தை வெளிப்படுத்தாமையே நன்று என்றும், தன்சினம் தன்னை மட்டுமல்லாது தன்னைச் சார்ந்தவரையும் கொல்லும். சினங்கொள்ளுபவன் செத்தவர்க்கு ஒப்பாவான். சினம் அறிவை அழிக்கும். சினத்தினால் பல கேடுகள் உண்டாகும் என்று வெஃகாமை அதிகாரத்தில் வள்ளுவர் எடுத்துரைத்துள்ளார். பல குற்றவாளிகள் உருவாவதற்கும் ஒரு நிமிடத்தில் தோன்றும் அளவற்ற சினமே காரணம். எனவே சினத்தை வாழ்க்கையில் விட்டொழிப்பவனே அனைத்து நலன்களையும் பெறுவான் என்கிறார் வள்ளுவர்.

**தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லும் சினம். (குறள் 305)**

**சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்**
**ஏமப் புணையைச் சுடும். (குறள் 306)**

பிறரை அழிக்க எண்ணித்திட்டமிடுபவனும், பிறரைப் பற்றி பொறாமை கொள்ளுபவனும், பிற உயிரைத் தன்னுயிர் போல் எண்ணாதவனும் காலப்போக்கில் மனநோயாளிகளாக மாறிவிடுவர். ஆரோக்கியமான சமுதாயம் அமைய நல்லெண்ணம், நற்சிந்தனை வேண்டும். எனவே

பொறாமையற்றவனாகத் தனிமனிதன் விளங்க வேண்டும் என்பதை வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

**அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்து விடும். (குறள் 168)**

**மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்**
**அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு. (குறள் 204)**

**புலால் மறுத்தலும் கள்ளுண்ணாமையும்**

இன்றைய இளைய சமுதாயம் புலால் உண்ணுவதையும் மது அருந்துவதையும் வாழ்க்கைப் பண்பாடாகக் கருதும் அவலம் உள்ளது. அன்றைய தமிழ்ச்சமுதாயத்தில் கள்ளுண்டு களித்தல் பெருமிதமாகக் கொள்ளப்பட்டது. ஆனால் கள்ளுண்ணுதலை சமுதாயத் தீமையாக இடித்துரைத்து அது வாழ்வியல் நெறியன்று என்று மறுத்து அதன் விளைவுகளைச் சுட்டியுள்ளார் வள்ளுவர். மது அருந்துதல் நஞ்சுண்பதற்குச் சமம் என்கிறார் வள்ளுவர். எனவே இளைய சமுதாயம் அதனை விட்டொழிக்க வேண்டும் என்பது வள்ளுவரின் நெறியாகக் கொள்ளப்படுகிறது.

**துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பர் கள்ளு ண்பவர் (குறள் 926)**

உலகில் உள்ள உயிரினங்கள் அனைத்திற்கும் வாழ உரிமை உண்டு. பிற உயிர்களைக் கொன்று உண்ணக் கூடாது என்று கூறாது புலாலை மறுப்பது நல்லது என்கிறார் வள்ளுவர்.

“வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்” என்ற வள்ளலார், வள்ளுவரின் வழியில் உயிர்க்கொலையும் புலைப்பொசிப்பும் கூடாது என்கிறார். எச்சமுதாயம் அன்பையும் சீவகாருண்யத்தையும் கடைபிடிக்குமோ அதுவே நற்சமுதாயம். புலால் உண்பதால் உடலில் பல நோய்கள் உண்டாகின்றன என்கின்றனர் மருத்துவர்கள். எனவே, தான் உடல் வளர்க்கப் பிற உயிர்களைக் கொன்று புலால் உண்ணுவது பாவம் என்கிறார் வள்ளுவர். ஒருவன் உண்ணும் உணவின் தன்மைக்கேற்பவே அவன் குணநலன்கள்அமையும் என்கிறது ஆயுர்வேதம். மிருகங்களை உண்ணுபவனுக்கு மிருக குணங்களே அமையும். எனவே புலால் மறுப்பதும் உயிர்ப்பலி கொடுக்காமல் இருப்பதும் வாழ்வியல் நெறியாக வேண்டும் என்பது வள்ளுவரின் வாழ்வியல் கோட்பாடு.

**உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறதொன்றன்**
**புண்ண துணர்வார்ப் பெறின் (குறள் 257)**

**ஆவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத் துண்ணாமை நன்று (குறள் 259)**

### சூதற்ற சமுதாயம்

சூதாட்டத்தால் அன்று தருமன் இழந்ததை இலக்கியம் கூறும். இன்று லாட்டரிச்சீட்டு என்னும் சூதினால் பலர் அழிந்து விட்டனர். பலர் வறுமையில் தள்ளப்பட்டனர். எனவே சூதற்ற சமுதாயம் என்ற வள்ளுவரின் விரிசிந்தனை போற்றத்தக்கது. தனிமனித வாழ்வு நெறியாக சூதினை விட்டொழித்தல் என்பதை வள்ளுவர் வலியுறுத்துகிறார்.

**சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்**
**வறுமை தருவதொன்று இல் (குறள் 934)**

### வள்ளுவரின் நேர்மறை அணுகுமுறை
(Positive approach)

வாழ்க்கையில் ஒதுக்கித் தள்ள வேண்டியவைகளைப் பற்றி விவரித்த வள்ளுவர் வாழ்க்கையில் உயர கைக்கொள்ள வேண்டிய நன்னெறிகளைக் கூறத் தவறவில்லை. இதன் மூலம் நல்லவைகளை மக்களுக்கு எடுத்துரைத்து பின்பற்றச் செய்வதும், அல்லவைகளைக் கடிந்துரைத்து நீக்கச் செய்வதும் அவரது தலையாய பணியாக இருந்துள்ளது. எனவே அவரைச் சமுதாயப்பிணி அகற்றும் மருத்துவர் எனலாம். தனிமனித வளர்ச்சிக்கு வள்ளுவர் பல நேர்மறை அணுகுமுறைகளை வாழ்வியல் நெறியாக எடுத்துரைத்துள்ளார்.

1. யாருக்கும் தீமை விளைவிக்காதவற்றைக் கூறுதல்
2. பிறருக்குத் தீங்கு விளைவிக்காமை
3. உண்மைப் பொருளைத் தானேஉணர்தல்
4. கல்வியே சிறந்த செல்வம். கற்ற வழியில் நிற்றல்
5. அனுபவமிக்கவர்களின் துணையைக் கொள்ளுதல்
6. எச்செயலையும் திட்டமிட்டு உரிய காலத்தில் செய்தல்
7. தன் வலிமையறிதல்
8. காலமறிந்து செயல்களை மேற்கொள்ளுதல்
9. சுற்றத்தினரை ஒழுகுதல்
10. சோம்பலை விட்டொழித்தல்
11. ஊக்கமே வாழ்க்கையின் உயர்வு
12. பிறர் குறிப்பறிந்து நடத்தல்
13. நெஞ்சம் நிறைந்த நட்புக் கொள்ளல்

*14.* நட்பினை ஆராய்ந்து கொள்ளல்

*15.* அஞ்சுவது அஞ்சி வாழல்

*16.* நன்மக்கட்பேறு

*17.* பகுத்துண்ணும் பண்பு

*18.* செய்ந்நன்றியை மறக்காது இருத்தல்

*19.* கொடைப்பண்புடன் வாழ்தல்

*20.* நோயின்றி வாழ்தல்

திருக்குறள் நீதி நூல் என்பதைவிட வாழ்வியல் வழிகாட்டி என்பது சாலப்பொருந்தும். எனவே தனிமனித வாழ்வில் சிறந்து விளங்க விரும்பும் ஒவ்வொருவரும் வாழ்வில் பின்பற்ற வேண்டிய நெறிகளை, கட்டுப்பாடுகளை, ஒழுக்க நெறிகளை நேர்மறை எண்ணங்களை, குடும்ப உறவின் பிணைப்பை, உறவினர் சிறப்பை வலியுறுத்தும் சட்ட நூலாக வாழ்வியல் சிந்தனைக் களஞ்சியமாக உள்ள திருக்குறளை அனைவரும் படித்துப் புரிந்து கொண்டு வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்ள வேண்டும். செய்யக் கூடாதவையை மட்டும் சுட்டாது கட்டாயம் கைக்கொள்ள வேண்டிய நெறிகளையும் சுட்டும் வள்ளுவரின் தனிமனித அக்கறை போற்றக் கூடியதாகவும் வணங்கத்தக்கதாகவும் உள்ளதை அறிய முடிகிறது.

# வள்ளுவர் அறிவுறுத்தும் இல்லறம்

பேராசிரியர் எம்.பெஞ்சமின் நிர்மல்

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

"இல்லறமல்லது நல்லறமன்று" என்று நமது முன்னோர்கள் சொன்னார்கள். ஆம். இல்லறம்தான் எல்லா அறன்களுக்கும் அடிப்படையென்பது வள்ளுவப் பெருந்தகையார் அறிவுறுத்துவதாகும்.

**துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்**
**இல்வாழ்வான் என்பான் துணை (குறள். 42)**

**இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
**நல்லாற்றின் நின்ற துணை (குறள். 41)**

இல்லறத்தில் வாழ்பவனாகச் சொல்லப்படுகின்றவன் அறத்தின் இயல்பை உடைய மூவர்க்கும் நல்வழியில் நிலைபெற்ற துணையாவான் என்றும், துறவிகளுக்கும் வறியவர்க்கும் தன்னிடத்தே இரந்தவர்க்கும் இல்லறம் மேற்கொண்டு வாழ்கின்றவன் துணையாவான் என்று வள்ளுவர் கூறுகின்றார்.

"இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்புதற்கே" என்பது வள்ளுவர் வழங்கும் கருத்து. இது போன்ற நல்லறங்களுக்கெல்லாம் இல்லறமே அஸ்திவாரமாக இருப்பதாலோ என்னவோ வள்ளுவனார் இதற்கு முதலிடமும் முக்கியத்துவமும் கொடுத்து பாயிரம் பாடியதை அடுத்து முதற்கட்டமாக இல்லறவியலை எழுத இருபது அதிகாரங்களையும் இருநூறு குறட்பாக்களையும் இயற்ற முன்வந்துள்ளார் போலும்.

எனவே இல்லறத்தின் மாண்பு எத்தகையது என எண்ணிப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளோம். மாண்புமிகு இவ்வில்லறம் எங்கே தொடங்குகிறது? எது நுழைவாயில் என்றால் அது

திருமணம் என அறியமுடிகிறது. எங்கெங்கோ பிறந்தவர்கள், மலையில் பிறந்த நார்த்தாங்காயும் கடலில் பிறந்த உப்பும் ஒன்றிணைந்து எப்படிக் கெடாமலிருக்கிறதோ அதுபோல மணமக்களும் ஒன்றிணைந்தவர்களாக உளத்தாலும் உடலாலும் பிரியாதவர்களாய் வாழ்வதே இல்லறமாகும். எனவேதான் வள்ளுவப் பெருந்தகையும் இல்லறம் வாழ நல்லறம் சிறக்க முனைந்தவராக அவர் அறிவுறுத்தும் இல்லறம் எது என்பதைப் பார்ப்போம்.

**திருமணம்**

திருமணம், கல்யாணம், வதுவை, பந்தனம் என்ற பல்வேறு சொற்களால் பேசப்பட்டாலும், இன்றைய நாட்களில் திருமணம் என்ற சொல்லே மிகுதியாகப் பேசப்படுகிறது. திருமணம் என்ற பெயர் வரக் காரணமென்ன? மணம் எங்கிருந்து வருகிறது. மணம் மலரிலிருந்து வருகிறது. உதாரணமாகப் பெண் பருவமடைந்த நாளை "புஷ்பவதியானாள், பூப்பெய்தினாள்" என்று சொல்வர் என்பதும், ருதுவானாள் என்பதும் நம்மிடையே பேசப்படும் வழக்கு (புஷ்பம்- மலர்). மொட்டானது அடுத்த கட்டமான மலர் நிலைக்கு வருகிறது அடுத்து மணம் வீசுகிறது. மணம் பெண்ணைக் குறிக்கிறதென்றால் திருமண வாழ்வில் பெண்களே முக்கியமெனச் சுட்டப்படுகிறது. நம்முடைய நாட்டில் கூட புராணங்களிலும், இதிகாசங்களிலும் வருகின்ற திருமணங்களில் வருகிற நாயகர்களின் பெயரால் அல்ல மாறாக, **வள்ளி திருமணம், சீதா திருமணம்** என்று பெண்களின் பெயரே பெரிதுபடுத் தப்படுகிறது. பெண்களே திருமண வாழ்வில், இல்லறவாழ்வில் முக்கியப் பங்கு வகிக்கிறார்கள் என்று இலைமறை காயாக எடுத்தோதப்படுகிறது. மதுரை சொக்கநாதர் சுகமாக வாழ்ந்தது எல்லாம் மீனாட்சி அகப்பை பிடித்த பாக்கியம் என்று ஒரு சொல் வழக்கில் உண்டு. "அழிவதும் பெண்ணாலே ஆவதும் பெண்ணாலே" என்ற பழமொழியும் உண்டு. சமயம் சார்ந்த அறநூல் ஒன்று சொல்வதுபோல்,

> ஞானமுள்ள பெண் தம்இல்லத்தைக் கட்டி எழுப்புகிறாள்
> அறிவற்றவளோ தம் கைகளைக் கொண்டே இடித்து
> விடுகிறாள்

என்று கூறுகிறது.

இல்லாள் என்று சொன்னால் இல்லாதவள் என்று பொருளல்ல, மாறாக வீட்டுக்காரியென்றே பொருள்படும். ஆனால் இல்லான் என்று சொல்லும்பொழுது பண்பு இல்லாதவன், அறிவு இல்லாதவன் என்று பொருள்படும்.

மனைவி என்ற சொல்லைப் பகுத்துப் பார்க்கின்றபோது மனை+வி=மனைவி எனப்படும். மனையென்றால் வீடு 'வி' என்பது வினையாலாகு பெயரில் செய்தலென்ற பொருள்படும். வாழ்க்கைத் துணைநலம் என்ற சொல்லதிகாரத்தில் வள்ளுவர் அறிவுறுத்தும் இல்லறமாக,

**மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல் (குறள் 52)**

என்ற குறள் அமைகின்றது.

இல்வாழ்க்கைக்குத் தக்க நற்பண்பு மனைவியிடம் இல்லையானால், ஒருவனுடைய வாழ்க்கை வேறு எவ்வளவு சிறப்புடையதானாலும் பயன் இல்லை என்பதே வள்ளுவர் அறிவுறுத்தும் இல்லறமாகும்.

**இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை? (குறள் 53)**

மனைவி நற்பண்பு உடையவளானால் வாழ்க்கையில் இல்லாதது என்ன? அவள் நற்பண்பு இல்லாதவளானால் வாழ்க்கையில் இருப்பது என்ன?.

ஒருநாள் பாரதியாரின் மனைவி நெல் அவித்து உலர்த்துவதற்காக முற்றத்திலிட்டுக் கொண்டிருந்தார். அந்நேரம் திடீரென்று ஒரு விருந்தினர் வந்துவிட்டார். வீட்டில் அரிசி இல்லை எனவே பக்கத்து வீட்டிற்குச் சென்று அரிசி வாங்கி வரச் செல்லும்போது பாரதியாரிடம் உலர்கின்ற நெல்லைக் கொஞ்சம் பார்த்துக் கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டுச் சென்றாராம். அவர் மனைவி பக்கத்துவீடு சென்று வருவதற்குள் நூற்றுக்கணக்கில் அடைக்கலான் குருவிகள் வந்து நெல்லை ருசித்துத் தின்று கொண்டிருந்ததாம். திரும்பி வந்த அம்மையார் பாரதியிடம் ஐயோ! குருவிகளை ஓட்டியிருக்கக் கூடாதா என்று கேட்டபோது பாரதியார் சொன்னாராம் பட்சிகளும் நம்முடைய விருந்தினர்தானே ஓட்டுவது முறையா?

**மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து (குறள் 90)**

என்று சொல்லிவிட்டு "காக்கை குருவி எங்கள் சாதி" என்று ஒரு கவிதை எழுதினாராம். மறுகணம் அம்மையார் விருந்து செய்து விருந்தினருக்குக் கொடுத்தாராம்.

அவர்கள் வீட்டிலிருந்த வறுமை பெரிது அல்ல என்றாலும் அம்மையாரிடமிருந்த சிறந்த பண்பினால் அவ்வீட்டில்

இல்லாதது என்ன? என்ற நிலை நிலவி வந்தது. அதுபோல நல்ல மனைவி இருக்கின்ற வீட்டில் இல்லாதது என்ன? பிறிதோர் வீட்டில் அரிசி பருப்பு எல்லாம் இருந்தது. ஆனால் அவளோ வந்த விருந்தினரை வரவேற்பதோ உபசரிப்பதோ இல்லை. முகத்தை தூக்கிக் கொண்டு, மூக்கைச் சிந்திக் கொண்டு இருப்பாளேயாயின் அவ்வீட்டில் இருப்பதுதான் என்னே? இவர்களுக்குத்தான் வள்ளுவர் அறிவுறுத்துவது:

**அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து**
**இன்சொல னாகப் பெறின் (குறள் 92)**

**மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல் (குறள் 52)**

மனைமாட்சி இல்லறத்தின் சிறப்பு. இல்லாள்கண் இல்லாயின்- மனைவியிடம் இல்லையெனில், வாழ்க்கை எனைமாட்சி- வாழ்க்கையில் எந்தச் சிறப்பும், இல்- இல்லை. நல்ல பண்பு இல்லாத மனைவியிடம் எந்தச் சிறப்பும் இல்லை.

"கணவனே கண்கண்ட தெய்வம்", "கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்" என்று பண்டை நாளில் பெண்டிரெல்லாம் கணவனை மதிக்கிறவர்களாக, பேணுபவர்களாக இருந்திருக்கிறார்கள். இவர்களது கருத்தை வற்புறுத்தி, அறிவுறுத்துகிறா வள்ளுவப் பெருந்தகை,

**தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை (குறள் 55)**

மாதம் மும்மாரி பொழியும் காலமிருந்தது என்று பழம்பெருமை பேசுவார்கள் நம்மவர்கள். ஆனால் இன்று மழை பொய்த்து விட்டதே என்று புலம்புவோருண்டு. ஆமாம், நல்ல அந்தணர்களுக்கு ஒரு மழை, நல்லாட்சி செய்யும் அரசனுக்கோர் மழை, கற்புள்ள மங்கையர்க்கோர் மழை-ஆக மாதம் மும்மாரி மூன்றுமுறை மழைபொழியுமாம். இதை அறிவுறுத்த மேற்கண்ட குறளைக் கூறினார் திருவள்ளுவர்.

நல்ல இல்லறத்தை அறிவுறுத்திவந்த வள்ளுவப் பெருந்தகையார்,

**தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண் (குறள் 56)**

என்றார்.

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்திலே ஒரு நிகழ்ச்சியைப் பார்க்கிறோம். கற்புக்கரசி கண்ணகியை மணமுடித்து கரம்

பிடித்தவன் கோவலன். ஆடல் மங்கை மாதவியின் அழகால், கவர்ச்சியால் ஈர்க்கப்பட்டு அவள் பின்னே சென்று வாழ்கிறான்./ அவர்களது வாழ்க்கையில் மணிமேகலை என்ற பெண் மகவு தோன்றுகிறாள்.

ஒருநாள் மாலைப் பொழுது கோவலனும் மாதவியும் ஒரு இயற்கை சூழ்ந்த இடம். காவிரியாற்றங்கரையில் அமர்ந்து காவிரியின் வளமையையும் செழுமையையும் பாடவந்த கோவலன் கையில் வீணையுடன் காவிரியை ஒரு பெண்ணாகப் பாவித்து உவமித்துப் பாடுகிறான்.

இதைக் கேட்டு புரிந்து கொள்ளாத மாதவியின் மனம் புழுங்குகிறது. உடனே ஒரு மாற்று நடவடிக்கை எடுக்க மனம் துடித்தவளாய் மாற்றான் ஒருவனைப் பற்றி பாடத்துணிந்தாள், பாடினாள். உடனே கோவலனின் உள்ளம் பதறியது. மறுகணம் அவர்களது காதல் வாழ்வு சிதறியது. வீணையை விட்டெறிந்தான்-அவளை விட்டெழுந்தான், நடந்தான். மாதவி பின்தொடர்ந்து ஓடிவந்தாள். கோவலனோ நாடினானில்லை, பிரிந்தே போய்விட்டான். காரணமென்ன? "தன்கொண்டவனைப் பேணி தகைசான்ற சொல்லைக் காத்துக் கொள்ள தவறிய ஒரே காரணத்தால் ஊறு விளைந்தது அன்றோ", இதுதான் சிலப்பதிகாரம். எனவேதான் திருவள்ளுவரும்,

**யாகாவாராயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்கப்பட்டு**

என்ற குறட்பாவால் அறிவுறுத்துகிறார்.

**பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மையுண் டாகப் பெறின்? (குறள் 54)**

கற்புக்கரசி கண்ணகி தன்கணவன் கொலையுண்டான் என்ற செய்தி கேட்டு கொதித்தெழுந்தாள். கொற்றவன் மன்றம் நோக்கி விரைந்தாள். மன்னவனைக் கண்டு மனம் குமுறி என்னவனைக் கொன்றது ஏன்? என் கணவனாக் கள்வன் நீயே கள்வன். ஆராயாது தீர்ப்பு சொன்ன நீயே கொலைஞன், நின் கோலும் நீயும் சாய்க என்றதும், கற்பென்னும் திண்மையின்முன் மன்னன் சாய்ந்தான். இதைக் கேட்ட மனைவியும் சாய்ந்தனள். மன்னனின் செங்கோல் கொடுங்கோலானதால் மன்னனின் அரசும் முரசும் ஓய்ந்தது. கற்புநிறை காரிகையாள் மனம் கசந்தவளாய் மதுரையை நோக்கி எரிக என்றாள். மதுரை எரிந்தது. புரிந்ததா கற்பின் திண்மை. எனவேதான் பெண்மையைப் போற்றுவோம்.

மண்ணின் பெருமையைச் சொல்ல நினைத்தவர்கள், மண்ணைப் 'பூமா தேவி' யென்றே அழைத்தனர். 'நீரின்றி அமையாது உலகு' என்றார் வள்ளுவர். எனவே நீரின் பெருமையைப் புகல நினைத்தவர்கள் 'கங்கா தேவி' என்றே உவமைப்படுத்தினர்.

**அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்**

**மாதா பிதா குரு தெய்வம்**

**கணவன்**

இல்லறம் என்பது இரண்டு கண்களுக்குச் சமம், ஒன்றின்றி பிறிதில்லை. ஒன்று மனைவியென்றால் பிறிது கணவனாகும். கணவன் மனைவி இரண்டு எருது போன்றவர்கள். ஒரு வண்டி ஓட வேண்டுமென்றால் இரண்டு எருதுகளும் ஒன்றிணைந்து செல்ல வேண்டும். அப்படிச் சென்றால்தான் வண்டி போக வேண்டிய இலக்கை அடைய முடியும்.

கணவன் என்ற சொல்லைப் பகுத்துப் பார்த்தால் கண்+அவன்=கணவன். இல்லறவாழ்வு சிறப்புற அமையக் கணவனே, காரணகர்த்தாவாக இருக்க வேண்டும். "கண்ணிற் சிறந்த உறுப்பில்லை" என்பர். உறுப்புக்களில் கண்விழி மட்டுமே வளராதது, தேயாததுவாகும். எனவேதான் கடவுளைக் கண்ட நமது முன்னோர்கள் "கண்ணன்" என்று பெயர் வைத்தனர். கண்ணன் என்றால் மாறாதவன் என்பதாகும். மாறாதவர் கடவுள். "நேற்றும் இன்றும் என்றும் மாறாதவர்" என்று சமயச் சான்றோர்கள் சாற்றுவார்கள்.

திருவள்ளுவப் பெருந்தகை தன்னுடைய நூலில் "கண்ணோட்டம்" என்ற ஓர் அதிகாரத்தில் பத்துக் குறட்பாக்களை யாத்துள்ளார். பத்தும் முத்துப் போன்றவையாகும். வாழ்க்கையென்னும் மகுடத்தில் பதிக்க வேண்டியவை. அதற்கெல்லாம் அடிப்படையாக நம் மனதில் பதிக்க வேண்டியவை என்றாலும் மிகையாகாது.

**கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்**
**புண்ணென்று உணரப் படும். (குறள் 575)**

கண்ணோட்டமில்லாக் கண் புண் எனப்படும். புண் வேதனையின் ஊற்று. எனவே இல்லறவாழ்வு நல்லறமாக சிறக்க தலைவன் கண்ணாயிருக்க வேண்டும். கவனமுள்ளவனாயிருக்க வேண்டும் என்பதை வள்ளுவர் அறிவுறுத்துகின்றார்.

தமிழ் இலக்கியங்களில் குறுந்தொகை, கலித்தொகை போன்ற நூல்களில் மான், மந்தி போன்றவைகளை உவமித்துச் சொன்ன பகுதிகள் உண்டு. இதில் "மந்திக் கணவன் கல்லாக்கடுவன்" என்ற ஒரு வரி உண்டு. மந்தியின் இயல்புகளில் ஒன்று அது கூடி வாழும் இயல்புடையது. குரங்கு தன் குட்டிகளை சுமந்தே செல்லும் இயல்புடையது. மரங்களில் ஏறித் தாவிக் குதித்து பழங்களைப் பறித்துத் தானும் தின்னும், தன் குட்டிகளுக்கும் கொடுத்து உதவும். அவசரமான வேளைகளில் தன் குட்டிகளுக்காக தன் கடைவாயின் இருபுறமும் சேமித்து வைத்துக் கொள்ளும். அவகாசம் கிடைக்கும்பொழுதும் ஆபத்து இல்லாத போதும் தன் குட்டிகளுக்குக் கொடுத்து மகிழும். சில வேளைகளில் தனக்கே உரித்தான சேட்டையாகப் பழம் நிறைந்த மரங்களை ஆட்டி அசைத்து உலுக்கும். பழங்கள் தரை நிரம்பக் கிடக்கும். தரையிறங்கி பழங்களைப் பொறுக்கித் தன் குட்டிகளுக்குக் கொடுப்பதும் தான் உண்பதுமாக இருக்குமே தவிர பக்கத்திலிருக்கிற பகையை ஆபத்தை அறியாமல் இருக்கும். அந்நேரத்தில் ஆண் குரங்கு ஏதாவது ஒரு ஓரத்திலோ, மரத்திலோ இருந்து கொண்டு கரடி, புலி, ஓநாய்கள் வருகின்றனவா எனக் கண்காணித்துக் கொண்டேயிருக்கும். ஏதாவது கொடிய விலங்குகளால் ஆபத்து வருகிறதென்றால் உடனே ஒரு சைகைக் குரல் எழுப்பும். உடனே குரங்குகள் தன் குட்டிகளை எடுத்துக்கொண்டு மரத்தின் உச்சியில் வந்து உட்கார்ந்து கொண்டு கீழே திரும்பிப் பார்க்கும். இவ்விதமாகத் தன் குலத்தைக் குடும்பத்தைக் கவனிப்பதில் மிகப்பெருங் கண்ணோட்டமாகவே இருக்கும்.

எனவேதான் இலக்கியங்களில் அவை ஏற்றிப் போற்றப்பட்டு நாமும் கண்ணோட்டமுள்ளவர்களாக இருக்க வேண்டுமென விழைகிறார்கள். இவை போன்ற உள்ளர்த்தங்களை உள்ளடக்கியே தலைவனுக்குக் கணவன் அதாவது கண்ணாயிருக்க வேண்டும். கண்ணியமுள்ளவராக இருக்க வேண்டுமென்பதற்கு "கண்ணோட்டம்" என்ற சொல்லதிகாரத்தைப் பொருட்பாலில் வைத்துப் பேசினாலும், பொருள் உள்ள பாலாக ஆண்பாலருக்கு அறிவுறுத்துகிறார்.

**மக்கட் செல்வம்**

**மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு (குறள். 60)**

மனைவியின் நற்பண்பு இல்லற வாழ்வுக்கு மங்கலம் என்றும் நல்ல மக்களைப் பெறுதல் அணிகலம் என்றும் கூறுவர்.

திருமண விழாவின்போது மணமக்களை வாழ்த்திய பெரியோர்கள் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க என வாழ்த்துவார்கள். பதினாறு பேறுகள் என்பது புகழ், கல்வி, ஆற்றல், வெற்றி, நன்மக்கள், பொன், நெல், அறிவு, பெருமை, ஆயுள், நல்ல இளமை, பொருள், துணிவு, நோயின்மை, நுகர்ச்சி ஆகிய பதினாறு பேறுகளில் ஐந்தாவது இடத்திலிருப்பது நன்மக்கள்.

**பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற (குறள். 61)**

பெறத் தகுந்த பேறுகளில் அறிய வேண்டியவைகளை அறியும் நன்மக்களைப் பெறுவதைத் தவிர மற்றப் பேறுகளை யாம் மதிப்பதில்லை. அறிஞர்கள் பிறப்பதில்லை உருவாகின்றார்கள் என்பர். உருவாக்கம் என்பது எங்கோ இல்லை, நம் குடும்பம் என்னும் நாற்றங்காலில்தான். அதனாற்றான், **நல்ல குடும்பம் ஒரு பல்கலைக்கழகம்** என்பர். புற நானூற்றுத் தாய் ஒருவர் சொல்லுவார்,

**ஈன்று புறந்தருதல் என்தலைக் கடன்**
**சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடன்**

என்று ஒரு தாய், தந்தையின் கடமையைச் சுட்டுகிறார். திருவள்ளுவப் பெருந்தகையாரும் இதனை ஒட்டியே கூறுவது,

**தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல் (குறள் 67)**

தந்தை தன்மகனுக்குச் செய்ய வேண்டிய உதவி (கடமை) கற்றவர் கூட்டத்தில் தன்மகன் முந்தியிருக்கும்படியாக அவனைக் கல்வியில் மேம்படச் செய்தலாகும். இதை செய்யத் தவறுகின்றபொழுது பிறிதொரு புலவர் சொல்லுவார்,

**துள்ளித் திரிகின்ற பருவத்தில் என்துடுக்கடக்கி**
**பள்ளிக்கு அனுப்பாத பாதகனே**

என்று மகன் தந்தையை நோக்கிச் சொல்ல நேரும். "பிரம்பைக் கையாளதவன் தன்பிள்ளையைப் பகைக்கிறான்" என்றாற்போல தந்தை தன்பிள்ளைகளைத் தவறு செய்கின்ற பொழுது கண்டித்துத் திருத்திச் செம்மைப்படுத்துவது தலையாய கடமையாகும்.

**எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்**
**பண்புடை மக்கட் பெறின் (குறள். 62)**

பழி இல்லாத நல்ல பண்புடைய மக்களைப் பெற்றால் ஒருவனுக்கு ஏழு பிறவியிலும் தீவினைப் பயனாகிய துன்பங்கள் சென்று சேராது.

**தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது (குறள். 68)**

தம்மக்களின் அறிவுடைமை தமக்கு இன்பம் பயப்பதைவிட உலக மக்களுக்கெல்லாம் இன்பம் பயப்பதாக அமையும். அவன் ஒரு கோபுரக்கலசம், மலை மேலுள்ள விளக்கு, இருளைப் பழிப்பதைவிட ஒளியை ஏற்றுவது மேல்.

**ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய் (குறள். 69)**

**மகன்**

**மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்னோற்றான் கொல் எனுஞ்சொல்**

மகன் தந்தைக்குச் செய்யும் உதவி இவன் தந்தை இவனை மகனாகப் பெறுவதற்கு என்ன தவம் செய்தானோ என்று பிறர் புகழ்ந்து சொல்லும் சொல்லாகும். வள்ளுவர் அறிவுறுத்தும் இல்லறம் என்பது கடலளவு பரந்து பட்டதாகும். அக்கடலில் மூழ்கி முத்தெடுக்கும் முயற்சியில் இது ஒருதுளிதான்.

# வள்ளுவத்தில் பெண்ணியம்

**முனைவர் மா.மீனாட்சி சுந்தரம்**

**முன்னுரை**

தெள்ளுதமிழ் நடையில் சின்னஞ்சிறு அடிகளில் அள்ளுதோறும் சுவையும் உள்ளுதோறும் உணர்வும் பிறக்கும் நிலையில் குறளை அமைத்துள்ளார் வள்ளுவர். இவர் குறளைத் தமிழர்களுக்கு மட்டும் இயற்றித் தரவில்லை. உலக மக்கள் அனைவருக்கும் பொது நூலாக ஆக்கித் தந்துள்ளார். இதனால் தமிழகமே பெரும் புகழ் பெற்றது. இதனை,

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**

எனப் பல்லாண்டுகளுக்கு முன்பே பாடியுள்ளார், புத்துலகக் கவிஞர் பாரதியார். திருவள்ளுவரின் பெருமைக்கும் திருக்குறளின் மாண்புக்கும் பல காரணங்கள் இருந்தாலும் அதற்கு அடிப்படைக்காரணம் அது ஓர் 'உலகப்பொது நூல்' என்பதுதான். அத்தகைய சிறப்புக்குரிய திருக்குறளில் பெண்ணியம் பற்றிக் காண்பதுவே கட்டுரையின் நோக்கம்.

**வாழ்க்கைத்துணை**

இல்வாழ்க்கையில் மனைவி கணவனுக்குத் துணையாக விளங்குவதால் அவளுக்குச் சிறப்பிடம் வழங்கும் பொருட்டு அவளை வாழ்கைத்துணை என்னும் சொற்றொடரால் விளக்குகிறார் வள்ளுவர். பெண் தனக்கேற்ற ஒருவனோடு கூடி வாழ்க்கை நடத்த வேண்டுமே ஒழிய அவள் நலம் பயனற்றுப்போகக் கூடாது எனக் கருதியவர் வள்ளுவர் என்பதை,

**அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்**
**பெற்றாள் தமியள்மூத் தற்று (குறள். 1007)**

எனும் குறள் வழி உணரலாம்.

தன் நிலை தாழாது தன்னையும் காத்துக்கொண்டு, தான் கொண்ட கணவனையும் தங்கள் குடும்பப் பெருமைகளையும் நிலைநாட்டி அதுகுறித்துச் சிறிதும் சலித்துக் கொள்ளாதவள்தான் பெண் எனப் போற்றுகிறார் வள்ளுவர். இதனை,

**தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண் (குறள். 56)**

என்ற குறள்மூலம் அறியமுடிகிறது.

**பெண்ணுரிமை**

ஆணாதிக்க காலத்தில் அதற்கெதிரான துணிவுடைய சிந்தனைகளை வழங்கியுள்ள வள்ளுவரின் அணுகுமுறை புரட்சிகரமானது. பெண்களின் உரிமைக்காகவும், உலகியல் மாற்றத்திற்காகவும் பாடுபட்டவர் அவர். பெண் ஆணுக்கு இணையான ஆற்றல் மிக்கவள்.

**சிறைகாக்குங் காப்பு எவன்செய்யும் மகளிர்**
**நிறைகாக்குங் காப்பே தலை (குறள். 57)**

என்று ஆற்றலும் அறிவும் நிறைந்த பெண்களை உலகிற்கு உருவாக்கித் தந்தவர் வள்ளுவர் எனலாம். இத்தகைய வள்ளுவரின் வழிகாட்டல்தான் தற்காலத்தில், பாவலன் பாரதியை 'வீட்டுக்குள்ளே பெண்களைப்பூட்டி வைப்போம் என்ற விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்' என்று பாட வைத்தது எனலாம்.

**கணவனே தெய்வம்**

"கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருசன்" என்னும் உணர்வு மேலோங்கி கணவனைக் கண்கண்ட தெய்வமாக எண்ணி, தன் விருப்பு வெறுப்புகளைத் துறந்து, சுயம் மறந்து வாழ்கிறாள் பெண். இது ஒரு பெண்ணால் மட்டுமே முடியும். இத்தகைய பெண்களையே வள்ளுவர்,

**தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை (குறள். 55)**

எனக் கூறித் தெய்வத்தை வணங்காமல், தன்கணவனையே தெய்வமெனத் தொழும் பெண்கள் மக்களின் தேவையறிந்து, காலமறிந்து பெய்யும் மழைக்கு ஒப்பானவர்கள் என்கிறார். பிறர் போற்றக்கூடிய சிறந்த மனைவியைப் பெற்ற கணவன் தன்னை

இகழும் பகைவர் முன்னும் காளைபோல் பீடு நடை போட முடியும், இதனை,

**புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்**
**ஏறுபோல் பீடு நடை (குறள். 59)**

என எடுத்துக்காட்டுகிறார் வள்ளுவர். இதன்மூலம் ஒரு கணவனின் உளச்செருக்கும், ஒழுக்கமும் அவன் மனைவிடையே சார்ந்துள்ளது என்பதை உணர்த்துகிறார் வள்ளுவர்.

**கற்புடை மகளிர்**

கற்பென்னும் உறுதிப்பாடுடைய பெண்ணைக் காட்டிலும் உயர்வான ஒன்று இவ்வுலகில் ஒன்றுமில்லை. "கற்பு" என்னும் சொல் பிறர் நெஞ்சு புகாமை, கணவன் சொல் மீறி நடவாமை, கணவனுடைய பழக்கவழக்கங்களை மனைவியானவள் கற்றுக்கொள்ளுதல், கணவன்தான் தனக்குத்துணை என்ற உறுதிப்பாடு, மனத்தால் மாசற்றிருத்தல் எனப் பல பொருள்பட காலந்தோறும் நடைபெறுகிறது. கற்பு என்னும் கோட்பாட்டினை அக்காலம் முதல் இக்காலம்வரை சமுதாயம் போற்றி வளர்த்து வருகிறது. வள்ளுவர் கற்பு என்பது மனத்திண்மை அதாவது மன உறுதி என விளக்குவதை,

**பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பெனும்**
**திண்மையுண் டாகப் பெறின் (குறள். 54)**

என்னும் குறள்வழி அறிய முடிகிறது.

**பொதுமகளிர்**

பரத்தமைக்கு முதன்மை கொடுத்து இல்பரத்தை, சேரிப்பரத்தை, காதல் பரத்தை என்று பெண்களை இழிவாகப் பேசிய காலத்தில் பரத்தமை ஒழிய வேண்டும் எனப் பரத்தமையைக் கண்டித்து ஆணாதிக்கச் சமுதாயத்தை எதிர்த்து முதன் முதலில் பெண்களுக்காகப் புரட்சிக்குரல் கொடுத்த மாமனிதர் வள்ளுவர், அதனால்தான் "வரைவின் மகளிர்" என்ற அதிகாரத்தைத் தம் குறட்பாவில் பதிவு செய்துள்ளார்.

வள்ளுவர் காலத்திற்குமுன் பெண்களை இரண்டு வகையாகப் பிரித்துள்ளனர். "ஒருமை மகளிர்" என்று கற்புடைய மகளிரையும் "இருமணப்பெண்டிர்" என்று பொது மகளிரையும்

குறித்தனர். வள்ளுவர் இருமணப் பெண்டிரை, "அன்பின்விழையார்", "பொருள்விழையும் ஆய்தொடியர்", "பண்பில் மகளிர்", "பொருட்பெண்டிர்," "அணங்கு", "மாயமகளிர்", "வரைவிலாமாணிழையார்" என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார்.

பொருளை விரும்புகின்ற பொதுமகளிரின் உடலைத் தழுவுகின்றவர்கள் இருட்டறையில் ஒரு பிணத்தை யார் என்று தெரியாமல் தழுவுவதுபோன்றதாகும், இதனை,

**பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
**ஏதில்பிணம் தழீஇ யற்று (குறள். 913)**

என்று எடுத்துரைக்கிறார் வள்ளுவர், இவர் பொதுமகளிரைப் பற்றிக் கூறும்போது ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டை வலியுறுத்திக் கூறுகிறார் என்பது தெளிவாகிறது.

**பெண்மையின் உயர்வு**

இல்லாள் மாண்பு மிக்கவளாய் இருந்தால், வாழ்க்கையில் இல்லாதது எதுவுமில்லை என்கிறார் வள்ளுவர். எனவே வாழ்க்கையில் சிறப்பை நல்குபவள் பெண்ணே, இதனை விளக்கவே வள்ளுவர்,

**இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை? (குறள். 53)**

என்கிறார் எனலாம். பெண்ணை உயர்த்தி உரைத்த வள்ளுவரே,

**பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதமை ஞாலத்து**
**அறம்பொருள் கண்டார்கண் இல் (குறள். 141)**

என்னும் குறளில் பெண்ணை 'பொருள்' என அஃறிணையாக்கி இழிவுபடுத்தி உள்ளார் என்று கூறுவாரும் உண்டு. ஆனால் "பொருள்" என்னும் சொல்லிற்குத் தமிழ்க் கலைக்களஞ்சியம் (Lexicon VI, *27*) "மதிக்கப்படுவது", "தலைமை" என்னும் பொருள்களைத் தருகிறது. உற்றுநோக்கின், "பிறன் மதிக்கப்படுபவள்" என்றும் "பிறன் தலைவியானவள்" என்றும் பொருள் கொண்டால் வள்ளுவர் பெண்ணைப் பொருள் என்று அஃறிணையாகக் கொண்டார் என்று கூறுவார் கூற்றை உடைத்தெறிந்து பெண்ணுக்குத் தந்த சிறப்பிடத்தை அறிய முடிகிறது.

**முடிவுரை**

பெண்தான் இல்லறத்தை நல்லறமாக்குபவள் என்றும் அவள் வாழ்க்கையில் கணவனுக்குத் துணையாக இருப்பதால் “வாழ்க்கைத்துணை” எனப் போற்றப்பட்டாள் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆசைக்காதலியாக, அன்பு மனைவியாக எந்நிலையிலும் எவ்வடிவிலும் பெண்ணே மனித குல இயக்க சக்தியாக, ஆதாரமாகத் திகழ்பவள் ஏன்பது தெளிவாகிறது. கற்புடைமை என்பது மனத்தின்மை என்று சுட்டப்பட்டுள்ளது. பெண்கள் நசுக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு இருந்த காலகட்டத்தில் எந்தவித அச்சமும் இன்றிப் பரத்தமையைக் கண்டித்து முதலில் தோன்றிய புரட்சிகரமான நூல் வள்ளுவம் என்பது மறுக்க முடியாத ஒன்றாகும்.

# திருக்குறளில் அங்கதம்

மு.சுதா

**முன்னுரை**

அங்கதம் என்பது புலவர்கள் பாடுவதற்குப் பயன்படுத்திய ஓர் இலக்கிய உத்தியாகும். அங்கதம், கிரேக்க நாட்டில் தொடங்கி, இலத்தீன் மொழியில் வளர்ந்து, ஆங்கிலத்திலும் செல்வாக்குப் பெற்றுள்ளது. அங்கதம், தொல்காப்பியம் தொடங்கி, இன்றுவரை வெவ்வேறு இலக்கிய வகைமைகளில் பயன்படுத்தப்படுகின்றன. திருக்குறள் தெய்வப்புலவர் திருவள்ளுவர் இயற்றினார். திருக்குறள் 'அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால்' என மூன்று பிரிவுகளை உடையது. ஒவ்வொரு அதிகாரத்திற்கு பத்துப் பாடல்கள் வீதம் *1330* பாடல்களைக் கொண்டு விளங்குகிறது. திருக்குறளில் அங்கதம் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அங்கதம் சொற்பொருள் விளக்கம்**

'அங்கதம்' என்பதனை ஆங்கிலத்தில் 'Satire' என்பர். இச்சொல் இலத்தீன் மொழிச் சொல்லான (Satura)வில் இருந்து வந்தது என்பர்.

**அங்கதம் விளக்கம்**

அங்கதம் பற்றிப் பல விளக்கங்களும், கருத்துக்களும் கூறப்படுகின்றன. அவை,

> அங்கதம் என்பது தீங்கையும் அறிவின்மையையும் கண்டனம் செய்யும் பாட்டு என்கிறார் சான்சன்.

Authur pollard – Satire – P.1

> தனிப்பட்ட மனிதன் குறையையோ, ஒரு சமுதாயத்தின் குறையையோ, குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ சுட்டிக் காட்டுவது அங்கதமாகும்.

Satire Encyclopaeida Britannica vol -24 – P. 294

'அறிவின்மை, தீமை போன்றவற்றை மென்மையாகவோ, வன்மையாகவோ கேலி அல்லது வசைமூலம் மறைமுகமாகவோ, நேரடியாகவோ தாக்குவது அங்கதம் என்று சிப்லே இலக்கியக் கலைச் சொல் அகராதி குறிப்பிடுகிறது'.

Joseph T.Shipley Dictunary of world literary terms P – 256

'தண்டியலங்காரம் காட்டும் புகழ்வது போல பழிக்கும் வஞ்சப் புகழ்ச்சி அணி இத்தகையது ஆகும். புலவர் தான் காணும் குறையை நேரடியாகவும் வேறு எதனோடும் ஒப்பிட்டும் அங்கத்தைப் பயன்படுத்துகின்றார்'.

**தொல்காப்பியர் கோட்பாடு**

தமிழ் இலக்கியக் கோட்பாட்டை எடுத்துரைக்கும் தொன்மையான இலக்கண நூலாசிரியரான தொல்காப்பியர் செய்யுளியலில் ஏழுவகையான இலக்கியங்களைப் பற்றிக் குறிப்பிடும்போது,

**பாட்டு உரை நூலே வாய்மொழி பிசியே**
**அங்கதம் முதுச்சொல் அவ்வேழ் நிலத்தும்**
**(தொல்-பொருள்.இளம்.நூ.384)**

என்று அங்கதத்தினைச் சுட்டுகிறார். மேலும் அங்கதத்தின் வகைகளை விளக்க வந்த தொல்காப்பியர்,

**அங்கதம் தானே அரில்தபத் தெரியின்**
**செம்பொருள் கரந்தது என இரு வகைத்தே**
**(தொல்-பொருள்.இளம்.நூ.429)**

**திருக்குறளில் அங்கதம்**

திருவள்ளுவர் *1330* குறட்பாக்களில் *9* குறள்களில் (குறள் *336, 403, 839, 1073, 1173, 1221, 1222, 1242*) மட்டுமே நகையுடன் கூடிய ஏளனக் குறிப்பைக் காணமுடிகிறது. அறத்துப்பாலில் ஒரு குறளும் *(336)* பொருட்பாலில் ஐந்து குறள்களும் *(1168, 1173, 1221, 1222, 1242)* அங்கதக் குறிப்புகள் காணப்படுகின்றன. திருவள்ளுவர் நிலையாமையை வலியுறுத்தும் போதும், கல்லாதார், பேதையர், கயவர் ஆகியோர் நிலைகளை எடுத்துச் சொல்கின்ற போதும் அங்கதக் குறிப்புகளைப் பயன்படுத்துகிறார். காமத்துப் பாலின் பிரிவால் வாடும் நிலையில் தலைவியின் கூற்றுக்களில் அங்கதக் குறிப்புகள் காணப்படுகின்றன.

**நிலையாமை**

உறுதியின்மை 'நிலையாமை' என்று அழைக்கப்படுகிறது. ஒருவன் நேற்று உயிரோடு இருந்தான் இன்று மறைந்தான் என்று

சொல்லும் நிலையற்ற தன்மையுடையது இவ்வுலகம். இதனைத் திருக்குறள்,

**நெடுநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் வுலகு (குறள் 336)**

என்று கூறுகின்றது. இக்குறளில் 'பெருமை உடைத்து இவ்வுலகு' என்பது அங்கதக் குறிப்புடையது. நேற்று இருந்தவன் இன்று இவ்வுலகத்தில் இல்லை என்ற நிலையாமைக் கருத்தை சுட்டிக் காட்டுகிறார்.

**கல்லாமை**

நூல்களைக் கற்றுக் கொள்ளாமை 'கல்லாமை' என்று அழைக்கப்படுகிறது. கல்லாதவர்கள் கற்றார் அவையில் ஒன்றையும் சொல்லாதிருந்தால் மிக நல்லவர்களாக கருதப்படுவர். இதனைத் திருக்குறள்,

**கல்லாதவரும் நனிநல்லர் கற்றார் முன்**
**சொல்லா திருக்கப் பெறின் (குறள் 403)**

என்று கூறுகின்றது. இதில் கல்வி கற்காமையின் இழிவினைத் திருவள்ளுவர் அங்கதக் குறிப்புடன் கூறியிருக்கிறார். இக்குறளில் கல்லாதவரும் நனிநல்லர் என்று கல்வி கற்காதவர்களை மிகவும் நல்லவர்கள் என்று உயர்த்திப் பேசுவது முதலில் காணமுடிகிறது. அவர்கள் நல்லவர்கள் ஆவது எப்பொழுது எனின், கற்றவர்கள் முன்னர் எதுவும் சொல்லாதிருக்கும்போது என முடித்திருப்பதால் இக்குறள் அங்கதக் குறிப்பை உணர்த்துகிறது. இங்கு 'நனிநல்லர்' என்பது அங்கதக் குறிப்புப்பட நிற்கிறது.

**பேதமை**

அறியாமை 'பேதமை' என்று அழைக்கப்படுகிறது. அறியாமை உடையவனின் நட்பு மிகவும் இனிது. ஏனென்றால் பிரிவு உண்டாகும்போது அதனால் துன்பம் ஒன்றும் இல்லை. இதனைத் திருக்குறள்,

**பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்**
**பீழை தருவதொன்று இல் (குறள் 839)**

என்று கூறுகின்றது. நட்பின் வகைகளைக் கூறிய திருவள்ளுவர், நட்பினைப் பேணிக் கொள்ளாத பேதைமையை எடுத்துக்காட்டுகிறார். இச்சூழலில் அங்கதக் குறிப்பினைக் கையாண்டுள்ளார். 'பெரிது இனிது பேதையார் கேண்மை' என்பதில் அங்கதக் குறிப்பு அமைந்துள்ளது என்றும் கூறலாம். 'உண்மையான நட்பு என்பது, பிரிவு வந்தபோது துன்பம் தருவது, ஆனால் பேதையரின் நட்பு பிரிவு வந்தபோது துன்பம்

தருவதில்லை. பிரிவின்போது துன்பம் தராத இவர்களின் நட்பே 'இனிது' என்று பேதையரைப் பாராட்டுவது போன்று பழித்திருப்பதைக் காணமுடிகிறது. பேதையர் தம்முன் உண்மையான அன்பு கொள்வதில்லை என்பதையும், எனவேதான் அவர்கள் பிரிவு வந்தபோது கூடக் கவலைப்படாமல் இருக்கிறார்கள் என்பதையும் குறிப்பாகச் சுட்டிக்காட்டுகிறார்'.

**கயமை**

கீழ்மைக் குணம் கயமை என்றழைக்கப்படுகிறது. தேவர்கள் தாம் விரும்பிய வண்ணம் நடப்பார்கள். கீழ்மக்களும் தாம் விரும்பியவாரே செய்தொழுகுவர். ஆகையால் தேவர்களும் கீழ்மக்களும் ஒப்பாவர். இதனைத் திருக்குறள்,

**தேவர் அனையர் கயவர் அவருந்தாம்**
**மேவனை செய்தொழுக லான் (குறள் 1073)**

என்று கூறுகின்றது. கயமைக் குணம் கொண்டவர்களை இனம் காட்டுகிறார் திருவள்ளுவர். கயவர்களை தேவர்களுக்கு ஒப்புமையாக்குகிறார். முதலில் தேவர்கள் போன்று மிக உயர்ந்தவர்கள் கயவர்கள் என்ற குறிப்புத் தோன்றும்படி அமைக்கிறார். அதற்கான காரணத்தைப் பின்னர் காட்டுகிறார். தேவர்களைக் கட்டுப்படுத்துவதற்கு எவரும் இல்லை. அவர்கள் தாம் விரும்பியவற்றை விரும்பிய முறையில் செய்வர். அதேபோன்று கயவர்களும் நன்மை, தீமை ஆராயாமல் தாம்விரும்பியவற்றை யாவருக்கும் அஞ்சாமல் செய்கின்றனர் என்று கூறுகின்றார். இக்கூற்றில் ஏளனக் குறிப்போடு கீழ்மக்களின் இழிவுத்தன்மையைக் காட்டுவதால் இக்குறளில் அங்கதக் குறிப்பு அமைந்திருக்கிறது. உயர்ச்சியும் இழிவுமாகிய காரண வேறுபாடு, குறிப்பாகத் தோன்றி நின்றமையின் இது புகழ்வது போலப் பழிக்கும் அங்கதமாகும்.

**படர் மெலிந் திரங்கல்**

பிரிவுத் துயரம் 'படர் மெலிந் திரங்கல்' என்று கூறப்படுகின்றது. இவ்வுலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் அருள் செய்து உறக்கத்தைக் கொடுக்கின்ற இரவுக்கு என்னைத் தவிர வேறு துணையில்லை. இதனைத் திருக்குறள்,

**மண்ணுயி ரெல்லாம் துயற்றி அளித்திரா**
**என்னலல்லது இல்லை துணை' (குறள் 1168)**

என்று கூறுகின்றது. பிரிவாற்றாத தலைமகள் தான்அடைகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கிறாள். அதனால் உடல் மெலிகிறாள். இந்நிலையில் அவள் மாலைப் பொழுதினையும், இரவினையும், இகழ்கின்ற சூழலில் அங்கதக்

குறிப்பு அமைந்திருக்கிறது. பிரிவால் தான்வருந்திக் கொண்டிருப்பதால் தனக்கு உறக்கம் வரவில்லை என்றும் தலைவி குறிப்பாகக் கூறுகிறாள். அனைவரும் உறங்கி விட்டதால் இரவுக்குத் துணையாக தன்னையன்றி எவரும் இல்லை எனக்கூறி, இரவினை அளித்து எனத் தலைவி கூறுவது இகழ்ச்சிக் குறிப்பாக அமைந்து அங்கதமாயிற்று.

**கண்விதுப் பழித்தல்**

காத்திருக்கும் கண்கள் 'கண்விதுப் பழித்தல்' எனப்படுகிறது. தலைவியின் அழகு குறைந்ததைக் கண்ட தோழி தலைவியைப் பார்த்து உன் கண்கள் அழகிழந்து காணப்படுகின்றன என்று கூறுகிறாள். அதற்குத் தலைவி அன்று, இக்கண்கள் காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்றும் தாமே இருந்து அழுகின்ற கண்கள் நம்மால் சிரிக்கத் தக்க இயல்பினை உடைத்து என்று கூறுவதில் அங்கதக் குறிப்பு காணப்படுகிறது. இதனைத் திருக்குறள்,

**கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்**
**இதுநகத் தக்கது உடைத்து (குறள் 1173)**

என்று கூறுகின்றது. இக்குறளில் 'இது நகத்தக்க துடைத்து' என்ற தலைவி கூற்று அங்கதக் குறிப்புடையது.

**பொழுதுகண்டு இரங்கல்**

காலம் 'பொழுது' என்றழைக்கப்படுகிறது. பொழுதே! நீ வாழ்வாயாக! நீ மாலைக் காலம் அல்ல; மணம் செய்து கொண்டவரின் உயிரரைக் குடிக்கும் காலமாக இருக்கின்றாய். இதனைத் திருக்குறள்,

**மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்**
**வேலை நீவாழி பொழுது (குறள் 1221)**

என்று கூறுகின்றது. இக்குறளில் காதலருக்குத் துன்பம் தரும் மாலைப் பொழுதின் இயல்பினைச் சுட்டி 'வாழி' என்று வாழ்த்துவது குறிப்பாக அதனை இகழ்வது போன்றதாக அமைந்து அங்கதமாக விளங்குகின்றது.

**முடிவுரை**

திருக்குறள் குறிப்பிட்ட மனிதர்களைச் சாடும் நிலையன்றி, ஒழுக்கநெறி இல்லாதவர்களைப் பொதுப்படச் சினந்து பேசும் நிலை காணப்படுகிறது. திருவள்ளுவர் மிகக்குறைந்த அளவில் எள்ளல் குறிப்புடன் கூடிய அங்கதத்தைப் பயன்படுத்துகிறார். திருக்குறளில் கருத்து அடிப்படையில் அங்கதம் விளக்கப்படுகிறது.

# மணிமேகலையில் திருவள்ளுவர் உணர்த்தும் அறநெறிக் கோட்பாடுகள்

**முனைவர் எம்.சுப்பராயன்**

**முன்னுரை**

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இரட்டைக் காவியங்கள் என்பர். சிலம்பை இசைத்த இளங்கோவடிகளும், மணிமேகலையை இயற்றிய சாத்தனாரும் சிறந்த நண்பர்கள், அடிகளைப் போலவே சாத்தனாரும் திருக்குறளில் ஈடுபட்டவர். அதன் ஆசிரியரைப் பொய்யில் புலவன் என்றும் அவர் வாய்மொழியைப் 'பொருளுரை' என்றும் போற்றியவர்.

**பொது மாதரும் குல மாதரும்**

மாதவியின் மகளாகிய மணிமேகலை இளமையிலேயே துறவறத்தை மேற்கொண்டாள். அருள் நெறியில் நின்ற அம் மங்கையைப் பொருள் நெறியிற் சேர்க்க விரும்பினாள் அவள் பாட்டியாகிய சித்திராபதி; இன்பத் துறையில் இழுக்க முயன்றான் உதயகுமரன் என்னும் அரசிளங்குமரன். பொதுமாதர் குலத்தைச் சேர்ந்த மணிமேகலை, ஆடலுடன் பாடலும் அழகும் காட்டி ஆடவர் உள்ளங் கவர்ந்து பொருள் சேர்க்கும் தொழிலை விட்டு, மாதவர் சங்கத்தைச் சேர்ந்து துறவு பூண்டது மதியீனம் என்று கருதினாள் சித்திராபதி. பொதுமாதரைப் பரத்தையர் என்றும், விலைமாதர் என்றும் கூறுவதுண்டு. அவரைப் 'பொருட் பெண்டிர்' என்றார் திருவள்ளுவர்! பொருளையே குறிக்கோளாகக் கொண்டவர் என்பது அச்சொல்லின் பொருள். அவருடைய தொழிலை மணிமேகலை விளக்கிக் கூறுகின்றது.

**வான்தரு கற்பு**

மாசிலாக் கற்புடைய மாதரை 'வான் தரு கற்பினர்' என்று மணிமேகலை சிறப்பிக்கிறது. மழை பொழியச் செய்யும் கற்பே, 'வான்தரு கற்பு' எனப்படும்... இத்தகைய கற்பு வாய்ந்த ஒரு பெண்மணியின் பெருமையை மணிமேகலை எடுத்துரைக்கின்றது. காவிரிப் பூம்பட்டினத்தில் வாழ்ந்த ஆதிரை என்னும் மங்கை அவ்வூர் வணிகன் ஒருவனை மணந்து இல்லறம் நடத்தினாள்.

அவ் வணிகன் ஒரு பொதுமாதின் மையலிலே தாழ்ந்து பொருளையெல்லாம் இழந்தான். வறுமையுற்ற நிலையில் மீண்டும் வாணிகம் செய்ய விரும்பிக் கப்பலேறிச் சென்றான். அக்கப்பல் கடுங்காற்றில் அகப்பட்டுக் கவிழ்ந்தது. அச்செய்தியை அறிந்தாள் ஆதிரை. கணவன் இறந்தபின் உயிர்வாழ ஒருப்படாது இறக்கத் துணிந்தாள். முதுகாட்டில் நெருப்பை மூட்டி அதனுள்ளே இறங்கினாள். அவளைச் சூழ்ந்து எழுந்த நெருப்பு சுடாது நின்றது. அதுகண்ட ஆதிரை, 'தீயும் கொல்லாத் தீவினையேன் இனி என்ன செய்வேன்' என்று வருந்தி அழுதாள். அப்போது ஆகாய வாணி "மாதே! உன் கணவன் இறக்கவில்லை. நாகர் மலையில் இருக்கின்றான். இன்னும் சில காலத்தில் இங்கு வந்து சேர்வான்" என்று கூறிற்று. அதுகேட்ட ஆதிரை துயரம் தீர்ந்து பொறுமையுடன் இருந்து கணவனைக் கண்டு இன்புற்றாள். இம்மாதின் சீர்மையை,

**மாதர் கற்பும் மன்னன் கடமையும்**

என்ற அடியில் இத்துணைப் பெருமை வாய்ந்த கற்பு நெறியைக் குறிக்கொண்டு காத்தல் மன்னவன் கடமை என்று மணிமேகலை வற்புறுத்துகின்றது. காவிரிப்பூம்பட்டினத்தில் அரசுபுரிந்த நெடுமுடிக் கிள்ளியின் மைந்தனாகிய உதயகுமரன், தவநெறியில் நின்ற மணிமேகலையைக் காதலித்தான்; பூந்தோட்டத்திற்கு அம்மங்கை மலர் பறிக்கச் சென்றபோது அவளைப் பின் தொடர்ந்தான். அங்கிருந்த தெய்வம் 'தவத்திறம் பூண்டோள் தன்மேல் வைத்த அவத்திறம் ஒழிக' என்று ஆணையிட்டது. அதனையும் பொருட்படுத்தாது தீய நெறியில் முனைந்து நின்ற உதயகுமரன் ஒரு விஞ்சையன் வாளால் வெட்டுண்டு விழுந்தான். அச்செய்தியை அறிந்தான் அரசன். அவன் நீதி தவறாதவன்; திருவள்ளுவர் அறிவுறுத்திய வண்ணம் அரச நீதியை முட்டாமற் செலுத்தும் மனத்திட்பம் வாய்ந்தவன்; தவநெறியில் வாழ்ந்த மணிமேகலைக்குத் தவறு செய்யக் கருதிய மைந்தன் இறந்தொழிந்தது தக்கதே என்று எண்ணினான். ஆயினும், ஒரு குறையை நினைத்து வருந்தியது அவன் உள்ளம். குற்றம் செய்தவனைத் தன்கையால் ஒறுத்து, நீதியின் நீர்மையை உலகறியக் காட்ட இயலாமற் போயிற்றே என்று அவன் ஏங்கினான்.

### மன்னனும் மழையும்

அரசாட்சி, நீதி தவறாது நடைபெறுமாயின் நாட்டில் மழை குன்றாது என்றும், அது முறை தவறி நடக்குமாயின் மழை பெய்யாது என்றும் திருக்குறள் கூறுகின்றது.

**முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்**

என்றார் திருவள்ளுவர். பருவத்தில் மழை பெய்யாதொழிந்தால் பயிர்த்தொழில் நடவாது; பசியின் கொடுமை மக்களை வாட்டி வருத்தும். இதனாலேயே "வான் நோக்கி வாழும் உலகெல்லாம்" என்ற வள்ளுவர் வாய்மொழி எழுந்தது.

**பிறப்பும், இறப்பும்**

அறம் ஒன்றே அழியாத் தன்மை வாய்ந்தது என்றார் திருவள்ளுவர். "மாந்தர் பெற்ற உடலும், உடைமையும், பிறவும் அழிந்தொழியும் ஒல்லும் வகையால் ஓவாது செய்யும் அறமே உறுதுணையாகும்" என்று வள்ளுவர் கருத்தை விளக்கிக் கூறுகின்றது மணிமேகலை.

**குற்றங்களின் வகை**

புத்தமதச் சார்பாக எழுந்த மணிமேகலை, பத்து வகையாகப் பாவங்களை வகுத்துக் கூறும். அவை, மனம் மொழி மெய் என்னும் மூன்றாலும் மாந்தர் செய்யும் குற்றங்களாகும். மனத்தில் நிகழும் குற்றங்கள் மூன்று,

**காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய்**

என்ற வள்ளுவர் வாக்கில், மனத்தால் நிகழும் முக்குற்றங்களும் முறையாக உணர்த்தப்படுகின்றன. கௌதமபுத்தர் இம்மூன்று குற்றங்களையும் முற்ற அறுத்தவர் என்பர். "போதி மூலம் பொருந்தியிருந்தது, மாரனை வென்று வீரனாகி, குற்ற மூன்றும் அறுக்கும் வாமன்" என்று புத்த தேவனைப் போற்றிப் புகழ்கின்றது மணிமேகலை. மனத்தில் நிகழும் இக்குற்றங்களை.

**வெஃகல் வெகுவால் பொல்லாக் காட்சிஎன்று**
**உன்னந் தன்னில் உருப்பன மூன்றும்**

என்று மணிமேகலை கூறும்.

இனி, வாக்கில் நிகழும் குற்றங்களையும் விரித்துரைக்கின்றார் வள்ளுவர், பொய் சொல்லுதல், புறங்கூறுதல், வன்சொல் வழங்குதல், வெற்றுரையாடுதல் என்னும் நான்கும் வாக்கிலே விளையுங் குற்றங்களாகும். இவற்றை ஒழித்தல் வேண்டும் என்று அழுத்தமாகக் கூறுகின்றது திருக்குறள்,

**பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று**

என்று வள்ளுவர் வாக்கில், பொய்யாமையே சிறந்த அறம் என்பது வற்புறுத்தப்படுகின்றது. ஒருவன் இல்லாத விடத்து அவனைப் பழித்தும், இழித்தும் பேசுதல் குற்றம் என்பது வள்ளுவர் கொள்கை. புறங்கூறி வாழ்வதனினும் இறந்தொழிதல் நன்று என்றார் வள்ளுவர்.

**புறங்கூறிப் பொய்த்துஉயிர் வாழ்தலிற் சாதல்**
**அறங்கூறும் ஆக்கம் தரும்**

என்பது அவர் வாக்கு.

வாக்கிலே வன்சொல் வரலாகாது. இன்சொல்லால் இன்பம் பெருகும்; துன்பம் குறையும்; அறம் வளரும்; பாவம் தேயும்.

**இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ**
**வன்சொல் வழங்கு எது?**

என்று கேட்கின்றார் வள்ளுவர். வன்சொல்லைப் போலவே வெறுஞ் சொல்லும் வழங்கலாகாது என்பது வள்ளுவர் கொள்கை. அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைப் பேசலாகாது என்று திருக்குறள் தெளிவுரை கூறுகின்றது.

**இருவகைப் பற்று**

இவ்வுலகில் பிறந்தும் இறந்தும் அலமரும் உயிர்கள் கரையேறுவதற்கு வழிகாட்டுகின்றார் திருவள்ளுவர். 'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்' என்பது அவர் வாய்மொழி. யான், எனது என்னும் இருவகைப் பற்றும் அற்ற நிலையில் பிறப்பும் ஒழியும். 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்ற திருவாக்கும் அவ்வுண்மையை உணர்த்துவதாகும்.

**தமக்குரியவரும் பிறர்க்குரியவரும்**

அன்பே இறைவனது திருவுருவம் என்று எல்லாச் சமயங்களும் கூறும். எனவே, அன்பு வடிவாய் இறைவனை அடைவதற்கு அன்பே சிறந்த வழி என்பார் ஆன்றோர்.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு**

என்று அன்புடையாரின் தன்மையை அறிவித்தார் திருவள்ளுவர். அன்பிலார் தம்நலமே பேணுவர்; அன்புடையார் பிறர் நலம் பேணுவர் என்ற திருக்குறளின் கருத்தை மணிமேகலை எடுத்தாளுகின்றது. அருளறம் பூண்ட புத்த தேவனை,

**தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்**

என்றும்,

**பிறர்க்கு அறம் முயலும் பெரியோன்**

என்றும் போற்றுகின்றது மணிமேகலை. அப்பெருமான் வாழ்ந்து காட்டிய நெறியைக் கடைப்பிடித்தால் சுயநலம் வீழும்; பொதுநலம் வாழும். இச்செந்நெறியை ஒரு மன்னன் வரலாற்றால் விளக்குகின்றது அக் காவியம்.

**முடிவுரை**

சாவக நாட்டின் தலைநகராகிய நாகபுரத்தில் புண்ணிராசன் என்பவன் அரசு வீற்றிருந்தான். அவன் ஆட்சியில் அறம் வளர்ந்தது; மறம் தளர்ந்தது; குடிமக்கள் இன்புற்று வாழ்ந்தனர். இந்நிலையில் அம் மன்னன் "தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார்" என்றும் பொருளுரையை நினைந்து, அரசாட்சியில் வெறுப்புற்றுத் துறவறத்தை மேற்கொள்ள விரும்பினான். அதை அறிந்த அமைச்சன், "அரசே! இந்நாட்டில் நீ பிறப்பதற்கு முன் பன்னீரண்டு மழை இல்லாமற் போயிற்று. உயிர்கள் எல்லாம் வறுமைவாய்ப்பட்டு வாடி வருந்தின. அக்காலத்தில் நீ தோன்றினை. நீ பிறந்தது முதல் இந்நாட்டில் வளம் சிறந்தது; துயரம் தீர்ந்தது. நீ அரசு துறந்தால் பிரிந்த சேய் போல் நாடு அலமரும். உன்னையே நோக்கி வாழும் உலகத்தைக் காவாமல் தன்னலம் கருதித் துறத்தல் தக்க தன்று" என்று கூறி மேலும்,

**தன் உயிர்க்கு இரங்கான பிறஉயிர் ஓம்பும்**
**மன்னுயிர் முதல்வன் அறமும்ஈ தன்றால்**

என்று புத்ததேவனது அருள் நெறியை அறிவுறுத்தினான். அவ்வுரை கேட்ட மன்னன் மன்னுயிரைத் துறந்து சொல்லும் கருத்தை ஒழித்தான் என்று மணிமேகலை கூறுகின்றது. பிறர்க்கென வாழும் பெருந்தகைமை தொன்றுதொட்டுத் தமிழ்நாடு போற்றும் பண்பாகும்.

# வள்ளுவர் உணர்த்தும் கல்விச் சிந்தனைகள்

**இரை.பாஸ்கர்**

**முன்னுரை**

உலகின் மூத்த குடியாம் தமிழ்க்குடிக்குப் பெருமை சேர்க்கும் வண்ணம் தோன்றிற் புகழோடு தோன்றியவர் திருவள்ளுவர் என்னும் செந்நாப்புலவராவார். தனக்குவமை இல்லாத அத்தமிழ்ப் பெரியார் செயற்கரிய செய்த நூல் திருக்குறள். அது கடல்போல ஆழ்ந்து, அகன்று, மக்களின் வாழ்வியல் கூறுகளைத் தொகுத்தும் பகுத்தும் நுட்பமாகவும் ஓட்பமாகவும் தெட்பமாகவும் எடுத்தியம்பும் ஈடு இணையற்ற நூலாக இலங்கியும் துலங்கியும் விளங்கியும் ஒளிர்ந்து கொண்டிருக்கின்றது.

உலகில் தோன்றிய நூல்களுள் பல இலக்கிய வளமிக்கதாக இருக்கும்; வேறு பல சமூக சிந்தனையை மட்டும் கொண்டதாக இருக்கும். மிகச்சிலவே இரண்டும் உள்ளனவாக இருக்கும். அவற்றுள் தலையாயது திருக்குறள். வள்ளுவர் உணர்த்தும் கல்விச் சிந்தனைகள் பற்றி இக்கட்டுரையில் இனிக் காண்போம்.

**வள்ளுவர் உலகம் தழுவிச்சிந்திக்கும் சிந்தனையாளர்**

உயர்நெறி சான்ற தலைமைப்புலவர், மொழி, இனம், சமயம், நாடு எனும் எல்லைக்குள் தம்மை அடக்கிக்கொண்டவர் அல்லர். மாறாக அவர்கள் அவற்றைக்கடந்து உலகம் தழுவிச்சிந்திக்கும் சிந்தனையாளர் ஆவார். திருவள்ளுவரும் இப்படிப்பட்ட சிந்தனையாளரே ஆவர். அதனால்தான் அவரும் பரந்த கண்ணோட்டத்தில்,

**யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்**
**சாந்துணையுங் கல்லாத வாறு (குறள் 397)**

என்றார்.

கல்வியின் அடிப்படைப்பண்பே, எல்லா நாட்டையும் ஊரையும் தம் சொந்த ஊராகக் கருத விரும்புவதேயாகும். வள்ளுவருக்கு இந்த உலகச் சிந்தனை இருந்ததால்தான் தம் நூலில், தாம் பிறந்த நாட்டைப் பற்றியோ, மொழியைப் பற்றியோ, இனத்தைப் பற்றியோ, சமயத்தைப் பற்றியோ அவர் குறிப்பிடவில்லை. இவற்றிலிருந்து வள்ளுவரின் பொதுமை நோக்கை நன்கு உணரலாம். எல்லோர்க்கும் கல்வி என்பதே வள்ளுவரின் கருத்து.

உழைப்பாளிகள் உழைப்பில் மட்டுமே ஈடுபட வேண்டுமென்றும், கற்றலிலோ, வேதத்தைக் கேட்பதிலோ ஈடுபட்டால் அவர்களுக்குத் தண்டனைகள் கொடுக்கப்படும் என்று இருந்த காலத்தில் வள்ளுவரின் சிந்தனை எத்துணை மாறானது என்பது கீழ்கண்ட குறள்களின் மூலம் நாம் நன்கு அறியலாம்.

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு (392)**

**கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு**
**புண்ணுடையார் கல்லா தவர் (393)**

“வாழும் உயிர்க்கு” என்பதால் கல்வி மனிதர்களாகப் பிறந்த அனைவருக்கும் உரித்து என வலியுறுத்துவதைக் காணலாம். எல்லோர்க்கும் கல்வி என்பதே வள்ளுவரின் கருத்து ஆகும்.

தன்னைப்புரிந்து கொள்ளவும், உலகத்தை அறிந்துக் கொள்ளவும் கல்வி இன்றியமையாத கருவியாதலின் கண்ணுடையோர் என்பவர் கற்றோர் என்றும் கூறினார். இத்தகு மேம்பாடு கல்வியை மனிதனாகப் பிறந்த எவனும் எந்நிலையிலும் கற்காமல் இருக்கக் கூடாது என்பதற்காகவே, கல்வியோடு ‘கல்லாமை’ அதிகாரத்தையும் கூறினார்.

**கல்லாதவர் விலங்குகளுக்கு ஒப்பாவர்**
**உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்**
**களரனையர் கல்லா தவர் (406)**

**விலங்கொடு மக்கள் அனையர்; இலங்குநூல்**
**கற்றாரோடு ஏனை யவர் (குறள் 410)**

மேற்கண்ட குறட்பாக்களில் கல்லாதவர் உயிரோடு இருக்கின்றனர் எனும் நிலையைத் தவிர அவர்க்கு வேறு சிறப்பு இல்லையென்றும் அவ்வாறு அவர்கள் உயிரோடு இருந்தாலும்,

விலங்குகளுக்கு ஒப்பாவர் எனக் கூறுவதால், மக்களுக்குக் கல்லாமையின் தீமையையும், கல்வியின் ஒட்பத்தையும் எத்துணைச் சிறப்பாக வலியுறுத்தியுள்ளார் என்பதைத் தெள்ளிதின் உணரலாம்.

மேலும் காலந்தோறும் நிலவி வந்த சாதி வேறுபாட்டையும் அதன் ஏற்றத்தாழ்வையும் கல்வியின் மூலமாக ஒழிக்க முடியுமென வள்ளுவர் நம்பினார். அதனாற்றான் அதனைப் பல்லாற்றானும் விரித்துரைத்தார் எனலாம். அதனாலன்றோ,

**யாதானும் நாடாமல் ஊராமல் என்னொருவர்**
**சாந்துணையம் கல்லாத வாறு (குறள் 397)**

என்றார்.

ஒருவன் நற்கல்வி பெற்று விடுவானேயானால் அவனிடம் உள்ள சாதி வேற்றுமைகளொழிந்து நாட்டையும் உலகையும் சுற்றமாகக் கருதும் உணர்வு பெருகும் என்பதை மேற்கண்ட குறளில் அவர் சுட்டிக்காட்டுவதைக் காணலாம். இதனையே, பழமொழி நானூறில் முன்றுறை அரையனார்

**ஆற்றவும் கற்றார் அறிவுடையார்; அஃதுடையார்**
**நாற்றிசையும் செல்லாத நாடில்லை; அந்நாடு**
**வேற்றுநாடு ஆகா; தமவேயாம்; ஆயினால்**
**ஆற்றுணா வேண்டுவது இல்.**

கற்றவர் அறிவுடையார் ஆவார். அவருடைய புகழ் நான்கு திசைகளிலும் பரவும். அவருடைய புகழ் பரவாத நாடில்லை. அந்த நாடுகள் எல்லாம் வேறு நாடுகள் இல்லை. அறிவுடையார் நாடுகளே. எனவே, அந்நாடுகளுக்குச் செல்லும்போது வழிநடை உணவை அவர் எடுத்துச் செல்ல வேண்டிய தேவையில்லை என்றார்.

இத்தகு சீர்மிகு கல்வியை ஒருவன் ஏன் சாகும் வரை கற்காமல் இருக்கிறான்? என்ற திருவள்ளுவரின் சிந்தனை சீரியதாகும். உலக மாந்தர் அனைவரையும் சுற்றமாகவும் உற்றமாகவும் போற்றுவதே கல்வியின் பயனாகும் எனக் கருதியே,

**உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்**
**கூம்பலும் இல்லது அறிவு (குறள் 425)**

என்றார்.

**கல்வியின் இன்றியமையாமை**

வள்ளுவர் அனைத்திலும் சமத்துவத்தை நிலைநிறுத்த விரும்பியவர். ஆதலின், அவர் கல்வியை அனைவரும் பெற வலியுறுத்தினார். அதனாற்றான்,

**உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்**
**களரனையர் கல்லா தவர்**

என்றும்,

**எதிர்மறை வாய்பாட்டால் கல்லாதவரின் இழிவைக்கூறி**
**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு**

என்றும்,

**கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடல்ல மற்றை யவை (குறள் 400)**

என்றும், கல்வியின் இன்றியமையாமையையும், அதன் விழுப்பத்தையும் மிகச்சிறப்பாக எடுத்தோதினார் ‘கேடில் விழுச்செல்வம்‘ எனக் கூறியதால் கல்வி அழியாத செல்வமாகும் எனச் சிறப்பித்துக் கூறியுள்ளார். இதனையே நீதிநெறி விளக்கத்தில் குமரகுருபரர்,

**கல்வி உடைமை பொருளுடைமை என்றிரண்டு**
**செல்வமும் செல்வம் எனப்படும்; இல்லார்**
**குறை இரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்**
**தலைவணங்கித் தாழப் பெறின்.**

என்றார்,

கல்வியும் பொருளும் சிறந்த செல்வமாகக் கருதப்படும். பொருள் இல்லாதவர் பொருளைப் பிறரிடம் பணிந்து கேட்பதுபோலக் கல்விச் செல்வத்தையும் கற்றோரிடம் வணங்கிப் பணிந்து பெற வேண்டும் என்று கூறினார்.

**அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்**
**அஃது அறிகல்லா தவர் (குறள் 427)**

என்றும்,

**அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர் (குறள் 430)**

என்றும் கூறியிருப்பதால் வள்ளுவரின் கல்விச் சிந்தனை எவ்வளவு சிறப்பானது என்பதை உணரமுடியும்.

**ஒருமைப்பாட்டுக் கல்வி**

திருவள்ளுவர் கல்வியை ஒருமைப்பாட்டுக் கல்வியாகவே கருதுகிறார். ஒருமையுணர்வினைத் தராத கல்வியறிவைத் திருவள்ளுவர் ஏற்றுக்கொள்ளவில்லை.

**உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார் (குறள் 140)**

என்றும்,

**எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு**
**அவ்வது உறைவது அறிவு (குறள் 426)**

என்றும், கூறியிருப்பது அறியத்தக்கது. எல்லா நாடுகளையும், எல்லா ஊர்களையும் தமதென ஏற்றுத் தழுவி வாழுதலுக்கே கல்வி தேவையென்று கருதுகின்றார் திருவள்ளுவர்.

பிறப்பால் உயர்வு தாழ்வைக் கற்பிக்கும் வைதிகநெறியை வள்ளுவர் சிறிதும் ஏற்றவரல்லர். மனித சமுதாயத்தில் கற்றார், கல்லார், பண்புடையார், பண்பிலார் எனும் நிலையில் மட்டுமே வள்ளுவர் உயர்வு தாழ்வு கருதினாரேயன்றிப் பிறப்பால் அன்று.

**மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்பிறந்தும்**
**கற்றார் அனைத்திலர் பாடு (குறள் 409)**

மேற்குடியில் பிறந்த ஒருவன் தம்பிறப்பை நோக்கிப் பெருமை பேசிக் கொண்டாலும், அவன் கல்லாதவனாக இருப்பானேயாயின் அவன் தாழ்ந்தவனே. ஆனால், கீழ்க்குடியில் பிறந்தவன் கற்றவனாக இருப்பின் அவன் உயர்ந்தவனே என்ற வள்ளுவரின் சிந்தனை மிகச் சிறந்த சிந்தனையாகும்.

**கல்வியே மூலப்பொருள்**

கல்விதான் மனிதனை விலங்கு நிலையிலிருந்து பிரித்து வளர்ப்பது. ஆகவே அவனுக்கும், காலந்தோறும், ஆக்க சக்தியாகவும், ஆற்றலாகவும், காப்பாகவும், வாழ்வு நெறியாகவும் இருந்து வருகிறது. காலந்தோறும் வளர்ந்து வரும் சிந்தனைகளை அழியாமல் காப்பது கல்வியேயாகும்.

ஒன்றை ஆக்குவதற்கும், வளர்ப்பதற்கும், காப்பதற்கும் கல்வியே மூலப்பொருளாக உள்ளது. அதனாலன்றோ கேடில் விழுச்செல்வம் என்றார் இத்துணைச் சிறப்பிற்குரிய கல்விக்கு இணையாக வேறொன்றைக் கூற முடியாது எனக் கருதியே 'மாடல்ல மற்றயவை' என்றார்.

குற்றமற, முயன்று கற்க வேண்டும் என்ற வள்ளுவரின் சிந்தனை கற்க வேண்டிய நூல்களைக் கற்க வேண்டும். அவ்வாறு கற்ற பிறகு தகுந்த ஒழுக்க நெறியில் வாழ வேண்டும்.

**கற்க கசடறக் கற்பவை; கற்றபின்**
**நிற்க அதற்குத் தக (குறள் 391)**

தோண்டிய அளவுக்கு மணல் ஊற்றில் நீர் ஊறும். அதுபோல அவரவர் முயன்று கற்கும் அளவுக்கு அறிவு பெருகும்.

**தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத்து ஊறும் அறிவு (குறள் 396)**

திருவள்ளுவரின் கல்விச் சிந்தனை கல்வி கற்போரின் மனத்தில் குற்றமறக் கற்கும் மற்றும் முயன்று கற்கும் எண்ணத்தை ஏற்படுத்தும்.

**கல்வியறிவின் பயன்**

கல்வியறிவின் பயனே பிற உயிர்களின் துன்பங்களையும் தம் துன்பம்போல் கருதி அவற்றை நீக்கும் சமுதாயப் பொறுப்பாகும். இல்லையேல் எத்துணை நுண்ணறிவு இயல்பாகப் பெற்றிருந்தாலும் பயனில்லை எனக் கருதியே,

**அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்**
**தம்நோய்போல் போற்றாக் கடை (குறள் 315)**

என்றார். 'உண்டோ' எனும் கேள்வியால் வள்ளுவரின் மனித நேயத்தை உணரலாம். கல்வியின் பெருமையைக் கூறுவதைக் காட்டிலும் அதன் பயன்பாட்டிலே மிகவும் சிந்தனையைச் செலுத்தியவர் திருவள்ளுவர் ஆவார்.

**முடிவுரை**

மொழி, சாதி, இனம், சமயம், நாடு கடந்து உலகில் உள்ள அனைவரையும் நம்மவராக, உற்றவராகக் கொள்வதற்கு அடிப்படையாக நமக்குத் துணைபுரிவது கல்வியாகும். சமுதாயத்தில் உள்ள அனைத்து மாசுகளையும் நீக்கக் கல்வியே கைகண்ட கண்கண்ட மருந்தாகும்.

வள்ளுவர் உணர்த்தும் கல்விச்சிந்தனைகள் அனைத்தையும் நாம் வெளியுலகுக்கு உணர்த்தக் கடமைப்பட்டவராக இருக்க வேண்டும்.

# உலகப் பொதுமறை உணர்த்தும் தத்துவங்கள்

**சு.திருஞானசம்பந்தம்**

**முன்னுரை**

உலகப் பொதுமறை திருக்குறள் உலக மக்களுக்குப் பொதுவான இறைவழிபாடு, அறவாழ்வு, ஒழுக்கம், தூய்மை, கல்வி, குடும்பம், சமுதாயம், நாடு, நட்பு, அரசியல், மக்கள் கடமை, வாழ்வியல் நெறி, பெண்ணியம், கற்பு, மானம், பெருமை எல்லாவற்றிற்கும் இலக்கணம் கற்பித்தது போல் அமைந்து வாழ்க்கைக்கு உதவும் உயரிய தத்துவங்களை தன்னகத்தே கொண்டு மனித வாழ்விற்கு உயிராய் உள்ளது.

ஒரு சமூகத்தின், நாட்டின், உலகத்தின் கௌரவம், தனி மனிதனின் கல்வி, ஒழுக்கம், பணி, நிதி, வளர்ச்சி, ஆரோக்கியம் ஆகியவற்றின் மூலம் மட்டுமே அமைய முடியும்.

இதற்கு மனிதனுக்கு ஒரு அறவழிப் பாதை தேவைப்படுகிறது. இவ்வறவழிப்பாதையின் மூலம் மட்டுமே மேற்சொன்ன தனிமனிதனுக்கான அறவழிப் பண்புகள் கிட்டும்.

மனித குலத்தை மேம்படுத்தி ஒன்றுபடுத்தவும், தனிமனித குணங்களை மேம்படுத்தவும் உலகத்திற்கே பொதுவான நூலான திருக்குறளில் வழிகள் உள்ளது. மனித வாழ்க்கைக்குத் தேவையான அனைத்துத் தத்துவங்கள், இலக்கணங்கள், பொன்மொழிகள், திருக்குறளில் 133 அதிகாரங்களும் 1330 குறள்களும் உள்ளன. 1330 குறள்களில் ஏதேனும் நான்கு குறள்களைப் படித்து அதன் தத்துவங்களின் வழிநின்று வாழ்ந்தோமானால் மனிதகுல சமுதாயமே தேவர்களுக்கு ஒப்பாகும்.

(எ.டு.)

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

இல்லறவாழ்க்கைக்கு மட்டுமின்றி இன்று உலகத்திற்கே முதலில் அத்தியாவசியமாய் ஒவ்வொரு மனிதரிடத்துள்ளும் இருக்க வேண்டிய உயரிய பண்புகள் அன்பும், அறமும் என்கிறார். இது ஒன்றே போதும் சாதி, மதம், ஏழ்மை, பணக்காரன், குற்றம், கொலை, கொள்ளை, ஏமாற்று வாழ்க்கை போன்ற கொடிய அரக்கன்களை ஒழித்துவிடலாம். உலகம் என்ற சக்கரத்திற்கு உண்மை என்ற அச்சாணி இருந்தால் வாழ்க்கைப் பயணம் முழுவதும் இன்பமே.

**கல்விக்காக**

**கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக**

இந்தக் குறளில் உள்ள தத்துவமானது கற்கத் தகுந்த நல்ல நூல்களைக் குற்றம் அறத் தெளிவாகக் கற்க வேண்டும். கற்றபிறகு அதன்படி வாழ வேண்டும் என்பதாகும். இங்கே கல்விக்கும் வாழ்க்கைக்கும் எது இலக்கணம் என்று அழகாக வள்ளுவர் கூறுகிறார்.

**ஒழுக்கத்திற்காக**

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்**

ஒருவருக்கு ஒழுக்கம் (சத்தியம், உண்மை, நன்னெறி, நேர்மை, தூய்மை, நல்லெண்ணம்) உயிரைவிடச் சிறந்தது. பின் வேறொன்றுமில்லை என்ற தத்துவம் உலகத்தில் உள்ள எல்லா மனிதருக்கும் பொருந்தும்.

**புகழ்**

**தோன்றின் புகழொடு தோன்றுக, அஃது இலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று.**

ஒரு துறையில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டால் அத்துறையில் புகழ் பெற்றுத் திகழ வேண்டும். அப்படி இல்லாவிடில் அத்துறையை மேற்கொள்ளாமல் இருப்பது நல்லது.

இக்குறளில் உள்ள தத்துவம் உலகத்தில் உள்ள அனைத்து நாட்டு மக்களுக்கும், வாழ்க்கையில் ஏதாவது ஒன்றைச் சாதிக்கத் துடிக்கும் மனிதர்களுக்கும் உற்சாக டானிக்காகும்.

இந்த நான்கு குறள்களில் அடங்கியுள்ள உண்மையை, தத்துவத்தை உலகத்தில் உள்ள அனைத்து நாட்டினரும்

சமயத்தவரும் பின்பற்றினாலே மனிதஇனம் செம்மை பெறும், உயர்வு பெறும். கெட்ட, கொடிய, வறுமை, தாழ்ந்த, பாவம், பொய், சூது, ஏமாற்று, கொலை, கொள்ளை, கற்பழிப்பு, பித்தலாட்டம், இலஞ்சம், ஊழல், தண்டனை போன்ற சொற்கள் உலகத்தில் கேட்க நினைப்பதற்குக் கூட இல்லாமல் காணாமல் போய்விடும்.

திருக்குறளைத் தமிழர் மட்டும் போற்றிக் கொண்டாடிக் கொண்டிருந்த காலம் போய் இன்று உலகளவில் 35 மொழிகளில் 12க்கும் மேற்பட்ட மொழிபெயர்ப்புகள் செய்யப்பட்டுள்ளது.

செர்மானிய அறிஞர் ஆல்பாட்டு சுவைட்சர் திருக்குறளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

> உயர்ந்த் அனுபவ ஞானம் நிறைந்த அறவுரைத் தொகுப்பு திருக்குறளில் உள்ளது போன்று உலக இலக்கியங்கள் எவற்றிலும் இல்லை.

என்று ஆணி அடித்தாற்போலக் கூறுகிறார்.

**தத்துவம்**

சிந்தனை என்பதைத் தத்துவம் என்றும் சொல்லலாம். கார்ல் மார்க்ஸ் தத்துவம் பற்றிக் குறிப்பிடும்பொழுது:

> எப்போது ஒரு தத்துவம் மனிதனை ஆட்கொள்கிறதோ, அப்போது அது ஓர் இயக்க சக்தியாக உருவெடுக்கிறது.

என்று கூறுகிறார்.

சிந்தனை என்பது தத்துவமானால் திருக்குறளிலுள்ள 1330 குறள்களுமே தத்துவங்களாகும். இவற்றில் மிக உன்னதமான, தெய்வாம்சம் பொருந்திய, மனிதகுலத்தை நெறிப்படுத்தும், முறைமைப்படுத்தும், சான்றோராக்கும் வல்லமையைப் படைத்த குறள்களையும், அக்குறள்கள் கூறும் தத்துவங்களையும் காண்போம்.

**குறள் கூறும் அரிய, எளிய தத்துவங்கள்**
**மக்கட்பேறு (அதிகாரத்தில்)**

ஒரு தந்தை தன் மகனுக்குச் செய்ய வேண்டிய கடமை என்னவென்றால் தன்மகன் கற்றவர்கள் பலர் கூடியிருக்கும் சபையில் முதன்மையானவாய் மதிக்கத் திகழும் வண்ணம் வளர்க்க வேண்டும் என,

**தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்**

என்ற குறளிலும் மேலும் ஒரு மகன் தன்தந்தைக்கு என்ன கைம்மாறு செய்ய வேண்டும் என்றால் "இந்த மகனைப் பெறுவதற்கு இவன் தந்தை என்ன தவம் செய்தானோ" என்று சான்றோர் புகழும் வண்ணம் வாழ்க்கையில் உயரிய நல்ல நிலையை அடைவது மகனின் இலட்சியமாக இருக்க வேண்டும் என்று,

**மகன் தந்தைக்குஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்நோற்றான் கொல்எனும் சொல்**

என்ற குறள்மூலமாக ஒரு நல்ல தத்துவத்தை உணர்த்துகிறார்.

**நன்றியைப் பற்றி**

**செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்**
**வானகமும் ஆற்றல் அரிது**

என்ற குறளில் அழகாகச் சொல்லுகிறார். இதற்குமுன் எந்த ஒரு உதவியும் பெறாமல், தான் ஒருவருக்குச் செய்கின்ற உதவிக்கு விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் கொடுத்தாலும் ஈடாகாது.

**நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது**
**அன்றே மறப்பது நன்று**

ஒருவர் செய்த நன்மையை மறப்பது அறமன்று எனவும் அவர் செய்த தீமையை அன்றே மறப்பது அறமாகும் என்று மனிதனுக்கு சிறந்த பண்பைப் போதிக்கிறார்.

**நடுவு நிலைமை**
**தகுதி என ஒன்று நன்றே பகுதியால்**
**பால்பட்டு ஒழுகப் பெறின்**

விருப்பும் வெறுப்பும் இன்றி நடுநிலையுடன், நீதிநெறியுடன் செயல்பட்டால் அறம் தழைத்தோங்கும். இதை தனிமனிதன் அன்றி, நீதி மன்றங்களும் நாடுகளும் பின்பற்றினால் மனிதகுலத்துக்கு என்றும் அழிவில்லை.

**அடக்க வாழ்வு ஆக்கம் பெருக்கும்**

**அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை**
**ஆர்இருள் உய்த்து விடும்**

அடக்கம் என்றும் நம்மை அழியாத அமரராக்கும், அடங்காமை நம்மை இருண்ட வாழ்க்கைக்குத் தள்ளிவிடும்.

எனவே அடக்கம் என்ற உயர்ந்த பண்பைப் பெற்று, நெறிதவறாத வாழ்வு வாழ வேண்டும் என்பது இதில் கூறப்பட்டுள்ள உயர்ந்த தத்துவம்.

**யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்இழுக்குப் பட்டு**

ஒருவர் எவற்றைக் காப்பாற்றாவிட்டாலும் தன்நாவையாவது அடக்கிக் காக்க வேண்டும், அப்படி இல்லாவிட்டால் இழுக்கான வார்த்தைகள் பேசித்துன்பத்தை மட்டுமே அடைவர் என்று நாவடக்கம் பற்றிக் கூறுவது உயர்ந்த தத்துவமாகும்.

**தீயினாற் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு**

என்ற குறளில், நாவு பயன்படுத்திய கடும்சொற்கள் என்றும் ஆறாத வடுவாய் சுடப்பட்டவரின் உள்ளத்தில் காயம்பட்டே இருக்கும் என்ற தத்துவம், உலகத்துக்கே பொதுநிலையாகும்.

**கல்வியின் தத்துவம்**

**கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடு அல்லமற்றை யவை**

என்ற குறள்மூலம் ஒருவனுக்கு அழியாத உயர்ந்த செல்வம் கல்வி ஒன்றே. மற்ற செல்வங்கள் எல்லாம் சிறப்பு ஆகா என்று கல்வியின் முக்கியத்துவத்தை வலியுறுத்துவது நல்ல தத்துவமாகும்.

**கல்லாமை**

**விலங்கொடு மக்கள் அனையர், இலங்குநூல்**
**கற்றாரோடு ஏனை யவர்**

ஐந்தறிவு விலங்குகளுக்கும், ஆறறிவு மக்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு, கல்லாதவருக்கும் அறிவு விளங்கும் நூல்களைக் கற்றவர்க்கும் உள்ள வேறுபாடாகும் என்று கல்லாமையைப் பற்றி வள்ளுவர் கூறுவதும் அழகிய தத்துவமே.

**கேள்வி**

**செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை**

இக்குறளில் உள்ள தத்துவம், மனிதன் வாழ்வில் அடையத்தக்க பலவகைச் செல்வங்களுக்குள் உயர்ந்த செல்வம் நல்லவற்றைக் கேட்பதால் உண்டாகும் அறிவுச் செல்வமே என்பதாகும்.

**பிறன் இல் விழையாமை**

**அறன் வரையான் அல்ல செயினும் பிறன் வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று**

இக்குறள் என்ன தத்துவம் சொல்கிறதென்றால் ஒருவன் அறன் அல்லாதவைகளைச் செய்ய நேர்ந்தாலும் பிறன் மனைவியை விரும்பாமை நல்லது என்று வள்ளுவர் கற்புக்கு வேலி போடுகிறார்.

**பொறுமை**

**ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்கு**
**பொன்றுந் துணையும் புகழ்**

இக்குறளில் விளங்கும் தத்துவம் என்னவென்றால் தீமை செய்தவருக்கு ஒரு நாள் மட்டுமே இன்பம். ஆனால் தீமையைப் பொறுத்துக் கொண்டவருக்கு உலகம் உள்ள மட்டும் புகழ் ஓங்கியிருக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார்.

**அழுக்காறாமை**

**அழுக்கற்று அகன்றாரும் இல்லை, அஃதுஇல்லார்**
**பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்லை**

இக்குறள் கூறும் தத்துவம் உலகில் பொறாமையால் உயர்ந்தவரும் இல்லை, பொறாமை இல்லாத நல்லவர் தாழ்ந்ததும் இல்லை என்பதாம்.

**ஈகை**

**அற்றார் அழிபசி தீர்த்தல், அஃதுஒருவன்**
**பெற்றான் பொருள் வைப்புழி**

இதில் உள்ள தத்துவம், 'மிகப்பொருள் சேர்த்து பெருஞ் செல்வந்தனானவன், அப்பொருளைச் சேமிக்கும் வழி ஏழைகளின் கொடிய பசியை நீக்குவதாகும்'.

இவ்வரிய தத்துவத்தை உலகத்தின் முதல் கோடீஸ்வரர்களான பில் கேட்ஸ் (கேட்ஸ் மெலிண்டா அறக்கட்டளை) வாரன் பஃபெட் (வாரன் பஃபெட் அறக்கட்டளை), இன் ஃபோசிஸ் நாராயண மூர்த்தி (இன்ஃபோசிஸ் அறக்கட்டளை) ஆகியோர் இன்று இந்திய,

ஆப்பிரிக்க மற்றும் உலகில் உள்ள அத்தனை ஏழைகளின் பசி போக்க, கல்வி கொடுக்கத் தாங்கள் சேர்த்த சொத்துகளில் பாதியைக் கொடுக்க விழைந்துள்ளார்கள் என்றால் இக்குறள் காட்டும் தத்துவம்தான் காரணம்.

**கள்ளாமை**

**உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வோம் எனல்**

ஒரு அருமையான தத்துவம் இக்குறளில் அடங்கியுள்ளது. பிறன் பொருளை கவர்வோம் என உள்ளத்தால் நினைத்தாலும் தீமை என்று மனத் தூய்மைக்கும் இக்குறள் சான்றாக விளங்குகிறது.

**வாய்மை**

**வாய்மை எனப்படுவது யாதுஎனின் யாதுஒன்றும்**
**தீமை இலாத சொலல்**

இக்குறளில் தெளிவாய் விளங்கும் எளிய தத்துவம் "எந்தத் தீமையும் தராத சொல்லைச் சொல்ல, பேச வேண்டும் என்பதே.

**வெகுளாமை**

**தன்னைத்தான் காக்கின் சினம்காக்க, காவாக்கால்**
**தன்னையே கொல்லும் சினம்**

அடுத்தவர் சினம் மட்டுமல்ல, நம்முடைய சினமே, அதைக் காக்காவிடில் அது நம்மையே கொன்று விடும் என்ற ஒரு தத்துவத்தை இக்குறள் வெளிப்படுத்துகிறது. இதைவிடச் சினத்தினால் உண்டாகும் தீமையைப் பெரிதாக யாராலும் விளக்க முடியாது.

**அற வாழ்வுக்கான தத்துவம்**

மனிதன் அறவழி நின்று, (நேர்மையாக, உண்மையாக, தர்ம மனசாட்சிப்படி, சத்தியத்தின் வழியாய்) வாழ்ந்து கிடைக்கின்ற உயரிய உணர்வே இன்பமாகும். இதைவிட்டு மற்ற வழியில் வருபவை புறம்பானவை என்ற அருமையான தத்துவத்தை,

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்**
**ஆகுல நீர பிற**

என்ற குறள் வழங்குகிறது. இதேபோன்று,

**அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்**
**புறத்த புகழும் இல**

என்னும் குறளிலும் கூறுகிறார்.

**அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்**

வாழ்க்கையில் குற்றம் செய்யாமல் வாழ்வதே அறம், அந்தக் குற்ற மனப்பான்மை மனத்தில் எழாமல் செய்வதே மனத்தூய்மை என்று இக்குறளில் விளக்குகிறார்.

**முடிவுரை**

வாழ்க்கையும் அனுபவமும் ஒன்றையொன்று சார்ந்ததே. எல்லா அனுபவங்களையும் பெற்று, பகுத்து, வழி நின்று சான்றோர் ஆக வாழ்நாள் முழுவதும் முயற்சி செய்தாலும் முடியாத காரியம்.

எனவே வள்ளுவர்தம் உலகப்பொதுமறை திருக்குறளைப் படித்து அனைவரும் அதன் தத்துவங்களின் வழிநின்று வாழ்ந்தால் ஒவ்வொரு மனிதனும் இறைவனுக்கு நிகராவான்.

(நன்றி: திருக்குறள் எளிய தெளிவுரையும் பொன்மொழியும் - திரு.ஆ.வே.இராமசாமி)

# வள்ளுவர் காட்டும் அரசியல் நெறி

திரு. த. ஜெய்சங்கர்

**முன்னுரை**

பொய்யாமொழிப்புலவர் என்று போற்றப்பெறும் வள்ளுவர் சமுதாய மக்களுக்குப் பயன்படும்வகையில் அனைத்து வழிவகைகளையும் வகுத்துரைத்தார். ஓர் சிறந்த அரசன் செய்யத்தகுவன யாவை? அவற்றால் வரும் நன்மைகள் யாவை? அரசன் செய்யத்தகாதன யாவை? அவற்றால் வரும் கேடுகள் யாவை? என்பன போன்ற பலவற்றை முன்வைத்து அனைவருக்கும், அனைத்துக் காலத்திற்கும் பொருந்தக்கூடிய வகையில் அமைந்திருப்பதே குறளின் சிறப்பு எனலாம். இத்தகு சிறப்புப் பெற்ற தம்குறளின் வாயிலாக வள்ளுவர் காட்டும் அரசியல் நெறி பற்றிய செய்தியை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**ஆளத்தகுந்தவன்**

ஒரு நாட்டைச் சிறந்த முறையில் ஆள்பவன் அந்நாட்டிற்குப் பொருள்வரும் வழிகளை உண்டாக்குதலும், வந்த பொருளை ஒன்று சேர்த்தலும், ஒன்று சேர்த்த பொருளைக் காப்பாற்றுதலும், காப்பாற்றிய பொருளைத் திட்டமிட்டுச் செலவு செய்தலும் ஆகியவற்றில் வல்லவனே அரசனாவான் என்பதை,

**இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு (குறள் 385)**

என்ற குறளின் மூலம் ஒரு நாடு சிறப்பாக, வலிமையுள்ளதாக இருக்க நாடாளுபவன் தகுதி உள்ளவனாக இருக்க வேண்டும் என்றும் நாட்டிற்குச் செல்வ வளம் மிக அவசியம் என்றும் வலியுறுத்துகிறார் வள்ளுவர்.

பொறுத்தவன் நாடாளுவான், பொங்கியவன் காடாளுவான் என்பதுபோல நாட்டை சிறப்பாக

ஆளவேண்டுமாயின் அவனுக்கு மிக்க பொறுமை வேண்டும். அதுவும் எப்படிப்பட்ட பொறுமை எனில் தன்காது தைக்கும்படி குறைகூறும் சொற்களையும் பொறுத்துக் கொள்ளும் குணம் அரசனுக்கு வேண்டும். அத்தகு குணமுடைய அரசனின் குடை நிழலிலே உலகம் நிலைத்து நிற்கும் என்பதை,

**செவிகைப்பச் சொல்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக் கீழ்த்தங்கும் உலகு (குறள் 389)**

என்ற குறளின்மூலம் பொறுமை குணம் உடையவனே ஆளத்தகுந்தவன் என உரைக்கின்றார் வள்ளுவர்.

வறியோர்க்குக் கொடுத்தல், அவதிப்படுகின்றவர்களிடம் அன்பு காட்டுதல், நீதி தவறாது ஆட்சி புரிதல், குடிமக்களுக்கு எவ்வித இன்னலும் நேராமல் பாதுகாத்தல் ஆகிய இந்த நான்கு பண்புகளும் அரசனுக்கு அமைந்திருக்க வேண்டும். அவனே அரசர்களுக்கு விளக்குப் போன்றவன்.

**கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்**
**உடையான்ஆம் வேந்தர்க்கு ஒளி (குறள் 390)**

வரக்கூடிய துன்பத்தை முன்னறிந்து தடுத்துக்கொள்ளும் அறிவு ஆளுவோர்க்கு வேண்டும். இவ்வறிவு உள்ளவர்களுக்கு அவர்கள் அஞ்சி நடுங்கும்படி வரக்கூடிய துன்பம் ஒன்றுமேயில்லை என்பதை,

**எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை**
**அதிர வருவதுஓர் நோய் (குறள் 429)**

என்ற குறளின்மூலம் தன்னைக் காத்து பிறரையும் காக்கும் தன்மை சிறந்த அரசனுக்கு வேண்டும் என்று கூறுகின்றார் வள்ளுவர்.

இங்ஙனம், பொருளாதார அறிவு, நாடாளுந்திறமை, பொறுமை, கல்வி கேள்விகளில் அறிவு, உலகத்தோடு ஒட்டி ஒழுகும் பண்பு இவை அனைத்தும் உடையவர்களே நாடு ஆளத் தகுந்தவர்கள் என வள்ளுவர் வலியுறுத்திக் கூறுகின்றார்.

**ஆளத்தகுதியற்றவர்**

நாடாளுவோருக்கு நெஞ்சில் இரக்கம் வேண்டும். துன்புறுவோரைக் கண்டால் மனம் இளகவேண்டும். இந்த இரக்கத்திற்கு கண்ணோட்டம் என்று பெயர். இதையே தயவு

தாட்சண்யம் என்று இக்காலத்தில் கூறுகின்றோம். இத்தயவு தாட்சண்யம் காரணமாகத் தன் கடமையை கைகழுவி விடுகின்றவர்கள் நாடாளத் தகுதியற்றவர்கள்.

தம் கடமையாகிய காரியங்களிலே குறைவு நேராமல் கண்ணோட்டம் காட்டவும் வல்லவர்களுக்கே, இவ்வுலகம் உரிமையுள்ளதாகும் என்பதை,

**கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு**
**உரிமை உடைத்து இவ்வுலகு (குறள்: 578)**

என்ற குறளின் மூலம் உணரலாம்.

இதன்மூலம் கடமை தவறுகின்றவர்களும், கண்ணோட்டம் அற்றவர்களும் நாடாளத் தகுதியுற்றவர்களாவர் என்று அறியலாம்.

நாட்டில் நடக்கும் நிகழ்வுகளை நாடு ஆளுவோர் தெரிந்து வைத்திருக்க வேண்டும். தாம் நேரில் பார்த்தறிய இயலவில்லையாயினும் ஒற்றர்களைக் கொண்டாவது அறிந்துகொள்ள வேண்டும்.

ஒரு ஒற்றன் உளவறிந்து தெரிவித்த செய்தியை மற்றொரு ஒற்றனால் உண்மைதானா என தெரிந்து வரச் செய்து இருவரது கூற்றும் ஒன்றாக இருந்தால் அதை உண்மையென்று கொள்ள வேண்டும். இதை,

**ஒற்று ஒற்றித் தந்த பொருளையும் மற்றும் ஓர்**
**ஒற்றினால் ஒற்றிக்கொளல் (குறள்: 588)**

என்ற குறளின் மூலம் அறியலாம்.

ஒரு ஒற்றன் கூறியதை உண்மையென்று நம்பி உடனே நடவடிக்கை எடுப்பவன் நாடாளத்தகுதியற்றவன் என்று கூறுகிறார் வள்ளுவர்.

அடுக்கடுக்காகத் துன்பம் வந்தாலும் அவற்றைக் கண்டு கலங்காதவனே சிறந்த அரசன். அவனை அடைந்த துன்பம் அவனை ஒன்றும் செய்யாது. அத்துன்பமே துன்பத்திற்கு ஆளாகி அவனைவிட்டு ஓடும் என்பதை,

**அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற**
**இடுக்கண் இடுக்கண் படும் (குறள்: 625)**

என்ற குறளின்மூலம் அறியலாம்.

துன்பத்தைக் கண்டு அஞ்சாதவனைக் கண்டு துன்பம் அஞ்சி ஓடும். ஆனால் வந்த துன்பத்தை விரட்டியடிக்க வழியறியாமல் ஏங்கியிருப்பவன் அரசாளத் தகுதியற்றவன் என்பதை உணரலாம்.

இங்ஙனம், இரக்கம் அற்றவர்கள் நாட்டில், நிகழும் உண்மை நிகழ்ச்சியை உணர்ந்து கொள்ளாதவர்கள், நன்மை தரும் பெரிய காரியங்களைத் துணிந்து செய்யும் ஆண்மையற்றவர்கள், துன்பத்தைக் கண்டால் உள்ளம் துடித்துச் சோர்வடைகின்றவர்கள் போன்றோர் நாடாளத் தகுதியவற்றவர்கள் என இவ்வுண்மையை வள்ளுவர் தெளிவாகக் கூறியிருக்கின்றார்.

அரசனுக்கு வள்ளுவர் கூறும் அரசியல் நெறி:

அரசனுக்கு வேண்டிய அரசியல் நெறிகளை பொருட்பாலில் வகுத்துக் கூறுகின்றார் வள்ளுவர். அவை,

1. கல்வி - ஆட்சிமறைக் கல்வி பயில வேண்டும்.
2. சான்றோர் நன்மொழியான கேள்வி வேண்டும்.
3. பகுத்துணரும் அறிவு வேண்டும்.
4. குற்றம் கடிந்த வாழ்வு வேண்டும்.
5. பெரியோரைத் துணைக்கொள்ள வேண்டும்.
6. சிற்றினத்தாரோடு சேராமல் வாழவேண்டும்.
7. எதையும் ஆராய்ந்து செய்யும் தெளிந்த ஆற்றல் வேண்டும்.
8. செங்கோண்மை வேண்டும்.
9. கொடுங்கோண்மையைத் தவிர்க்க வேண்டும்.
10. ஒற்றும் உரைசான்ற நூலும் இருகண்ணைப்போல போற்றி ஒழுக வேண்டும் என்பன நாடாளும் மன்னனுக்கு வள்ளுவர் கூறும் அரசியல் நெறிகளாகும்.

**அமைச்சர் திறம்**

அரசாங்கத்திற்கு அச்சாணியாக விளங்குபவர்கள் அமைச்சர்கள். முடி அரசிலும், குடி அரசிலும் அமைச்சர்களுக்குத்தான் பொறுப்பு அதிகம். அவர்களே நாட்டின் நன்மை, தீமைகளுக்குப் பொறுப்பாவர். அமைச்சர்கள் மதியற்றவர்களாயிருந்தால் சிறந்த நிர்வாகம் அந்நாட்டிலே நடக்காது. தகுதியற்ற அமைச்சர்களால் அந்நாட்டின் உரிமைக்குக் கூட ஆபத்து வரலாம். அதனால் சிறந்த அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதே அறிவுள்ள குடிமக்களின் கடமை, பொறுப்புள்ள அரசனின் கடமையும் ஆகும்.

நாட்டின் முன்னேற்றத்திற்கான காரியங்களை ஆராய்ந்து கண்டு பிடித்தல், அக்காரியங்கள் வெற்றி பெறுவதற்கான வழி வகைகளை ஆராய்ந்து அவைகளைத் தொடங்கிச் செய்தல், தான் உண்மையென்று கண்ட கருத்தைத் துணிவுடன் சொல்லுதல் இவைகளிலே வல்லவன்தான் சிறந்த அமைச்சன். இதை,

**தெரிதலும், தேர்ந்து செயலும், ஒருதலையாச்**
**சொல்லலும் வல்லது அமைச்சு (குறள் 634)**

என்ற குறளின்மூலம் அறியலாம்.

நல்லநூல் அறிவும், நுண்ணறிவும் உள்ளவர்க்கு அவர்கள் முன் நிற்கும் நுட்பமான செய்திகள் எவை உண்டு? நூல் அறிவும், நுண்ணறிவும் உடைய அமைச்சனுக்கு அனைத்துமே வெற்றியாக அமையும் என வள்ளுவர் கூறுகின்றார். இதை,

**மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்**
**யாஉள முன்நிற் பவை (குறள் 636)**

என்ற குறளின்மூலம் அறியலாம்.

இங்ஙனம், நாட்டின் முன்னேற்றத்திற்கான நல்ல திட்டங்களை வகுக்கும் திறமையும், நூலோடு கூடிய நுண்ணறிவும், தளராத மனஉறுதியும், பகைவர்களை வசமாக்கிக் கொண்டு சமாதானத்தைக் காப்பாற்றும் திறமையும், தூய ஒழுக்கமும், பல்கலைகளிலும் தேர்ச்சி இவை அனைத்தும் அமைச்சர்களுக்கு வேண்டிய தகுதிகள் என வள்ளுவர் வகுத்துக் கூறியுள்ளார்.

**முடிவுரை**

இங்ஙனம், திருவள்ளுவர் காலத்தில் நாடாளும் மன்னனாயினும் அவற்கு அறிவுறுத்தும் அமைச்சனாயினும் அவர்களுக்கென்று கடமைகள் வகுக்கப்பட்டன. அவ்வடிப்படையிலேயே ஆட்சியும் நடைபெற்றது, அதனால் முடியாட்சி முறை சிறப்புற்றிருந்தது. இதன் காரணமாக மக்களுக்குப் பலவகையில் பாதுகாப்பு கிடைத்தது, நன்மைகள் விளைந்தன. இவ்வகையில் அரசர்களுக்கும், அமைச்சர்களுக்கும் வள்ளுவர் கூறும் அரசியல் நெறிகள் சமுதாய மக்களுக்குப் பயன்படும் வகையிலேயே அமைந்திருந்தன எனலாம்.

# குறள் கூறும் அறநெறிகளில் முரண்பாடுகள்

முனைவர் கனல்மைந்தன்

குறள் அறநெறிகளைத் தொகுத்துக் கூறுகிறது. சமூகத்தின் ஆளும் கருத்தியலைக் கட்டி எழுப்புகிறது. ஆணும் பெண்ணும் வாழும் வாழ்வில் காதல், இல்லறம் (களவியில், கற்பியல்) ஆகிய கூறுகளை இலக்கியமாக்கித் தருகிறது. வடநாட்டில், வெவ்வேறு காலங்களில் இயற்றப்பட்ட நூல்களை (மனுதருமம், அர்த்தசாத்திரம், காமசாத்திரம்) ஒரே நூலில் நம்மால் காண முடிகிறது. மற்ற அறநெறி நூல்களுக்கும் குறளுக்கும் உள்ள அடிப்படையான வேறுபாடு ஒன்றுள்ளது. மற்ற அறநெறி நூல்கள் வெவ்வேறு சமூகங்களின் அடிப்படையில் எழுதப்பட்டவை: குறள் ஒன்றே அனைத்துச் சமூகங்களுக்கும் பொதுவாக எழுதப்பட்டது.

வள்ளுவர் காட்டும் அறநெறிகளுக்கும் அரசியல் சார்ந்த கருத்தியல் சிந்தனைகளுக்கும் அன்பின் ஐந்திணை நெறியளாவும் வாழ்வியல் சிந்தனைகளுக்கும் இடையில் ஆங்காங்கே மெய்யியல் சிந்தனைகளும் இடம்பெற்றிருப்பன குறிப்பிடத்தக்கது. மாற்றங்களும் நெருக்கடிகளும் தோன்றும்போதும், சமூக மாற்றம் நிகழும் போதும், மதிப்பீடுகளில் மாற்றங்கள் நிகழும்போதும் ஏற்படும் தடுமாற்றங்களையும் குழப்பங்களையும் தக்கபடி புரிந்து கொள்ளவே மெய்யியலாளர்கள் தம் விளக்கங்களால் சமூகத்தைக் கட்டிக் காக்கும் அரிய பணியை மேற்கொள்கின்றனர். அவர்கள் பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைகின்றனர்.

இனக்குழு சமூக அமைப்பிலிருந்து அரசமைப்புச் சமூக அமைப்பு தோன்றியபோது ஏற்பட்ட நெருக்கடிகளைப் புரிந்து கொண்டதும் தாய்வழிச் சமூகம் மறைந்து தந்தைவழிச் சமூகம் தோன்றியபோது நிகழ்ந்த ஆணாதிக்கச் சமூக அமைப்பைப் புரிந்து கொண்டதும் ஊர்கள் மறைந்து நாடுகள் தோன்றிய வரலாற்றுச் சூழலைப் புரிந்து கொண்டதும் அறநெறிக் கோட்பாடுகள் தம்பொதுத்தன்மையை இழந்தன. மக்கட் தொகுதி

பல்வேறு கூறுகளாகப் பிளவுபட்டது. இல்லறம் ஏற்ற வெகுமக்களுக்கும் அதை மறுத்து துறவறம் ஏற்ற தனிமக்களுக்கும் இவர்கள் எல்லோருக்கும் தலைமை தாங்கும் மன்னருக்கும் தனித்தனியே அறநெறிகளை உருவாக்க வேண்டிய பொறுப்பு சான்றோர்க்கு உரியதாகியது. அந்தப் பொறுப்பை இனிதே நிறைவேற்றியவர் வள்ளுவப் பெருந்தகை என்பது உண்மை; வெறும் புகழ்ச்சியன்று.

மெய்யியல் என்பது இயற்கையையும் சமூகத்தையும் அவற்றிற்கிடையிலான இயங்கியல் உறவைப் புரிந்து கொண்டு அவற்றின் பொதுவான விதிகளைத் தொகுத்துத் தருவதாகும். மெய்யியலை, சமூகத்தின் பொருளியல் அடித்தளத்தைக் கொண்டே புரிந்து கொள்ள வேண்டும். சமூகத்தின் மீதான கருத்தியல் புரிதலில் இடைவெளிகள் தோன்றும்போதெல்லாம், அந்த இடைவெளிகளை இட்டு நிரப்ப மெய்யியலால் உருவாக்கப்படும் பதிலிகளின் தொகுப்பே மெய்யியல் என்று கூறுகிறது மெய்யியல் அகராதி. மெய்யியல், மனிதன் தன்னைச் சுற்றிலும் தனக்குள்ளும் ஏற்படும் நெருக்கடிகளைப் புரிந்து கொள்ளப் பயன்படுகிறது என்கிறார் எட்வர்டு கிரெய்க்.

உலகில் இதுவரை வெளியான அறநூல்களுள் திருக்குறள் ஒன்றே மொழி, இனம், நாடு, சமயம் முதலான வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்ட பொதுமறை என்று அனைவராலும் போற்றப்படுகிறது. மற்ற மறை நூல்கள் அந்தந்தச் சமயத்தார்க்கு உரிய தனிமறைகளாகத் திகழ்கின்றன. வேலிகளும் எல்லைகளும் அற்ற வானத்தைப்போல, திருக்குறள் பொதுமை, சமத்துவம், மக்களாட்சி மாண்புகள் கொண்டு விளங்குவதைப் பலரும் எடுத்துக்காட்டியுள்ளனர்.

**பாரதியார் உயிர் பெற்ற தமிழர் பாட்டில்,**
**காலத்திற்கேற்ற வகைகள்-அவ்வக்**
**காலத்திற்கேற்ற ஒழுக்கமும் நூலும்**
**ஞாலமுழுமைக்கும் ஒன்றாய்-எந்த**
**நாளும் நிலைத்திடும் நூலொன்றும் இல்லை,**

என்று கூறியுள்ளார்.

'மாறுவது மரபு; இல்லையேல் மாற்றுவது மரபு' என்ற மரபின் மரபைப் பற்றி அறிவியலாளர் கூறி வருகின்றனர். இதை மாற்றம் ஒன்றே மாறாதது என்று மார்க்சியம் கூறுகிறது. ஆனால் ஒல்காப் புகழ் பெற்ற தொல்காப்பியமோ 'மரபு

நிலைதிரியின் பிறிது பிறிதாகும்' - என்று நம்மை எச்சரிக்கிறது. மரபுகளில் மாறும் மரபுகள் மாறா மரபுகள் என்று இருவகை மரபுகள் உள்ளன என்று கூறுவாரும் உளர். மாறிக்கொண்டே வரும் நாகரிகப் போக்குகளை மாறும் மரபின் அடையாளங்கள் என்றும் மாறாமல் நின்று நிலைக்கும் பண்பாட்டுப் போக்குகளை மாறா மரபின் அடையாளங்கள் என்றும் சான்றோர் கூறுவர். உடை, நடை, பழக்க வழக்கங்கள் இவை காலத்திற்குக் காலம் சமூக அமைப்புக்கு ஏற்றாற் போல் மாறி வருகின்றன. ஆனால் 'பண்புடையார் பட்டுண்டு உலகம் அது இன்றேல் மண்புக்கு மாய்வது மண்' என்ற வள்ளுவரின் வாக்கு எக்காலத்திற்கும் எச்சமூகத்திற்கும் பொதுவான அறநெறியைக் கூறுகிறது.

எல்லோரிடத்திலும் எளிமையாகப் பழகுதல், அன்புடமை, நீதி, பிறருக்கு நன்மை விளைவிக்கும் செயல்கள், பகைவரிடத்தும் பண்புடன் நடந்து கொள்ளல், உயர்ந்த ஒழுக்கம், எப்போதும் இன்முகத்துடனும் கனிவுடனும் உரையாடும் பண்பு போன்ற மக்கட் பண்புகள் வாய்க்கப் பெற்றவர்களே மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வார்கள் என்கிறார் வள்ளுவர்.

அவர் வற்புறுத்தும் அறம் பிறருக்குத் தீங்கு செய்யாதது; மனத்துக்கண் மாசிலனாக இருப்பது; அழுக்காறு, அவா, வெகுளி(சினம்), இன்னாச் சொல் முதலிய நான்கும் அற்றிருப்பது. இந்த அறங்களே ஒருவனுக்கு நிலையான, நிம்மதியான, நிறைவான இன்பத்தைத் தரும் என்கிறார். ஒழுக்கத்தை உயிரைப் போல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்கிறார். அவர் கூறும் அறநெறிக் கோட்பாடுகளைத் தொகுத்துக் காண்போம்:

அன்பு, அறிவு, மக்கட்பண்பு, ஒழுக்கம், நாணயம், வாய்மை, அடக்கம், ஊக்கம், நட்பு, கல்வி, கேள்வி, புகழ், பொருள், அருள், இல்லறம், மக்கட்பேறு, மானம், வாழ்க்கைத்துணை, வினைத்திட்பம், அவா அறுத்தல், வினைத்தூய்மை, வெகுளாமை, பழைமை போன்ற மனித வாழ்வில் பின்பற்ற எளிதானதும் பயன் மிக்கதுமான பொதுக்கூறுகளை நாம் வள்ளுவரின் அறநெறிக் கோட்பாடுகள் என்று எடுத்துக் கொள்ளலாம்.

இந்த அறநெறிக் கோட்பாடுகள் அனைத்தும் தனிமனிதனுக்கு என அவர் வகுத்த விதிகள் என்று கூறலாம். தனிமனிதன் சமூகத்தின் உறுப்பு என்ற மெய்யறிவு வள்ளுவருக்கு இருந்த காரணத்தால்தான் இந்த அறநெறிகளை அவர்

வற்புறுத்துகிறார். மனிதன் ஒரு தனித்தீவு அல்லன். அவன் ஒரு சமூக விலங்கு என்பது சமூகவியலாளர் கூறும் கூற்றாகும். தனிமனிதனுடைய தன்னலப் போக்கானது சமூக நலத்துக்கு ஊறு விளைவிக்குமானால் அறம் கூற்றாகும் என்பது சான்றோர் எச்சரிக்கையாகும். மொத்த சமூகத்தின் அழிவுக்கு ஒரு தனிமனிதன் அவாவும் பொருட்பற்றும் காரணமாகிவிடக்கூடாது என்பதில் அவர் தக்க முன்னெச்சரிக்கை கொண்டிருந்த காரணத்தினாலேயே, பொருள் உடைமை மட்டும் உடைமை அன்று, மற்ற பண்புகளும் உடைமைகளே என்பதை உணர்த்தும் விதத்திலேயே அவர் அன்புடைமை, அறிவுடைமை, ஒழுக்கமுடைமை, பொறை உடைமை, நாணமுடைமை, பண்புடைமை என்று மற்ற உடைமைகளையும் வற்புறுத்துகிறார். இந்த உடைமைகளை ஒருவன் பொருள் ஈட்டுவதைப் போல ஈட்ட வேண்டும் என்பதே வள்ளுவர் கூறும் அறநெறிகளின் சாரம் ஆகும்.

வள்ளுவர் காலத்தில் தோன்றிய சீனத்தின் கன்பூசியசும் கிரேக்கத்தின் சாக்ரடீசும் பிளாட்டோவும் அவர் காலத்திற்குப் பின் தோன்றிய இயேசுவும் நபிகள் நாயகமும் கூறிய அறநெறிகளையே அவரும் கூறியுள்ளமை மனங்கொள்ளத்தக்கது. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பதே அவரது எச்சரிக்கையாக அமைந்தது. தீதும் நன்றும் பிறர்தர வாரா. எனவே, பகுத்தறிவின் அடிப்படையில் நல்லது எது கெட்டது என்பதை சீர்தூக்கிப் பார்த்து எண்ணித் துணிக என்பதே அவரது அறநெறிக் கோட்பாடாகும்.

சமயவாதிகள் கூறியதுபோல் சொர்க்கம் நரகம் என்ற கோட்பாட்டை அவர் மேற்கொள்ளவில்லை. வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தால் வானில் உறையும் தெய்வமாக வைத்துப் போற்றப்படுவார் என்று கூறியுள்ளார். மேல் உலகமே இல்லை என்றாலும்கூட அறநெறிகளைப் பின்பற்ற மறந்துவிடாதே என்பதே அவரது வேண்டுகோளாக இருந்தது.

அறிதோறும் அறிதோறும் புதிய உண்மைகள் புலப்படும் என்பதில் நம்பிக்கை கொண்டிருந்தார். எனவே துறை தோறும் துறைதோறும் பொருளின் மெய்ப்பொருளைக் காண்பதுடன் பொருளின் பொருளிதுவென்று ஒருவர் கூறும் கூற்றிலுள்ள மெய்ப்பொருளைக் காண்பதும் அறிவின் பணி என்பதை உணர்த்தினார். பருண்மையான சூழலைப் (concrete condition) பருண்மையான ஆய்வுக்கு (concrete analysis)

உட்படுத்துவதன்மூலமே ஒருவர் மெய்பொருளைக் காணமுடியும் என்ற அறிவியல் கண்ணோட்டத்தையும் உணர்த்தியுள்ளார். குணம் நாடி குற்றமும் நாடி அவற்றுள் மிகை காண்பதே ஆய்வு நெறியாகும் என்பதை வற்புறுத்தியுள்ளார்.

கன்பூசியசு, மகாவீரர், புத்தர், ஏசு போன்றோர் வாழ்ந்த சமூக அமைப்புகளை ஆய்ந்தவர்கள் அவற்றை இனக்குழு சமூகங்கள் (clan societies) என்று கூறியுள்ளனர். இச்சமூகங்கள் கூட்டு மன உணர்வை (collective consciousness) அடிப்படையாகக் கொண்டவை. இச்சமூகம் கூட்டுச் செயல்பாடுகளில் தன்பாதுகாப்பை உணர்வது; பகுத்துண்டு பல்லுயிர்கள் ஓம்புவது; தாய்வழிச் சமூகத்தின் அடையாளங்கள் கொண்டது; இயற்கையை ஒட்டி வாழ்வது; சுதந்திரம், சமத்துவம் முதலிய உடன் பிறப்புப் பண்புகள் கொண்டது; நிலம் (திணை) சார்ந்த தெய்வங்களை வழிபடுவது; நடுகல் வழிபாட்டை நடத்துவது. இதுவே தென்மையான பொதுவுடைமைச் சமூகம் என்று கூறப்படுகிறது.

இதற்கடுத்து மருத நிலத்தில் தோன்றிய நிலவுடமைச் சமூகமே தனிச்சொத்துடைமையைப் பேணுவது; தந்தை (ஆணாதிக்க) வழிச் சமூக அமைப்பைக் கொண்டது. பெண்ணுக்கு மட்டுமே கற்பைக் கற்பிப்பது; அறிவியல் தொழில்நுட்பக் கருவிகளைக் கொண்டது. சுரண்டலைத் தன்முதுகெலும்பாகக் கொண்டது; ஏற்றத்தாழ்வுகளை வளர்த்தது; சடங்குகளையும் சமயங்களையும் தோற்றுவித்தது. பயிர் விளைச்சலைப் பெருக்கி உபரி இலாபத்தைக் கண்டது; பொய்யையும் களவையும் தோற்றுவித்து தூண்டுவது; குறுநில மன்னர்களைப் பெருநிலமாளும் பேரரசர்கள் ஆக்குவது. வள்ளுவர் இவ்விருவேறு சமூகங்களின் சந்திப்பில் வாழ்ந்தவர். இனக்குழுச் சமூகஅமைப்பில் உருவான அறநெறிகள் அனைத்தும் முழுச்சமூக அமைப்புக்கும் உரியவை; பொதுவானவை. இந்த அறநெறிகளைத்தான் வள்ளுவர் அடுத்துவரும் சமூக அமைப்பில் தனிமனிதர்களுக்கு உரியவனாக மாற்றி அமைக்கிறார். நிலஉடைமை அமைப்பில் அவர் அரசனுக்குக் கூறும் தனிப்பண்புகளும் நெறிகளும் தற்போதைய முதலாளிய அமைப்பில் எல்லோருக்கும் உரியனவாயின.

மக்களை ஆளும் வகுப்பார் அதாவது சுரண்டும் வருக்கத்தார் இருக்கும்வரை குறள் உழைக்கும் வகுப்பாருக்கும் சுரண்டும் வகுப்பாருக்கும் பொதுமறையாகவே நீடிக்கும்.

வள்ளுவர் பயன்படு பழமையை உட்செரித்துக் கொண்டவர். பொருள் முதல்வாதியாக (Materialist) வாழ்ந்தவர். உருவ வழிபாட்டை மேற்கொள்ளாதவர். அதேநேரத்தில் புதிதாகத் தோன்றிய நில உடைமைச் சமூக அமைப்பின் அறிவியலையும் தொழில்நுட்பத்தையும் உழவுத் தொழிலையும் வரவேற்றவர். செய்க பொருளை என்றவர். புதிதாகத் தோன்றிய நில உடைமை அமைப்பின் ஆணிவேராகத் திகழும் மன்னராட்சியை வரவேற்று அதற்கான அறநெறிக் கோட்பாடுகளையும் அமைத்துத் தந்தவர்.

அறத்துப்பாலில் புலால் உண்ணாமை, கொல்லாமை, அவா அறுத்தல் முதலிய நெறிகளை வற்புறுத்தும் வள்ளுவர் பொருட்பாலில் அவற்றிற்கு எதிரான போர்த் தொழில் சிறப்பை வற்புறுத்துகிறார். வீரம், மறம், பகை முடித்தல், களை எடுத்தல், கரும்புபோலக் கொல்லப் பயன்படும் கீழ் என்று பேசுகிறார். 'வேண்டாமை அன்ன விழுச் செல்வம்' என்றவர் 'செய்க பொருள் அதுவே செறுநர் செருக்கை அழிக்கும் ஆயுதம்' என்கிறார். பொருட் செல்வங்களைச் சிறப்பிக்கிறார். அறத்துப்பாலில் அவர் கூறும் ஆன்மிக அறநெறிகள் (spiritual values) சுரண்டப்படும் தனிமனிதருக்கானவை என்றும் பொருட்பாலில் அவர்கட்கும் உலகியல் அறநெறிகள் (Material values) சுரண்டும் சமூக அமைப்புக்கானவை என்றும் பிரித்துப் பொருளுணர வேண்டியுள்ளது.

இனக்குழு சமூக அமைப்பில் மொத்த மக்கட் தொகுதிக்கு உரியனவாயிருந்த அறநெறிகள் (Ethical values) அடுத்துவரும் சமூக அமைப்பில் தனிமனிதருக்கு உரியனவாக மாற்றம் பெற்றதையும் நிலவுடைமைச் சமூக அமைப்பில் தனிமனிதருக்கு (அரசருக்கு) உரியனவாகக் கூறப்பட்ட சமூக அறநெறிகள் (Social values) அதற்கு அடுத்துவரும் முதலாளிய சமூக அமைப்பில் மொத்த சமூகத்திற்கும் பொதுவாக மாற்றம் பெறுவதையும் திருக்குறளில் காணமுடிகிறது. இதனாலேயே வள்ளுவம் இன்றைக்கும் வாழும் வள்ளுவமாகத் திகழ்கிறது. அரசமைப்பில் முடியாட்சி ஆயினும் குடியாட்சி ஆயினும் நாடு என்பதன் இலக்கணம் இன்றும் வள்ளுவர் கூற்றுக்கு உரியதாகவே அமைகிறது.

**நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**
**நாட வளம்தரு நாடு**

அதுபோல,

**இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு**

என்ற கூற்றும் இன்றைக்கும் பொருத்தப்பாடு உள்ளமை குறிப்பிடத்தக்கது.

எனவே அறத்துப்பாலில் முன்மொழியும் கருத்துகளுக்கும் பொருட்பாலில் பரிந்துரைக்கும் கருத்துக்களுக்கும் முதல் பார்வையில் முரண்பாடு இருப்பதுபோல் தோன்றினும் ஆழச் சிந்தித்தால் நிலவுடைமையின் முடியாட்சியும் முதலாளிய குடியாட்சியும் தனி உடைமைச் சமூகம் என்கிற ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. எனவேதான் வள்ளுவரின் அறநெறிக் கோட்பாடுகள் இரு சமூக அமைப்புகளுக்கும் பொருந்துமாறு அமைகின்றன. வரைவில் மகளிரும், பெண்வழித் சேரலும்- இவ்விரு சமூக அமைப்புகளின் அடையாளங்கள். இங்கே ஏழைகள் என்றும் செல்வர்கள் என்றும் இருவேறு வருக்கங்கள் இருப்பதை ஏற்றுக் கொள்ளும் வள்ளுவர்,

'அவ்விய நெஞ்சத்தான் ஆக்கத்தையும், செவ்வியான் கேட்டையும்' பற்றி சிந்திக்க வேண்டுகிறார். இதற்குக் காரணங்கள் சமய நெறிகள் சுட்டிக்காட்டும் ஆகூழும் போகூழும் தர்மா- என்ற அய்யத்தையும் முடிவையும் அவரால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. எனவேதான் அறக்காப்புக் கருத்தை (தர்ம கூர்த்தா தத்துவம்) முன் வைக்கிறார்.

தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சி மெய்வருத்தக்கூலி தரும் என்றும், அல்லல்பட்டு ஆற்றாது ஏழை அழும் கண்ணீர் செல்வத்தைத் தேய்க்கும் படை என்றும் கூறுமளவிற்கு அறச்சீற்றம் கொள்கிறார். எனவே மக்கள் சேவையே மகேசன் சேவை என்று பிற்காலத்தில் சித்தர் குரல் எழுவதற்கு வள்ளுவரே முன்னோடியாக இருந்துள்ளமை புலனாகிறது.

புத்தரும் மகாவீரரும் வற்புறுத்திய நிலையாமை, கொல்லாமை என்னும் இரு கருத்துகளை வள்ளுவரும் வற்புறுத்துகிறார். இன்பத்துப்பாலில் பெண்ணை ஒரு நுகர்பொருளாகக் காண்கிறார். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும் ஒண்தொடிக் கண்ணே உள, என்ற இக் குறட்பா ஆணின் பார்வையில் அமைகிறது. பெண்ணின் பார்வையில் காமத்துப்பால் படைக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பிறப்புச் சமத்துவத்தையும் பொருட் சமத்துவத்தையும் உயிர்ச் சமத்துவத்தையும் உரத்துச் சிந்தித்த வள்ளுவர் வாழ்ந்த காலத்தில்தான் தனிஉடைமை அமைப்பு தோன்றி வளரத் தலைப்பட்டது. அதற்கு ஏற்ற கற்புடைமைக் கருத்தியலும் வள்ளுவரால் வளர்க்கப்பட்டது.

பெண்ணின் பெருந்தக்க யாவுள, என்று வினவும் வள்ளுவர், கற்பெண்ணும் திண்மை என்ற விடையையும் கூறிச் செல்கிறார். நிறை காக்கும் காப்பே தலைமையானது என்று வற்புறுத்துகிறார். எனவே பால் சமத்துவத்தை (Gender Equality)யும் பால் நீதி (Gender Justice)யையும் ஒரு சேரச் சிந்திக்கும் வாய்ப்பு அவருக்கு வாய்க்கவில்லை என்றே எண்ண வேண்டியுள்ளது.

**வினையே ஆடவர்க்கு உயிரே- வாணுதல்**
**மகளிர்க்கு ஆடவர் உயிர் - நற்றிணை**

என்று திணை இலக்கியம் தோன்றிய காலத்திற்கு உரியவர் என்பதால், அவர் வாழ்ந்த காலத்திற்கும் சமூக விதிகளுக்கும் உட்பட்டே சிந்தித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆனால் பழங்காலத் தமிழர் வாழ்வியலின் இருபெரும் கூறுகளாயுள்ள களவியலையும் கற்பியலையும் இன்பத்துப்பாலில் வைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. பெண்ணுக்குக் கற்பை அடையாளமாக்கும் வள்ளுவர் தனிச்சொத்துடைமை சமூக அமைப்பைக் கட்டிக் காப்பாற்றும் கோட்பாடுகளை இல்லறவியலில் கூறிச் செல்வது குறிப்பிடத்தக்கது. ஆனாலும் கற்பு என்று சொல்ல வந்தால் இரு கட்சிக்கும் அதைப் பொதுவாகப் பார்க்கும் பாரதியின் கருத்தை வள்ளுவர் அன்றே மற்றொரு வடிவில் பிறன் மனை நோக்காமை போராண்மையாகும் என்று கூறுகிறார். தனி உடைமையைத் தம்அடையாளமாகக் கொண்ட அரசு சார்ந்த தனிமனிதர்களும், சமத்துவ உணர்வுடன் கூட்டு வாழ்வில் இன்பம் கண்ட பொதுமக்களும் ஒருசேர வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவராதலின் வள்ளுவர் இருசாராருக்கும் ஏற்ற அறநெறிகளை வகுத்துள்ளார் என்றே அமைதி காணமுடியும்.

# திருவள்ளுவர் சொல்லும், யாதெனின்...

**திருக்குறள் புலவர் நாவை. சிவம்**

**முன்னுரையும் முப்பால் சிறப்பும்**

திரு என்னும் அடை மொழி பெற்ற நூல்கள் பல உள. திருக்குறள், திருமந்திரம், திருவாசகம், திருவருட்பா என நூற்பட்டியல் நீளும். அவற்றுள் காலத்தால் முந்தியது முப்பால் என்னும் திருக்குறளே. நூலுக்கு திரு என்னும் சொல் அமைந்ததுபோல் இதனை இயற்றிய ஆசான் திருவள்ளுவர் பெயரிலும் அமைந்தது சிறப்பினும் சிறப்பே!

சீராயிரம் பெற்ற நம் செழுந்தமிழ் மொழியில் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே நேரான வழியில் தேர்ந்தும், தெளிந்தும், சரியாகவும், முறையாகவும், நிறைவாகவும் வாழ்வியல் வழிகளை வகுத்துத் தந்தவர் பெரும்பேரறிஞர் திருவள்ளுவரே ஆவார். "திருக்குறளின் மனங்கவரும் கருத்தியல் மாட்சியை எந்த ஒரு மொழிபெயர்ப்பாலும் செம்மையாக வரைந்து காட்ட இயலாது. திருக்குறள் உண்மையில் வெண்பொற் கலத்தில் உள்ள தங்க அரத்திப் பழம் (Apple of gold) ஆகும்" என்று புகழ்வார் செருமணி அறிஞர் முனைவர் கிரவுல்.

தான் விரும்பும் தலைமகன்பால், தமிழையே தூதாக விடுக்கும் தலைமகள் ஒருத்தி, தமிழை நோக்கி, "உன் ஈரடிக்குள்ளே உலகம் எல்லாம் அடங்கும்" என்று கூறுகின்றாள் தமிழ்விடு தூது என்னும் சிற்றிலக்கியத்தில். இதில் ஈரடி என்பது திருக்குறளாகும். உலக அறிஞர்கள் எதனையும், ஏன்? எப்படி? யாது? என்றே கேள்வி கேட்டுச் சிந்தித்துச் செயலாற்றவே கூறியுள்ளனர். கிரேக்க நாட்டு ஏதென்சு நகரில் வாழ்ந்த சாக்ரடீசு எனும் அறிஞர் அந்நாட்டு இளைஞர்களை நோக்கி, கேள்வி எழுப்பி சிந்தனை செய்யக் கற்றுக்கொள்ளுங்கள் என்றும், உன்னையே நீ அறிவாய் என்றும் அறிவுறுத்தினாராம்.

**திருவள்ளுவர் கையாளும் கேள்விகள்**

திருவள்ளுவர் தம் கருத்தை, திருக்குறளாம் ஈரடி எனும் சீரடிக்குள் சொல்லும்போது, எது? எதனை? எத்தனை? எப்படி?

எப்போது? எந்த? என்ன? ஏன்? யார்? யாரால்? யாது? யாதெனின் என்னும் பல்வேறு சொல்லாட்சிகளைக் கொண்டு, கேள்விகேட்டு மாந்தக் குலம் உய்வுபெற வழிகாட்டுகின்றார். இவ்வகையில் "யாதெனின்" எனக்கேட்கும் பதினொரு வகைக் கேள்வியும், அதற்குரிய விடையையும் சொல்லி நம் சிந்தை, அணு, உயிரெல்லாம் சிலிர்க்க வைக்கின்றார். 'யாதெனின்' எனும் சொல் வரும் குறட்பாக்கள் கூறும் குறிப்பும் கருத்துத் தெறிப்பும் ஈங்குக் காண்போம்!

**1. செல்வம் குறையாமல் காக்கும் வழி யாது?**

நம்மிடம் உள்ள செல்வம் குறைந்துவிடாமல் காத்துக் கொள்வதற்கான வழியாது என்றால், மற்றவர்கள் சொந்தமாக வைத்துக் கொண்டுள்ள பொருள்களை வஞ்சிக்க விரும்பாமல் இருக்க வேண்டும் என்னும் செய்தியைத் திருக்குறள் 18ஆம் அதிகாரமான வெஃகாமையில் 8ஆம் குறளாக,

**அஃகாமை செல்வத்திற்(கு) யாதெனின் வெஃகாமை**
**வேண்டும் பிறன்கைப் பொருள் (குறள் 178)**

என்று தெளிவுறுத்துகின்றார். அஃகுதல் என்றால் குறைதல், வெஃகுதல் என்றால் வஞ்சிக்க விரும்புதல் என்பதாகும். வெஃகாதான் செல்வம் அஃகாது என்பது பழமொழி. உழைக்காமல், பொருள் ஈட்டாமல், பிறர்பொருளில் உண்டு கொழுப்பவர்கட்கும், ஊரைக் கொள்ளையடிப்பவர்கட்கும் எச்சரிக்கை செய்வதோடு, செல்வம் பேணும் சீரிய வழியையும் நறுக்கென்று வள்ளுவர் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

**2. அருள் யாது? அருள் அல்லது யாது?**

அருள் என்பது அன்பின் முதிர்ந்த நிலை, அது எந்த உயிரையும் கொல்லாது. அருள் அல்லாதது யாது என்றால் ஓர் உயிரைக் கொலை செய்து அதன் தசையை உண்ணுவதாகும். இது அறம் ஆகாது. கொலை என்பது துன்பத்துள் பெரியது, ஆதலான் கொல்லாமை இரக்கம் ஆயிற்று. 'கொல்லா விரதம் குவலயம் எல்லாம் ஓங்க எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சை" என்றார் தாயுமானவர். உயிர்க்கொலையையும், புலால் உண்ணுவதையும் சாடியவர் வள்ளல் இராமலிங்கர். எவ்வுயிரையும் கொல்லாதிருப்பதே அருள் என்பதை 26ஆம் அதிகாரம் புலால் மறுத்தலில் 4ஆம் குறளாக,

**அருள் அல்ல(து) யாதெனின்கொல்லாமை கோறல்**
**பொருள்அல்ல(து) அவ்வூன் தினல் (குறள் 254)**

என்று குறிப்பிடுகின்றார். அருள் யாதெனில் கொல்லாமை. அருள்

அல்லது யாதெனில் கொன்ற ஊனைத் திண்பவனுக்குச் சொல்லரும் செல்வமான அருள்செல்வம் பொருளாகாது என்பதாம்.

**3. வாய்மை எனப்படுவது யாது?**

எவ்வுயிர்க்கும் நாவால் கூடத் துன்பம் செய்யாமல் இனிமையான சொற்களால் பேசுவது வாய்மையாகும். உடல் என்னும் மெய்யால் செய்யும் நன்மைதான் மெய்ம்மையாகும். உள்ளத்தால் செய்யும் நன்மைதான் உண்மையாகும். நாக்குவழி வாயால் செய்யும் நன்மைதான் வாய்மை என்பார் பெரியோர். சொல்பவருக்கும், கேட்பவருக்கும் இன்பந்தருவதே வாய்மை. இவ்வினிய கருத்தைத்தான் 30 ஆம் அதிகாரம் வாய்மையில் முதற்குறளாக,

**வாய்மை எனப்படுவ(து) யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல் (குறள் 291)**

என்று விளக்குகின்றார். உண்மை பேசி உயர்ந்திட்ட அரிச்சந்திரன் கதையும், இக்கதையை நாடகமாகக் கண்டு, தெளிவுபெற்று, இந்திய நாட்டு வரலாற்றில் நடமாடும் அண்ணல் காந்தியார் வரலாறும் திருக்குறளார் கருத்தைத் தெரிவிப்பனவாகும்.

**4. அறச்செயல் யாது?**

உயிரைக் கொல்லாதிருப்பதே அறச்செயல். இரக்கம் காரணமாக செய்யும் செயல் அறவினையாகும். கொலைச் செயல் என்பது மறவினை, இது தீய பாவங்கள் யாவையும் தந்துவிடும். இதனைத்தான் திருக்குறள் 33ஆம் அதிகாரம் கொல்லாமையில் முதற்குறளாக,

**அறவினை யாதெனின் கொல்லாமை கோறல்**
**பிறவினை எல்லாம் தரும் (குறள் 321)**

என்று குறிப்பிடுகின்றார்.

**5. நல்ல வழி எனப்படுவது யாது?**

நல்லாறு என்னும் உயிர் இரக்கம் உள்ளொளியாய்ப் பேசப்பெறும். உள்ஒளி சூழ்ந்தவழி உயிருக்கு உறுதிப் பயனை எய்துவிக்கும் என்பார். கொல்லாமை சூழும் நெறியே நல்லாறு என்பதை,

**நல்லாறு எனப்படுவ(து) யாதெனின் யாதொன்றும்**
**கொல்லாமை சூழும் நெறி (குறள் 324)**

என்ற குறள்வழி அறிந்து இன்புறலாம்.

**6. நட்பிற்கு அரசிருக்கை யாது?**

நண்பர்கட்குள் காட்டும் அன்பே நட்பாகும். இந்த நட்பிற்கு அரசிருக்கை யாதெனில், எவ்வித தடுமாற்றமோ, தயக்கமோ இல்லாமல் நண்பருக்கு ஏற்பட்ட துன்பத்தை நீக்குவதற்கு முடிந்த வழியில் உதவி செய்வதாகும். இதைத்தான் திருக்குறள் 79ஆம் அதிகாரம் நட்பு 9ஆம் குறளாக,

**நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி**
**ஒல்லும்வாய் ஊன்றும் நிலை (குறள் 789)**

என்று கொஞ்சு தமிழால் கூறிக்காட்டுவார். பாரி என்னும் வள்ளலும், கபிலர் என்னும் புலவரும் கொண்டிருந்த மெய்யான நட்பே, பாரி இறந்த பின்பும் அவர்தம் மகளார் அங்கவை, சங்கவை ஆகிய இருவரையும் கபிலர்வழி தக்காருக்குத் திருமணம் செய்து வைத்தது.

**7. பழைமை எனப்படுவது யாது?**

காலத்தாலும், பல செயலாலும் நீண்ட தொடர்புடையது பழைமை. இந்தப் பழைமை யாது என்றால் எந்தக் காரணத்தாலும் உரிமையைப் பிளந்து விடாத நட்புதான். நட்புரிமையை எக்காரணத்தாலும், யாராலும் பிரிக்க முடியாமல் பாதுகாத்தலே பழைமை என்பதைத் திருக்குறள் 81ஆம் அதிகாரம் பழைமை முதற்குறளாக,

**பழைமை எனப்படுவ(து) யாதெனின் யாதும்**
**கிழமையைக் கீழ்ந்திடா நட்பு (குறள் 801)**

என முழங்கிக் காட்டுவார். கோப்பெருஞ்சோழன் என்னும் மன்னன், பிசிராந்தையார் என்னும் தமிழ்ப்புலவர் ஆகியோரின் நட்பு இதனை நன்கு விளக்கும்.

**8. பேதைமை என்பது ஒன்று யாது?**

பேதைமை என்பது யாதென்றால் நன்மையானவற்றைப் போகவிட்டுவிட்டுத் துன்பத்தைத்தானே தேடிக் கொள்வதாகும். இதனைத் திருக்குறள் 84ஆம் அதிகாரம் பேதைமையில் முதற்குறளாக,

**பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதம்கொண்(டு)**
**ஊதியம் போக விடல் (குறள் 831)**

எனப் பேசிக்காட்டுவார். துன்பந்தரும் தீயசெயலையே நன்மை இன்பமென மயங்கி உணரும் திரிபு உணர்ச்சியே பேதைமையாகும். இக்காலத்தில் வெறிநீரும் (பிராந்தி), எரிநீரும் (சாராயம்) இன்பம் தரும் நன்மை எனக் கருதிப் பருகும் பேதையர் எல்லாம் பின்னர் துன்புறுவதைக் குறளார் கூறுவதாய்க் கொள்ளலாம்.

**9. வெண்மை எனப்படுவது யாது?**

வெண்மை என்னும் அறியாமை என்பது யாது என்றால், தன்னைத்தானே அறிவுடையார் என்று நினைக்கும் ஆணவமாகும். ஒன்றையும் தெளிய அறியாமல், அனைத்தையும் அறிந்துள்ளோம் என்று தன்னைத்தானே நினைத்துக் கொள்வது அறியாமை. அறிய, அறிய அறியாமை உடையோம் என்பது அறிவுடைமை. அறியாமலே அறிவுடையோம் என்பது அறியாமை. இக்குறிப்பைத் திருக்குறள் 85ஆம் அதிகாரம் புல்லறிவாண்மையில் 4ஆம் குறளாக,

**வெண்மை எனப்படுவ(து) யாதெனின் ஒண்மை**
**உடையம்யாம் என்னும் செருக்கு (குறள் 844)**

எனச் சொல்லிக் காட்டுகின்றார்.

**10. சால்பு என்பதை அறியும் உரைகல் யாது?**

சான்றாண்மைக்கு உரைகல் யாது என்றால் தமக்குச் சமமில்லாத எளியவரிடத்திலும் தன் தோல்வியை ஏற்றுக்கொள்ளுவதாகும். தன் குற்றத்தைத் தாழ்ந்தார் முன்னும் உணர்ந்து வருந்திப் பொறுத்தருள வேண்டுதலே சால்பின் உரைகல்லாகும். இதனைத் திருக்குறள் 99ஆம் அதிகாரம் சான்றாண்மை 6ஆம் குறளாக,

**சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி**
**துலையல்லார் கண்ணும் கொளல் (குறள் 986)**

எனக் கூறிக்காட்டுவார். படையொடு சென்ற சாலமன் என்ற அரசன், சாலையின் குறுக்கே சாரை சாரையாய்ச் சென்ற எறும்புகளின் பேச்சினை நின்று, கேட்டு அவ்வெறும்புக் கூட்டத்திற்கு இன்னல் தராமல் தாண்டிச் சென்றதும் சான்றாண்மையே. மாடு மேய்க்கும் சிறுவனிடம் (முருகனிடம்),

எல்லாம் அறிந்ததாக நினைத்துக்கொண்ட ஔவைப்பாட்டி, சுட்டப்பழம் என்றால் கனிந்தபழம், சுடாத பழம் என்றால் காய் என்று அறிந்து கொண்டதற்காகத் தன் அறியாமை உணர்ந்து ஈரிரவு தூக்கமின்றி வருந்தினாள் என்பதும் சான்றாண்மையேயாகும்.

**11. இன்மையின் இன்னாதது யாது?**

வறுமைபோலக் கொடியது யாதென்றால், வறுமையே எல்லாக் கொடுமைகளிலும் பெரியகொடுமையாகும். கொடுமை செய்யும் வறுமைக்கு உவமையே இல்லை என்பதைத் திருக்குறள் 105ஆம் அதிகாரம் நல்குரவு முதற்குறளாக,

**இன்மையின் இன்னாத(து) யாதெனின் இன்மையின்**
**இன்மையே இன்னாதது (குறள் 1041)**

என்று பளிச்சென உரைத்துக் காட்டுகின்றது. கொடிது கொடிது வறுமை கொடிது என்றுரைப்பாள் ஔவைப்பாட்டியார். இடதுகை கொடுப்பதை வலதுகை அறியாமல் கொடுத்த வள்ளல் கர்ணனைப் பற்றி பாவரசர் கண்ணதாசன், "வறுமைக்கு வறுமையே வைத்த மாமன்னன் கர்ண்ன் வாழ்க" என்று வியந்து பாடுவார்.

**பின்னுரையில் என்னுரை**

விடையிருப்பது கூட முயன்றால் நிறைவேற்றிவிடலாம். ஆனால் வினா கேட்பதுதான் அறிவுடையார்க்கே ஆகும். பிறர் பழிக்காத சொற்களால், உலகம் விழிப்பதற்காகக் கேட்கும் வினா ஆற்றல் வள்ளுவர்க்கே உரியது. அதனினும், அதற்கான விடையையும் தம் பட்டறிவுத் திறத்தால் பகர்ந்து காட்டும் ஆற்றல் திருவள்ளுவர்க்கன்றி உலகில் எவர்க்கும் வாய்க்காது.

திரைப்பாடலாசான் பாவரசர் கண்ணதாசன், எல்லாம் வல்ல இறைவனை முன்னிறுத்திக் கேட்பதாகச் சில கூறுகிறார்:

**பிறப்பெனப்படுவது யாதெனக் கேட்டேன்**
**பிறந்து பார் என்று இறைவன் கூறினான்**
**இறப்பெனப்படுவது யாதெனக் கேட்டேன்**
**இறந்து பார் என்று இறைவன் கூறினான்**
**வாழ்வெனப் படுவது யாதெனக் கேட்டேன்**
**வாழ்ந்து பார் என்று இறைவனும் கூறினான்**

**எல்லாம் அநுபவித்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டும் என்றால்**
**இறைவனே நீ எதற்கு என்றேன்**

> **இறைவன் என் காதருகில் வந்து, அந்த அநுபவமே நான் தானப்பா என்று மெல்லக்கூறி மறைந்தான்**

என்று ஒரு செய்தி உரைப்பார். இச்செய்திவழி உலக வாழ்வு பட்டறிவில் தோய்ந்து கிடப்பதை அறியலாம். ஈராயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்நத திருவள்ளுவர் 133 துறைகளிலே தம்பட்டறிவைத் தோய்த்துப் பயன்தரும் சுவைத்தேன் கட்டிகளாகத் திருக்குறள் பாவை தந்துள்ளார்.

**முடிவுரை**

யாதெனின் என்ற சொல்லாட்சி கொண்ட பதினொரு குறட்பாக்கருத்தும் வள்ளுவர்தம் புலமைப்பட்டறிவாகும். இவற்றை வாழ்வில் பின்பற்றி வையத்துள் வாழ்வாங்கு வாழ்வோமாக!

# திருக்குறள் வெளிப்படுத்தும் அறிவியல்

**முனைவர் சிவ.பத்மநாபன்**

ஆன்மிகமும், அறிவியலும் மனித வாழ்க்கைக்கு வேண்டிய இரு கண்களாகும். ஆன்மீகம் என்பது அகவாழ்வு தொடர்புடையது. அறிவியல் என்பது புறவாழ்வு தொடர்புடையது. அகவாழ்வும், புறவாழ்வும் ஒன்றிணைந்ததே முழுமையான மனித வாழ்க்கை. ஒன்றின் துணையின்றி மற்றொன்று வெற்றி அடையாது. எனவேதான் உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானி ஐன்ஸ்டீன் "ஆன்மீகம் இல்லா அறிவியல் முடமாகும். அறிவியல் இல்லா ஆன்மீகம் குருடாகும்'' என்று கூறியுள்ளார். இதே கருத்தைத்தான் உலகப் புகழ் பெற்ற தத்துவஞானி டாக்டர் எஸ்.இராதாகிருஷ்ணன், "அறிவியல் இல்லா ஆன்மீகம் மூட நம்பிக்கை கொண்டது. ஆன்மீகம் இல்லா அறிவியல் கொடூரமானது" என்று கூறியுள்ளார். ஆன்மீகமும், அறிவியலும் இணைந்து சென்றால்தான் மனித வாழ்க்கை நெறி பெறும் என்ற அரிய உண்மையை நமது முன்னோர்கள் நன்றாக உணர்ந்திருந்தனர்.

அகநானூறும், புறநானூறும் தமிழனின் இலக்கியக் கருவூலங்களாகும். அகமும், புறமும் தமிழனின் வரலாற்றில் இரண்டு களங்களாகும். ஆன்மீகம், அறிவியல் இவற்றைக் கலையின் வழியாக இணைத்த பெருமை தமிழ் இனத்திற்கே உண்டு. ஆன்மிகம், அறிவியல், கலை இவற்றின் இணைப்புதான் ஆடல் அரசனான நடராசரின் ஒய்வற்ற திருநடனம் எடுத்துரைக்கின்றது. அத்துடன் நடராஜர் பெருமானின் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில்கள் ஆன்மிகக் கோட்பாட்டைக் கூறி நிற்கின்றது. நடராஜர் திருவுருவமும், நடராஜர் தத்துவமும் கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் தோன்றியது. அதனால்தான் நடராஜர் சந்நிதிகள் தெற்கு நோக்கி அமைந்துள்ளது.

இவ்வாறு ஆன்மிகத்தையும், அறிவியலையும் கலையின் வழியே இணைத்த தமிழ் இனத்திலே தோன்றியவர் திருவள்ளுவர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு திருவள்ளுவரால் இயற்றப்பட்டது திருக்குறள். திருக்குறளை மேலோட்டமாக நோக்கும்போது அது ஆன்மிக அடிப்படையில் அகவாழ்க்கைக்காக எழுதப்பட்ட ஒரு சிறந்த அற நூலாகத் தோன்றும். அதே திருக்குறளை ஆழமாக, அறிவியல் பார்வையோடு நோக்கும்போது அது வியப்பூட்டும் பல அறிவியல் கருத்துகளைக் கொண்ட ஒரு கருவூலமாகத் தெரியவரும். தமிழ் இனத்தில் தோன்றிய திருவள்ளுவர் மனித சமுதாயம் முழுவதையும் மனத்திற் கொண்டு எல்லா இனத்தவருக்கும், எல்லா நாட்டவருக்கும் பொருத்தமாக அறிவியலோடு கலந்து ஒரு பொதுமறையை இந்த உலகிற்குத் தந்தருளினார் என்று துணிந்து கூறமுடிகிறது.

**எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்,**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள் 423)**

என்பது திருவள்ளுவர் கூற்று. இதுவே ஆன்மிகம் மற்றும் அறிவியல் உலகின் அடிப்படைப் பண்பு.

இந்த உலகை இறைவன் படைத்தார் என்பது ஆன்மீகம். இந்த உலகம் பஞ்சபூதங்களால் உருவானது என்பது அறிவியல். இந்த உண்மையை நமது மூதாதையர் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வெளிப்படுத்தியுள்ளனர். நாம் உயிர் வாழ்வதற்கு மிகவும் ஆதாரமாக இருக்கும் நீர், நிலம், நெருப்பு, காற்று, வான் என்ற ஐந்தும் பஞ்சபூதங்களாகக் கருதப்படுகின்றன. இந்த உலகின் முதல் சிற்பியும், வாஸ்து விஞ்ஞானியுமான மயன் குமரிக் கண்டத்தில் வாழ்ந்த தமிழன் என்பர். "நீர், நிலம், நெருப்பு, வான், காற்று, ஐந்தும் தேர்நிலைக் கலைத்திறன் சீர்நெறி முடியே" என்ற தமது ஐந்திறத்தில் மயன் கூறுகிறார் (தமிழ்நாடு அரசு 1986 ஆம் ஆண்டு பதிப்பித்த ஐந்திறம்-பாடல்கள் 28,41,95) அதனைத் தொடர்ந்து தொல்காப்பியரும் "நிலம், தீ, நீர், வளி, விசும்போடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம்" (தொல்காப்பியம் மரபியல் 61) ஆகிய கடைச்சங்க நூல்களிலும் பஞ்சபூதங்களின் சிறப்பு பேசப்படுகிறது. நமது முன்னோர்கள் இந்த அறிவியல் உண்மையை ஆன்மிகத்தோடு இணைத்துவிட்டனர். பஞ்சபூதங்களை இறைவனின் உறைவிடமாகக் கருதி வழிபட்டனர். இன்றும் வழிபடுகின்றனர். இந்த அடிப்படையில் எழுந்ததுதான்

தென்னகத்தில் அமைந்துள்ள பஞ்சபூதத்தலங்கள் என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். காஞ்சியிலே நிலமாகவும், திருவானைக்காவில் நீராகவும், காளஹஸ்தியில் வாயுவாகவும், திருவண்ணாமலையில் நெருப்பாகவும், சிதம்பரத்தில் விண்ணாகவும் சிவபெருமான் காட்சி தருகிறார் என்பது ஐதீகம். கேரள மாநிலத்தில் ஓச்சிறையில் பஞ்சபூதங்களை ஒரே இடத்தில் வழிபடுகின்றனர். பஞ்சபூதங்களும் வழிபட்டதலம் குமரி மாவட்டத்திலுள்ள பூதபாண்டி என்பது கர்ண பரம்பரை கதை. அதனால் அக்கோயில் மூலவர் பூதலிங்கம் என்று அழைக்கப்படுகிறார். பஞ்சபூத கோட்பாட்டை மயனைத் தொடர்ந்து தொல்காப்பியரும் அவரைத் தொடர்ந்து கடைச்சங்கப் புலவர்களும் எடுத்துரைத்தனர்.

**மண் திணிந்த நிலனும்**
**நிலன் ஏந்திய விசும்பும்**
**விசும்பு தை வரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்தியற்கை**

என்பது புறநானூற்றுப்பாடல் (புறம் 2). இவ்வுலகம் திண்மையான நிலத்தையும் நிலத்தைச் சுற்றி உயரே பரந்து அகன்று சூழ்ந்துள்ள வெளியாகிய வானத்தையும் வானத்தைத் தழுவி நிலவும் காற்றையும் அக்காற்றை முதன்மையாகக் கொண்டு எரியும் நெருப்பையும் அந்தநெருப்போடு மாறுபட்டதாகிய நீரையும் அடுக்கடுக்காக இப்பாடல் குறிப்பிடுகிறது. இவ்விதம் தொடர் அடுக்காகக் கூறப்பட்டுள்ள வானியல் கலந்த அறிவியல் கோட்பாடுகளை நமது முன்னோர்கள் முறைப்படியாகக் கற்றுள்ளனர் என்று அறிய முடிகிறது. திருவள்ளுவரும் பஞ்சபூதக் கோட்பாட்டை தமது திருக்குறளிலே குறிப்பிட்டுள்ளார். வஞ்சமனம் உடையவனது பொய்யான ஒழுக்கத்தை அவனுடைய உடம்பில் கலந்து நிற்கும் ஐம்பூதங்களும் கண்டு தம்முள்ளே சிரிக்கும் என்றார் திருவள்ளுவர்.

**வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்**
**ஐந்தும் அகத்தே நகும் (குறள் 271)**

இதுதான் அக்குறள். இங்கு அறிவியல் கோட்பாடு பேசுகின்றது.

**காலமும் இடமும்**

காலமும் இடமும் அறிவியலின் முக்கிய நுட்பங்கள். "காலமும் இடமும் கணக்கியல் ஆற்றி, காலமும் உணர்வும்

கணக்கிட்டு உணர்ந்தே, காலம் காண்பது இயல் நெறி மரபே" என்பது மயன் கூற்று (பாடல் 614). இதைத்தான் தொல்காப்பியர் "முதலெனப்படுவது நிலம் பொழுது இரண்டின் இயல்பெனமொழிப" என்று கூறியுள்ளார். (பொருளதிகாரம் 950). திருவள்ளுவரும் காலத்திற்கும் இடத்திற்கும் முக்கியத்துவம் கொடுக்கிறார்.

**ஞாலம் கருதினும் கைகூடும், காலம்**
**கருதி இடத்தால் செயின் (குறள் 484)**

என்பது குறள். இக்குறளில் காலம், இடம் என்ற விஞ்ஞான நுட்பங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. இங்கு அறிவியல் பேசுகின்றது.

**வானியல்**

அறிவியல் துறைகளில் தொன்மையானதும், இன்றும் புதுமையுடையதும், என்றும் வியப்பினைத் தருவதும் வானியல் ஆகும். இன்று பல்வேறு தொலைநோக்கிகளைக் கொண்டு ஆய்வதோடன்றி, விண்வெளியில் ஆராய்ச்சி நிலையங்கள் அமைத்தும், காற்றிலேறி விண்ணை அறியும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளனர். ஆனால் இவற்றை நம் தமிழ்ச் சான்றோர்கள் எவ்வித கருவிகளின் துணையுமின்றி தம் ஆற்றல்மிகு அறிவு கண்களாலேயே ஆராய்ந்து பல உண்மைகளைக் கண்டுபிடித்துக் கூறினார்கள்.

வானியல்துறை சார்ந்த அறிவியல் கருத்துக்களை குமரிக் கண்டத்தில் வாழ்ந்த தமிழ் பேரறிஞர்கள் தம் நுண்ணுணர்வால் அறிந்து வெளிப்படுத்தியுள்ளனர். அப்பேரறிஞர்களின் உழைப்பின் பயனாக அவர்கள் அறிவுறுத்திய உண்மைகள் சில இன்று நமக்குக் கிடைத்துள்ள சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன. பண்டு உணரப்பட்ட அந்த உண்மைகள் எல்லாம், தற்போது பல்வேறு நவீன கருவிகளின் துணை கொண்டு ஆய்ந்தறியப்பட்ட உண்மைகளுடன் பெரிதும் ஒத்திருக்கக் காண்கின்றோம். இந்த உலகத்தினையும், அதனைச் சூழ்ந்த வெளியாகிய வானத்தின் இயல்பினையும் குமரிக் கண்டத்தில் வாழ்ந்த நம் மூதாதையர் ஆய்ந்து உணர்ந்து வெளியிட்டுள்ளனர் என்பதை அறியும்போது பண்டைய தமிழர்களின் அறிவியல்திறன் தெரிய வருகிறது.

இந்த உலகம் தொடக்கத்தில் சூரியனிலிருந்து தெறித்து விழுந்தது என்பது அறிவியலார் கருத்து. இதனை

மனதிற்கொண்டு தான் ஆதிபகலவனை திருவள்ளுவர் தமது முதல் குறளில் ஆதிபகவன் என்று குறிப்பிடுகிறார்கள் புலவர் குழந்தை போன்ற பகுத்தறிவாளர்கள்.

**அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு (குறள் 1)**

என்பது தான் திருவள்ளுவரின் முதல் குறள். எழுத்துக்கெல்லாம் அகர ஒலியே முதலாக உடையன. அதுபோல் உலகம் இறைவனாகிய ஆதிபகவனை முதலாக உடையது என்பதுதான் இதன் பொருள். இதே கருத்தை இன்னும் சற்று ஆழமாகவும், விரிவாகவும், அறிவியல் பார்வையோடும், பகுத்தறிவு கண்ணோட்டத்தோடும் சிந்தித்துப் புதுமைப் பொருள் கண்ட புலவர் குழந்தையவர்கள் ஆதிபகவன் எனும் சொல் ஆதிபகலன் என்பதன் திரிபாகும் என்றார். பகலன் என்றால் சூரியன் என்று பொருளாகும். ஆதிபகவன் என்பதை ஆதிபகலனாக ஆதிசூரியனாகக் கருதுவது அறிவியலுக்குப் பொருத்தமானதாகவே உள்ளது.

திருவள்ளுவரும் வானியலில் துறையில் சிறந்த அறிவு பெற்றிருந்தார் என்பதை அவரது குறள்மூலம் அறிய முடிகிறது. சூரியனை இறைவனாகக் கண்ட திருவள்ளுவர் சந்திரனையும் விடவில்லை. மேடும் பள்ளமும் கொண்டது சந்திரன் என்ற உண்மையைத் திருவள்ளுவர் எடுத்துரைக்கிறார்.

**அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல**
**மறுஉண்டோ மாதர் முகத்து (குறள் 1117)**

என்பதுதான் அக்குறள். இக்குறளிலிருந்து திருவள்ளுவரின் வானியல் அறிவு தெரியவருகிறது. ஞாயிறையும், திங்களையும் திருவள்ளுவர் அறிவியல் ரீதியாகக் காண்கிறார்.

இந்த உலகம் உருண்டையானது. நிரந்தரமாக சுழலும் தன்மை கொண்டது என்பதை மேனாட்டினர் மிகவும் பிற்காலத்திலேதான் கண்டுபிடித்தனர். ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே திருவள்ளுவர் சுழலும் உலகத்தைப் பற்றிக் குறளிலே குறிப்பிடுகிறார். "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்" (குறள் 1031) என்பதுதான் அக்குறள். உலகம் பல தொழில் செய்து சுழன்றாலும் ஏர்த் தொழிலின் பின் நிற்கின்றது என்பது மு.வ.வின் உரை. சுழலும் உலகத்தைக் காட்டித் திருவள்ளுவர் தமது அறிவியல் திறனை வெளிப்படுத்துகிறார்.

**கணிதவியல்**

இன்றைய உலகில் அறிவியல் துறையில் அடைந்திருக்கும் வளர்ச்சி அனைத்தும் கணிதத்தின் அடிப்படையில் அமைந்ததாகும். கணிதம் என்பது எண்களின் செயல்பாடு. கணிதம் இன்றி அறிவியல் இல்லை. நியூட்டனின் விதிகளும், ஐன்ஸ்டீனின் தோற்றமும் கணித மொழியில் அமைந்தவைதான். இன்று மனித வாழ்வில் பெரிய புரட்சியை ஏற்படுத்தி நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வரும் கணிப்பொறி, பூஜ்ஜியம், ஒன்று என்ற இரண்டு எண்களின் அடிப்படையில் செயல்படுகிறது. இதனை என் கணினி என்பர். இதில் முழுவதுமாக எண்ணை அடிப்படையாகக் கொண்ட குறியீட்டு மொழிகளைத்தான் பயன்படுத்துகின்றனர். இது இன்றைய நிலை. ஆனால் தொல்காப்பியத்தில் கணித இயல் கோட்பாடுகள் காணப்படுகின்றன. எண்களைப் பற்றியும் அவற்றின் புணர்ச்சி விதிகளைப் பற்றியும் நமது முன்னோர்கள் விரிவாக கூறுவதிலிருந்து பண்டைய தமிழர்கள் கணிதத்திற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்தனர் என அறிய முடிகிறது. ஒன்று, இரண்டு, நூறு, ஆயிரம், கோடி போன்ற எண்களின் பெயர்களையும் அரை (தொல், எழுத்து 170) போன்ற அளவுப் பெயர்களையும் கலம் (தொல், எழுத்து 170) போன்ற நிறைப் பெயர்களையும் தொல்காப்பியம் குறிப்பிடுவதால் பண்டைய தமிழர்கள் கணிதத்திற்குக் கொடுத்த முக்கியத்துவம் தெரிய வருகிறது.

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு (குறள் 392)**

என்பது திருக்குறள். இங்கு எண் என்பது கணிதம். எழுத்து என்பது இலக்கியம். கல்வித்துறையில் கணித இயலுக்குத்தான் வள்ளுவர் முதலிடம் தருகிறார். அறிவியலுக்கு கணிதவியலே அடிப்படை என்று உணர்ந்து அவர் இவ்வாறு எழுதுகிறார். கணிதத்தின் அடிப்படையான இலக்கம் எனும் குறியீட்டிற்கும் எண் ஒரே சொல்லைப் பண்டையத் தமிழர்கள் பயன்படுத்தியிருப்பது அவர்களது அறிவியல் பார்வைக்கு ஒரு சிறந்த சான்றாகக் கருதலாம்.

**வேளாண்மை**

வேளாண்துறை இன்று நாடெங்கும் சிறப்புற வளர்ந்து வரும் ஓர் அறிவியல் கலை. மண்ணியல், நீர்வள இயல்,

தாவரவியல், பயிர்நோயியல், பூச்சியியல், போன்ற துறைகள் பலவற்றையும் உள்ளடக்கிய ஓர் அறிவியல், கலையாக வேளாண்மைத்துறை வளர்ச்சியடைந்துள்ளது. வேளாண்மை என்ற சொல்லை நான்கு இடங்களிலும் *(81, 212, 613, 614)*, வேளாண்மையின் உயிர் நாடியான உழவுத்தொழிலை ஆறு இடங்களிலும் *(14, 872, 1031, 1032, 1033, 1036)* திருவள்ளுவர் திருக்குறளிலே பயன்படுத்தியிருப்பது அவரது அறிவியல் பார்வைக்கு ஒரு சிறந்த சான்றாகக் கருதலாம்.

வேளாண்மைக்குக்களமாக விளங்குவது நிலம். மயன் இயற்றிய ஐந்திறம் நிலத்தை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாக வகுத்து, வாழ்க்கை முறையை ஐந்திணைகளாகப் பிரித்துக் கூறுகிறது. (பாடல் 866). தொல்காப்பியர் எழுதிய தொல்காப்பியமும் நிலத்தை அதேபோல ஐந்து வகையாக பாகுபடுத்தி ஐந்திணைகளையும் எடுத்துரைக்கிறது. இது நிலவியல் பற்றி பண்டைய தமிழர்கள் கொண்டிருந்த தெளிவான அறிவியல் நோக்கை வெளிப்படுத்துகிறது. தொல்காப்பியர் கூறும் நிலப்பகுப்பால் பண்டைக்காலத்திலேயே கால்நடை அறிவியல், வானவியல், கடலியல், உழவியல் முதலிய வேளாண்மை அறிவியலின் உட்கூறுகளை தமிழர்கள் நன்றாக அறிந்திருந்தனர் எனத் தெரியவருகிறது.

இம்மண்ணின் இயல்பை அறியத் திருவள்ளுவர் ஒரு செய்முறைப்பயிற்சியைக் காட்டி தாம் ஒரு வேளாண்மை விஞ்ஞானி என்பதை நிறுவுகிறார். மண்ணின் இயல்பை அறிய அம்மண்ணில் முளைத்தெழுந்த முளையே சான்றாகும் என்றார். "நிலத்தில் கிடந்தமை கால் காட்டும்" *(959)* என்பது குறள். இங்கு அறிவியல் பேசுகின்றது. வேளாண்மை செயல்முறைகளில் உழுதல், உரமிடுதல், களைநீக்குதல், நீர்பாய்ச்சுதல், பயிர் பாதுகாத்தல் என்ற ஐந்து செயல்கள் இன்றியமையாதவை. இந்த ஐவகை செயல்களையும்,

**ஏரினும் நன்றாம் எருஇடுதல், கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு (குறள் 1038)**

என்று சுருங்கச் சொல்லி விளங்கவைக்கிறார் திருவள்ளுவர். இக்குறளில் உழுதல், உரமிடுதல், களை நீக்குதல், நீர் பாய்ச்சுதல், பயிர் பாதுகாப்பு ஆகிய ஐந்து செயல்களும் இடம் பெற்று வேளாண்மையின் அறிவியலை எடுத்துரைக்கின்றது. "ஏரினும் நன்றாம் எருவிடுதல்" என்று கூறிய திருவள்ளுவர் அதனைத்

தொடர்ந்து எரு எதுவும் இடாமலேயே அதிக விளைச்சல் காண வழிகாட்டுகிறார். சாதாரணமாக அகல உழுவதிலும் ஆழ உழ வேண்டும் என்பர். ஆனால் திருவள்ளுவர் அகல உழுவதை விட நன்கு புழுதி பறக்க உழுவதே சாலச்சிறந்தது என்று கூறுகிறார்.

**தாவரத்தில் உயிர்**

மனிதர்களைப் போன்று மரம், செடி கொடிகளுக்கும் உயிர் உண்டு என்று அண்மைக் காலத்தில் ஆராய்ச்சிமூலமாக நிறுவப்பட்டுள்ளது. இதனை நிறுவியர் வங்கத்தைச் சார்ந்த சர் ஜகதீஸ் சந்திர போஸ் என்ற விஞ்ஞானி. ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே திருவள்ளுவர் இந்த அறிவியல் உண்மையை தமது திருக்குறளிலே வெளியிட்டுள்ளார். மரம், செடி கொடிகளுக்கும் உயிர் உண்டு. இன்பத்தையும், துன்பத்தையும் அவற்றால் வெளியிட முடியும் என்பதைத் தமது குறள்பாக்களில் அவர் வெளிப்படுத்தியுள்ளார்.

**மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து (குறள் 90)**

என்பது ஒரு குறள். அதாவது அனிச்சமலர் முகர்ந்து பார்த்த அளவில் வாடிவிடும். ஆனால் முகம் திரிந்து பார்த்த அளவிலேயே விருந்தினர் வாடிவிடுவர் என்பது அதன் பொருள். மலருக்கு உயிரும் உணர்ச்சியும் உண்டு என்ற அறிவியல் உண்மையை தமது குறளிலே குறிப்பிடுகிறார் திருவள்ளுவர்.

**செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும் (குறள் 1039)**

என்பது மற்றொரு குறள். நிலத்திற்கு உரியவன் அந்த நிலத்தை தினந்தோறும் சென்று பார்வையிடாவிட்டால் அந்த நிலத்திலுள்ள பயிர் அவன் மனைவியைப்போல ஊடல் கொண்டு அவனோடு பிணங்கி விடும். இதுதான் அக்குறளின் பொருள். இங்கு நெற்பயிரும் மனைவியைப் போன்றே உயிரும் உணர்வும் உடையது என்பதை திருவள்ளுவர் குறிப்பிடுவது ஓர் அறிவியல் உண்மையாகும்.

**மருந்து**

மருந்து என்னும் தலைப்பில் திருவள்ளுவர் கூறும் பத்து குறட்பாக்கள் நவீனகால மருத்துவ துறையிலுள்ள அறிவியல் உண்மைகளை எடுத்துரைக்கின்றன. நவீன கால

மருத்துவத்துறையில் நான்கு பகுதிகள் உண்டு. நோயாளி, மருத்துவன், மருந்து, செவிலியர் என்ற நான்கு பகுதிகளையும் திருவள்ளுவர் அன்றே கூறியுள்ளார்.

**உற்றவன், தீர்ப்பான்மருந்து உழைச்செல்வான் என்று,**
**அப்பால் நால்கூற்றே மருந்து (குறள் 950)**

என்பது அக்குறள். ஒரு நோயைக் குணப்படுத்த வேண்டுமானால் அந்த நோயின் அடிப்படைக் காரணத்தைக் கண்டுபிடித்து அதற்குரிய சிகிச்சை செய்ய வேண்டும் என்பது நவீனகால மருத்துவக் கோட்பாடு. நோயைக் கண்டறிதல் (Diagnosis) நோயின் அடிப்படைக் காரணத்தைக் கண்டுபிடித்தல் (Etiology), நோயைக் குணப்படுத்தல் (cure) ஆகிய படிப்படியான நவீனகால மருத்துவமுறைகளை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் திருவள்ளுவர் மருந்து அதிகாரத்தில் கூறியிருப்பது வியப்பளிக்க வைக்கிறது.

இவ்வாறு திருக்குறளில் ஏற்றதாக அமைந்துள்ளது பெருமைக்குரியதாகும். திருக்குறள் ஓர் அறநூல் மட்டுமல்ல. அறிவியல் நூல் என்று துணிந்து கூற முடிகிறது. ஆகத் திருவள்ளுவர் நிலவியல், வானியல், அறிவியல் துறைகளில் வல்லவராகவும், ஒரு சிறந்த விஞ்ஞானியாகவும் திகழ்கின்றார்.

# வள்ளுவர் காட்டும் வாழ்வியல் நெறிகள்

**முனைவர் தே.சம்பத்**

**முன்னுரை**

மனிதன் நற்பண்புடன் வாழ சிறந்த அறக்கருத்துக்களைக் கூறுவது திருக்குறளாகும். மனிதனுக்குத் தேவையான வாழ்வியல் நெறிகளை வள்ளுவர் பத்து உடைமைகளில் கூறியுள்ளார். அறத்துப்பாலில் ஐந்து உடைமைகளையும் பொருட்பாலில் ஐந்து உடைமைகளையும் கூறியுள்ளார். அத்தகைய உடைமைகள் கூறும் வாழ்வியல் நெறிகள் பற்றி இக்கட்டுரையில் ஆராயப்படுகிறது.

அறத்துப்பாலில் வள்ளுவர் காட்டும் வாழ்வியல் நெறிகள்:

வள்ளுவர் மனிதனுக்குத் தேவையான நெறிகளைக் கீழ்க்காணும் உடைமைகளில் வகைப்படுத்துகிறார். அவைகளாவன:

**அறத்துப்பால் வாழ்வியல் நெறிகள் பொருட்பால் வாழ்வியல் நெறிகள்**

1. அன்புடைமை
2. அடக்கமுடைமை
3. ஒழுக்கமுடைமை
4. பொறை உடைமை
5. அருளுடைமை
6. அறிவுடைமை
7. ஊக்கமுடைமை
8. ஆள்வினை உடைமை
9. பண்புடைமை
10. நாணுடைமை என்பதாகும்

இத்தகைய உடைமைகள் மனிதனுக்கு எவ்வகையில் நற்பண்புகளை வளர்க்கும் வாழ்வியல் நெறிகளாக இருக்கின்றன என்பதைப் பற்றிக் காண்போம்.

### அறத்துப்பாலில் உள்ள வாழ்வியல் நெறிகள்:

### வாழ்வியல் நெறி 1 - அன்புடைமை (அதிகாரம்8)

மனிதன் அன்புடையவராக இருத்தல் வேண்டியதன் இன்றியமையாமையைப் பற்றிக் கூறும் அதிகாரம் அன்புடைமையாகும். அன்பின்வழி வாழ்பவருக்கு எத்துன்பமும் வாரா. அன்பு வாழ்வே அனைத்தையும் நல்கும், எனக் கூறுகின்றார் வள்ளுவர். இவ்வதிகாரத்திலுள்ள குறட்பாக்களில் கூறும் நெறிகளைக் காண்போம்.

அன்புடைமை அதிகாரத்தில் உள்ள பத்துக் குறட்பாக்களிலுள்ள வாழ்வியல் நெறிகள்:

*71.* அன்புடையார் பிறர்க்கு உதவத் தவறார்.

*72.* அன்புடையார் என்பும் பிறர்க்கு உரியர்.

*73.* அன்போடியைந்த வாழ்க்கை, உயிரோடியைந்த உடம்பு.

*74.* நண்பென்னும் சிறப்பை, எளிதில் ஈன்பது அன்பு.

*75.* உறவினரிடம் அன்புற்று வாழ்தலே இன்புற்று வாழ்தல்.

*76.* வீரத்திற்கும் அன்பே துணை.

*77.* அன்பில்லவர்க்கு அறம் கூற்றாகும்.

*78.* அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை வற்றல் மரம்.

*79.* யாக்கையின் அகத்துறுப்பு அன்பு.

*80.* அன்பிலார் உடம்பு உயிரற்ற வெற்றுடம்பு.

### அன்புடைமை அதிகாரத்தில் உள்ள கருத்துப்பிழிவு

**"அன்பு வாழ்வே அனைத்தும் நல்கும்"**

### வாழ்வியல் நெறி 2: அடக்கமுடைமை (அதிகாரம் 8)

மனம், மொழி, மெய்களை அடக்கி வாழ்தலே அடக்கமுடைமையாகும். மேலும் வாழும் மனிதன், தெய்வமாக மதிக்கச் செய்யும் பண்புகளைப் பெற்றிருந்தால் அடக்கமுடையவராகத் திகழலாம். அடக்கமுடைமை கூறும் வாழ்வியல் நெறிகளை காண்போம்.

*121.* அடக்கம் அமரருள் உய்க்கும், அடங்காமை நரகம்.

*122.* அடக்கம் உயிர்க்கு ஆக்கம்.

*123.* ஆற்றின் அடங்கப் பெறின் சீர்மை பயக்கும்.

*124.* தன்மானம் இழக்கா அடக்கம் மானப்பெரிது.

*125.* பணிதல், செல்வர்க்கு செல்வம் தகைத்து.

*126.* ஐந்தடக்கம் ஆற்றின் யாண்டும் ஏமாப்பு.

*127.* ஐம்பொறிகளுள், யாகாவாராயினும் நாகாக்க.

*128.* தீச்சொல் நான்கின், பொருட்பயன் நன்றாகாது.

*129.* நாவினால் சுட்ட வடு ஆறாது.

*130.* சினத்தை அடக்கியவனுக்கு அவ்வறமே பயன்தரும்.

**அடக்கமுடைமை அதிகாரம் கூறும் கருத்துப்பிழிவு**

**"அடக்க வாழ்வு ஆக்கம் பெருக்கம்"**

**வாழ்வியல் நெறி 3 ஒழுக்கமுடைமை (அதிகாரம் 14)**

மனிதனுக்கு ஒழுக்கமே உயிரைவிட மேலானதாகும். அத்தகைய ஒழுக்கத்தைப் பற்றி வள்ளுவர் பத்து குறட்பாக்களில் கூறியுள்ளார்.

ஒழுக்கமுடைமை அதிகாரம் கூறும் வாழ்வியல் நெறிகள்:

*131* ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்.

*132.* நன்மைக்குத்துணை ஒழுக்கம், வருந்தியும் காக்க.

*133.* இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்.

*134.* ஓதலின் நன்றே ஒழுக்கமுடைமை.

*135.* ஒழுக்கம் உடையான் கண்ணதே உயர்வு.

*136.* ஒழுக்கம் குன்றேல் இழுக்கின் துன்பப்படும்.

*137.* இழுக்கத்தின் எக்கொடியவனும் எய்தாப்பழி எய்தும்.

*138.* நல்லொழுக்கம் நன்றிக்கு வித்து.

*139.* ஒழுக்கமுடையார் வழுக்கியும் தீய சொல்லார்.

*140.* உலகத்தோடு ஒட்ட ஒழுகல் அறிவுடைமை.

**"ஒழுக்க வாழ்வே உயர்ந்த வளம் நல்கும்"**

**வாழ்வியல் நெறி 4 பொறையுடைமை (அதிகாரம் 16)**

மனிதனின் சிறந்த பண்புகளுள் ஒன்றாகக் கருதப்படுவது பொறுத்துக்கொள்ளும் பண்பாகிய பொறுமை ஆகும்.

வள்ளுவர் பொறையுடைமை அதிகாரத்தில் கூறியுள்ள வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

பொறையுடைமை அதிகாரத்தில் வள்ளுவர் கூறும் வாழ்வியல் நெறிகள்:

*151.* தம்மை இகழ்வாரைப் பொறுத்து, இனிய செய்.

*152.* தீமையை மறத்தல் பொறுத்தலின் நன்று.

*153.* வன்மையுள் வன்மை மடவார் பொறை.

*154.* நிறையுடைமை வேண்டின் பொறையுடைமை வேண்டும்.

*155.* பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து வைப்பர்.

*156.* பொறுத்தார்க்குப் பொன்றும் துணையும் புகழ்.

*157.* திறனல்ல பிறர் செய்யினும், அறனல்ல செய்யற்க.

*158.* மிக்கவை செய்தாரைப் பொறுமையால்வென்று விடல்.

*159.* இன்னாச்சொல் நோற்பவர் நோற்பாரின் நோன்மையர்.

*160.* உண்ணாது நோற்பார் இன்னாச்சொல் நோற்பாரோ.

**பொறையுடைமை கூறும் வாழ்வியல் கருத்துக்களைத் தம் வாழ்வில் பொறுமையுடன் பின்பற்றுவோர் பெருமை பெறுவர்.**

## பொறையுடைமை அதிகாரம் கூறும் கருத்துப்பிழிவு

**"பொறையுடையோர் பெருமை பெறுவார்"**

## வாழ்வியல் நெறி 5 அருளுடைமை (அதிகாரம் 25)

வள்ளுவர் கூறும் மனிதப்பண்புகளுள் எல்லா உயிர்களிடமும் அருளுடையவராக இருக்கும் பண்பு மிக உயர்ந்த பண்பாக மக்களால் போற்றப்படுகிறது. அத்தகைய பண்புகளைக் கூறும் வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

**அருளுடைமை கூறும் வாழ்வியல் நெறிகள்**

*241.* அருட்செல்வம், செவிச்செல்வம் செல்வத்துள் செல்வம்.

*242.* ஈரமில்லா நெஞ்சுடையார் இறையைக் காணார்.

*243.* அருள் நேர்ந்த நெஞ்சினார் இன்னா உலகம் புகார்.

*244.* அருள் ஆள்பவர்க்கு தன்னுயிர் அஞ்சும் வினையில்லை.

*245.* அருள் ஆள்பவர்க்கு அல்லல் இல்லை.

*246.* இன்னல் இழைப்பவர் அருளாளர் ஆதல் அரிது.

*247.* பொருளில்லார்க்கு ஈத்துவக்கும் இன்பம் இல்லை.

*248.* நூல்பொருள் மறப்பின் கொளலாகும். அருள் ஆகா.

*249.* அருளாதான் செய்யும் அறன் பயனற்றது.

*250.* எளியார்முன் வலியார்வலி என்ன பெருமை.

## அருளுடைமை கூறும் வாழ்வியல் கருத்துப்பிழிவு

### "அருள் நெறி ஒன்றே அல்லர் அழிக்கும்"

## பொருட்பாலில் வள்ளுவர் காட்டும் வாழ்வியல் நெறிகள்:

### வாழ்வியல் 6 அறிவுடைமை (அதிகாரம் 43)

மனிதனுக்கு உகந்த செல்வங்களுள், சிறந்த செல்வமாகக் கருதப்படுவது அறிவுச்செல்வமே ஆகும். வள்ளுவர் அறிவுடைமையில் கூறும் வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

**அறிவுடைமை அதிகாரம் கூறும் வாழ்வியல் நெறிகள்**

421. செறுவார்க்கும் அழிக்கலாகா உள்ளரண் அறிவு
422. தீது ஓரீ இ நன்றின்பால் உய்ப்பது அறிவு
423. கெடுக்கும் வண்ணம் உறுதிகள் கூறுவர். கெடுமொழி கேளேல்
424. எளிமையாகக் கூறல், அரியவை உணரல் அறிவு
425. இன்பில் மலர்தல் துன்பில் கூம்பல் இல்லதறிவு
426. உலகம் எவ்வது, அவ்வது உறைவது அறிவு
427. வருமுன்னர் காக்கும் அறிவுடையார்க்கு நோயில்லை.
428. அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்.
429. வந்தபின் நீக்கலின் வராமல் காப்பது அறிவுடைமை
430. அறிவுடையார் எல்லாம் உடையார். அறிவிலார் எவையும் இலர்.

## அறிவுடைமை கூறும் கருத்துப்பிழிவு

### "அறிவும் செல்லும் ஆக்கம் பெருக்கும்"

### வாழ்வியல் நெறி 7 ஊக்கமுடைமை (அதிகாரம் 60)

செயலாற்றுதலில் மனந்தளராது மனவெழுச்சி யுடையாராக இருந்தால் மனிதப்பண்பில் தலையாயப் பண்புடையவராய்த் திகழலாம். அத்தகையப் பணியைப் பற்றி ஊக்கமுடைமை அதிகாரத்தில் வள்ளுவர் கூறும் வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

**ஊக்கமுடைமை அதிகாரம் கூறும் வாழ்வியல் நெறிகள்**

591. செல்வம் உடையார் எனப்படுவது, ஊக்கம் உடைமை.
592. உள்ளம் இலா பொருளுடைமை நில்லா.
593. ஊக்கம் கைத்துடையார் ஆக்கம் இழக்கார்.

594. ஊக்கம் உடையான் உழை ஆக்கம் தானே செல்லும்.
595. உயர்வு, மாந்தர்தம் உள்ளத்தனையது.
596. உயர்வே உள்ளுக. கைகூடாவிடினும் முயற்சி பெருமை.
597. சிதை விடத்தும் ஒல்கேல் பாடு ஊன்று.
598. உள்ளம் உடையவரே வள்ளண்மை எய்துவர்.
599. ஊக்கமுடைய புலிக்கு வலியுடை யானை அஞ்சும்.
600. ஊக்கமில்லாதவர் மக்களன்று, மரம்

**ஊக்கமுடைமை அதிகாரம் கூறும் கருத்துப்பிழிவு**

**"ஊக்கம் உடையவர் ஆக்கம் பெறுவர்"**

**வாழ்வியல் நெறி; 8 ஆள்வினை உடைமை (அதிகாரம் 62)**

விடாமுயற்சியுடன் செயல்படும் பாங்கையே ஆள்வினை உடைமை எனலாம். எவரிடத்தில் ஆள்வினையுடைமை தனது மனிதப்பண்புகளோடு கலந்து இருக்கிறதோ அவர் எச்செயலையும் விடாமுயற்சியுடன் செய்து முடிப்பார் என்பது திண்ணம். வள்ளுவர் கூறியுள்ள ஆள்வினை உடைமை கூறும் வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

**ஆள்வினை உடைமை அதிகாரத்தில் காணப்படும் வாழ்வியல் நெறிகள்**

611. அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்.
612. வினைக்கண் வினைக்கெடல் ஓம்பல் வினைக்குறை குற்றம்.
613. வேளாண்மை தாளாண்மையின் கண் தங்கிற்று.
614. தாளாண்மையிலாதான் வேளாண்மை பயனற்று போம்.
615. வினை விழைவான் சுற்றத்தார் துணையாவான்.
616. முயற்சி திருவினையாக்கும் முயற்சியின்மை இன்மை.
617. நடந்தவன்காலில் சீதேவி, உட்கார்ந்தவனிடம் மூதேவி.
618. ஊனம் பழியன்று ஆள்வினை இன்மை பழி.
619. ஆகாதெனினும் முயற்சி உழைப்பின் பலனைத் தரும்.
620. தாழாது உஞற்றின், ஊழையும் உப்பக்கம் காணலாம்.

**ஆள்வினை உடைமை கூறும் வாழ்வியல் கருத்துப்பிழிவு**

**"முயன்றால் முடியாத செயலும் உண்டோ?"**

**வாழ்வியல் நெறி; 9 பண்புடைமை (அதிகாரம் 100)**

மனிதப் பண்புகளிலேயே உயர்ந்த பண்பாகத் திகழ்வது அவரவர் நற்குணங்களே ஆகும். அத்தகைய நற்குணங்கள்

கொண்ட மனிதர்கள் நிறை மாந்தர் என்று அழைக்கப்படுகின்றனர். வள்ளுவர் பண்புடைமையில் கூறும் வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

**பண்புடைமை அதிகாரத்தில் காணப்படும் வாழ்வியல் நெறிகள்:**

*991.* பழக எளிமை, பண்புடைமையை எய்துவிக்கும்.

*992.* அன்புடைமை, ஆன்ற குடிப்பிறத்தல் பண்புடைமை.

*993.* உறுப்பொத்தல் மக்கள் ஒப்பன்று பண்பொத்தல் ஒப்பு.

*994.* நயனொடு, நன்றி புரிபவரை உலகு பாராட்டும்.

*995.* பாடறிபண்புடையார்க்குநகையேயும் இகழ்ச்சி இன்னா.

*996.* பண்புடையார் இன்றேல் உலகு மண்புக்கும்.

*997.* கூர்த்தமதியுடையரெனினும் மக்கள் பண்பில்லாதவர் மரம்.

*998.* தீமை செய்வார்க்கும் நண்பாற்றும் பண்பே தலை.

*999.* நகல்வல்லர் இல்லார்க்கு பகலும் இருள்.

*1000.* பண்பிலான் பெற்ற செல்வம் திரிந்தபால்.

**பண்புடைமை அதிகாரம் கூறும் கருத்துப்பிழிவு**

**"பண்புடையார் பார் போற்ற வாழ்வார்"**

**வாழ்வியல் நெறி 10. நாணுடைமை (அதிகாரம் 102)**

பழிச்சொல்லுக்கு வெட்கப்படும் செயலையே நாணுடைமை என்கிறார் வள்ளுவர். பழிச்சொல்லுக்கு வெட்கப்படுதலை தம் உடைமையாகக் கொண்ட மனிதன் நாணுடைமை என்னும் நற்பண்பு மிக்கவனாகத் திகழ்வான். அத்தகைய நாணுடைமையில் வள்ளுவர் கூறும் வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

**வள்ளுவர் கூறும் நாணுடைமை அதிகாரத்தில் காணப்படும் வாழ்வியல் நெறிகள்**

*1011.* இழிந்த செயலுக்கு நாணுதலே நன்மக்கள் நாணம்

*1012.* நாணுடைமை மாந்தர் சிறப்பு

*1013.* நாண் என்னும் குறித்தது சால்பு

*1014.* நாணுடைமை இன்றேல் பீடுநடை பிணி

*1015.* பிறர்பழி, தம்பழி நாணுவார் நாணுக்கு உறைபதி

*1016.* மேலாயவர் நாண் வேலி பேணுவார்

*1017.* நாண் ஆள்பவர் உயிர்பொருட்டு நாண் துறவார்

*1018.* பிறர் நாணத்தக்கது தான் நாணாமை அறனல்ல

*1019.* நாணின்மை நின்றக்கடை நலஞ்சுடும்
*1020.* நாண் அகத்தில்லார் மரப்பாவை

**நாணுடைமை அதிகாரம் கூறும் கருத்துப்பிழிவு**

**"பழிக்கு நாணார்பாவியர் ஆவர்"**

**முடிவுரை**

மேற்கூறிய அன்புடைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பொறையுடைமை, அருளுடைமை, அறிவுடைமை, ஊக்கமுடைமை, ஆள்வினை உடைமை, பண்புடைமை, நாணுடைமை ஆகிய அதிகாரங்களின் வாயிலாக வள்ளுவர் காட்டும் வாழ்வியல் நெறிகளை நெறிபிறழாது கைகொண்டு வாழ்வோமேயானால் வள்ளுவர் கூறிய,

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்**

எனும் குறளுக்கேற்ப நாம் அனைவரும், வாழும் தெய்வமாகப் போற்றப்படுவோம் என்பது திண்ணம்.

# திருக்குறள் போற்றும் பெண்ணியம்

இரா.கல்யாணசுந்தரம்

**முன்னுரை**

அருஞ்செல்வம் திருக்குறள்தான் அமுதத்தமிழ்த் தாய்க்கு மணி மகுடம், அகில உலகிற்கும் வழிகாட்டும் அற்புதக்கருவூலம். அன்றைய முடி மன்னர்களாயினும் இன்றைய குடி மக்களாயினும் ஒழுகிக் கடைப்பிடிக்க வேண்டிய ஒப்பற்ற உயர்ந்த கருத்துகளை இதில் வள்ளுவர் வாரி வழங்கியிருக்கிறார். குறளில் இல்லாத வாழ்வியல் கோட்பாடுகள் எதுவுமே இல்லை என்பதால்தான் குவலயம் இதனைப் போற்றிப் புகழ்கின்றது.

வள்ளுவப் பெருந்தகை தந்த அறம் பொருள் இன்பமெனும் முப்பாலில் பெண்ணியக் கருத்தாக்கமே பெரிதும் விஞ்சி நிற்கிறது.

**இன்றைய நிலையில் பெண்கள்**

பேரிளம் பெண், பேதை, மடந்தை, அரிவை, பெதும்பை, மங்கை, தெரிவையென்று பெண்களின் பருவத்துக்கேற்ப பெயரமைத்து பாராட்டி, நிலவு, கொடி, மலர், நதியென உருவகித்துப் பெண்மகவாக, சகோதரியாக, மனைவியாக, தாயாக தன் கடமையைச் செய்து வரும் இந்தப் பெண்களின் அளப்பரிய பெருமையும், உதவியும், எப்பேர்ப்பட்டது என்பதை உணர்ந்து உரிய மரியாதையைத் தருவதை விட்டு, பெண் இனத்தை இழிவுபடுத்துவதும், பெண் சிசுக் கொலைக்கு அவர்கள் மட்டுமே காரணம் என்று குற்றம் சாட்டியும் ஆணுக்குப் பெண் அடிமையென்று அழுக்கு மனத்தோடு அவர்களைப் பயன்படுத்திக் கொள்வதையும் முழுமையாக மாற்ற இன்னும் எவ்வளவு காலம் ஆகுமோ? தெரியவில்லை.

**பெண்ணியம்**

பெண்களை இல்லத்தரசியாகவும், தாயாகவும், கற்பு நெறிதவறாத கண்ணியமானவர்களாகவும் சித்திரிக்கும்

திருவள்ளுவர், அவர்களை உறுதி படைத்தவர்களாகவும் காட்டுகின்றார்.

**சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை. (குறள் 57)**

"பெண்களை நான்கு சுவற்றுக்கு நடுவே வைத்துக் காவலுக்கு வாசலில் ஆள் வைத்துக் காத்துக்கொண்டிருப்பதில் எந்தப்பயனுமில்லை. அவர்கள் தங்களின் ஒழுக்கத்தாலும், பண்பாலும் தற்காத்துக்கொள்வதே காவல்" என்கிறார்.

பெண்களின் கற்புக்குப் பிறரால் ஏற்படும் தீமைதான் அவர்களையும் களங்கப்படுத்துகிறது. பெண்ணானவள் எவ்வளவுதான் துணிச்சல்காரியாக இருந்தாலும், சந்தர்ப்பமும், சூழ்நிலையும் அவள் வீழக் காரணமாகி விடும். கற்பு எனும் மன உறுதியால்தான் தற்காத்துக் கொள்வாள். அப்படிப்பட்ட தைரியக்காரியை மனைவியாக அடையப்பட்டவன் தனது வாழ்க்கையில் எல்லாவற்றையும் பெற்ற பாக்கியசாலியாவான்!

**பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மை யுண்டாகப் பெறின் (குறள் 54)**

என்ற குறள்மூலமாக மிகவும் நாசூக்காகப் பெண்ணுக்குரிய திண்மையை விவரிக்கிறார்.

**கற்பு**

ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பே திருவள்ளுவர் தன் மனைவி வாசுகியுடன் இல்லற சுகத்தில் ஈடுபட்டு அவளைக் கற்புத் தெய்வமாகவே கண்டு "அடிசிற்கினியாலே அன்புடையாளே! பதிசொல் தவறாத பாவாய்..." எனப் பாடியிருக்கிறார்.

வாசுகியும், தன் பதியைக் கண்முன் உள்ள கடவுளாகவே கண்டாள். காலையில் அவள் விழிக்கும்போதே கணவரின் பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டுத்தான் மறு வேலை பார்ப்பாள்; பின்தூங்கி முன் எழும் பேதை அவள்.

ஒரு நாள் கொல்லைப் புறத்திலுள்ள கிணற்றில் நீர் இறைத்துக் குடத்தில் ஊற்றிக் கொண்டிருந்தாள். அப்போது "வாசுகி இங்கே வா!" என்று கணவர் கூப்பிட்டார். நீர் நிறைந்த வாளியைக் கிணற்றின் பாதித் தொலைவுக்கு இழுத்தபோதுதான் அவர் அழைத்த சப்தம் கேட்டது.

"இதோ வந்துவிட்டேன்" என்ற வாசுகி கயிற்றை அப்படியே விட்டு விட்டுக் கணவரிடம் ஓடிவந்தாள்.

கணவர் இட்ட பணியை முடித்து விட்டுத் திரும்பக் கிணற்றடிக்கு வந்தபோது அவள் பாதியில் விட்டுச் சென்ற வாளி கயிறு அப்படியே நின்றது. நீர் நிறைந்த வாளியின் கனத்தால் கயிற்றோடு நீருக்குள் விழுந்து விடவில்லை. இது அவளது கற்பின் சக்தி. இப்படிப்பட்ட கற்புள்ள பெண்கள் மழை வேண்டும் என்று வேண்டினால் நிச்சயமாக மழை பொழியும் என்கிறார் பொய்யா மொழிப்புலவர்.

**தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை (குறள் 55)**

**திருப்புமுனை**

கூட்டுக் குடும்ப வாழ்வியலில் சிறந்து நிற்கும் நம் தேசத்துப் பெண்ணுக்கு இரண்டு வீடுகள் இருக்கின்றன. ஒன்று பிறந்த வீடு, மற்றொன்று வாழ்க்கைப்பட்டு புகுந்த வீடு. திருமணம் ஆகும் வரை பெண்ணுக்கு பிறந்த வீடுதான் கோயில். பிறந்த வீட்டில் கிடைத்த சுதந்திரமும், சுகமும் புகுந்த வீட்டில் வேறு மாதிரியாக இருக்கும். பிறந்த வீட்டில் பெற்றோர், சகோதர, சகோதரிகளுடன் கலகலப்பாக வாழ்ந்தவர்கள், புகுந்த வீட்டில் கணவன், மாமனார், மாமியார், நாத்தனார் போன்றோர் குறை கூறாதபடி, தன்னை மாற்றிக்கொண்டு வாழ்க்கை நெறியைப் பின்பற்ற வேண்டும். புகுந்த வீடே ஒரு பெண்ணுக்குத் திருப்பு முனையாக அமையும். தான்பிறந்த வீட்டின் பெருமைகளைப் புகுந்த வீட்டில் சொல்லிக் கொண்டிருந்தால் அது காழ்ப்புணர்வை ஏற்படுத்தும். திருமணத்துக்குப் பிறகு வாழ்க்கை எப்படி இருந்தாலும், திருமணத்துக்கு முன்பிருந்த வாழ்க்கையோடு முடிச்சுப் போடக்கூடாது.

**ஆண்களுக்கும் கற்பு**

புகுந்த வீட்டில் மனைவியென்ற தகுதியைப் பெற்று, தன் கணவரோடு உறவு பூண்டு, தங்களது வாரிசாகக் குழந்தைச் செல்வங்களைப் பெற்றெடுத்து தாய் என்ற பேற்றை அடைவதற்குரிய வழியைப் பெண்ணுக்கு வழங்கிடக் கணவன் ஒருவனால் மட்டுமே முடியும்! இதை,

**மங்களம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்**
**நன்கலம் நன் மக்கட்பேறு (குறள் 60)**

என்கிறார் வள்ளுவர்.

மனைவியின் நற்குணச் செய்கைகளே இல்வாழ்க்கைக்கு மங்கலமாகும். அம்மங்கலத்துக்கு அழகு சேர்ப்பது நல்ல மக்களைப் பெற்றுக் கொள்வதே!

பெண்களுக்கு முக்கியத்துவம் தந்து வழி காட்டிய வள்ளுவர், ஆண்களுக்கும் கற்பு நெறி அவசியமென்று வலியுறுத்துகிறார். இன்னொருவனின் மனைவியை இச்சையுடன் பார்க்காத பெருங்குணம் அறிவுடையோரிடம் இருப்பின் அது நீதி நிரம்பிய ஒழுக்கம் என்கிறார்.

**பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு**
**அறனன்றோ ஆன்ற ஒழுக்கு (குறள் 148)**

என்ற இக்குறள்மூலமாக விளக்குகிறார்.

**முடிவுரை**

பெண்மை என்ற சொல்லுக்குப் பெண் தன்மை என்று பொருள். திருக்குறள் பெண்ணியச் சிந்தனைகளின் பெட்டகமெனில் மிகையில்லை!

*42194* எழுத்துக்களில், *14000* சொற்களில் *1330* குறட்பாக்களில், *133* அதிகாரங்களில் முப்பாலாக முத்தமிழ்ச் செல்வமாக, வாழ்க்கையின் மொத்த அறப்பண்புகளையும் வாரி வாரி அள்ளித் தருகின்ற வள மிக்க இலக்கியமன்றோ இந்த தெளிதேன் அமுதத் திருக்குறள்!

# ‘திருக்குறள் காட்டும் அன்புடைமை’

பெ.மரியநேசன்

**முன்னுரை**

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**

என்றார் பாரதி. உலகினில் விவிலியம், திருக்குர்ரான் இவற்றை அடுத்து அதிக மொழிகளில் மொழியாக்கம் செய்யப்பட்ட அறநூல் திருக்குறளாகும். இத்தகைய சிறப்பினைப் பெற்ற திருக்குறள் காட்டும் அன்புடைமை பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

**பத்து உடைமைகள்**

அணிகலன்களும், ஆடைகளும் உடலை அழகு செய்வன. அவை மட்டும் போதா. உள்ளத்தை அழகு செய்ய இன்னும் பல உடைமைகள் தேவை. அவை அறிவுடைமை அதி-43, அருளுடைமை-25, அடக்கமுடைமை-13, ஆள்வினையுடைமை-62, ஊக்கமுடைமை-60, ஒழுக்கமுடைமை -14, பொறையுடைமை-16, நாணுடைமை-102, பண்புடைமை-100, அன்புடைமை-08 என்பன. இந்தப் பத்து உடைமைகளையும் பத்துத் தலைப்பின் கீழ் உள்ள நூறு குறள்களும் நம்மை அணியும்படி வற்புறுத்துகின்றன. இவ்வாறு கி.ஆ.பெ.விசுவநாதம் கூறுகின்றார்.

**அதிகார வைப்புமுறை**

‘மக்கட்பேறு’ என்ற அதிகாரத்தை அடுத்து அன்புடைமை என்ற அதிகாரம் வைக்கப்பட்டுள்ளது. இது குறளில் எட்டாவது அதிகாரமாகும். மக்கட்பேறு ஏழாம் அதிகாரமாகும். மக்களைப் பேண அன்புடைமை தேவை என்பதால் அதிகார வைப்பு முறை அமைந்துள்ளதென்று உரையாசிரியர் பரிமேலழகர்

விளக்கியுள்ளார். இவ்வதிகாரத்தில் இடம்பெறும் கருத்துகள் விவிலியம், பெரியபுராணம், திருவாசகம், திருமூலரின் திருமந்திரம், வள்ளலாரின் பாடல்கள் ஆகியவற்றோடு பொருந்தியுள்ளன. இது தனிச்சிறப்பாகும்.

**அன்பு பற்றி தாகூர் கருத்து**

தாகூர் வாழ்ந்த இல்லத்தில் பின்வரும் வாசகங்கள் இன்னும் உள்ளன. மனிதன் மனிதனுக்குச் செய்யும் அன்புப் பணிதான் ஆண்டவனுக்குரிய பணியுமாகும். அன்பே தாகூரை உலகமகா கவிஞராக்கியது.

**அதிகாரப் பகுப்பு முறை**

அன்புடைமை என்ற அதிகாரத்தில் இடம்பெறும் குறள் கருத்துகளைப் பரிமேலழகர் பின்வருமாறு பகுக்கின்றார்.

1. **அன்பினது உண்மை (குறள் 1)**
2. **அன்பினது சிறப்பு (2-6 வரை)**
3. **அன்பில் வழிப்படுங்குற்றம் (7-10 வரை)**

**அன்பின் சிறப்பினைப் பற்றிப் புனித பவுல் அடிகளாரின் கூற்று**

கிறித்துவ மதத்தை அன்புச் சமயம் என்பர். சவேரியார், அருளானந்தர் போன்றோர் தமிழகம் வந்து கத்தோலிக்க மதத்தைப் பரப்பினர். புனித பவுல் கிரேக்கம் உரோம் போன்ற நாடுகளைச் சுற்றி வந்து கிறித்துவ மதத்தைப் பரப்பியவர். தமது கடிதத்தில் பின்வருமாறு எழுதியுள்ளார். அன்பு பொறுமையுள்ளது. நன்மை செய்யும், தற்புகழ்ச்சி கொள்ளாது. இறுமாப்பு அடையாது, அன்பு அனைத்தையும் பொறுத்துக்கொள்ளும்.

**1. அன்பினது உண்மை (குறள் 1)**

முதல் குறளில் வள்ளுவர் அன்பினை அடைத்து வைக்கும் தாழ்ப்பாள் இல்லை. அன்புடையவர்களின் சிறு துளி கண்ணீரே அவர்களின் அன்பை வெளிப்படுத்தும் என்பதை,

**அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்**

என்ற குறள் மூலம் விளக்குகின்றது.

தமிழன் அஃறிணை உயிர்களையும் அன்பு செய்தவன் என்பதை அகநானூற்றுப் பாடல் விளக்கும்.

**தாதுண் பறவை பேதுறல் அஞ்சி**
**மணிநா ஆர்த்த மாண்வினைத்தேரன்**

இப்பாடல் வரிகள் தமிழனின் இரக்கவுணர்வைப் புலப்படுத்தும்.

**2. அன்பினது சிறப்பு (பாடல்கள் 2 முதல் 6 வரை)**

இரண்டாவது குறளில் வள்ளுவர், அன்பிலார் எல்லாம் தமக்குரிமையாக்கிக் கொள்ளுவர். ஆனால் அன்புடையார் "என்பும் உரியர் பிறர்க்கு"(72) என்று விளக்குகின்றார் இயேசு பிரான் 208 எலும்புகளும் அடிபட்டுச் சிலுவையில் உயிர்நீத்தார் என்று விவிலியம் கூறுகின்றது.

மூன்றாவது குறளில் வள்ளுவர் மனிதப் பிறவியானது பிறர்க்கு அன்பு செய்வதற்காகவே என்பதை,

**ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு (குறள் 73)**

என்ற குறள்மூலம் விளக்குகின்றார்.

வள்ளலார் பாடிய, 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்பது ஒப்பு நோக்கத்தக்கது.

பிசிராந்தையாரும், கோப்பெருஞ்சோழனும் பார்க்காமலே நட்புக்கொண்டு வடக்கிருந்து உயிர்விட்டனர் என்று புறநானூறு விளக்கும். இந்த அன்பின் வெளிப்பாட்டை,

**அன்பீனும் ஆர்வம் உடைமை அதுவீனும்**
**நண்பென்னும் நாடாச் சிறப்பு (குறள் 74)**

என்ற இக்குறள் விளக்குகின்றது.

மகாத்மா காந்தி, இந்திரா காந்தி, ராஜிவ் காந்தி துப்பாக்கியால் சுடப்பட்டு உயிர் நீத்தது மக்கள்மீது கொண்ட அன்பினால்தான்.

**எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லாமல்**
**வேறொன்றும் அறியோம் பராபரனே**

என்றார் தாயுமானவர். இதே கருத்தைத்தான் ஐந்தாவது குறளில் வள்ளுவர் கூறுகின்றார்.

**அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையத்து**
**இன்புற்றார் எய்தும் சிறப்பு**

இது மனித நேயத்தை வலியுறுத்தும்.

அன்பு எல்லோரிடமும் இருக்கக்கூடிய பண்பாகும். எல்லா உயிர்களும் இறைவனிடம் காட்டும் அன்பு பக்தியாகும். திருமூலர் திருமந்திரத்தில்,

'அன்பே சிவமாய் அமர்ந்திருந்தோரே' என்று பாடுகின்றார். இதே கருத்தினை ஆறாவது பாடல் வலியுறுத்தும். அன்பு பாவத்தையும் அழிக்கும் என்பதை,

**'மறத்திற்கும் அஃதே துணை' (குறள் 76)**

என்ற அடிகளால் விளக்குகின்றார்.

## 3. அன்பில் வழிப்படும் குற்றம் (பாடல்கள் 7 முதல் 10 வரை)

எலும்பு இல்லாத உயிர்களைப் பகலவன் வருத்துவதுபோல் அன்பில்லாத உயிர்களை அறம் வருத்தும் என்பதை 7ஆம் குறள் விளக்குகின்றது. மனித உயிர்களை வதைத்த அரக்கர்களை இறைவன் பல்வேறு அவதாரங்கள் எடுத்து அழித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. முருகன் சூரனை அழித்தது சான்றாகும். இதனையே வள்ளுவர்,

**அன்பிலதனை அறம் காயுமே (குறள் 77)**

என்கின்றார்.

**இல்பொருள் உவமை**

'அன்பில்லாத உயிர்கள் இல்லறத்தில் சேர்ந்து வாழ்வது கொடும் பாலைவனத்தில் பட்டுப்போன வற்றல் மரம் துளிர்ப்பது போன்றாகும்' என்று விளக்குகின்றார். இதனை,

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரம்தளிர்த் தற்று**

என்ற குறள் உணர்த்தும். இதற்கு வள்ளுவர் *(78)* விளக்கும் உவமை சிறப்பு வாய்ந்தது.

வள்ளலார் உயிர்களுக்காகக் கொண்டு வந்த இயக்கமே சீவகாருண்யம். பல நன்மைகள் செய்த வள்ளலாரை உயிரோடு எரித்துக் கொன்றனர் தமிழ் மக்கள். இப்படிப்பட்ட அன்பு என்கிற அகத்துறுப்பு இல்லாத மக்களுக்குப் புறத்துறுப்பு என்ன செய்யும்? என்பதை வள்ளுவர்,

**புறத்துறுப்புஎல்லாம் எவன் செய்யும் யாக்கை**
**அகத்துறுப்பு அன்பி லவர்க்கு (குறள் 79)**

என்ற குறளால் விளக்குகின்றார்.

**அன்பு செய்யுங்கள், தொண்டு செய்யுங்கள்** இதுவே அன்னை தெரசாவின் கொள்கையாகும். உயிர் அன்பு வழியில் இயங்கும்,

**கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்பு**

என்று பாடினார் மாணிக்கவாசகர். அன்பில்லாதவர்களின் உடலானது எலும்பைத் தோலால் போர்த்திய உடம்பு என்பதை,

**அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு**

என்ற கடைசிக் குறளால் விளக்குகின்றார்.

**முடிவுரை**

அன்பு, அருள், இரக்கம் ஆகிய மும்மணிகளும் எல்லாச் சமயங்களிலும் ஒளிவீசுகின்றன. இறைவனையே அன்பாகவும், அருளாகவும் சமயச் சான்றோர் காட்டுவர். கிறித்துவம் இறைவனை அன்புருவாகக் காட்டும். மக்கள் ஒருவருக்கொருவர் அன்பு காட்டி இன்பம் செய்ய வேண்டும். வள்ளுவர் எந்தச் சமயத்தையும் சாராதவர். மனிதநேயத்தையே அன்புடைமை என்ற அதிகாரத்தில் உணர்த்துகின்றார்.

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

என்று இல்வாழ்க்கையை உணர்த்திய வள்ளுவர், அன்போடுதான் பொருள் ஈட்ட வேண்டும் என்றார். அருளை அன்பின்தாய் என்று உருவகம் செய்கின்றார்.

**அருளென்னும் அன்பின் குழவி பொருளென்னும்**
**செல்வச் செவிலியால் உண்டு**

என்று அன்பின் சிறப்பினைப் புறச் செய்தியால் அறிந்தோம்.

**அருளோடும் அன்போடும் வாராப் பொருளாக்கம்**
**புல்லார் புரள விடல்**

என்று மன்னர்களுக்கு அறிவுறுத்துகின்றார்.

# திருக்குறள் போற்றும் பெண்ணியம்

சோ.ம.செயராசன்

## முன்னுரை

திருக்குறள், அறம், பொருள், இன்பம் என்று முப்பால்களாகப் பகுக்கப்பட்டு, அறத்துப்பாலில் முப்பத்தெட்டு அதிகாரங்களில் பத்து குறள் வீதம் முந்நூற்றி எண்பது பாட்டுகளாகவும், பொருட்பாலில் எழுபது அதிகாரங்களில் எழுநூறு பாக்களும், இன்பத்துப்பாலில் இருபத்தி ஐந்து அதிகாரங்களில் இருநூற்று ஐம்பது பாக்களுமாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

அறத்துப்பாலில், பாயிரம், இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என்று பகுக்கப்பட்டுள்ளன.

பொருட்பாலில், அரசியல், அமைச்சியல், அரணியல், ஊழியல், படையியல், நுட்பியல் மற்றும் குடியியல் எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளன.

இன்பத்துப்பாலில் களவியல், கற்பியல் என இரு இயல்கள் மட்டும் ஆக்கப்பட்டுள்ளன.

மேற்குறிப்பிட்ட பல்வேறு இயல்களின் வழியே ஒரு நூற்றி முப்பத்தி மூன்று அதிகாரங்கள் உருவாக்கப்பட்டு ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்துக்குறள்வீதம் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களில் கருத்துகள் தரப்பட்டுள்ளன.

## திருக்குறளின் சிறப்புக்கள்

திருக்குறள் செய்யுள்கள் அனைத்தும் ஈரடி வெண்பாக்களால் ஆக்கப்பட்டுள்ளன. அனைத்து மத, சமய வாழ்வியல் நெறிகள் முறைப்படுத்தப்பட்டுள்ளன.

அறம், பொருள் இன்பம் என மனிதகுல மேம்பாட்டிற்கான அனைத்துத் தத்துவங்களும் குறளில் கொண்டுவரப்பட்டுள்ளன.

இக்குறட்பாக்களில் இல்லாத பொருளே இல்லை. அய்யன் திருவள்ளுவர் தொடாத கருத்தே இல்லையெனலாம்.

இத்திருக்குறளுக்குப் பல்வேறு அறிஞர் பெருமக்கள், தாங்கள் கற்று, உய்த்து உணர்ந்தவாறு விளக்கமளித்து உரைகள் எழுதித் தந்துள்ளனர். இதுபோன்றே இத்திருக்குறள் உலகத்திலுள்ள எண்பதுக்கு மேற்பட்ட பல்வேறு மொழிகளிலும் மொழிமாற்றம் செய்யப்பட்டுப் பாராட்டுப் பெற்றுள்ளது.

**திருக்குறளுக்கு சூடப்பட்ட பல்வேறு பெயர்கள்**

பல்வேறு அறிஞர்கள் தாங்கள் கண்டறிந்த கருத்துகளின் அடிப்படையில் இத்திருக்குறளுக்குப் புதிது புதிதாய்ப் பெயர் சூட்டி மகிழ்ந்துள்ளனர். முப்பால், உத்தரவேதம், தெய்வநூல், திருவள்ளுவர் பெயராலேயே வழங்கப்படும் திருக்குறள், பொய்யாமொழி, வாயுரை வாழ்த்து, தமிழ்மறை, பொதுமறை பொருளுரை மற்றும் முதுமொழி என்பன வேறு பெயர்கள் இத்திருக்குறளுக்கு வழங்கப்பட்டு வருகின்றன.

**அய்யன் திருவள்ளுவருக்கு வழங்கப்பட்ட வேறு பெயர்கள்**

உலகப் பொதுமறை திருக்குறளை இயற்றிய திருவள்ளுவருக்கு, நாயனார், தேவர், முதற்பாவலர், தெய்வப்புலவர், நான்முகனார், மாதானுபங்கி, செந்நாப்போதார், பெருநாவலர் புலவர், பொய்யில் புலவர் மற்றும் அய்யன் திருவள்ளுவர் என்றெல்லாம் பல்வேறு அறிஞர்கள் தங்களின் படைப்புகளிலும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் போன்றவற்றிலும் பெயரிட்டுப் புகழ்சேர்த்துள்ளனர்.

**பெண்ணின் பெருமையைப் பறைசாற்றிய சான்றோர்கள்**

இராஜாராம் மோகன்ராய், அன்னிபெசன்ட் அம்மையார் போன்ற பெருமக்கள் பெண்கள் உடன்கட்டை ஏறுவதற்கு எதிர்ப்பு தெரிவித்துப் போராடியுள்ளனர். தந்தை பெரியாரும், திரு.வி.கல்யாணசுந்தரனார், புரட்சிக்கவி பாரதி, பாவேந்தர் பாரதிதாசன் போன்ற பெருமக்கள் பெண்களிடையேயுள்ள மூடநம்பிக்கைகளை ஒழிக்கவும், பெண் அடிமைத்தனம் விலக்கவும், பெண்களின் அறியாமையை அகற்றவும், கல்வி வேள்விகளில் சிறக்கவும் வேண்டி, பாடல் மற்றும் எழுத்துக்களால் படைத்து, பெண்ணின் பெருமையை உலகுக்கு எடுத்துக்காட்டி, உயர்வடையச் செய்தவற்றை ஒருவாறு அறிந்துள்ளோம்.

ஆனால், ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பெண்ணின் பெருமையையும், அவளின் சிறப்பியல்புகளையும் போற்றிக் கவிபாடி, தனது பாத்திறத்தால் பெண்களுக்கு இலக்கணம் வகுத்தளித்து, கவிதை இலக்கணம் பிறளாமல் குறள் வெண்பாவாகிய ஈற்றடியால் உலகளந்த பெருமான் திருவள்ளுவர் என்றால் மிகையாகாது.

**அறத்துப்பாலில் பெண்மை போற்றுதல்**

(வாழ்க்கைத் துணைநல அதிகாரமளிக்கும் மகளிர் மாண்புகள்)

அறத்துப்பாலில் உள்ள 'இல்லற'வியலில் வாழ்க்கைத் துணைநல அதிகாரம் ஆறில் படைக்கப்பட்டுள்ள பத்துக் குறட்பாக்களிலும் பெண்ணவளின் மாண்புகளை பாராட்டியும் தெளிவுபடுத்தியும் பெண்ணவள் எவ்வாறெல்லாம் பெருமை அடைகிறாள் என்றும் அய்யன் திருவள்ளுவர் கவிபுனைந்துள்ளார்.

**மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும் இல் (குறள் 52)**

மனைமாட்சி என்னும் இல்லறத்திற்குப் பெருமை சேர்ப்பவள் பெண் என்றும் அவ்வாறு குடும்பத்திற்கு பெருமை சேர்க்காத பெண்ணின் வாழ்க்கை எப்படிப்பட்டதாயினும் அது சிறப்புடையதல்ல எனக்கூறிப் பெண்ணைப் பெருமைப்படுத்தியுள்ளார்.

**பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மைஉண் டாகப்பெறின் (குறள் 54)**

கற்பு என்ற வல்லாண்மை, மக்கள் இருபாலருக்கும் உண்டென்று வலியுறுத்தி வந்தாலும் திருவள்ளுவர் கற்பு என்பதை பெண் மட்டும் மன உறுதியுடன் போற்றி, அவளின் பெருமைக்கு சிறப்பு சேர்ப்பதற்கும்; பெண்ணவளைப் போற்றுவதற்கும் உரிய அறமாக வகுத்துத் தந்துள்ளார்.

**தெய்வம்தொழ அள்கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்எனப் பெய்யும் மழை (குறள் 55)**

இக்குறளில் பெண் என்பவள் தெய்வத்தை கூடத் தொழ வேண்டியதில்லை. ஆனால் கணவரைத் தொழுது எழுந்து பணிசெய்பவள் ஆணையிட்டால் அது நடந்துவிடும் என்றும் அவ்வாறு அவள் வேண்ட மழை கூடப் பெய்யும் என்று

பெண்ணின் பெருமையை உயர்த்திக் காட்டிப் பெண்களுக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

**தற்காத்துத் தற்கொண்டான் பேணித்தகை சான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண் (குறள் 56)**

இக்குறளில் சுவர் இருந்தால்தான் சித்திரம் எழுத முடியும் என்பதை எடுத்துக்காட்டும் முகத்தான் பெண்ணவள், முதலில் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டுமென்றும் அப்போதுதான் தனது கணவரைப் பேணமுடியுமென்றும்; குடும்பத்தின் பெயர் விளங்கிட வைக்க சோர்வு என்ற சோம்பலை நீக்கி, சுறுசுறுப்புடன் செயல்பட்டால்தான் பெண்குலத்திற்குப் பெருமை உண்டாகும் எனவும் விளக்கிப் பெண்ணவளுக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

**இன்பத்துப்பாலில் கூறப்படும் பெண்ணின் மகிமைகள்**

**தகையணங்குறுத்தல் அதிகாரத்தில் பெண்ணின் உயர்வு**

**கண்டார் உயிருண்ணும் தோற்றத்தால் பெண்டகைப்**
**பேதைக்கு அமர்த்தன கண் (குறள் 1084)**

பெண்ணின் கண்கள், கண்டவரின் உயிரையே வாங்கும் சக்தி வாய்ந்த திறம் கொண்டது என்று எடுத்துக்கூறி திருவள்ளுவர் பெண்மையை உயர்த்திக் காட்டியுள்ளார்.

**கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கம்இம் மூன்றும் உடைத்து (குறள் 1085)**

பெண்ணவளின் கண்களை எப்படிக் கண்டு ஆய்ந்து தெளிந்தாரோ தெரியவில்லை, பெண்ணின் கண்களுக்கு எமனுடைய சக்தியும் காந்தம்போல் கவர்ந்திழுக்கும் சக்தியும் பொன்மானைப் போன்ற மருட்சியையும் பெற்றுள்ளாள் என்றும் பார்வையை வைத்து ஆயிரம் கதை சொல்லி பெண்ணவளைப் போற்றுகிறார்.

**புணர்ச்சி மகிழ்தல் அதிகாரத்தில் பெண்ணின் பெருமைகள்**

**கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள (குறள் 1101)**

இக்குறளில் மனிதர்க்குப் புலன்கள் ஐந்து, இவ்வைம்புலன்களின் வழியே கண்டு இரசித்தல், கேட்டறிந்து துய்த்தல், உண்டு மகிழ்தல், தீண்டித் தெளிதல், முகர்ந்து மலர்தல் என்ற ஐந்து இன்பங்களும் பெற்றிருந்தாலும் பெண்

ஒருத்திக்கே; அவளின் கண்களுக்கே மேற்குறித்த பேராற்றல் உண்டு என்று அறுதியிட்டுப் பகுத்தறிந்து பாடிவைத்து பெண்ணுக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

**நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும்**
**தீயாண்டுப் பெற்றாள் இவள்? (குறள் 1104)**

இக்குறளில் பெண்ணை விட்டு நீங்கினால் ஏக்கத்தால் சூடு உண்டாவதும், அவளை நெருங்குவதால் மகிழ்வு தந்து குளிர்ச்சியூட்டுவதுமாகிய இருவகையான நெருப்புப் போன்ற வலிமையைப் பெண்ணே பெற்றுள்ளாள் என்று வியந்து கூறி, பெண்ணைத் தீண்டும் இன்பத்தை எடுத்துக்காட்டிப் பெருமை சேர்க்கிறார்.

நலம் புனைந்துரைத்தல் அதிகாரத்தில் பெண்ணவளின் மாண்புகள்

**காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்**
**மாணிழை கண்ணொவ்வேம் என்று (குறள் 1114)**

இக்குறட்பாவை நோக்குங்கள். பெண்ணவளின் கண்களை நோக்கும் சக்தி, குவளை மலர்களுக்கு உண்டானால் இக்குவளை மலர்கள் தங்களுக்குப் பெண்ணின் கவர்ந்திழுக்கும் கண்களின் சக்தி இல்லை என்று ஏங்கி நிலம் பார்த்து வெட்கித்தலை கவிழும் என்று பாராட்டிப் பெண்ணின் கண்நோக்கிற்குப் பெரும்வலிமை சேர்த்துப் பாராட்டுகிறார்.

**மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியிற் கலங்கிய மீன் (குறள் 1116)**

இதோ பாருங்கள். தண் ஒளி பெற்ற நிலவிற்கும், அழகுமிக்க பெண்ணின் முகத்திற்கும் வேறுபாடு காணமுடியாமல் விண்மீன்கள் தங்களின் இருப்பிடம் விட்டு அகன்று விட்டோமோ எனக் கலங்கித் தவிக்கும் என்று பெண்ணின் முகஅழகை வெகுவாக இரசித்துப் போற்றிப் பெருமை சேர்த்துள்ளார்.

**காதற் சிறப்புரைத்தல் அதிகாரத்தில் மங்கைநல்லாள் சிறப்புகள்**

**உடம்பொடு உயிரிடை என்ன மற்றன்ன**
**மடந்தையோடு எம்மிடை நட்பு (குறள் 1122)**

இக்குறட்பாவில் நகமும் சதையும் போலவும் பூவும் மலரும் போலவும் உயிரும் உடலும் போன்று இணைபிரியா நட்பு பெண்ணோடு கொண்டது என்று பெண்ணின் நட்பிற்குக்

கட்டிய இலக்கணம் கூறி பெண்மைக்கு பெருமை சேர்த்துள்ளார் அய்யன் திருவள்ளுவர்.

**வாழ்தல் உயிர்க்கு அன்னள் ஆயிழை, சாதல்**
**அதற்கு அன்னள் நீங்கும் இடத்து (குறள் 1124)**

வாழ்க்கையின் இன்பத்தை தருபவள் பெண்ணென்றும் அவள் இல்லாத வாழ்க்கை சாதலுக்கு ஒப்பானது என்றும் எடுத்துக்கூறிப் பெண் இல்லாத வாழ்க்கை, வாழ்க்கை அல்ல என விளம்பிப் பெண்ணவளுக்கு வள்ளுவப் பெருந்தகை பெருமை சேர்க்கின்றார்.

**முடிவுரை**

தற்காலத்தில் பெண்ணவளுக்கு பெருமை சேர்க்கும் கவிதைகள், படங்கள் மிகுந்து வருகின்றன. மேலும் பெண்ணவள் தனது உரிமைகளைத் தற்போது பெற்ற கல்வி அறிவினால் அடைந்து வருகிறாள். ஆணுக்குப் பெண் நிகரில்லை என்ற அடித்தளத்தைத் தகர்த்தெறிந்து, எல்லாத் துறைகளிலும் பெண்ணானவள் கால் பதித்து பீடு நடைபோடுகிறாள் என்றால் அதற்கு வித்திட்டவர்களில் திருவள்ளுவரும் ஒருவர் என அறிந்து மகிழ்வோம்.

# வள்ளுவர் வகுத்த வாழ்வியல் நெறி

**பேரா. தே.நே.சித்திரச் செல்வி**

**முன்னுரை**

"குறளன்றி தமிழர்க்கு மறைநூலாகக் கொள்வதற்கு வேறில்லை" என்றார் கவிமணி. ஆனால் வள்ளுவர் பிறப்பால்தான் தமிழ் மண்ணின் மைந்தர். உணர்வால் உலக மண்ணின் மைந்தர், அண்டப் பெருவெளியின் உயரத்திலிருந்து தமிழோடு, தமிழரோடு, தமிழ்நாட்டோடு உலகையே உணர்ந்து, ஜி.யூ.போப் கூறியபடி "உலக மாந்தனைப் பாடிய உலகப் பாவலர்" என்பதால் திருக்குறள் தமிழ்மறை என்பதிலும், உலகப் பொதுமறை என்னும் உயிர்ப்பாகி நிலைத்துள்ளது. உலகப் பொதுமை நோக்கியே "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு" என்றார் மகாகவி. ஞாலத்து அறம் பொருள் கண்டார் என உலகின் அறநூல்களை கண்டுணர்த்திய நிரம்பிய நூல்களில் தேர்ச்சி பெற்ற பேரறிஞர், நுண்ணிய நூல் பலக் கற்பினும் தன்உண்மை அறிவே மிகும் என்பதற்கிணங்க தம் ஒப்பற்ற நூலை முப்பாலாகப் படைத்துள்ளார்.

திருக்குறள் மறைநூல் மட்டுமல்ல, உலக அறிவுக் கருவூலம், உலக மனித இனப்பண்பாட்டுக் கருவூலம், உலக உயிரினப் பயன்பாட்டுக் கருவூலம், அனைத்திற்கும் மேலாக உலக உயிரின உறவுக் கருத்துக் கருவூலம். தமிழர்களின் பண்பாட்டையும், வாழ்க்கை நெறியையும், அறம், பொருள், இன்பம் எனும் மூன்றிலும் உறுதிப் பொருள்களை வலியுறுத்தும் நோக்கில் தம் பட்டறிவினாலும், படிப்பறிவினாலும், பகுத்தறிவினாலும் எழுத்து வடிவில் அரிய பொருள்களை எளிய குறள் வெண்பாக்களில் 133 அதிகாரங்களாக அறத்தை 38 வடிவத்தில் 380 கோணங்களிலும், பொருளை 70 வடிவத்தில் 700 கோணங்களிலும், இன்பத்தை 25 வடிவத்தில் 250 கோணங்களிலும் வாழ்வியல் நெறிகளை வடிவமைத்து வரிசைப்படுத்தி வழிகாட்டுதலாக வகுத்துக் கொடுத்துள்ளார்.

எல்லா உயிரினங்களும் பிறப்பு முறையால் ஒன்றே என்னும் பேருண்மையை, இயற்கையின் நியதியை, 'பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்' என்றார். உயிரினங்களில் ஆடு, மாடு போன்றவை ஒன்று முன் சென்று மற்றவற்றிற்கு வழிகாட்டுகிறது. தேனி, குரங்கு போன்றவை ஒன்று தலைமை ஏற்று பிறவற்றை வழிநடத்துகிறது. தெளிந்த சிந்தையோடு வழிகாட்டும் ஆற்றல் மனிதப் பிறப்பிற்கு மட்டுமே உண்டு. அதில் பல வகை உண்டு. உறவு நிலையில் வழிகாட்டுவது "தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து முந்தி இருப்பச் செயல்" என தந்தை வழிகாட்டியாக, "ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை" என குடும்பத் தலைவன் வழிகாட்டியாக, "நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண் மேற்சென்று இடித்தல் பொருட்டு" என நண்பனுக்கு வழிகாட்டியாக, "நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை தலைமக்கள் இல்வழிஇல்" என படைவீரர்களுக்கு வழிகாட்டியாக, "வினைக்கு உரிமை நாடிய பின்றை அவனை அதற்குரியன் ஆகச் செயல்" என பணியாளர்களுக்கு மேலாளர் வழிகாட்டியாக, "குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன் அடிதழீஇ நிற்கும் உலகு" என மன்னன் மக்களுக்கு வழிகாட்டியாக, "உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்" என ஆள்பவர்களுக்கு சான்றோர்கள் வழிகாட்டியாக, "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாரா நெறி" எனச் சமுதாயத்திற்கு மெய்யுணர் வாளர்கள் வழிகாட்டியாக, வள்ளுவர் வழி காட்டுகிறார். நிலையற்றது உலகம் என்பதே நிலையான உண்மை. நிலையற்ற உலகில் நிலைத்திருக்கக் கூடியது புகழ் ஒன்றுதான். எனவேதான் "தோன்றின் புகழொடு தோன்றுக" எனக் கட்டளையிடுகிறார்.

**அறம்**

சாதி, சமயம், இன, இட, மொழி வேறுபாடற்ற சமுதாயத்திற்கு வழிகாட்டியான வள்ளுவர், உலகளாவிய நோக்குடன் வழிகாட்டும் வான்பொருளாக வள்ளுவத்தைப் படைத்துள்ளார். நாடு என ஓர் அதிகாரம் படைத்திருப்பினும் தம் குறளில் தமிழ், தமிழர், தமிழ்நாடு எனும் சொற்களையோ, அவற்றின் பொருள் தரும்படியான சொற்களையோகூட எடுத்தாளவில்லை. உலகம் என்ற பரந்த நோக்கோடு உலகம் என்னும் சொல்லை 22 குறட்பாக்களில் குறிக்கிறார். அறம்

என்னும் சொல்லை வழக்கம், ஒழுக்கம், முறைமை, நீதி, கடமை, ஈகை, புண்ணியம், அறநூல், அறக்கடவுள் என்னும் ஒன்பது பொருளில் பயன்படுத்தி உள்ளார். அறத்தை ஒரு வாழ்க்கை நெறியாக மட்டும் போற்றவில்லை. பொருளையும், இன்பத்தையும் அடைவதற்கான கருவியாக மட்டும் அறத்தை வகுத்துரைக்கவில்லை. பொருளையும், இன்பத்தையும் நுகர்ந்து மகிழ்வதில் நெறிபடுத்தும் சக்தியாக, முறையோடு, நெறியோடு, ஒழுகுமாறு இயக்குவது, மனதை மாசற்ற, நிலையில் (உள்ளத்தை) தூய்மைப்படுத்துவது அறம் என்கிறார். "மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்" "அழுக்காறு அவாவெகுளி இன்னாச் சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்", "அறவினை யாதெனில் கொல்லாமை" "அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை." "இன்சொலினிதே அறம்" என்கிறார்.

வள்ளுவர் மனிதனின் நிறை வாழ்க்கையையும், சமுதாயத்தின் வாழ்வியலையும் தனித்தனியாகவும் இணைத்தும் சிந்தித்துச் சமுதாயத்தின் உயர்விற்கு தனிமனிதன் செய்ய வேண்டிய கடமைகளையும் அதற்கு அவன் பெற வேண்டிய தகுதியாகிய பண்புகளையும் மனப்பண்பாட்டையும் குடும்பத்தை மையமாக வைத்து வழிகாட்டுகிறார். அறம் கூறும் ஆன்றோர்கள் இதனைச் செய்யாதே என்று ஆணையிட்டும் இதனைச் செய்க என்று கட்டளையிட்டும் முறையே விதிமுறை அறம், எதிர்மறை அறம் என்றும் குறித்தல் மரபு. குறளில் ஒழுக்கம் உடைமை, பொறையுடைமை, அருளுடைமை, என்பன விதிமுறையாலும், பிறனில் விழையாமை, அழுக்காறாமை, வெஃகாமை என்பன எதிர் மறையாலும் கூறப்பெற்ற அறங்களாகும். இன்பம் துன்பம் எனும் முரண்பட்ட இருவகை உணர்ச்சிகளும் முளைக்கும் இடம் மனம்தான். எனவே, மனத்தூய்மைதான் கொள்கை, செயல், தூய்மைக்கு வித்தாகும். "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன் ஆகுலநீரபிற" என அறக்கோட்பாட்டின் ஆணிவேர் மனத்தூய்மை என்கிறார். "சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும்", "அறத்தினூஉங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு" என்றும் "அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை. அதனை மறத்தலின் ஊங்கில்லை கேடு" என்றும் அறத்தை வலியுறுத்துகிறார்.

அறன் எனப்பட்ட இல்வாழ்க்கையை இல்லறமாக்கி இல்வாழ்வான் இயல்புடைய மூவர்க்கும் துறந்தார் துவ்வாதார் என அனைவருக்கும் துணையாக மட்டுமல்ல, தலையாகவும்

விளங்கும் சிறப்பைக் கூறி இல்வாழ்வானின் வாழ்க்கை துணை நலம், நன்மக்கட்பேறு எனும் சிறப்புகளோடு அவர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழும் நெறிகளையும் வகுத்தளிக்கிறார். பெய்யெனப் பெய்யும் மழை போன்ற மாண்புடையாள், இல்லவள் மாண்பு ஆனால், இல்லது என் என்றவர் பெண்ணிற் பெருந்தக்க யாவுள என்ற வினாவை அறத்துப்பாலில் தொடுத்து, பெண்ணை மனைமாட்சியாக்கிப் பெண்ணே பெருமை உடைத்து எனப் பொருட்பாலில் விளக்கி, பெண்ணின் பெருந்தக்கதில் என தக்க எனும் அடைமொழி கொடுத்து இன்பத்துப் பாலில் முடித்து பெண்ணின் பெருமையை உயர்த்திக் காட்டுகிறார். "மனமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை எனை மாட்சித்து ஆயினும் இல் உள்ளதென் இல்லவள் மாணாக்கடை", "புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன் ஏறுபோல் பீடுநடை" என குறையையும் குறிப்பாக உணர்த்தித் திருத்துகிறார்.

மனைமாட்சியின் நன்கலம் நன்மக்கள்பேறு என்பது திருவள்ளுவர் தீர்ப்பு. அதுவும் ஆண், பெண் சமன்மைப் பார்வைக்குச் சான்றாக மக்கட்பேறு எனப் பொதுவாகச் சுட்டினார். அத்தகையப் பேறு இல்லாதவர்களை மலடி மலடன் எனப் பழித்துரைக்காது மழலைச் சொல் கேளாதவர் என நயமாக நவில்கிறார். சிறுகை அளாவிய கூழ், மெய்தீண்டல், சொற்கேட்டல் மழலைச்சொல் போன்றவற்றால் தாய், தந்தையரின் ஐம்புல உணர்வுகளுக்கும் விருந்தாகும் மழலைகள் தம் பிறப்பால் தாய் தந்தையருக்குச் சமுதாய மதிப்பினை உருவாக்கித் தரும் குழந்தைகள் தம்மின் தம்மக்கள் அறிவுடைமை என அறிவுடையவர்களாகவும், தன் மகனை சான்றோன் எனக் கேட்ட தாய் எனப் பண்புடையவர்களாகவும், மருந்து மரம் போன்று பயன்பாடு உடையவர்களாகவும் விளங்க வழிகாட்டுகிறார். பெற்ற பிள்ளைகள் என்றும் எண்ணாது தித்தனோடு போர்தொடுத்த கோப்பெருஞ்சோழன் காலத்தில் வாழ்ந்த வள்ளுவர், பழிபிறங்காப் பண்புடை மக்கள், தந்தை மகற்காற்றும் நன்றி, மகன் தந்தைக் காற்றும் உதவி என இலட்சியப் பெற்றோர் பிள்ளைகளாகத் திகழ வழிகாட்டுகிறார்.

என்பையும் பிறர்க்குரியராக்கும் அன்புடையார் அறத்திற்கு மட்டுமன்றி மறத்திற்கும் துணையாக நின்று நிலைபெறச் செய்கிறார். "அன்பகத்தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று" எனக் கூறி புறத்துறுப்புகளால் என்ன பயன் என வினவுகிறார். செல்விருந்து ஓம்பி, வருவிருந்துவைகி,

இருந்தோம்பி, விருந்தோம்பி வேளாண்மை செய்பவன் நிலத்தில் செய்யாள் உறைவாள் என்பதால் வித்தும் உடல் வேண்டுமோ என விளக்குகிறார். இன்சொலினதே அறம் என்பதை உணர்ந்து பணிவுடைமை, இன்சொல் அணியாகப் பெற்ற செம்பொருள் கண்டார் கனியான இன்சொல்லை வழங்க வழிகாட்டுகிறார். செய்யாமல் செய்த, காலத்தினால் செய்த, பயன்தூக்கார் செய்த உதவி தினைத்துணைத்தாயினும் எழுமை எழுபிறப்பும் உள்ள வேண்டும் என உணர்த்தி எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டு செய்ந்நன்றி கொன்றவர்க்கு உய்வே இல்லை எனச் சாட்டுகிறார். சமன் செய்து சீர்தூக்கும் கோல் போன்ற நடுவு நிலைமை, ஒருமையுள் ஆமைபோல் அடக்கம் உடைமை உயிரினும் சிறந்த ஒழுக்கத்தோடு, உலகத்தோடு ஒட்ட ஒழுகி, நிலம் போன்ற பொறை உடைமையோடு, அழுக்காறு அகற்றி, வெஃகாமை வெஃகி, பயனில பழித்து, தீவினையஞ்சி, கைமாறு வேண்டா கடப்பாடு கொண்டு, அற்றார் அழிபசி தீர்த்து, ஒன்றா உலகத்து உயர்ந்த புகழோடு வாழ வழிகாட்டுகிறார்.

புலாலை மறுத்து அருளைப் பொருளாய் எண்ணும் துறவிகளுக்கும் கூடாவொழுக்கம், தவத்திற்கும் விளக்கம் கூறுவதோடு, வெகுளாமை வேண்டி, இன்னா செய்யாது, கள்ளத்தனத்தைக் கடிவதோடு வாய்மைக்கும் இலக்கணம் வகுத்துக் காட்டுகிறார். கொல்லாமை, நிலையாமை, துறவு காட்டி, மெய்யுணரவைத்த வள்ளுவர், அவா அறுத்தல் அதிகாரம் கூறுகிறார். ஊழிற்பெருவலி யாவுள என்றவர் ஊழையும் உப்பக்கம் காண, வெல்ல வழி காட்டுகிறார். உயர்ந்தோர் தவத்திற்கு உதவாதென்று கடிந்த குற்றங்களைக் கடிவதுதான், முக்கியமே தவிர மழித்தலும், நீட்டலும் வேண்டாம் என்கிறார்.

**பொருள்**

வள்ளுவர் தம் வாழ்வியல் வழிகாட்டி நூல் குறளில் "பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லது இல்லை பொருள்" எனப் பொருளின் சிறப்பினையும் "அறன் ஈனும், இன்பமும் ஈனும் திறன் அறிந்து தீதின்றி வந்த பொருள்" எனப் பொருளீட்டுகின்ற முறையினையும் ஒழுங்கினையும் பொருளாதார சிந்தனைகளாக வரையறை செய்துள்ளதோடு, செல்வத்தின் நிலையாமையை "கூத்தாட்டவைக் குழாத்தற்றே பெருஞ்செல்வம்'' என்கிறார். இவ்வுலக இன்பம், வீடுபேறு காண பொருளே முக்கியமானது. அதனை ஈட்டவும், சேமித்து பாதுகாக்கவும் பிறருக்கு ஈயவும் வழிகாட்டுகிறார். இரு

அறத்தார்க்கும் உரிய நல்வழிகளை வகுத்தவர், அரசியல் வாழ்வினை அலட்சியம் செய்து விடவில்லை. இறைமாட்சி முதலாக இடுக்கணழியாமை ஈறாக இருபத்தைந்து அதிகாரங்களில் அரசியலுக்கான இலக்கணங்களை இயம்புகிறார். ஆட்சி முடியாட்சி, குடியாட்சி எந்த உருவத்தில் காணப்பட்டாலும் அதன் நோக்கம் பயன் கருதித்தான் உயர்ந்தது, தாழ்ந்தது எனக் கொள்ளல் வேண்டும் என மக்கள் நல அரசுக்கு விதி கூறுகிறார். தூங்காமை, கல்வி, துணிவுடைமை, மானமுடைமை, அறிவுடைமை போன்ற பண்புகள் அரசனிடம் நிறைந்திருக்க வேண்டும் என எந்த கால அரசுக்கும் பொருந்தும் அரசியல் முறைமையை அளிக்கிறார். அரசனுக்கு உரிய பணிகளாக இயற்றலும், ஈட்டலும், காத்தலும், காத்த வகுத்தலும் கூறி முறை செய்து காக்கும் மன்னன் மக்கட்கு இறை என்கிறார். அரசர்க்கு மட்டுமே கல்வி எனாது, அரசின் அங்கமான அமைச்சு, தூது, ஒற்று, பிற அலுவலர்க்கு மட்டும் எனாது, மாந்தர்க்கு கற்றனைத்து ஊறும் அறிவு என கல்வி மக்களின் அடிப்படை உரிமை, அதனை வழங்குதல் அரசின் தலையாய கடமை என்கிறார். சாந்துணையும் கற்க வேண்டும் என்று கல்விக்கு எல்லை காட்டி அது எழுமைக்கும் தொடரும் என கற்கத் தூண்டுகிறார். அறிவுத் துறைகள் அனைத்தையும், எண், எழுத்து என இரு பெரும் பிரிவிற்குள் அடக்கி இவற்றை கற்றவரே கண்ணுடையார், கல்லாதவர் கண்கள் புண்களே என கல்வியின் சிறப்பையும் கல்லாமையின் இழிவையும் காட்டுகிறார்.

தேர்ந்த கல்வி, ஒள்ளிய அறிவு, உலகம் தழீஇய பண்பால் ஒரே உலகை உருவாக்க முடியும் என்ற வள்ளுவர், கற்ற ஒருவனுக்கு யாதானும் நாடாமல் ஊராமல் எனக் கல்வியினால் மட்டுமே உலகநோக்கு உண்டாகும், உண்மையை உணர்த்தி சாகும் வரை கற்க வேண்டும். அது எழுமைக்கும் ஏமாப்பு என எடுத்துரைக்கிறார். யாதும் ஊரே யாவரும் கேளிர் எனப் பாடிய கணியன் பூங்குன்றனார் பாரதம் அனைத்தையும் தம் ஊராகமாகவும் உலகத்தார் அனைவரையும் தம் உறவாகவும் கருதியதை எடுத்துக் காட்டாக காண்கிறோம். நன்முறையில் வாழ்க்கை நடத்துதல் என்பது அறிவினால் மட்டுமே முடியும் என்பதால் அறிவுடையார் எல்லாம் உடையார் என்கிறார். செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் எனக் கற்றில னாயினும் கேட்க எனக் கேள்விச் செல்வம் கொடுக்கிறார். எப்பொருள் யார்யார் வாய் கேட்பினும், எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு என அறிவுறுத்துகிறார். தீவினையெச்சம், வினைத்தூய்மை மூலம் தீவினைத் தவிர்த்து தூயவினை புரியத்

தூண்டுகிறார். பிழைகள் நிகழாது விழிப்புடன் ஒழுக எற்றென்றிரங்குவ செய்யற்க செய்வானேல் மற்றென்ன செய்யாமை நன்று என எச்சரிக்கிறார். மனிதனின் ஆளுமையினைச் சுற்றுச் சார்பு பாதிக்கும் என்னும் உண்மையை உணர்த்தச் சிற்றினம் சேராமை பெரியாரைத் துணைக்கோடல் அதிகாரங்களை அளித்து, தானே அறிஞன் என நினைப்பவன் உண்மையில் மூடன் என்பதைச் சிறுமை அணியுமாம் தன்னை வியந்து என விளக்குகிறார். தீ நட்பு, கூடாநட்பு, பேதைமை, புல்லறிவாண்மை, உட்பகைமூலம் விலக்குதற்குரிய வீணர்களின் பட்டியலை விரித்துரைக்கிறார். சூதினைக் கண்டித்த முதல் அரசியல் சாத்திரமாகக் குறள் சுடர்விடுகிறது. தீங்கு செய்வதற்குத் தீங்கு செய்வதன்மூலம் ஒரு நாளும் தீமை அகலாது இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு என்றும், வேந்தர் மாந்தர் யாவரும் சுற்றம் பேணப் போதிக்கிறார். இன்பம், துன்பம் இரண்டும் தோன்றும் மனத்தைப் பக்குவப்படுத்தி பண்பாடு முற்றிய அறிஞராக முகிழ இடுக்கணழியாமை கொடுத்தார்.

பொய்கூறல், புறங்கூறல், கடுஞ்சொற்கூறல், பயனிலகூறல் என நாவினால் கூறும் பிழைகளை விளக்கி யாகாவாராயினும் நாகாக்க என எச்சரிக்கிறார். பொன்னையும் பொருளையும் மட்டும் உடைமைகளாக எண்ணும் மாந்தர்க்கு அடக்கமுடைமை, அருளுடைமை, அறிவுடைமை, அன்புடைமை, ஆள்வினை உடைமை, ஊக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நாணமுடைமை, பண்புடைமை, பொறை யுடைமை என உண்மையான பத்து உடைமைகளை உடைமையாக்குகிறார். உழுவார் உலகத்தார்க்காணி, சுழன்றும் ஏர்பின்னதுலகம் என உழவைச் சிறப்பித்து, உழவின்றேல் நல்குரவு வருவதோடு இரந்துண்ண நேரும் என உழவு, நல்குரவு, இரவு, இரவு அச்சம் என வகுத்தளிக்கிறார். வறுமைத் துன்பத்திற்கு உவமையாகக் கொல்லாமல் கொல்லும் கொடுமையை கொன்றது போலும் என கொடுமையை உணர வைக்கிறார்.

பசி வந்திடப் பத்தும் பறந்து போகும் என்பர். வள்ளுவர் பத்தோடு உறக்கமும் போகும் என்பதை நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் வறுமை நெருப்பில் கண் மூட முடியாது என்பதால் அற்றார் அழிபசிதீர்க்க என அழிபசி தீர்த்தலின் ஆக்கத்தைக் கூறுகிறார். புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும் எனச்சாடிய வள்ளுவர் தீவினை புரியும் மூடர்களைத் திருத்தும் நோக்கில் வருத்தும் சொற்களை வழங்கவும் தயங்கியதில்லை. செவியிற் சுவையுணரா

அன்பகத்தில்லா, உலகத்தார் உண்டென்ப நச்சுப்படாதவன், துப்புரவில்லார் எனப் பல குறள்களில் கூறியதோடு பயனில சொல்லாமை எனும் அதிகாரமே பகுத்தளித்துள்ளார். வீரமும், கொடையும், புகழுமே பெருஞ்செல்வமாகக் கருதப்பட்ட சமூகப் பார்வையிலிருந்து மாறி வள்ளுவர் அறிவும் (கல்வி கேள்வி முதலியன), பண்பும், உணர்வும், தொழிலும், ஒழுக்கமும் ஆகிய வாழ்க்கை ஒழுக்கங்களும் வாழ்க்கைப் பொருளாக அமைய வழிகாட்டுகிறார்.

அமைச்சியலில் அமைச்சரின் சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், தூது, அவை அறிதல், குறிப்பறிதல், அவை அஞ்சாமை கூறுகிறார். அரணியலில் நாடு, அரண் கூறி, கூழ் இயல் படையியல் கூட்டுகிறார். நட்பியலில் நட்புக்கு இலக்கணம் மட்டும் கூறாது கூடாநட்பையும் விளக்குகிறார். குடியியலில் குடிப்பெருமை கூறுவதோடு உழவின் பெருமையையும் கூறுகிறார்.

**இன்பம்**

வள்ளுவரின் இன்பம், இன்பத்துப்பால் வள்ளுவரை சிறந்த அக இலக்கியக் கவிஞனாகக் காட்டுவதோடு இல்லறத்தைச் செம்மைப்படுத்தும் சமுதாய சிற்பியாகவும் காட்டுகிறது. அறம் பொருளில் நேரேநின்று அறம் கூறிய வள்ளுவர் இன்பத்தில் தலைவன் தலைவி வழி வாழ்வியலைக் கூறுகிறார். இயற்கையில் மலரும் மலரினும் மெல்லிய காமத்தை முன்னைப் பழமைக்கும் பழைமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளக்குகிறார். தனக்குவமை இல்லாத தனிப்பகுதியாகத் திகழ்வது திருக்குறளின் இறுதியாகிய இன்பத்துப் பாலாகும். இப்பகுதியில் வள்ளுவர் தமிழர்க்குரிய ஐந்திணை நெறிநின்று களவு, கற்பு என்னும் இருவகை ஒழுக்கங்களையும் இனிய எளிய குறளாகக் கொடுத்துள்ளார். அறம் பொருளில் ஞாலத்து நூல்களைக் கருத்தில் கொண்ட வள்ளுவர் இன்பத்தில் தாயகத்து தமிழ் மரபுகளை மட்டுமே கருத்தில் கொண்டு கொடுத்துள்ளார்.

தமிழ் மரபின் தகவு காக்கும் திணை, துறை அடிப்படையில் பண்பட்ட காதலறக் கொள்கைகளைத் தமக்கே உரிய தனிமுறையில் கற்பனையும், உணர்ச்சியும், சிந்தனையும் மிக்க சொல்லோவியங்களாக வாழ்வியல் நடப்பை நாடகமாகக் காட்டுகிறார். பரத்தையர் இல்லாத, மருதத்திணைப் பாடல் இல்லாத, இலக்கியம் இல்லை என்ற சங்க காலத்தில், மருதத்திணையைப் பாடுங்கால் பரத்தமை ஒழுக்கத்தைச் சுட்டாது ஊடற் களங்களை உணர்ச்சியும் சுவையும் ஒரு சிறிதும் குறையாது மலரினும் மென்மையாகக் காட்டுகிறார். வள்ளுவரின்

இன்பத்துப் பாலிற்கு இணையாக உலகில் எப்பாலும் தோன்றவில்லை எனலாம். காதலரின் வாழ்வில் ஊடலுக்கு உள்ள சிறப்பிடத்தை உணர்த்திய வள்ளுவர் பரத்தையர் பிரிவு இல்லாமலே புதுமுறையில் தலைவி ஐயப்படுவதாக, ஊடலுக்காக நண்ணேன் பரத்தநின்மார்பு எனக் கூறுவதாகக் கூறுகிறார். பரத்தமைக்குச் சாவுமணி அடித்த வள்ளுவர் வரைவின் மகளிர் என்ற அதிகாரத்தை அறம் இன்பத்தில் வைக்காது, அரசியல், பொருளியல், சமுதாயவியல் பேசும் பொருட்பாலில் வைத்து பரத்தமையை அகற்றுவது ஆணின் கடமை மட்டுமன்று சமுதாயத்தின், அரசின் கடமையுமாகும் எனக் காட்டுகிறார். அறத்துப்பாலில் கற்பு வாழ்வின் அறங்களை வாழ்வியல் சட்டங்களாக வரையறுத்துக் காட்டியவர் இன்பத்துப்பால் முழுவதும் இல்லற வாழ்வினுக்கு முன்னோடியான இதயங்கள் ஒன்றுபடும் காதல் வாழ்வினைக் கவிதை வாழ்வாகக் காட்டுகிறார். முன்னது அறக்காட்சி, பின்னது அன்புகாட்சி, அறத்துப்பாலில் கற்றதனால் ஆயபயன் என இறைமைத் தத்துவம் உணர்த்தி, பொருட்பாலில் எண் என்ப ஏனை எழுத்தென்ப, கேடில் விழுச்செல்வம் கல்வி என்ற கல்விப் பண்பாட்டின்வழி அறிவுவழி வாழ்க்கைத் தத்துவம் உணர்த்தி, இன்பத்துப்பாலில் அறிதொறும் அறியாமை கண்டற்றால் என அறிவுவழிக் காதல் தத்துவத்தை உணர்த்துகிறார்.

**முடிவுரை**

அருளைச் சேர்த்து இருளை நீக்க குறள் விளக்கு கொடுத்த வள்ளுவர், மனிதனை மனிதனாக்கும் கல்வி, சமுதாயக் கல்வி, இல்லற துறவறக் கல்வி, அரசியல் கல்வி, அமைச்சு, ஒற்று, நட்பு என அனைத்தும் உளவியல் நாட்டு நலக்கல்வி அனைத்தையும் கற்பித்து, வாழ்வின் சிக்கல்களைத் தீர்க்க வழியும் காட்டுகிறார். அறம் எதுவென அறிதியிட்டுக் கூறினார். இல்வாழ்க்கையின் இனிய பயனையும், எப்படியிருந்தால் துறவறம் சிறப்புடையது என்பதனையும் வாழ்க்கையில் கொள்ளுவன தள்ளுவன எவை எவை எனப் பகுத்துக்காட்டியும், முடியரசு ஆட்சி நடந்த காலத்திற்குச் சொல்லப்பட்ட அறிவுரைகள் குடியரசு ஆட்சி நடத்தும் நாடுகளுக்கும் பொருந்துமெனக் கூறுமளவிற்கு அரசியல் கோட்பாடுகளை வகுத்தளித்தும் உயிரினத்தின் இயற்கை உணர்வான இன்ப உணர்வினையும் அன்பினை அடிப்படையாகக் கொண்ட இலக்கண இலக்கிய கவசம் அணிவித்து எப்பாலினும் சிறந்த முப்பாலினைப் பொழிந்து அதில் தேன் தமிழும் கலந்து நம் இதயத்தின் வாயிதழ் திறந்து குறள் அமிழ்தமாக ஊட்டுகிறார்.

# திருக்குறள் காட்டும் நிருவாகத்திறன்

த.கருணைச்சாமி

**முன்னுரை**

திருவள்ளுவர் தாம் வாழ்ந்த காலத்துக்கு முன்பு வாழ்ந்த உலக மக்களைப் பற்றியும், தம்காலத்து வாழ்ந்த மக்களைப் பற்றியும், இனிவரும் காலத்து மக்களைப் பற்றியும் சிந்தித்தார். அதனாலேயே அவருடைய நூல் காலத்தைக் கடந்து நிற்கும் பேறும் வீறும் பெற்று 'இறவா இலக்கியம்' என்னும் பெயரோடு நிலைத்து நிற்கிறது.

திருவள்ளுவர் அரசியல், ஆட்சியியல், அருளியல், பொருளியல், கல்வியியல், கலையியல், அறிவியல், சட்டவியல், மருத்துவ இயல் போன்ற அனைத்து இயல் கருத்துகளை அறிந்து தெளிந்து திருக்குறளைப் படைத்தார். அதனால்தான்,

**எல்லாப் பொருளும் இதன்பால்உள இதன்பால்**
**இல்லாத எப்பொருளும் இல்லையால்**

என்று உரைத்தார் மதுரை இளநாகனார்.

திருக்குறளின் அகன்ற அறிவுக் கடலில் நிர்வாக இயந்திரம் தேயாமல் இருக்க உகந்த வழிமுறைகளை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே அறிவுறுத்தியுள்ளார். நிர்வாகத்துறையின் ஒவ்வொரு பகுதியிலும் வெற்றிகரமாக வினை முடிக்க அவர் கூறியுள்ள ஆலோசனைகளை இனி ஆய்வோம்.

**எடுத்த தொழிலை வெற்றிகரமாக முடிக்க**

நவீன நிர்வாகப் பராமரிப்பு (Modern Maintenance Management) முறையில், திட்டம் உருவாக்கி நுணுகி ஆயும் நயமுறை (Programme Evolution and review Technique) ஒன்று உண்டு.

அதில் வேலை ஆரம்பிக்கும் நாள் ஒரு சிறிய வட்டத்தில் குறிக்கப்பட்டிருக்கும். அதிலிருந்து பல கோடுகள் பிரிந்து செல்லும். ஒவ்வொரு கோடும் ஒவ்வொரு துறையைக் குறிக்கும்.

எடுத்துக்காட்டாக ஒரு தொழிற்சாலை உருவாக்கத் திட்டமிட்டால் ஒரு கோடு கட்டிட வேலையைக் காட்டும், மற்றொன்று மின்சாரத்துறை வேலையைச் சுட்டும். பிரிதொன்று பொறியமைப்பு வேலையைக் காட்டும். இவ்வாறாக எத்தனை துறைகள் உள்ளனவோ அத்தனை கோடுகள் இருக்கும். அத்துறைக் கோட்டின் முடிவிலும் வட்டங்கள் இருக்கும். அதில் ஒவ்வொன்றிலிருந்தும் உட்பிரிவு வேலைகளுக்குக் கோடுகள் பிரிந்து செல்லும். அவற்றில் ஒவ்வொரு கோடும் உருவாக்கப் பணிக்குத் தேவையான பொருள்கள், கருவிகள், ஆள்தேவை அதற்குத் தேவையான காலம் முதலியன குறிக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு கோட்டின் நீளமும் அந்தந்தப் பணி நிறைவேற வேண்டிய நாட்களைக் குறிக்கும். முடிவில் எல்லாக் கோடுகளும் ஒரு வட்டத்தில் வந்து சேரும். அதாவது எல்லாரும் தத்தம் பணிகளை முடித்துத் தொழில் தொடங்கும் நாளைக் கடைசி வட்டம் குறிக்கும். இதனை வள்ளுவர் அழகாக,

**இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து**
**அதனை அவன்கண் விடல் (குறள் 517)**

என்றும்,

**கருவியும் காலமும் செய்கையும் செய்யும்**
**அருவினையும் மாண்டது அமைச்சு (குறள் 631)**

என்றும் கூறியுள்ளார். ஒரு தொழிலை நிறைவேற்றத் தகுதியான துறைகள், கருவிகள், முடிக்கும் காலம் இவற்றை ஆராய்ந்து செயல்பட வேண்டும் என்று அன்றே கூறியுள்ளார்.

**பணியாளர்களைத் தேர்வு செய்தல்**

பணியாளர்களைத் தேர்வு செய்யும்போது ஏதேனும் ஊழல் நிகழுமானால் அது நிர்வாகத்தில் பணிகளையே பெரிதும் பாதித்து நீண்ட காலக் கேடாக அமைந்துவிடும் என்று ஆய்ந்து

**தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை**
**தீரா இடும்பை தரும் (குறள் 508)**

ஆராய்ந்து பார்க்காமல் குறிப்பிட்ட ஒரு பணிக்குத் தகுதியில்லாத ஒருவனை நியமித்தால் அது தொடர்ந்து வரும் நிர்வாகப் பொறுப்பாளர்களுக்குத் துன்பம் தருவதாக அமையும் என்கிறார்.

அடுத்து ஒரு குறிப்பிட்ட பணிக்கு ஒருவரைத் தேர்வு செய்யும்போது தமக்கு வேண்டிய உறவினர் அல்லது தாம் அன்பு

செலுத்தும் ஒருவர் அடிப்படைத் தகுதிகளே இல்லாது இருப்பினும் அவரைப் பணியில் சேர்க்க விழைவது முறையற்றது என்கிறார்.

**காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்**
**பேதமை எல்லாம் தரும் (குறள் 507)**

*பணிப் பங்கீடு*

ஒரு மேலதிகாரி எவ்வளவுதான் திறமையுடையவர் என்றாலும் தாமே எல்லாப் பணிகளையும் செய்து விட முடியாது. அவருடைய உண்மையான திறமை என்பது திறமையுடையவர்களைத் தேர்ந்து பணிகளைப் பங்கிட்டு வழங்கி வழி நடத்தி அப்பணிகளைச் செய்து முடிப்பதுதான். இதைத்தான்,

**வினையால் வினையாக்கிக் கோடல் (குறள் 678)**

என்கிறார்.

ஒரு பணியை வெற்றிகரமாக முடிக்கப் பணிப் பங்கீடு செய்யுமுன் பின்வருவனவற்றை ஆராய்ந்து அறிந்து தெளிதல் வேண்டும் என்கிறார்.

1. நன்மை தீமைகளை அறிந்து தீமை தருவனவற்றைத் தவிர்த்து நன்மை உண்டாகும் வழியில் பணியாளர் செயற்பட்டிருக்கும் செயற்பாட்டுத் திறம்.

**நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த**
**தன்மையான் ஆளப் படும் (குறள் 511)**

2. வருமானம் வரும் வழிகள்ளைப் பலவாக்கி, வருமானத்தைப் பெருக்கி வரவையும் இழப்பையும் அவ்வப்போது எண்ணிப் பார்த்தும் செயலாற்றும் பொறுப்புணர்வு.

**வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை**
**ஆராய்வான் செய்க வினை (குறள் 512)**

3. அன்பு, அறிவு, தெளிவு, ஆசையின்மை ஆகிய பண்பு நலன்கள் உடைமை.

**அன்புஅறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு (குறள் 513)**

மேலும் ஒருவர் ஒரு குறிப்பிட்ட துறையில் செயற்கரிய செயல்களைச் செய்து பரிசுகள், விருதுகள், பாராட்டுகள் போன்ற சிறப்புகளைப் பெற்றிருக்கலாம். அவருக்குச் சம்பந்தமில்லாத பிறபணிகளைச் செய்யுமாறு கட்டாயப்படுத்தலாகாது.

**அறிந்தாற்றிச் செய்கிற்பார்க்கு அல்லால் வினைதான்**
**சிறந்தான்என்று ஏவற்பாற்று அன்று (குறள் 515)**

"ஒரு வேலையில் ஒருவருக்கு நம்பிக்கையில்லாதபோது அதைச் செய்தே ஆகவேண்டும் என்று அவரைக் கட்டாயப்படுத்தினால் தோல்வியே கிடைக்கும்" என்கிறார் லியூக்ஹோமன் தன்னுடைய "ஸாஃப்ட்வேர் கலைகளுக்கப்பால்" என்னும் நூலில்.

மேலும் வேலை தொடர்பான வழிகாட்டுதலைச் செய்வதோடு அப்பணி தொடர்பான கூடுதல் அறிவைப் பெறுவதற்கும் அவனுக்கு உண்மையான உணர்வோடு வழிகாட்டுதல் வேண்டும். இப்பொழுது பெருந் தொழிற்சாலைகளில் எல்லாப் பயிற்சி நடுவணம் (Training Centre) வைத்துப் பயிற்சியளிக்கிறார்கள். சிறப்பு தேர்ச்சி பெற வெளிநாடுகளுக்கும் அனுப்புகிறார்கள். இதனை (Motivation) என்பர்.

**வினைக்குரிமை நாடிய பின்றை அவனை**
**அதற்குரியன் ஆகச் செயல் (குறள் 518)**

மேலும் ஒருவன்மீது கொண்ட வெறுப்பின் காரணமாகச் செய்யும் தொழிலைச் சிரத்தையாகச் செய்யும் ஒருவனைத் தவறாக எண்ணக்கூடாது. அப்படி நினைத்தால் ஒரு பொருளாதாரக் கேட்டை உண்டாக்கும்.

**வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக**
**நினைப்பானை நீங்கும் திரு (குறள் 519)**

பிரட்ரிக் டெய்லர் என்பவர் அறிவியல் பூர்வமான மேலாண்மை தத்துவத்தின் தந்தை எனப்படுவார். அவர் கண்டுபிடித்த உண்மை 'பணியாளர்கள் பொதுவாகச் சோம்பேறியாகவும், மந்தமாகவும் இருப்பார்கள். அவர்களுக்குச் செயல் ஊக்கமளிக்க (Motivation) தகுந்த உழைப்புக்குரிய ஊதிய உயர்வையும் அதன்மூலம் அவர்கள் திறமையையும் வளர்க்கப் பொறுப்பில் இருப்பவர்கள் முனைய வேண்டும். அப்போதுதான் நிர்வாக இயந்திரத்துக்குப் புதுமெருகு ஏற்படும்' என்பதுதான்.

கௌடில்யரும் (சாணக்கியரும்) அதைத்தான் சொல்கிறார்- 'அரசன் பணியாளர்களுடைய சரீர, இல்லற வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள், வாய்ப்புகள் ஆறுதல் இவற்றை நல்கினால் அவர்களுக்குத் திறமையாகப் பணியாற்ற உந்துதல் வரும்'.

பணியாளர்களை மகிழ்ச்சிப்படுத்துதல் (Keeping them in good humour) ஒரு தனிக்கலை என்றே கூறலாம்.

"முதலில் உங்கள் குழுவை வளர்த்தெடுங்கள். பிறகு உங்கள் கோரிக்கையைத் திட்டப்படுத்துங்கள். அப்பொழுது நீங்கள் இன்னும் சிறந்தவற்றைக் கேட்டுப் பெற முடியும்" என்கிறார் ரிச்சர்ட் டெம்ளர் தனது நிர்வாக விதிகள் என்னும் நூலில்.

**அலுவலகப் பொருட்களைப் பாதுகாத்தல்**

மேலும் பொருளோ ஆவணமோ திருட்டுப் போகாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதை,

**எனைத்து ஒன்றும் கள்ளாமை காக்க (குறள் 281)**

என்கிறார்.

**நிர்வாகியின் சொல்வன்மை**

நிர்வாகி சொல்லும் ஒரு சொல்லை வேறொரு சொல் வெல்லாதிருக்கும்படி அதன் திறத்தை அறிந்து சொல்ல வேண்டும். அதனை வள்ளுவர்,

**சொல்லுக சொல்லைப் பிறிதொரு சொல் அச்சொல்லை**
**வெல்லும்சொல் இன்மை அறிந்து (குறள் 645)**

அப்படியிருந்தால்தான் போட்டியிடுவோர்களை வெல்ல இயலும்.

**நடுநிலை மேலாளர்**

"நீங்கள் ஒரு நடுநிலை மேலாளர் எனில் உங்கள் பேச்சும் செயலும் நீங்கள் ஒரு மூத்த மேலாளர் என்பதைப்போல இருக்க வேண்டும்" என்கிறார் ரிச்சர்ட் டெம்ளர். இதையே வள்ளுவர்,

**சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்துஒருபால்**
**கோடாமை சான்றோர்க்கு அணி (குறள் 118)**

என்கிறார்.

**ஆள்வினை உடைமை**

எடுத்த காரியத்தை முடிப்பதில் இது கடினமானது என்று எண்ணிச் சோர்வுறாமல் இருக்க வேண்டும். அதைச் செய்வதற்கு உரிய சக்தியை முயற்சி உண்டாக்கும். இதனைத் திருவள்ளுவர்,

**அருமை உடைத்தென்று அசவாமை வேண்டும்**
**பெருமை முயற்சி தரும். (குறள் 611)**

**சூழ்ச்சிகள்: (Strategies)**

ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையைச் சந்திக்க உருவாக்கப்படும் கொள்கை அல்லது திட்டம் சூழ்ச்சி எனப்படுகிறது. இதை ஒரு கொள்கை நுணுக்கம் என்றும் கூறலாம். போர்ப்படைகள் எதிரிகளை முறியடிப்பதற்கு அவர்களுடைய அணுகுமுறையை அறிந்து கொண்டு அதற்கேற்பச் சூழ்ச்சிகளைக் கையாளுவது வழக்கம். இதேபோல் கடும்போட்டி நிலவும் சூழ்நிலையில் போட்டியாளர்களின் அணுகுமுறையை அறிந்து கொண்டு அவர்களை முறியடிக்கும் வண்ணம் தொழில் வல்லுநர்கள் தங்களுடைய கொள்கைகளையும் திட்டங்களையும் மாற்றி அமைத்துக் கொண்டு செயல்படுகின்றன. இதனை வள்ளுவர்,

**ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்**
**தாக்கற்குப் பேரும் தகைத்து (குறள் 486)**

என்றார். அதாவது ஊக்கம் உடையவன் காலத்தை எதிர்பார்த்து அடங்கியிருத்தல் போர் செய்யும் ஆட்டுக்கடா தன்பகையைத் தாக்குவதற்காகப் பின்னே கால்வாங்குவதைப் போன்றது என்பதாம்.

**வாய்மை**

ரிச்சர்ட் டெம்ளர் தனது நூலில் கூறுகிறார். “உங்கள் வர்டிக்கையாளர்களிடம் பொய் பேசாதீர்கள். அவர்களை ஏமாற்றாதீர்கள். அவர்கள் உங்களுக்குத் தேவை. அவர்கள் கொடுக்கும் பணத்துக்கு உரிய மரியாதையை நாம் கொடுக்க வேண்டும். நாம் செய்யும் சேவைக்கு உரிய மரியாதையை அவர்கள் செய்வார்கள்” என்கிறார். இதனையே வள்ளுவர்,

**பொய்யாமை அன்ன புகழ்இல்லை; எய்யாமை**
**எல்லா அறமும் தரும் (குறள் 296)**

என்கிறார்.

மேலும் வினைத் தூய்மை என்னும் அதிகாரத்தில்,

**ஓதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை**
**ஆஅதும் என்னு மவர் (குறள் 653)**

என்கிறார். அதாவது மேல்நிலையை அடைய வேண்டுமானால் தமதுபுகழ் கெடுவதற்கான செயல்களைச் செய்யக்கூடாது.

**தண்டனை கொடுத்தல்**

தம்கீழ் வேலை செய்பவர்கள் தவறு செய்தால் அளவு கடந்து தண்டனை தருவது போல் காட்டி இறுதியில் அளவு

மீறாமல் முறை செய்ய வேண்டும். ஏனெனில் பணி செய்பவர்களுக்கு ஏற்கனவே பயிற்சி முதலானவற்றிற்கு நிறையச் செலவு செய்திருக்கலாம். நல்ல திறமையான பணியாளராக அவர் வளர்ந்திருக்கலாம். கொடுந்தண்டனை கொடுப்பதன் மூலம் அவற்றையெல்லாம் இழந்து விடக் கூடாது. இதனை வள்ளுவர்,

**கடிதோச்சி மெல்ல எறிக; நெடிதுஆக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்** **(குறள் 562)**

என்கிறார்.

**முடிவுரை**

இவ்வாறு வள்ளுவப் பெருந்தகை நிர்வாக இயலைப் பற்றி அமைச்சு, ஆள் வினையுடைமை, இடன் அறிதல், காலம் அறிதல், குறிப்பு அறிதல், குற்றம் கடிதல், கொடுங்கோன்மை, தெரிந்து செயல் வகை, தெரிந்து தெளிதல், தெரிந்து விளையாடல், பகை மாட்சி, பொருள் செயல் வகை, மடி இன்மை, வலியறிதல், வாய்மை, வினை செயல் வகை வினைத்திட்பம், வினைத்தூய்மை, வெகுளாமை, வெகு வந்த செய்யாமை ஆகிய பல அதிகாரங்களில் ஆங்காங்கே கூறியுள்ளார்.

இவ்வாறு நிர்வாக இயலைப் பற்றித்தான், வள்ளுவப் பெருந்தகை நிறையக் கூறியுள்ளார்.

# திருக்குறள் காட்டும் அன்புடைமை

**தகடூர் தமிழ்க்கதிர்**

**முன்னுரை**

திருவள்ளுவர். பழுத்த அனுபவங்களாலும் பண்புநல மிகுதியாலும் உலகிலுள்ள அனைத்து பொருள்களையும் ஆராய்ந்து அவற்றைப் பாரறிய பாடலாக வடித்துத் தந்திருக்கிறார். சுருக்கமான 'குறள்' எனும் யாப்பு வடிவில் சுருங்காத நீதியையும் சீர்மிகு பொருளையும் ஏற்றம் விளங்க நாட்டி இனிய இன்பத்தையும் ஏற்புறும் வகையில் தந்த அறிஞர் திருவள்ளுவர். அவர் வழங்கிய உடைமைகளாக திருக்குறளில் பத்து உடைமைகள் இடம் பெற்றுள்ளன. அவை. 1. அன்புடைமை, 2. அடக்கமுடைமை, 3. ஒழுக்கமுடைமை, 4. பொறையுடைமை, 5. அருளுடைமை, 6. அறிவுடைமை, 7. ஊக்கமுடைமை, 8. ஆள்வினையுடைமை, 9. பண்புடைமை, 10. நாணுடைமை என வரிசைக் கொள்கின்றன. வள்ளுவர் உள்ளத்தில் முதலாவதாக இடம் பெற்ற அன்புடைமையைப் பற்றி இனி ஆராய்வோம்.

**2. வளர்ச்சி**

**அ) 'அன்பு' என்பது என்ன?**

குடும்பம், நாடு, உலகம் என வாழ்வாங்கு வாழ நம்மிடையே உருவாகும் பற்றே அன்பு எனலாம். இது உயிரினங்கள் யாவற்றிடையேயும் நிலைக்கும் ஒரு பண்பே எனலாம். சுருக்கமாகக் கூறினால் உயிருடன் உயிராக உயிர்ப்பெற்ற ஒரு நெகிழ்வே அன்பு ஆகும்.

**ஆ) அன்பின் பெருமை**

அன்பால் 'குடும்பம்' என்ற ஓரமைப்பு சமுதாயத்தில் என்றும் உருவாகிக் கொண்டேயிருக்கிறது. ஒருவரை ஒருவர் காக்கவும், வளர்க்கவும், போற்றவும் வழிவகைச் செய்கிறது. சுயநலம் எனும் மனநோயை வெல்கிறது. அன்பால் ஒருவர்

தம் உயிரையும் மற்றொருவருக்காக இழக்கவும் துணியச் செய்துவிடுகிறது. உலகின் அச்சாணி எது என்றால் அன்பு எனும் பண்பே என்று துணிந்து கூறிவிடலாம்.

**இ) திருக்குறளில் அன்பு**

திருக்குறளை அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என மூன்றாகப் பிரித்து வழங்கியுள்ளார். அதில் முதலாவதாக இடம்பெற்ற அறத்துப் பாலில் முதலாவது உடைமையாக அன்புடைமை இடம் பெற்றுள்ளது. அறத்தை முதலில் வலியுறுத்தும் வள்ளுவர் வாழ்க்கையைப் பற்றிப் பேசுகிறார். அந்த வாழ்க்கைக்கு முதலாவதாக வேண்டுவது அன்பு என்று அன்பை முதலில் வைத்துள்ளார் திருவள்ளுவர்.

**ஈ) வள்ளுவர் காட்டும் அன்பு**

திருவள்ளுவர் தன்குடும்பத்தின்மீது அன்பு கொண்டவர் நாட்டின் மீதும் அன்பு கொண்டவர். இந்த உலகின் மீதும் அன்பு கொண்டவர். எனவேதான் திருக்குறளை இந்த உலகம் சிறப்புற்று வாழ தனது அன்பின் கொடையாக வழங்கியுள்ளார். திருவள்ளுவர் அறத்தைப் பாடியபின் இல்வாழ்க்கைப் பகுதியில் கீழ்க்கண்டவாறு அவர் அன்பைக் குறிப்பிடுகிறார்.

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது (குறள் 45)**

என்கிறார்.

அன்பையும் அறத்தையும் உடையதாக இல்வாழ்க்கை அமைந்தால் அது பண்பையும் பயனையும் வழங்கும் என்கிறார். அதாவது அன்பு என்பதை பண்பாகக் குறிப்பிடுகிறார். அறத்தைப் பயனாக குறிப்பிடுகிறார். அறத்தோடு வாழ்ந்தால் நல்ல பயனும் உண்டாகும். அறம் தவறினால் தீமையே உண்டாகும் என்கிறார். பண்பட்ட ஒரு பற்றே அன்பு என்பது இதனால் விளங்கும்.

**3. உச்சம்**

**அன்புடைமை அதிகாரம்**

அதிகாரத்திற்கு பத்துபாடலென விளங்கும் திருக்குறள் அன்புடைமை அதிகாரத்தில் பத்து குறளை உடையதாக விளங்குகிறது. இந்த அதிகாரத்தில் அன்பை நான்கு பகுப்பாகப் பகுத்து ஆராயலாம். முதலிரண்டு குறள்கள் அறிமுகமாக அன்புடையவர்களைக் காட்டும் குறளாக விளங்குகிறது. அடுத்து

நான்கு குறள்கள் அன்பை விளக்கும் அருங்குறள்களாக விளங்குகிறது. அடுத்த மூன்று குறள்கள் அன்பின் அவசியத்தை உணர்த்துகிறது. கடைசி குறள் மட்டும் முடிவுரைப்பதுபோல் அமைந்து அன்பின் அனைத்து நிலைகளுக்கும் முத்தாய்ப்பாக விளங்குகிறது. இனி ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

**அன்பு ஓர் அறிமுகம்**

திருவள்ளுவரால் அன்பு அறிமுகப்படுத்தப்படுவது போலவும் உலகில் அன்புடையவரைக் காணும் அளவுகோலாகவும் முதலிரண்டு குறள் விளங்குகிறது.

**அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ்? ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும் (குறள் 71)**

மேற்கண்ட குறள் கூறுவது அன்பை மறைத்து வைக்க முயன்றாலும் அவை அடைபடாது. சிறு கண்ணீர் மூலம் அது வெளிக்காட்டி விடும் என விளக்குகிறது. இது அன்புடையாரின் செயல்களாக வள்ளுவர் கூறுவதை அறியலாம்.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு (குறள் 72)**

அன்பிலாத யாவரும் தமக்குமட்டும் உரியவராக வாழ்ந்துவிடுவர். ஆனால் அன்புடையார் உலகில் உள்ள யாவருக்கும் உரியவராக புகழ்பெற்று வாழ்வர். அவர்தமக்கு உரியர் ஆகார் உலகிற்கே உரியர் ஆவார் என அறிமுகப்படுத்திக் கூறுவதாகவும் அளவிட்டு உரைப்பதுவுமாகவும் விளங்குகிறது.

**அன்பு ஒரு விளக்கம்**

மேற்கண்ட இரண்டு குறளுக்கு அடுத்தப்படியாக நான்கு குறள்கள் அன்பைப் பற்றி விளக்குவதாக அமைந்திருப்பதைக் காணலாம்.

**அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு**
**என்போ டியைந்த தொடர்பு (குறள் 73)**

உடலும் உயிரும் இணைந்து நின்றால்தான் அவை வாழும், அதைப்போல் வாழ்க்கை என்பது அன்போடு இணைந்திருத்தலே ஆகும் என்கிறார் வள்ளுவர்.

**அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்**
**நண்பென்னும் நாடாச் சிறப்பு (குறள் 74)**

அன்பினால் பெருவிருப்பமும் அவ்விருப்பத்தினால் நல்ல நட்பு எனும் சிறப்பும் கிடைக்கும் என்கிறார்.

**அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து**
**இன்புற்றார் எய்துஞ் சிறப்பு (குறள் 75)**

இன்பத்துடன் வாழ்கின்றவர் சிறப்பே உலகில் அன்பு கொண்டு வாழ்பவர் சிறப்பு எனலாம் என்கிறார்.

**அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை (குறள் 76)**

அன்பினால் அறம் தழைக்கும் என்பது போல் வீரமும் தழைக்கும் என்கிறார் திருவள்ளுவர். மேற்கண்ட நான்கு குறள்களிலுமே அன்பின் சிறப்பை விளக்குவதாகவே திருவள்ளுவர் குறள் அமைகிறது.

**அன்பின் அவசியம்**

அன்பை அறிமுகப்படுத்தி மேலும் விளக்கி அமர்ந்த வள்ளுவர் அன்பின் அவசியத்தை அடுத்ததாக உள்ள மூன்று குறள்களில் செம்மையாக உணர்த்துகிறார். இனி அவற்றைக் காண்போம்.

**என்பி லதனை வெயில்போலக் காயுமே**
**அன்பி லதனை அறம் (குறள் 77)**

எலும்பில்லாத புழு வெயிலில் துன்புற்று அழிவதைப்போல அன்பிலாதவர்களை அறமானது தீய்த்துவிடும் என அன்பின் அவசியத்தை வலியுறுத்துகிறது. மேலும்.

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று (குறள் 78)**

அன்பில்லாதவர் வாழ்க்கை கொடிய பாலைவனத்தில் பட்டமரம் தளிர்ப்பது போன்றதாகும் என அன்பின் சிறப்பை வலியுறுத்துகிறார் மேலும்.

**புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை**
**அகத்துறுப்பு அன்பி லவர்க்கு (குறள் 79)**

இதயம் போன்ற உள்ளன்பு இல்லார்க்கு வெளிப்புறத்தே அமைந்த வெளியுறுப்புகளால் என்ன செய்ய முடியும், அவை செயலிழந்துவிடும் அல்லவா? அதைப்போல உள்ளன்பு அவசியம் என வலியுறுத்துகிறார் திருவள்ளுவர். இவ்வாறு

திருவள்ளுவரால் அன்பு மேற்கண்ட மூன்று குறள்களிலும் வலியுறுத்தப்படுகிறது.

**அன்பே முடிவு**

திருவள்ளுவர் பத்து குறள்களிலும் கூறும் கருத்தைத் தொகுத்து கூறும் குறளாக முடிவாகத் தீர்வாக அமையும் குறளே ஈற்றில் உள்ள குறள் என்று கருதமுடிகிறது. அக்குறளைக் காண்போம்.

**அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு (குறள் 80)**

மேற்கண்ட குறள்மூலம் கூறுவது யாதெனின் அன்பே உயிர்நிலை எனவும், அஃதிலார் பிணமே என்றும், நடமாடினாலும் இறந்ததற்குச் சமமே எனப்பொருள் அமைவதாகப் பாடியுள்ளார். இதையே முடிவாக ஏற்கலாம்.

**4. வீழ்ச்சி**

அன்பு என்பது ஓர் உணர்ச்சி எனலாம். அவ்வுணர்ச்சியை இரக்கம் என்றும் கூறலாம். அன்பை நெகிழ்ச்சி எனலாம். அன்பு பாசம், பரிவு, ஊக்கம் என பல நிலைகளில் கண்டாலும் அதன் பயன்மேலும் பல கோணங்களில் பரிமளிக்கவே செய்கிறது. ஒருவர்மீது செலுத்தும் அன்பு நல்ல நட்பை வழங்குகிறது. மற்றவர்மீது செலுத்தும் அன்பு அவர்களை உயர்த்துவதுபோல அன்பு செலுத்தும் தம்மையும் உயர்த்தி விடுகிறது. மனநிறைவு, பெருமை, முன்னேற்றம் என்ற யாவினுக்கும் அடிப்படை அன்பே ஆகும். எனவே வள்ளுவர் தமதுகருத்தை அறிமுகப்படுத்தியும் விளக்கியும் அவசியத்தைச் சுட்டிக் கூறியும் தீர்வாக முடிவு சொல்லி அமைத்ததிலிருந்து விடுபட்ட கருத்தும் இல்லை. விளக்க இயலா கருத்தும் இல்லை. அவர் கருத்தை ஏற்காத மக்களுக்குத்தான் வீழ்ச்சி என்பதைப் படிப்பவர்க்குப் புலனாகும் வண்ணம் மேற்கண்ட குறள்கள் அமைந்துள்ளன.

**5. முடிவு**

திருக்குறள் ஓர் அறநூல் மட்டுமன்று, அது அறிவியல் நூலும் ஆகும். அறிவியல் அறிஞர்கள் வளர உயர மூளையைப் பண்படுத்தும் அரிய நூலாகவும் திருக்குறள் விளங்குவதைப் போற்றலாம்.

# வள்ளுவர் குறளில் அறிவியல் சிந்தனைகள்

வெ.காப்புசாமி

**முன்னுரை**

மழை என்னும் இயற்கை நிகழ்வைப் பலவாறு சிறப்பித்தும் அது இல்லை என்றால் ஏற்படும் கேட்டினையும் வான் சிறப்பு என்னும் அதிகாரத்தில் விளக்கியுள்ளார் வள்ளுவர். அத்தனை குறளுக்கும் முத்தாய்ப்பாக ஏழாவது குறளில் இயல்பாய் நடக்கும் அறிவியல் நிகழ்ச்சியைக் கூறியுள்ளது வள்ளுவர் அறிவியல் முன்னோடி என்பதை விளக்குகிறது.

**நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி**
**தான்நல்கா தாகி விடின் (குறள் 17)**

பொருள்: கடலில் உள்ள நீர் ஆவியாகி மேகமாக உருவாக்கப்பட்டு மீண்டும் மழையாகப் பொய்யாவிட்டால் நீண்ட கடலுங்கூடத் தன்வளம் குறைந்துபோகும். இங்கேதான் பெற்ற நீரை மீண்டும் தன்இடத்தே வழங்குதல் என்பது, ஒருவர் தான் பெற்ற கல்வியை தன்சமுதாயத்திற்கே வழங்க வேண்டும். அப்படி இல்லை என்றால் சமுதாய வளர்ச்சி இல்லை. இக்கருத்தை விளக்க வந்த வள்ளுவர் மழை பொழியும் நிகழ்ச்சி மற்றும் அது கடலில் செல்லவில்லை என்றால் ஏற்படும் குறை ஆகியவை மூலம் விளக்கியிருப்பது அறிவியல் நிகழ்ச்சியாகும். தன் நீர்மை குன்றும் என்றால் வறண்டு விடும் என்பதல்ல. கடலின் வளம் குறைந்து போகும் என்றுதான் பொருள். இன்றைய அறிவியல் உலகம் மழையைப் பற்றிக் கூறுவதாவது: மழை என்பது கடல்நீரை ஆவியாக்கி மேகமாக மேலே சென்று குளிர்ந்து மீண்டும் நீராக வருவதுதான். அந்த மழையே பெய்யாவிட்டால் அப்பெரிய கடலுங்கூடத் தன் வளமையில் குறைந்து போகும். மழைநீர் கடலில் செல்லாதபோது கடல் நீரின் அடர்த்தி அதிகரிக்கும். அதன் காரணமாகக் கடல்வாழ்

உயிரினங்கள் மற்றும் கடல் வாழ் தாவரங்கள் வளர்ச்சி குறைபடும். அடர்த்தி குறைந்த மழைநீர் அடர்த்தி அதிகமான கடல் நீரில் கலப்பதால் கடல் நீரின் அடர்த்தி சமன் செய்யப்படும்.

சாதாரண நீரை விட மனித உடலின் அடர்த்தி அதிகமாக உள்ளதால் சாதாரண நீரில் மனிதன் மூழ்கி விடுகிறான். அதுவே உப்புக்கடலில் மனிதன் மூழ்குவதில்லை. ஏனெனில் உப்புக்கடலின் அடர்த்தி சாதாரண நீரை விட ஏழு மடங்கு அதிகம். இவ்வாறு கடல் நீரின் தன்மை மாறுவதற்குக் காரணமே மழைநீர்தான். அதனால்தான் மழைநீர் கடலில் செல்லவில்லை என்றால் அதன் வளம் குன்றும் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. மழை எப்படி வருகிறது என்பதையும் அம் மழை இல்லை என்றால் கடல் வளம் குன்றும் என்பதையும் இக்குறள்மூலம் சுட்டிக் காட்டியுள்ளது ஓர் அறிவியல் கண்டுபிடிப்பு என்பது மிகையாகாது.

**குறிப்பு: தமிழ்நாட்டு பாடநூல் கழகம்**
**10ம் வகுப்பு அறிவியல் தமிழ் பக்கம்-42**

ஒழுக்கம் பற்றிப் பலவாறு சிறப்பித்தும் அது தவறினால் ஏற்படும் இழிந்த பிறப்பு, தீராத பழி, துன்பம் பற்றியும் ஒழுக்கம் உடைமை என்னும் அதிகாரத்தில் கூறியுள்ளார் வள்ளுவர். அத்தனை குறளுக்கும் முத்தாய்ப்பாக முதல் குறளில் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்னும் அறிவியல் நிகழ்ச்சியைக் கூறியுள்ளது வள்ளுவர் ஓர் அறிவியல் முன்னோடி என்பது விளங்குகிறது.

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும் (குறள் 131)**

பொருள்: ஒழுக்கம் என்பது மிகப்பெரிய சிறப்பினைத் தரக் கூடியது. அதனால் அதனை உயிரைவிடச் சிறந்ததாகக் கொண்டு வாழவேண் டும்.

ஒழுக்கம் இல்லாதவனிடம் யாரும் துணை சேரமாட்டார்கள். உயர் குடியில் பிறந்தாலும் இழிபிறப்பு ஏற்படும். உயர்வு இருக்காது. தீராத பழியும் துன்பமும் அடைவார்கள். தீயசொற்களைப் பேசுவார்கள். படித்திருந்தும் பண்பறிவில்லாதவராக நடப்பார்கள் எனப் பலவாறு கூறியுள்ள வள்ளுவர் எல்லாவற்றுக்கும் மேலாக முதல் குறளிலேயே ஒழுக்கம் தவறினால் உயிர் போகும் என்று கூறியுள்ளார்.

இன்றைய அறிவியல் உலகம் ஒழுக்கத் தவறைப் பற்றிக் கூறுவதாவது: ஒழுக்கம் தவறியவர்கட்கு 'எய்ட்ஸ்' என்கிற ஆட்கொல்லி நோய் ஏற்பட்டு உயிரைக் குடித்துவிடும் என்கிறது இன்றைய மருத்துவ அறிவியல். இந்நோய் 1981 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கண்டுபிடிக்கப்பட்டது. இந்நாள் வரையில் இந்நோயைக் குணப்படுத்தும் மருந்து கண்டுபிடிக்கப்படவில்லை. பரத்தையரிடம் செல்பவர்கள் பால்வினை நோயால் பாதிக்கப்படுவார்கள் என்பதை, "பிறனில் விழையாமை" அதிகாரத்தில் 149ஆவது குறளில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: அச்சம் தரும் நோய்க்குரிய நீரின் வைப்பிடமாக விளங்குகின்ற பிறர்க்கு உரியவளின் தோளைத் தழுவாதவர்களே நோயற்ற வாழ்வு வாழ்பவர்கள். மேலும், "வரைவின் மகளிர்" அதிகாரத்தில் 918ஆவது குறளில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: மயக்குவதில் சிறந்த பரத்தையரின் தழுவல், ஆராய்ந்த அறிவுத் தெளிவு இல்லாதவர்களுக்கு உயிர்க் கொல்லியாக அமையும்.

வேறு பல காரணங்களினாலும் எய்ட்ஸ் வரும் என்பது ஒழுக்கம் தவறியதனாலன்றி வேறல்ல என்பது நன்கு விளங்கும். ஒழுக்கம் தவறினால் உயிர் போகும் எய்ட்ஸ் நோய் வரும் என்கிற அறிவியல் உண்மையை ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என வள்ளுவர் கூறியிருப்பது எவ்வளவு பொருள் பொதிந்த அறிவியல் கண்டுபிடிப்பு என்பது நன்கு விளங்கும்.

**குறிப்பு: தமிழ்நாட்டு பாடநூல் கழகம்**
**+2 பயாலாஜி - சுவாலாஜி பக்கம் 104 - 119**

உயர்வு கருதி ஒழுக்கசீலர்போல் பல புறத்தோற்றங்களில் வாழும் மனிதர்களைக் கூடாஒழுக்கம் என்னும் அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர். அத்தனை குறள்களுக்கும் முத்தாய்ப்பாக முதல் குறளில் பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும் என்னும் அறிவியல் நிகழ்ச்சியைக் கூறியுள்ளது வள்ளுவர் ஓர் அறிவியல் முன்னோடி என்பதை விளக்குகிறது.

**வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்**
**ஐந்தும் அகத்தே நகும் (குறள் 271)**

பொருள்: வஞ்சக மனத்தினனது பொய்யான நடத்தையைக் கண்டு அவனுடம்பாக அமைந்து விளங்கும் ஐந்து பூதங்களும் தம்முள்ளே சிரித்துக் கொண்டிருக்கும்.

இன்றைய உலகம் மனித உடற்கூறு பற்றிக் கூறுவதாவது: கழுத்துக்கு கீழே அடி வயிறு வரை உள்ள முக்கியமான உறுப்புக்களாக 12 உறுப்புக்களை வகுத்துள்ளனர். அவையாவன:

இருதயம், சிறுகுடல், இருதய உறை மற்றும் மூவெப்ப மண்டலம் என்கிற நான்கு உறுப்புகளை நெருப்பு மண்டலமாக வகுத்துள்ளனர். இரைப்பை மற்றும் மண்ணீரல் என்கிற இரண்டு உறுப்புகளை நிலம் மண்டலமாக வகுத்துள்ளனர். பெருங்குடல் மற்றும் நுரையீரல் என்கிற இரண்டு உறுப்புகளை காற்று மண்டலமாக வகுத்துள்ளனர். சிறுநீர்ப்பை மற்றும் சிறுநீரகம் என்கிற இரண்டு உறுப்புகளை நீர் மண்டலமாக வகுத்துள்ளனர். பித்தப்பை மற்றும் கல்லீரல் என்கிற இரண்டு உறுப்புகளை ஆகாயம் மண்டலமாக வகுத்துள்ளனர். ஆக மொத்தம் பன்னிரண்டு உறுப்புகளும் பஞ்ச பூதங்களின் தொகுப்பில் உள்ளன. இவைகள் பஞ்ச பூதங்களின் வேலைகளைச் செய்கின்றன.

பஞ்சபூதங்களின் வரிசை என்பது ஆகாயம், நெருப்பு, நிலம், காற்று மற்றும் நீர் என்பதாகும். பஞ்ச பூதங்கள் எனப்படும் மூலகங்கள் ஒவ்வொன்றும் தனக்கே உரிய உறுப்புகள், தனக்கு நோய் வந்தால் வெளியில் காட்டக்கூடிய உறுப்புக்கள். நிறம், சுவை, உணர்ச்சி, மற்றும் திசுக்கள் ஆகியவற்றைக் கொண்டுள்ளன. எடுத்துக்காட்டிற்கு ஒன்றைப் பார்ப்போம். பஞ்ச பூதங்களில் ஒன்றான நீர் மூலகம் குறைபாடு என்றால் சிறுநீர்ப்பை மற்றும் சிறுநீரகம் உறுப்புகள் குறைபாட்டால் வெளிப்புற உறுப்பான காது காட்டிக் கொடுத்து விடும். நிறம் கருப்பு, சுவை உப்பு, உணர்ச்சி பயம், திசுக்கள், எலும்புகள், இப்படியாகப் பஞ்ச பூதங்கள் ஒவ்வொன்றுக்கும் குறிப்பிட்ட நிறம், சுவை, உணர்ச்சிகள் உள்ளன.

மீண்டும் வள்ளுவர் வகுத்த அறிவியல் குறளைப் பார்ப்போம். ஒழுக்கசீலரைப்போல் உலகத்தை ஏமாற்றும் வஞ்சகரைப் பார்த்து அவரது உடலில் கலந்துள்ள ஆகாயம், நெருப்பு, நிலம், காற்று, நீர் எனப்படும் பஞ்ச பூதங்களும் தமக்குள் சிரித்துக் கொள்ளும். இங்கே சிரித்துக் கொள்ளும் என்பது அவனுக்கு நோயைப் பரப்பியுள்ளது எனக் காண்க.

கூடாஒழுக்கம் என்பது ஒருவனுக்கு அவன் உள்ளே இருக்கும் ஐந்து பூதங்களே அதனதன் உறுப்புக்களுக்குரிய செயல்களை செய்து முடிக்கும் என்பது தெளிவாகிறது. அரிதினும் அரிதான இவ்வரிய அறிவியல் உண்மையை இரண்டு வரிகளில் எடுத்தியம்பிய வள்ளுவரின் அறிவியல் மதி நுட்பம் தமிழர்களுக்குக் கிடைத்த ஒரு புதைபொருள் ஆகும் என்பதில் வியப்பில்லை.

# வள்ளுவர் உணர்த்தும் கல்விச் சிந்தனைகள்

**புலவர் ச.ந.இளங்குமரன்**

**முன்னுரை**

உழன்று கொண்டிருக்கும் உலகில் வாழ்ந்து கொண்டிருக்கும் மாந்த இனம் உய்வுபெற இன்றியமையாத ஒன்று உண்டென்றால் அது கல்வியே என்பதற்கு மாற்றுக் கருத்தொன்றும் இருக்க முடியாது. முக்காலத்திற்கும் பொருந்தும் முப்பால் முதல்வனின் தத்துவக் கருத்துகள், சிந்தனை முத்துக்கள் எக்காலும் நிலைத்து நிற்கும் இயல்புடையவை. மங்காத, மாறாத புகழுடையவை என்பதை உணர்ந்தோர் உணர்வர். ஆய்ந்தோர் அறிவர்.

அவ்வகையில் வையம் புகழும் வள்ளுவப் பெருந்தகையின் வாய்மொழியாம் திருக்குறளின் வழிநின்று அவர் உணர்த்திய கல்விச் சிந்தனைகளை ஆய்வு செய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கல்வி**

மேலோட்டமாக அமையக் கூடியதா கல்வி? எளிதில் பெறக்கூடியதா கல்வி? என்றால் அப்படி அமையாது என்பது அதன் பெயரளவிலேயே விளங்கும்.

'கல்' என்னும் தோண்டுதல் பொருள் குறித்த வேர்ச்சொல்லின் அடிப்படையாகப் பிறந்த சொல் கல்வியாகும்.

ஊற்றைத் தோண்டி நீரைப் பெறுவதுபோல், பாறையைத் தோண்டி தங்கப்பாளத்தைப் பெறுவதுபோல் ஆய்ந்து அறிந்து தேடிக்கொள்வதே கல்வியாகும்.

நீர் எங்கே இருக்கிறது? ஊற்றிலேயே இருக்கிறது. நீர் ஏன் வெளிப்படவில்லை? மணல் மூடிக்கிடப்பதால் ஊற்றில் நீர் வெளிப்படவில்லை. மணலைத் தோண்டியபின் மறைந்திருந்த

ஊற்று வெளிப்படுகிறது. ஊற்று நீருக்குப் பொருந்தும் இத்தன்மையே அறிவுக்கும் பொருந்துமல்லவா?

ஒவ்வொருவர் மூளையிலும் அறிவு பதிந்துக்கிடக்கவே செய்கிறது. ஆனால் மாயை என்னும் திரை அவ்வறிவை வெளிப்படாமல் தடுத்து வைத்திருக்கிறது. அங்கே கல்வி என்னும் விளக்கு ஏற்றப்பட்டால் மாயத்திரை விலகி அறிவு வெளிச்சம் பரவுகிறது.

ஆக நாம் எந்த அளவிற்குத் தோண்டுகிறோமோ அந்த அளவிற்கு ஊற்றுநீர் பெருகும். அதுபோல எந்த அளவிற்குக் கற்கிறோமோ அந்த அளவிற்கே அறிவு விரிவு பெறும், வெளிச்சம் தரும்.

**தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத் தூறும் அறிவு (குறள் 396)**

என்பார் வள்ளுவர்.

**நிலையான செல்வம் கல்வி**

ஒரு நாட்டின் நிலையான செல்வம் எது? அந்த நாட்டில் ஓங்கி வளர்ந்துள்ள கட்டிடங்களா? கட்டிடங்கள் இடிந்து விழக் கூடியவை. பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்து இன்பமூட்டும் இயற்கை அழகா? அவை அழிந்துவிடக் கூடியவை. நாட்டை ஆளும் அரசியல்வாதிகளா? அவர்கள் நிலையற்ற பொருளை நம்புபவர்கள். எதிலும் நிலைத்து நில்லாதவர்கள். ஆடு மாடுகளா? நிலபுலங்களிலுள்ள மண்ணும் விளைவுமா? அவை வெள்ளத்தால் அடித்துச் செல்லப்படக்கூடியவை.

மேட்டைப் பள்ளமாகவும், பள்ளத்தை மேடாகவும் மாற்றியமைக்கக்கூடிய ஆற்றலுடைய வெள்ளத்தால் அடித்துச் செல்லமுடியாத, தன்னை நெருங்கும் எந்தப்பொருளையும் சுட்டெரிக்கவல்ல நெருப்பால்கூடச் சுடமுடியாத, எத்தகு திருடராலும் திருடிச் செல்லமுடியாத, கொடுக்கக் கொடுக்கக் குறையாத செல்வம் ஒன்று உண்டென்றால் அது ‘கல்வி’யைத் தவிர வேறொன்றும் இருக்க முடியாது.

அத்தகு சிறப்புமிக்க கல்விச் செல்வமே நிலையான செல்வமாகும்.

‘கல்வி’ எப்படி செல்வமாகும்? என்றால்

‘செல்வம் என்பது சிந்தையின் நிறைவே’ என்பார் குமரகுருபரர். கல்வியைப்போல் ஒருவருக்கு மனநிறைவைத்

தருவது உலகில் வேறொன்றும் இருக்க முடியாது. ஆகவேதான் செல்வத்துள் எல்லாம் சிறந்த செல்வம், தலையாய செல்வம் என்று உறுதி கூறினார் வள்ளுவர்.

**செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்; அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை (குறள் 411)**

**இளமையில் கல்**

கல்வி எப்பொழுது கற்கவேண்டும்?

"இளமையில் கல்" என்பது இனிய தமிழ்ப் பழமொழி. கல்வி கற்பதற்கு உரிய பருவம் இளமைப் பருவமேயாகும். இளமைப் பருவத்தில் கற்கும் கல்வி எதற்கு இணையானது என்றால் பசுமரத்தில் பதித்திட்ட ஆணிக்கு இணையானது என்பது ஆன்றோர் வாக்கு. இளமைப் பருவமே கல்விக்கான பருவமாக இருந்தபோதும், இளமையில் கற்கும் வாய்ப்பு வாய்க்காதவர்கள் எந்தவயதிலும் கற்கலாம் என்ற காரணத்தின் அடிப்படையிலேயே முறைசாராக் கல்வி, முதியோர் கல்வி போன்ற கல்வித் திட்டங்கள் இன்றைய அரசால் செயல்படுத்தப்பட்டு வருகிறது என்பது எண்ணிப் பார்க்கத் தக்கதாகும்.

கற்றலில் மேம்பாடுடைய ஒருவர் சென்ற இடமெல்லாம் சிறப்படைவார். அவர்க்கு எல்லா நாடும் தனது நாடாம். எல்லா ஊரும் தன்னுடைய ஊராம். இப்படிப்பட்ட சிறப்புமிக்க கல்வியை ஒருவன் சாகும் வரைப் படிக்க வேண்டும் என்பது வள்ளுவரின் பேராசை.

**யாதானும் நாடாமால் ஊராமால், என்னொருவன்**
**சாந்துணையும் கல்லாத வாறு (குறள் 397)**

**ஒழுக்கக் கல்வி**

இளம் பருவத்தே கற்கத் தொடங்கும் குழந்தையின் உடல், உள்ளம், ஆன்மா ஆகிய ஆளுமைக் கூறுகளின் சிறந்த பண்புகளை ஒருமித்த வளர்ச்சியாக வெளிக்கொணரும் செயல்முறையே சிறந்த கல்வியாகும்.

முற்காலத்திலும் சரி, தற்காலத்திலும் சரி ஒழுக்கக் கல்வியினைப் பெரிதும் வலியுறுத்தினர், வலியுறுத்தியும் வருகின்றனர். ஏனென்றால் ஒழுக்கம் அளிப்பது மனவலிமையைத் தருவது, அறிவினை வளர்ப்பது ஆகும்.

மாறிக்கொண்டிருக்கும் இந்த உலகில் போனால் திரும்ப வராதது இரண்டு. 1. உயிர், 2. மானம். அதாவது ஒழுக்கப் பண்பு, உடல் நோவு காரணமாகவோ, அல்லது வேறு காரணங்களாலோ உடலைவிட்டு நீங்கவிருக்கும் உயிரை மருத்துவர்கள் மருத்துவம் செய்து உயிரின் வாழ்நாளை நீட்டச் செய்வது இக்கால் நாம் அறிந்ததே. இந்நிகழ்வுகள் எல்லாம் வள்ளுவர் காலத்திலும் நடைமுறையில் இருந்திருக்க வேண்டும் என்றே எண்ணத் தோன்றுகிறது. அதனால்தான் உயிரைவிட ஒழுக்கப் பண்பான மானத்திற்கு முதன்மையளிக்கிறார் வள்ளுவர். உயிரைவிட ஒழுக்கமே காக்கப்பட வேண்டும். ஒழுக்கமே ஒருவருக்கு எல்லாச் சிறப்புக்களையும் ஒருங்கே தரும்.

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும் (குறள் 131)**

கல்வியின் இறுதிநோக்கம் மாணாக்கர்களிடையே அறப்பண்புகளையும், நல்லொழுக்கத்தினையும், பேணி வளர்த்தலாகும் எனும் கிரேக்கத் தத்துவப் பேரறிஞர் அரிசுட்டாட்டில் கருத்தும் இங்கு எண்ணத்தக்கதாம்.

**அனைவருக்கும் கல்வி**

ஒரு நாடு நன்னிலை எய்துவதற்கு அந்நாட்டின் கல்வியானது அனைவரும் சமம் என்ற கொள்கையோடு, ஏற்றத்தாழ்வில்லாத சிறந்த வாழ்க்கை, சிறந்த மனிதன், சிறந்த சமுதாயம் ஆகியவற்றை உருவாக்கத் தேவையான அறிவுத்திறன், ஒழுக்கம், பொறுத்தப்பாடு ஆகியவற்றை அளிக்கக்கூடியதாய் இருக்க வேண்டியது கட்டாயமாகும்.

சாதியக் கீழ்மைகள் மடிந்து ஏற்றத்தாழ்வற்ற சமூகம் உருவாக வேண்டுமென்றால் அந்நாட்டின் கல்வி எல்லோர்க்கும் பரவலாக்கப்பட வேண்டும். இந்நிலை சங்க இலக்கிய காலத்தில் இருந்ததாக பல்வேறு இலக்கியங்களின் மூலமாகவும், வரலாற்று ஆய்வுகள் மூலமாகவும் அறியமுடிகிறது.

அந்த வகையில் உருவாக்கப்பட்டதுதான் இன்றைய காலத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் 'அனைவருக்கும் கல்வி'த் திட்டமாகும்.

திருவள்ளுவர் காலத்தில் கற்றறிந்த பெருமக்களை மதித்துப் போற்றியுள்ளதையும், கல்லாத மக்களை இகழ்ந்து

விலங்குகள் என்று ஒதுக்கியுள்ளதையும் நம்மால் உணரமுடிகிறது.

**விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோ டேனை யவர் (குறள் 410)**

**கல்விக்கொடை**

அறங்கள் பலவற்றுள்ளும், சிறந்த, உயர்ந்த அறமாய் போற்றப்படுவது இல்லார்க்கும், இயலார்க்கும் இனிய கல்வியைக் கொடுப்பதேயாகும். அதுவே கல்விக் கொடையாகும்.

உணவில்லாதவனுக்கு உணவும், உடையில்லாதவனுக்கு உடையும், வீடில்லாதவனுக்கு வீடும் கொடுக்கப்பட வேண்டியது எவ்வளவு சரியோ, எவ்வளவு முறையோ அந்த அளவிற்கு கல்வியும் கொடுக்கப்பட வேண்டும் என்பார் தந்தை பெரியார்.

இனிய கனிச்சோலைகள், நீர்த்தேக்கங்கள், உணவுக் கூடங்கள், வழிபாட்டுத் தலங்கள் இவற்றிற்கெல்லாம் கொடை வழங்கிச் சிறப்பித்தலைவிட கற்பதற்கு வழங்கப்படும் கல்விக் கொடையே கொடைகளில் எல்லாம் சிறந்த கொடையாகும் என்பார் மகாகவி பாரதியார்.

இந்தக் கருத்துக்கள் எல்லாம் வள்ளுவரின் கல்விச் சிந்தனைக்கு வளம் சேர்ப்பவையாக, உரமூட்டுபவையாக இருப்பதை ஆய்ந்தோர் நன்கு அறிவர்.

ஆகையால் கல்விக் கொடையே ஒருவர்க்கு வாழ்நாளில் வானளவு உயர்ந்த புகழைத்தரும். அந்தப்புகழே என்றென்றும் ஏற்றம் தரும். நின்று நிலைத்து நிற்கும். அந்தப் புகழைப்போல் உலகில் நிலைத்து நிற்பது வேறொன்றும் இல்லை.

**ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு (குறள் 231)**

**ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்**
**பொன்றாது நிற்பதொன் றில் (குறள் 233)**

**கல்வியே கண்கள்**

எண்சான் உடம்பில் ஒருசான் தலையில் முதன்மையானது கண்களே யாம். அந்தக் கண்களுக்கு நிகரானதும், கண்களைவிடச் சிறப்புடையதும், கண்களால் காணமுடியாத ஒன்றையும் காணும் அகக்கண்ணாக, அறிவுக் கண்ணாக, ஞானக்கண்ணாக விளங்குவது கல்வியே யாகும்.

அகக்கண்ணால் மட்டுமே பிற உயிர்கள் படும் துன்பத்தை உணரமுடியும், உருகமுடியும், உதவமுடியும். அவ்வாறு உதவ எண்ணாத, உருகிக் கண்ணீர்வடிக்காத கண், கண்ணே அல்ல, அவை கண்ணீர் வடிக்காத கண்ணாடிக்கு ஒப்பாகும்.

கண்ணின் இயல்பு இல்லாத கண் கண்ணே அல்ல. அவை புண் என்றே கொள்ளப்படும். புண் என்ன செய்யும்? உடலுக்கும் உள்ளத்திற்கும் வலியைத் தரும். புண்ணொத்த கண்களோ உயிருக்குக் கேடு தரும்.

கல்லாத ஒருவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்துப் படிக்கச் சொன்னால் அவன் படிப்பானா? கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது என்பது எனக்குத் தெரியாது என்றுதானே அவன் சொல்வான். அப்படியானால் கல்விதான் 'கண்' என்று விளங்குகிறதல்லவா.

**கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு**
**புண்ணுடையார் கல்லா தவர் (குறள் 393)**

**கற்கும் முறை**

உள்ளத்து எழும் உணர்வுகளை எண்ணங்களை மற்றவர்க்கு வெளிப்படுத்தும் கருவியாக நாம் நம் தாய் மொழியையே பயன்படுத்துகின்றோம். தாய்மொழி மூலமாகத்தான் எவன் ஒருவனும் தன் எண்ணத்தை வெளிப்படுத்த இயலும். வேற்றுமொழிகளில் நாம் நம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்த இயலாது.

"தாய்மொழி மூலம் கல்வி" என்னும் நூலுக்களித்த முன்னுரையில் நம்முடைய இளைஞர்களுக்குப் போதிக்கும் பொறுப்புள்ளவர்கள் சற்று மனம் வைத்து சிந்தித்துப் பார்த்தால் குழந்தையின் உடல் வளர்ச்சிக்குத் தாய்ப்பால் எப்படியோ அப்படியே மனிதனின் மனவளர்ச்சிக்குத் தாய்மொழிக்கல்வியே இன்றியமையாதது என்று அண்ணல் காந்தியடிகள் கூறியுள்ளார். ஆக கற்றல் நிகழ்வு தாய்மொழியிலேயே நடைபெறவேண்டும்.

தாய்மொழியில் எப்படிக் கற்கவேண்டும் என்று நன்னூல் இயற்றிய பவணந்தியார் கூற்றும் இங்கு எண்ணத்தக்கதாம்.

அதாவது முதற்கண் உலகு வழக்கு, செய்யுள் வழக்கு ஆகிய இருவகை நடைகளையும் ஆராய்ந்தறிதல் வேண்டும். பாடநூல் கருத்துக்களை மறவாது நெஞ்சிடை வைத்துப் போற்றுதல் வேண்டும்.

ஆசானிடம் கேட்ட பொருள்களை பலகாலும் சிந்திக்க வேண்டும். நடத்திய பாடத்தில் ஐயங்கள் ஏற்படுமாயின் ஆசிரியனிடத்து தயங்காது சென்று குறை நீங்குமாறு கற்றுணரவேண்டும். அங்கனம் கற்கும் மாணவர்களுடனேயே பழகுதல் வேண்டும். ஐயம் ஏற்படுமாயின் அவரிடமும் வினவுதல் வேண்டும். அவர்கள் வினவுகின்ற வினாக்களுக்கும் விடையிறுக்க வேண்டும். இத்தகு செயல்களை முறையாக மாணாக்கர்கள் கொண்டிருந்தால் அறியாமை என்னும் இருள் மிகுதியும் விலகி அறிவு ஒளி பரவும்.

செல்வச் செழிப்பு மிக்கார் முன் எளியோன் ஒருவனின் செயல்பாடு எப்படி இருக்குமோ, பதவியாளர்கள்முன் ஒரு பாமரனின் செயல்பாடு எப்படி இருக்குமோ, வலிமையானவன் முன் வலிமையற்ற ஒருவனின் செயல்பாடு எப்படி இருக்குமோ? அதுபோலக் கல்வியில் சிறந்த ஆசிரியர்முன் பாடங்களைச் சரியான முறையில், வழியில் மாணவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும்.

**உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்**
**கடையரே கல்லா தவர் (குறள் 395)**

**கற்க கடற**

மரத்தை நேராக அறுக்க, கல்லைச் செம்மையாக உடைக்க, ஒரு கட்டிடத்தை ஒழுங்காக அமைக்கப் பயன்படுத்துவது நூல்தான். அதைப்போல ஒரு மனிதனின் மனத்தை செம்மைப்படுத்தவல்ல நூலே உண்மையான நூலாம்.

சந்தையில் போய் நாம் காய்களை வாங்கும்போது கண்ட கண்ட காய்களையா நாம் வாங்குகிறோம்? கெட்டுப் போனவைகளையும் வாடிவதங்கியவைகளையும் நீக்கிவிட்டு நல்ல நல்ல காய்களாக, நம் உடலுக்கு ஏற்றம் தரும் காய்களாகப் பார்த்துப் பார்த்துத்தானே வாங்குகின்றோம். விதைப்பதற்கு விதை வாங்குகின்றோம். எல்லா விதைகளையுமா நாம் வாங்குகின்றோம். இல்லையே. நல்லவிதையாக, பொறுக்கு மணியாக அல்லவா தேர்வு செய்து வாங்குகின்றோம்.

இவற்றைப்போல உயிருக்கும், உடலுக்கும் நலம் பயக்கும் நூல்களையே நாம் தேடித்தேடிக் கற்கவேண்டும். கல்வித்துறையில் கற்பிக்கும் பாடநூல்கள் மாணாக்கர்களின் எதிர்கால வாழ்வினைச் செம்மைப்படுத்தக்கூடியதாக, சீர்படுத்தக் கூடியதாக இருக்கவேண்டும். இதனால்தான் கற்க என்று கூறிய

வள்ளுவர், கசடறக் கற்க என்றார். கசடறக் கற்க என்று கூறிய திருவள்ளுவர் கற்பவை கசடறக் கற்க என்று தெளிவாக விளக்கிக் கூறினார்.

**கற்க கடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத்தக (குறள் 391)**

**கற்க வேண்டியதை கற்க**

மனத்தை ஒருமுகப்படுத்துகின்ற அளவுக்கு அறிவு வளரும். செருப்புத் தைக்கின்றவனுங்கூடத் தன் மனத்தை ஒருமுகப்படுத்தினால்தான் நன்றாகச் செருப்புத் தைக்க முடியும். சமையல்காரன் தன் மனத்தை ஒருமுகப்படுத்தினால் நன்றாகச் சமையல் செய்வான். பணம் சம்பாதிப்பதிலாகட்டும் கடவுளைத் தொழுவதிலாகட்டும் மனஒருமை அதிகமாக இருக்கும்வரை அது நன்றாக நடைபெறும் என்பார் சுவாமி விவேகானந்தர்.

ஒருவர் எந்தத் துறையில் ஈடுபட்டிருக்கின்றாரோ அந்தத் துறையில் மேலும் மேலும் அறிவை வளர்த்துத் திறம் பெருவதற்காகக் கற்கும் நூல்கள் அறிவு நூல்களாகும்.

கணக்குத் துறையில் ஈடுபாடுடைய ஒருவர் அத்துறையில் புதிது புதிதாக வரும் நூல்களையும் கட்டுரைகளையும் கற்கவேண்டும். அவ்வாறு கற்பது அவரை மேம்பாடடையச் செய்யும். அத்துறையை மேம்படுத்தி வளர்ப்பதற்கும் அது துணை செய்யும்.

அதுபோலவே வரலாறு, அறிவியல் போன்ற பிற துறைகளில் ஈடுபட்டுள்ளவர்களும் அவ்வத்துறை நூல்களைக் கற்றுவர நலம் பெருகும். எனவே நாம் ஈடுபட்டுள்ள துறைகளில் மனத்தை ஒருமுகப்படுத்திக் கற்கவேண்டும். அவ்வாறு கற்கும் கல்வியானது தன் வாழ்நாளில் மட்டுமின்றி வழிவழித் தலைமுறைக்கும் இன்பம் பயக்கும்.

**ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்**
**கெழுமையும் ஏமாப் புடைத்து (குறள் 398)**

**முடிவுரை**

எக்காலும் நிலைத்து நிற்கும் முப்பால் முதல்வன் வள்ளுவரின் வாய்மொழி எக்காலும் தப்பாது. அதனால்தான் ஈராயிரமாண்டுகள் கடந்த பின்னும் இன்றும் உலக அறிஞர்கள், ஆய்வாளர்கள் முதல் பாமரமக்கள் வாழ்வுவரை உயிரோட்டமாக உலா வந்து கொண்டிருக்கிறது.

திருவள்ளுவரின் கல்விச் சிந்தனைகளாக அவர் கூறியவற்றின் தொகுப்பே இங்கு நிறைவுரையாக நிற்கிறது. அது, கல்வி என்பது எளிதாகவோ, மேலோட்டமாகவோ அமையக்கூடியது அல்ல. கடினப்பட்டுக் கற்ற கல்வியே ஒருவர்க்கு வாழ்வில் நிலையான கல்வியாகும்.

நிலையான கல்விச் செல்வம் பெற இளமையிலேயே ஒருவர் கற்கத் தொடங்கவேண்டும். இளமையில் கல்வி கற்க இயலாதவர்கள் எந்தப் பொழுதிலும் கற்கும் வண்ணம் கல்வி பரவலாக்கப்பட வேண்டும். நல்ல கல்வி கற்க ஒழுக்கப்பண்பே அடிப்படையாகும்.

கொடைகளில் எல்லாம் சிறந்த கொடை கல்விக் கொடையாகும். ஆகையால் செல்வம் உள்ளவர்கள் இல்லார்க்கும், இயலார்க்கும் கல்விகற்க ஆவன செய்யவேண்டும். ஏனென்றால் கல்வியே இந்நாட்டின் கண்களாகும். அத்தகைய கல்வியைக் கற்கும் முறையறிந்து கற்கவேண்டும். கற்பவை கற்கவேண்டும். கசடறக் கற்கவேண்டும். அவ்வாறு கற்றகல்வியே ஒருவர்க்கு வழிவழித் தலைமுறைக்கும் நாட்டிற்கும் நன்மை பயக்கும்.

# திருக்குறள் வழிகாட்டும் பொதுவாழ்வு

ஆ.குழந்தைவேலு

**முன்னுரை**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் தமிழில் கிடைத்த ஒரு அறிவுப்பெட்டகமான திருக்குறளுக்கு ஈடான ஒரு நூல் உலகில் வேறு எங்குமே இல்லை. அது பொது வாழ்வுக்கு வழிகாட்டும் ஒரு பொது மறை நூல். கடவுள், மதம், நாடு, இனம், மொழி இவைகளைக் கடந்து எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படும் பொதுவான வாழ்வு நெறிகளைக் கூறும் அரியதொரு நூல் ஆகும். வாழ்வியல் இலக்கணத்தை வகுத்துத் தந்த வான்புகழ் கொண்ட நூல் ஆகும். தனி மனித வாழ்வுக்கும் பொது வாழ்வுக்கும் வழிகாட்டும் உறைகளைக் கொண்ட நீதி நூல் ஆகும். எனவேதான், திருக்குறள் காலத்தை வென்று நிற்கும் சிறந்த நூலாக விளங்குகின்றது. ஒன்றேமுக்கால் வரிகளில் எளிய தமிழ் நடையில், யாவருக்கும் விளங்கும் வகையில் அரியகருத்துக்களைத் தரும் அற்புதநூல் ஆகும். இந்நூல் பொதுவாழ்வுக்கு எவ்வாறு வழிகாட்டுகிறது என்பதை இக்கட்டுரையில் ஆய்வு செய்வோம்.

மனிதன் வாழப்பிறந்தவன். வாழ்வது அவனது உரிமை. மனிதனை இச்சமூகம் வாழ வைக்கவேண்டும். ஆனால் நடைமுறையில் இச்சமூகம் ஒரு சுமையாக விளங்குவதைக் காண்கிறோம். மனிதன் மனிதனாக மாண்புடன் வாழ்வதற்கு அவனது உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும். அவனது தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும். இதற்காகத்தான் இச்சமூகத்தைக் கட்டிக்காத்திட அரசியல் அமைப்பு உருவாக்கப்பட்டது. ஆட்சி செய்ய அரசாங்கம் அமைக்கப்பட்டது. ஆயினும் என்ன நிகழ்கிறது? மனிதம் போற்றப்படவில்லையே. வாழ்க்கையே போராட்டமாக அமைந்துவிட்டதையும் வாழ்வதற்காக போராட வேண்டிய சூழல்களையும் பார்க்கிறோம். எனவே, வாழ்க்கைச்

சிக்கல்களுக்கு தீர்வுகாண வேண்டிய நிலையில் மனிதகுலம் தள்ளப்பட்டுள்ளதை உணர்கிறோம். ஆக, வாழ்க்கைச் சிக்கல்களுக்கு திருக்குறள் வழிகாட்டுகிறது. தீர்வுகளைச் சொல்கிறது. எனவே, இச்சமூகத்தின் தலைமை பாத்திரம் வகிக்கும் அரசாங்கம் எப்படிச் செயல்பட வேண்டும் என்பதற்குத் திருக்குறளில் பல்வேறு கருத்துகள் இடம் பெற்றாலும் எடுத்துக்காட்டாக,

**இயற்றலும், ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு**

என்ற குறளைக் கூறலாம்.

சித்தர்களும், யோகிகளும், சிந்தனையில் ஞானிகளும், எத்தனையோ அறிஞர்களும் வாழ்வியல் தத்துவத்தைக் கூறிச் சென்றுள்ளனர். மனிதகுலத்தை மேம்படுத்தவே மதங்களும் தோன்றின. எல்லா வாழ்வியல் தத்துவங்களிலும் மதக்கோட்பாடுகளிலும் அடிப்படையாகச் சொல்லப்படுவது, “மனிதர்களிடத்தில் அன்பு வேண்டும்'' என்பது ஆகும். அன்பினை மனிதநேயம் என்றும் சொல்லலாம். ஆனால் இன்றோ அன்பு, குணம் என்பது குறைந்து வருகிறது. ஆசையும், பணவேட்கையும் அதிகரித்து வருகிறது. மனிதநேயம் குறைந்துவருகிறது. மதங்களும் மனிதனை மறந்து வருகின்றன. மதத்தின் பேரால் கடவுள்களைத் துதிபாடி அலைகின்ற காட்சிகளைக் காண்கின்றோம். மதங்கள் போதிக்கும் மனிதநேயம் அரிதாகிக்கொண்டே வருகிறது. திருக்குறள், கடவுள், மதம், இனம், மொழி இவற்றிற்கு அப்பாற்பட்டு பொதுமை நெறிகளைக் காட்டுகிறது. குறிப்பாக அன்பு எனும் பொதுப்பண்பினை வலியுறுத்துகிறது.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு**

என்று அன்பின் மேன்மையைக் காட்டுகிறார்.

சமூகத்தில் உயர்ந்தவன், தாழ்ந்தவன், பணக்காரன், ஏழை, முதலாளி, தொழிலாளி, வலுத்தவன், இளைத்தவன் என்ற முரண்பாடுகளும், சாதி, இனம், மொழி, மதம் இவற்றின் பேரால் வேறுபாடுகளும் காண்கிறோமல்லவா? இத்தகைய சமூக முரண்பாடுகளையும் வேறுபாடுகளையும் திருவள்ளுவர் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைக் கீழ்க்கண்ட குறள்மூலம் அறியலாம்.

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்**

மனிதனுக்கு உணவு மிகமிக அவசியம். இந்த உணவை மனிதகுலத்திற்கு வழங்கிட அடிப்படையாக உள்ள உழவுத்தொழிலே மற்ற தொழில்களைவிட மேன்மையானது என்பதனை,

**சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை**

என்று சொல்லி உழைப்பின் மேன்மையை எடுத்துக்காட்டுகிறார்.

சமூகத்தில் நல்வினையும் தீவினையும் நமது சொல் மற்றும் செயல்களைப் பொறுத்தே அமைகிறது. இதைத்தான், "தீதும் நன்றும் பிறர் தர வாரா" என்று கூறுகின்றனர். எனவே, நாம் மற்றவர்களிடம் எதைப்பேசுவது, எப்படி பேசுவது, எந்த அளவுக்கு பேசுவது போன்றவற்றை யோசித்துப் பார்த்து, பேசி, செயல்பட்டால், பெரும்பாலான தீய எதிர்வினைகள் வாராமல் நல்வினைகளே விளையும். இல்லையேல் தீவினைகளைச் சந்திக்க நேரிடும். இதை உணர்ந்த வள்ளுவர்,

**யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு**

என்கிறார்.

உலகில் உள்ள உயிர்களில் மனிதனுக்கு மட்டுமே ஆறு அறிவு உண்டு. ஆறாவது அறிவு என்பது சிந்திக்கும் திறன் படைத்த பகுத்தறிவு ஆகும். உலகில் காணும் நிகழ்வுகளில் நல்லவை எவை, கெட்டவை எனப் பகுத்து ஆய்ந்து அறியும் அறிவு. நல்லதை எடுத்துக் கொண்டு கெட்டதை ஒதுக்கி விட அறிவு உதவுகிறது. நமது வாழ்க்கையில் எத்தனையோ மனிதர்களைச் சந்திக்கிறோம். என்னென்ன செய்திகளையோ கேட்கிறோம். அத்தனையும் உண்மை என்று எடுத்துக்கொள்ள முடியுமா? அல்லது பொய் என்று ஒதுக்கிவிட முடியுமா? எனவேதான் வள்ளுவர்,

**எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு**

என்று கூறுகிறார்.

மனிதன் எவ்வாறு வாழ வேண்டும். என்னென்ன நற்குணங்களைக் கொண்டு வாழவேண்டும் என்று கூறிய

வள்ளுவர் குறிப்பாக வறியவர்களுக்கு ஈதல் செய்யும் ஈகை குணம் வேண்டும் என்கிறார். இதை,

**ஈதல் இசைப்பட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு**

என்கிறார்.

பொதுவாழ்வில் நாம் கடைபிடிக்க வேண்டிய பண்புகளைப் பற்றிக் கூறும் வள்ளுவர், எந்த இடத்திலும் சுயநல கருத்துகளையோ, தனியுடைமைக் கருத்துகளையோ கூறவில்லை. பொதுநோக்குப் பார்வையும், பொதுநலக் கருத்துகளுமே வலியுறுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக,

**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை**

என்ற குறளில் பசித்தவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்து உண்டு, பல உயிர்களைப் போற்றுதல் என்பது அறத்தைப் பற்றிச் சொல்லப்பட்டவை எல்லாவற்றிற்கும் மேலான அறம் என்று சொல்லி அவருடைய பொதுவாழ்வு நோக்கத்தினைக் காட்டுகிறார்.

ஒரு நல்ல ஆட்சி முறை எப்படி இருக்க வேண்டும் என்பதை திருவள்ளுவர் கூறும்போது, ஆட்சிக் காலத்தில் பசி இருத்தல் கூடாது என்கிறார். அடுத்து, நோய் நொடிகள் இருக்கக்கூடாது என்கிறார். அடுத்தாற்போல் அழிவை விளைவிக்கக் கூடிய பகையும் இருத்தல் கூடாது என்கிறார். இதை,

**உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேரா தியல்வது நாடு**

என்று கூறுகிறார்.

'பசி வந்திட பத்தும் பறந்து போகும்' என்பார்கள். ஏனெனில் கொடுமைகளிலெல்லாம் மிகப்பெரிய கொடுமை எதுவெனில் பசிக்கொடுமைதான். அடுத்து, நோய் நொடிகள் உள்ள எந்த ஒரு நாட்டிலும் அமைதி இருக்காது. அதேபோல் பகைமைகள் உள்ள நாட்டிலும் நிம்மதியாக ஆட்சி செலுத்திட இயலாது. எனவே, ஒரு நல்லாட்சிக்கு முக்கியமாக எதுவெல்லாம் இருக்கக்கூடாது என்பதை மேலே கண்ட குறளில் குறிப்பிட்டுள்ளார்.

**முடிவுரை**

திருக்குறளைப் பற்றி அறநெறிகள் பல பாடித் தந்த ஔவை பிராட்டியார் கூறும்போது,

**அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக்**
**குறுகத் தறித்த குறள்**

என்று சொல்லித் திருக்குறளின் பெருமையைக் கூறியுள்ளார். தமது வீரம் செறிந்த கவிதைகளால் இந்த மானிடர்களை விழிப்புணர்வு பெற வைத்த மகாகவி பாரதியார் திருக்குறளைப் பற்றிக் கூறும்போது,

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**

என்கிறார். மகாத்மா காந்தியடிகள் ரஷ்ய நாட்டு ஞானி டால்ஸ்டாய்க்கு எழுதிய கடிதத்தில், "ஐயா, தங்களது படைப்புகளில் காணப்படுகிற அன்பு, கருணை, தியாகம், தொண்டு, அறம் இவைகளெல்லாம் எதனால் ஏற்பட்ட தாக்கம்?" என்று கேட்டபோது, அதற்கு டால்ஸ்டாய் அவர்கள் எழுதிய பதில் கடிதத்தில், "திரு.காந்தியடிகள் அவர்களே! உங்கள் நாட்டில் தமிழ் என்றொரு மொழி உள்ளது. அம்மொழியில் திருக்குறள் என்றொரு நூல் உள்ளது. அத்திருக்குறளின் மொழிபெயர்ப்பு நூலைப் படித்ததினால்தான், என்னுடைய எழுத்துக்களில் நீங்கள் குறிப்பிட்டுள்ள தாக்கம் என்கிற அத்துணைப் பண்புகளையும் பார்க்கிறீர்கள்" என்று குறிப்பிட்டிருந்தார். காந்தியடிகள் அதன் பிறகுதான் திருக்குறளின் பெருமையை எண்ணி வியந்து போனார்.

மானிட வாழ்க்கையை நன்கு ஆய்ந்து, அறம், பொருள், இன்பம் என மூன்று பிரிவுகளாக வகைப்படுத்தி வாழ்வியல் நெறிகளை வழங்கி இருக்கிறார் வள்ளுவர். அறத்துப்பால் தனிமனிதனுக்கான ஒழுகலாற்றையும், பொருட்பால் அரசியல் ஒழுகலாற்றையும், காமத்துப்பால் அக வாழ்வின் சிறப்பு இயல்புகளையும் பேசி உள்ளன. சொல் நயம், பொருள் நயம், அணி நயம், மனிதகுல மேம்பாட்டு நயம் என்ற பன்முகச் சிறப்புகளைக் கொண்ட ஒரு இலக்கியக் களஞ்சியம்தான் திருக்குறள்.

அரசியல் நெறிகளுக்கு மனுதர்மத்தைச் சான்று காட்டிய ஒரு கூட்டம், திருக்குறளைப் புறக்கணித்தது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அவ்வாறு புறக்கணித்ததற்குக் காரணம்

திருவள்ளுவர் மனித நேயத்தைப் போற்றியுள்ளதே ஆகும். திருக்குறளில் முற்போக்கு சிந்தனைக் கருத்துகள் இடம்பெறுவதைப் பார்க்க வேண்டும்.

"மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்பதெல்லாம் என்றென்றும் வழிகாட்டக் கூடியதல்லவா!

வாழ்க்கைச் சிக்கல்களுக்கும் சமூகப் பிரச்சினைகளுக்கும் பல்வேறு இடங்களில் தீர்வுகள் சொல்லப்பட்டுள்ளன. சொல்லப்பட்டுள்ள கருத்துகள் பொதுமை நோக்குடனும், அறிவியல் பார்வையுடனும் சொல்லப்பட்டுள்ளன. இத்தகைய சிறப்புமிக்க திருக்குறள் இன்னும் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையவில்லையே என்பதுதான் நமது வருத்தம். திருக்குறள் எல்லோரையும் சென்றடைய பாடுபடுவோம். இந்நூல் பொது வாழ்வுக்கு வழிகாட்டும் நூலாக இருப்பது நாம் பெற்ற பேறு ஆகும்.

# திருவள்ளுவர் போற்றும் இயற்கைச் சூழல்

**முனைவர் அ.அருணாசலம்**

திருவள்ளுவர் சுற்றுப்புறச்சூழல் அறிஞர்களின் முன்னோடியாக விளங்கியவர்; மனித இனத்தை நேசித்தவர்களில் முதன்மையானவர். மனித வாழ்க்கை மேன்மையடைய அவன்வாழும இயற்கைச் சூழல் மிகவும் இன்றியமையாதது. நிலம், நீர், காற்று, நெருப்பு, வான் என்ற இயற்கைக் கூறுகளும் விலங்கு மற்றும் தாவரங்கள் போன்ற உயிரினங்களும் மனிதனின் வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கின்றன. பழந்தமிழர்கள் வாழ்க்கையை அகம், புறம் என்று பெரும்பிரிவுகளாகக் கொண்டு வாழ்ந்தவர்கள். அகத்திணையைக் குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல், பாலை என ஐந்து நிலவியல் அடிப்படையில் பிரித்தனர். அகவாழ்க்கையும், புற வாழ்க்கையும் திருவள்ளுவர் தூய்மையாக இருக்க வேண்டும் என்று எண்ணினார். புறத்தூய்மை நீராலும் அகத்தூய்மை வாய்மையாலும் ஏற்படும் என்ற இயற்கைச் சூழலின் அடிப்படைக் கொள்கையை வள்ளுவர் வகுத்துள்ளார். மனிதன் இயற்கையோடு இணைந்து வாழும் இன்றியமையாமையைத் திருவள்ளுவர் நூல் முழுவதும் விளக்குகின்றார்.

**இயற்கைச் சூழல்**

மக்கள், விலங்குகள், தாவரங்கள், வாழும் நிலம், நீர், காற்று ஆகிய சூழலைச் சுற்றுப்புறச் சூழல் என்று அறிவியலறிஞர்கள் விளக்குகின்றனர். காற்று, நிலம், நீர், விலங்கினம், தாவரங்கள் இவற்றின் உறவுகளை விளக்குபவன் இயற்கைச் சூழல் அறிஞன் என்று போற்றப்படுகின்றான். திருவள்ளுவர் தான்எழுதிய திருக்குறளில் நிலம், நீர், காற்று, மக்கள், விலங்கினம், தாவரங்கள் ஆகியவற்றை நன்கு படம்பிடித்துக் காட்டுகின்றார். உயரின வாழ்க்கைச் சூழலை ஜெர்மனியின் விலங்கியல் நிபுணர் ஏர்னஸ்டு ஹெக்கில் 1866இல் முதன் முதலில் அறிவியல் நோக்கில் ஆய்வு செய்தார். பண்டைய கிரேக்க சிந்தனையாளர்களான ஹிப்போகிரிட்ஸ்,

அரிஸ்டாட்டில் தாவர, விலங்கின உயிர்கள் இயற்கைச் சூழலில் வளரும் நிலைகள் பற்றி அடிப்படையான அறிவியல் கருத்துகளைக் குறிப்பிட்டு நவீன இயற்கை சூழல் அறிவியலுக்கு வித்திட்டார்கள். சுற்றுப்புறச் சூழல் விழிப்புணர்வு 1960க்குப் பிறகு உலகளவில் எழத்தொடங்கியது. ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்கைச் சூழல் அறிஞர்களின் முன்னோடியாக விளங்கிய திருவள்ளுவரின் கருத்துகள் இன்றும் சிந்திக்கத் தக்கமையாக இருக்கின்றன.

**வான்சிறப்பு**

திருக்குறளில் இயற்கைச் சூழலில் முதலிடம் பெறுவது மழை. உலக இயக்கத்திற்கு நீர் இன்றியமையாதலால் வான்சிறப்பு என்ற இரண்டாம் அதிகாரத்தில் மழைநீரை அமிழ்து என்று வள்ளுவர் போற்றுகின்றார். மழையினால் உலகம் வாழ்ந்து வருதலால் உலக உயிர்களுக்கு மழை அமிழ்தமாகும் என்றும் உண்பவர்களுக்கு உணவுப் பொருட்கள் விளைய உதவுவதோடு பருகுவோர்க்குத்தானும் ஓர் உணவாக இருப்பதும் மழை(12) என்றும் மழை பொய்த்தால் கடல் சூழ் இவ்வுலகம் பசியால் வாடும் (13) என்றும், மழையின்றேல் உழவுத் தொழிலும் இல்லை (14) என்றும், மழையின்றிக்கெடுப்பதும், கெட்டு நொந்தவர்களுக்குத் துணையாக நிற்பதும் மழை (15) என்றும், வானின்று மழைத்துளி விழவில்லை எனில் பூமியின் மேல்புல்லும் முளைத்தல் அரிது (16) என்றும், மழைபெய்யாவிட்டால், பெருங்கடலும் வளங்கின்றிப்போகும் (17), வானோர்க்கு வழிபாடும் இருக்காது(18), தானம், தவம் ஆகியவை இவ்வுலகில் நிகழாது(19) என்றும், நீரின்றி உலகம் அமையாது என்றும், மழையில்லையேல் ஒழுக்கமும் நிலைபெறாது(20) என்றும் திருவள்ளுவர் விளக்குகின்றார்.

**கடல்**

பூமியின் பெரும்பகுதியைக் கடல் சூழ்ந்துள்ளது. கடற்பரப்பு மிகவும் பெரியது. அதை நீந்திக்கடத்தல் அரிது(8) அறக்கடலாக கடவுள் விளங்குகின்றார். மனிதப்பிறவு பெருங்கடல் போன்றது. இறைவனடியைச் சேர்ந்தவர்களே பிறவிப் பெருங்கடலைக் கடக்க முடியும்(10). வான்மழை பொய்த்தால் நெடுங்கடலும் தன்நீர்வளம் குன்றும்(17), பயன்எதிர்பார்க்காமல் செய்த உதவி, அதனால் விளையும் நன்மை கடலினும் பெரியது(103). நெடுந்தேர் உடலில் ஓடாது, கடலோடும் கப்பலும் நிலத்தில் ஓட முடியாது(96). கடல் போன்ற காமநோயால் வருந்தினாலும் பெருமையுடைய பெண்டிர் மடலேறார்(1137)

காமக்கடலைக் கடக்கும் பாதுகாப்பான தோணி எதுவுமில்லை(*1164*). காதல் இன்பம் கடலைப் போன்றது. ஆனால் அதுவருத்தும்போது துன்பம் கடலினும் பெரியது(*1166*) கடலும் தாங்க முடியாத காமநோயைக் கண்கள் உண்டாக்கும்(*1175*) கடலைத் தூர்ப்பது அரிய செயல்(*1200*) என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

**நாடு**

இயற்கை வளமும் மக்கள் வளமும் சேர்ந்து அமைவது ஒருசீரிய நாடாகும். குறைவிலா விளைபொருட்களும், நல்ல அறிஞர்களும், தாழ்விலாச் செல்வரும் நிறைந்தது நாடு(*731*), மிகு பசியும், ஓயாத நோயும், அழிவு செய்பையும் இல்லாமல் காக்கவல்லதே சிறந்தாடென்றும்(*734*), ஊற்றும், நீருமாகிய இருவகை நீர்வளமும், நன்றாக அமைந்தமலையும், அந்த மனையினின்று வருகின்ற ஆற்றுநீரும் வலிய அரணும் ஒருநாட்டின் உறுப்புகளாகும்(*737*), உடல்நலம், செல்வம், விளைபொருள், இன்ப வாழ்வு, நல்ல காவல் ஆகிய ஐந்தும் நாட்டிற்கு அழகாகும்(*736*), முயற்சி செய்து தேடாமலே வளம் தரும் நாடுகள் சிறந்த நாடுகள், தேடி முயன்றாலும் வளம்தரா நாடுகள் சிறந்தவை அன்று(*739*) என்றும், நல்ல தலைவனைப் பெற்றிராத நாடு வளங்கள் பலவற்றைப் பெற்றிருந்தாலும் பயனில்லாமற் போகும்(*740*) என்றும் வள்ளுவர் கூறுகின்றார்.

**அரண்**

மணிநீரும், வெட்டவெளி நிலமும், மலையும், அணிநிழல்காடும் ஆகிய நான்கும் ஒரு நாட்டிற்கு அரணாகும்(*742*), நீர்நிலைகளும் மலையும் அமைந்திருந்தால் நாடு சிறப்படையும். ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்று நீரை மூன்று வகையாகப்பிரிப்பர். அவற்றைத் திருவள்ளுவர் இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் வல்லரனும் நாட்டிற்குறுப்பு(*737*) கூறுகிறார். இருபுனல் என்பது ஊற்று நீராகிய கீழ்நிரையும், வேற்று நீராகிய மேல்நீரையும் குறிக்கும். கிணறு, குளம், ஏரி முதலியவை கீழ்நீரைச் சார்ந்தவை. மழைநீர் மேல்நீர். வருபுனல் ஆற்றுநீராகும், ஊற்றுநீர் இறைக்க, இறைக்க ஊறும்(*1161*), ஊற்று நீரைத் தெளிவாக்கி மக்கள் பருகுவர். தோண்டத் தோண்ட ஊறுவது மணற்கேணி(*396*), உலகம் வாழவிரும்பும் பேரறிவாளன் செல்வம் ஊரார் உண்ணும் நீரை உடைய ஊருணி ஆகும்(*215*). கரை நன்கு அமைந்த குளத்தில் நீர் நிரம்பினால் பலருக்கும் பயன்படும்(*523*) என்று திருவள்ளுவர் விளக்குகின்றார்.

மலை பெருமைக்கு அடையாளம். நல்ல பண்புகளையுடைய உயர்ந்தமனிதர்கள் மலையைப் போன்றவர்கள்(29), தன்னிலையிலிருந்து மாறாமல் அடங்கியவன் தோற்றம் மலையினும் உயர்வுடையதாகும்(124), மலைமேல் நின்று யானைப் போர் காண்பது மிகவும் மகிழ்ச்சி தரும்(758), மலைபோன்ற பெரியார் கெட நினைத்தால், எவ்வளவு ஆற்றில் பெற்றோரும் குடியோடு அழிவர்(898), மலையைப்போல் உயர்ந்த நிலையில் உள்ளவரும் ஒருசிறிய அளவு தவறு செய்தாலும் மிகவும் தாழ்ந்து விடுவர்(965).

**மக்கள் வகை**

இயற்கைச் சூழலில் பெரும்பங்கு வகிப்பது மக்கள் இனம். திருவள்ளுவர் பல வகையான மக்களைப்பற்றி திருக்குறளில் விவரிக்கின்றார். அறவோராகிய அந்தணர்(30), இல்வாழ்வான்(42), இல்லாள்(52), தம்மின் அறிவுடைய தம் மக்கள்(68), தன்மகனை அவையத்து முந்தியிருக்க அரும்பாடுபடும் தந்தை(67), தம்மகனைச் சான்றோன் எனக்கேட்டு மகிழும் தாய்(69), இவன் தந்தை என்னதவம் செய்தான் இவனைப் பெற எனும் சொல்லுக்காக அல்லும் பகலும் இடையராது உழைக்கும் மகன்(70), அன்புடையார்(72), விருந்தோம்பும் பண்பாளன்(86) இன்சொல் கூறுபவன்(92), பிறர்க்கின்னா செய்யாத மாசற்றார்(3110, பயன்துக்கார்(103), பிறர் பொருளையும் தம்பொருள்போல் போற்றும் வணிகர்(120), அமரருள் உய்க்கும் அடக்கமுடையான்(121), மேன்மை எய்தும் ஒழுக்கத்தார்(137), பிறன் மனை நோக்காப் பேராளன்(148), பொன்போல் போற்றத்தக்க பொறுத்தார்(155), அவ்விய நெஞ்சத்தான்(169), ஈத்துவக்கும் இன்பமுடையார்(228), புகழோடு தோன்றும் சீரானர்(236), அருளாள்வோர்(245), புலால் மறுத்தான்(260), நோற்றலின் ஆற்றல் படைத்தவர்கள்(269), வாய்மையாளர்(291), மாசற்றார்(321), மெய்யுணர்வாளர்(358), பற்றற்றோர்(365), பண்புடை வேந்தன்(389), கற்றோர்(393), புலவர்(394), கல்லார்(408), கேள்வி அறிவுடைய ஆன்றோர்(413), ஆவது அறியும் அறிவுடையார், அறிவிலார்(427), பெரியார்(444), தக்கார், தகவிலர்(446), நல்லார்(450), சான்றோர்(458), மரத்தனையர்(576), நயத்தக்க நாகரிகம் வேண்டுவோர்(580), ஒற்றர்(561), ஊக்கமுடையான்(594), சோம்பலுடையார்(606), மடியிலா மன்னவன்(610), ஊழையும் உட்பக்கம் காணும் உழைப்பாளிகள்(620), இடும்பை படாதவர்(623), அருவினைபுரியும் அமைச்சர்(631), சோர்விலாச் சொல்வீரன்(647), எண்ணிய எண்ணியாங்கு எய்தும் திண்ணியர்(666), தக்கது அறியும்

தூதன்(888), தூய்மையாளர்(711), செல்வர்(752), அஞ்சாமறவர்(778), பண்புடையாளர்(783), நீரவர்(782), கேண்மையவர்(807), பண்பிலார்(811), மனம் நல்லார்(823), பேதையார்(834), அறிவிலார்(843), வில்லேர் உழவர்(872), குன்றன்னார்(898), ஏந்திய கொள்கையார்(899), பிறன்மனைவிழையான்(901), பொருட் பெண்டிர்(914), மாயமகளிர்(918), கள்ளுண்பவர்(926) ஒன்று எய்தி நூறிழக்கும் சூதர்(932), நோயுற்றான், மருத்துவன்(949), நற்குடிப்பிறந்தார்(954), சீரல்ல செய்யாத சீரியர்(962), மானமுடையார்(970), அரிய செயல்புரியும் பெருமைக்குரியோர்(975), குணநலன்பெற்ற சான்றோர்(982), உலக இயக்கத்திற்கு இன்றியமையாத பண்புடையான்(996), நச்சப்படாதவன்(1008), சீருடைச் செல்வர்(1010), நாணுடை மாந்தர்(1012) அமரகத்து வன்கண்ணர்(1027), தம்குடியைத் தாழாது உயர, அயராது உழைப்பவன்(1024), உலகத்தார்க்கு அச்சாணியான உழவர்(1023), உழுதுண்டு வாழ்வார்(1033), துப்புரவு இல்லார்(1050), இரத்தக்கார்(1051), கரப்பிலார், இரப்பார்(1055), ஈர்ங்கைவிதிராக் கயவர்(1077), கனங்குழை மாந்தர்(1081), தாக்கணங்கு(1082), காதலார்(1099), மதிமுக மாதர்(118), ஏதிலர்(1130), மடலேறா மகளிர்(1137), ஊரார்(1147), மலர் அன்ன கண்ணான்(1142), பிரிவுரைக்கும் வன்கண்ணர்(1156), நல்லவர்(1305) ஆகிய பல்வேறு வகையான மக்களைப் பற்றித் திருக்குறளில் திருவள்ளுவர் நன்கு விளக்கியுள்ளார்.

**விலங்குகள்**

பலவகையான விலங்குகளைப் பற்றிய செய்திகள் திருக்குறளில் இடம்பெற்றுள்ளன. இயற்கைச் சூழலில் பெரும்பங்கு வகிப்பவை விலங்குகளாகும். சிங்க நடை ஆடவர்க்கு உரியதாகும்(59), படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு அரண் என்ற ஆறு அங்கங்களையும் உடையவனே ஆண் சிங்கம் போன்றவன்(381), வேலேந்திய வீரரைக் கோத்தெடுக்கும் ஊரிய் கொம்புடையது யானை(500), உடம்பை மறைக்கும் அளவு அம்புகளைத்தாங்கும் ஆற்றல் உடையது யானை(597), பருத்த உடம்பும், கூரிய கொம்புகளும் உடைய யானை புலிக்கு அஞ்சும்(599), ஒரு யானையை நன்றாகப் பழக்கி மற்றொரு யானையைப் பிடிப்பர்(678), யானைக்குகட்படாம் அணிவது வழக்கம்(1087), போர்க்களத்து யானையை அம்பால் எரிவதுபோர் வீரனுக்குப் பெருமைக்குரிய செயல்(814), குதிரை போரில் படையாக வரும், கனர் நிலத்தில் சிக்கிய களிற்றை நரிகள் கொன்றுவிடும்(500) முதலை தண்ணீரில் உள்ளபோது

ஆற்றலுடையதாக இருக்கும். இதுவே வெல்லும், ஆனால், நீரினின்று வெளிவந்தால் மற்ற விலங்குகள் அதனை வென்றுவிடும்(495), ஆ பயன்குன்றும்(560) ஆவுக்கு நீர் என்று இரப்பினும் இழிவுதரும்(1066), பசு (புலியின் தோல் போர்த்து) புல் மேயும்(273) பாரத்தை இழுக்கும் காளை மாடு எத்தகைய நிலத்திலும் தளராது செல்லும்(624).

ஆட்டை ஒன்றனோடு ஒன்று மோதவிட்டுச் சண்டைப் போடச் செய்வார்கள் அப்போது அது தாக்குவதற்காகப் பின்வாங்கும்(486), கவரிமான் ஒரு மயிர் நீங்கினாலும் உயிரை விட்டுவிடும்(969) பெண்மானின் கண் அழகாக இருக்கும். ஆதலால் அதை மகளிர் கண்ணுக்கு உவமை கூறுவது வழக்கம்(1085). எலிக்கும் நாகத்துக்கும் பகை. நாகம் மூச்சு விட்டால் எலிக்கூட்டம் ஓடிவிடும்(763), பாம்போடு உடன் உறைவது அழிவைத்தரும்(890), சந்திர கிரகணம் உண்டாகும்போது திங்களைப் பாம்பு கொண்டதாகச் சொல்வார்கள்(1146), புழு எலும்பு இல்லாதது. ஆதலின் அதுவெயிலில் இறந்துவிடும்977). ஐந்து உறுப்புகளை அடக்கிக் கொள்ளும் இயல்புடையது ஆமை(126). மீன் தூண்டிலிலுள்ள இரும்புக் கொக்கியை விழுங்கி அகப்பட்டுக் கொள்ளும்(931) கயல்மீனை மகளிர் கண்களுக்கு உவமையாக்குவர்(1212).

மக்களைவிட விலங்கு தாழ்ந்திருப்பதால் அதைக் கல்லாதவர்க்கு உவமையாகத் திருவள்ளுவர் கூறுகிறார்(410), அழகான மயிலை அணங்கோடு புலவர் ஒப்பிடுகின்றார்(1081). அதன் பீலி கனம் இல்லாதது. அன்னப்பறவையின் தூவி மிகமென்மையானது(1120).

பறவைகளைப் பற்றிய கருத்துகளும் திருக்குறளில் வருகின்றன. பறவை முட்டையை உடைத்துக் கொண்டு வெளியே வந்து பறந்து விடும்(338) வேட்டுவன் செடி மறைவில் நின்று வேட்டையாடுவான்(274). கொக்கு நல்ல மீன் வரும்வரை காத்திருந்து கொத்தும்(490), காக்கை உணவு கிடைத்தால் கரைந்து தன் இனத்தோடு உண்ணும்(527), பகலில் கூகையை அது வென்றுவிடும்(481) கூகை இரவில் வலிமை உடையதாய் இருக்கும்.

**தாவரங்கள்**

மனித வாழ்க்கையில் தாவரங்களின் பங்கு மிகவும் பெரியது. மனிதனுக்கு உணவாகவும் அவன் வாழும் இயற்கைச் சூழலை தூய்மையாக வைத்திருக்கவும் தாவரங்கள் பயன்படுகின்றன. சிறிய தினைமுதல் பெரிய பனைவரை பல

தாவரங்களையும் அவற்றின் இயல்புகளையும் திருவள்ளுவர் விளக்குகின்றார். மனிதனுக்குப்பால் தருவது பசு. அந்தப்பசுவிற்கு உணவாக இருப்பது புல். மரங்களின் பல்வேறு இயல்புகளையும் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மனிதர்களுக்கு உணர்வுகள் உள்ளன. ஆனால் தாவரங்கள் உணர்ச்சிகள் இல்லாதவை உணர்ச்சி அடிப்படையில் மனிதன் உயர்ந்தவன், மரம் தாழ்ந்தது. ஆகவே பண்பில்லாதவர்களை மரத்திற்கு ஒப்பாக வள்ளுவர் குறிப்பிடுகின்றார். கண்ணோட்டம் இல்லாதவர் மரத்தனையர்(576) என்றும், ஊக்கமில்லாத மக்கள் மரமக்கள்(600) என்றும், மக்கள் பண்பில்லாத கூர்மையான அறிவுடையர் மரம்போல்வர்(997) என்றும் வள்ளுவர் சொல்கிறார்.

நயனுடைய செல்வம் உள்ளூர் நடுவே பழுத்தமரம்(216) என்றும், பெருந்தகையாளன் செல்வம் மருந்தாகப் பயன்படும்(217) என்றும் குறிப்பிடுவார். நச்சப்படாதவன் செல்வம் நச்சு மரமாகும்(1008), பகை முள்மரம் போன்றது அதை இளையாதாக இருக்கும்போதே வெட்டிவிடவேண்டும். அது வளர்ந்து விட்டால் அழிப்பது கடினமாக இருக்கும்(879). அன்பில்லா உயிர் வாழ்க்கை பாலை நிலத்தின் நடுவே பட்டமரம் போன்றது(78) தலைவன் வருகையை எண்ணி மகிழும் தலைவியின் நெஞ்சு மரத்தின் கிளைகளுக்கு மேல் ஏறி நிற்கின்றது(1064), மூங்கில் போன்ற தோளையும் தளிர்மேனியும் தலைவி என்று தலைவர் புகழ்ந்துரைக்கின்றான்(113). ஒரு மனிதன் ஒரு மரத்தின் நுனிக்கொம்பு வரைதான் ஏறமுடியும். ஒவ்வொரு மனிதனும் தன் ஆற்றலின் எல்லையை உணர்ந்து அதற்குள் செயல்பட வேண்டும்(476). கோட்டுப் பூ சூடும் வழக்கம் இருந்தது(1313), காயைவிட கனி சிறந்தது(100) மிகுதியாகக் கனிந்த கனியும் முற்றாத காயும் பயனற்றவை(1306), காதல் வாழ்வில் பெரும்பிணக்கும், சிறுபிணக்கும் இருக்க வேண்டும். விதையில்லாக் கனி மிகவும் நல்லது(1191), தாவரங்களுக்கு விதை அடிப்படையாகும். நல்லவிளைச்சலுக்கு நல்ல விதை நிலத்தில் ஊன்றவேண்டும்(85), இன்பமான நல்வாழ்விற்கு நல்லொழுக்கக் வித்தாகும்(138), பிறவித்துன்பத்திற்கு அவா வித்தாகும்(361).

பனையைப் பெரிய அளவிற்கு ஒப்பாகக் கூறுவர், ஒரு தினையளவு உதவியைப் பயன்கருதி பனைமர அளவு போன்றி மகிழ்வர்(104), தினையளவு குற்றத்தைப் பனையளவாய்க்கருதி இழி செயல்களைப் பழி நாணுவோர் தவிர்ப்பார்(433). பனைமடலால் குதிரைபோல் உருவம் செய்து தலைவியை

அடைய முடியாத தலைவன் மடலேறுவான்(1131 4,1135 7). கடலன்ன காதல் வருத்தியும் மடலேறாமல் தங்களைப் பெருமையுடைய மகளிர் காத்துக்கொள்வர்(1137). பல மரங்கள் அடர்ந்து அணிநிழல் காடு ஒருநாட்டிற்கு அரணாக விளங்கும்(742).

**மலர்கள்**

திருவள்ளுவர் மலரைப் பல குறள்களில் உவமையாக எடுத்தாண்டுள்ளார். அன்பர்களின் அகமலரில் இறைவன் குடிகொண்டிருக்கின்றான்(3), முகம் மலராமல் நோக்கினால் மோப்பக்குழையும் அனிச்சம்போல் விருந்தினர் வாடிப்போவார்கள்(90), மகிழ்ந்து விரிதலும் வருந்திக்குவிதலும் இல்லாதவர்கள் உலகத்தில் உயர்ந்தவர்கள்(425) நீர்ப்பூக்களின் நீளம், நீரளவாகும் மக்களின் ஊக்கத்தின் அளவு அவர்கள் உயர்வு இருக்கும்(595), தாம்கற்ற நூற்பொரளை விரித்துரைக் காதவர்கள் மணமில்லா மலருக்கு ஒப்பாவார்கள்(650) அனிச்ச பூவினும் மென்மையானவன் தலைவி (1111), மங்கையின் விழி, மலரைப் போன்றது(1112), அனிச்சம் பூவை பெண்கள் சூடுவர்(1115), மாதரின் அடிகள் அனிச்சமலரிலும் மென்மையானவை(1120), நெருஞ்சி முள்ளை நெருஞ்சிப்பழம் என்றும்(1120), கொடியை வள்ளி என்றும்(1304) திருவள்ளுவர் கூறுகின்றார்.

திருவள்ளுவர் போற்றும் இயற்கை சூழ் மனித வாழ்விற்கு அடித்தளம் அமைத்து மேன்மையுற வழிகாட்டும். உலகம் வெப்பமயதால் என்றபெருஞ் சிக்கலால் திணறுகின்றது. பருவநிலை மாற்றத்தால் தவிக்கின்றது. இவற்றிற்குத் திருவள்ளுவர் போற்றும் இயற்கைச் சூழல் ஒன்றே தீர்வாகும். திருக்குறள் போற்றும், மழைவளம், கடல்வளம், நாடாவளந்தரும் நாடு நீர்வளம், வல்லரண், அணிநிழல்காடு, மலை வளம், நல்ல மாந்தர்கள், நன்மை பயக்கும் விலங்குகள், உணவாகப் பயனும்படும் தாவரங்கள் மனிதனின் நல்வாழ்விற்குப் பெரிதும் பயனளிப்பவை. திருக்குறள் போற்றும் சுற்றுப்புறத் தூய்மையும், மனிதன் இயற்கையோடு இணைந்த வாழ்வும், விலங்குகளைக் கொல்லா நோன்பும், தாவரங்களைச் சிதைக்கா நிலையும், இன்னா செய்யாமையும், இன்சொல் கூறலும் மனத்துக்கண் மாசில்லாமையும், உலகில் மனிதவாழ்வை மேலும் உயர்த்தும் என்பது திண்ணம்.

# திருக்குறள் காட்டும் நிருவாகத்திறன்

**க. ரவீந்திரன்**

**முன்னுரை**

இன்றைய உலகில் மிகவும் முக்கியமான துறையாக நிர்வாகத்திறன் விளங்குகிறது. எந்த ஒரு செயல் நிலையிலும் தேவையான செயல்பாடாக உள்ள நிர்வாகத்திறன் மிக்கவர்களே பெரிதும் மதிக்கப்படும் நிலையில் எம்.பி.ஏ.(விஙிகி) கல்வியும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. இதுபோன்ற இனிய நிர்வாகத்திறனை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலகுக்கு எடுத்துரைத்தவர் திருவள்ளுவர். எனவேதான் திருக்குறள் உலகப் பொதுமறை என்று போற்றப்படுகிறது. அவர் இயற்றிய திருக்குறளின் பொருட்பால், அரசியல் என்ற பிரிவில் நிர்வாகத்திறன் பற்றிப் பல்லாண்டு அனுபவம் பெற்ற மாமனிதர், பேரரசன்போல் மிகத் தெளிவாகவும், துல்லியமாகவும் விளக்கியுள்ளார். அதில் சிறப்பு பெற்ற குறட்பாக்களை இந்த ஆய்வுக் கட்டுரையில் காண்போம்.

**நிர்வாகத்திறன் தலைமைப் பண்பு** (Leadership)

ஒரு நாட்டின் சிறந்த நிர்வாகம் என்பது, தன்குடிமக்களுக்கு வேண்டியவற்றைத் தகுந்த நேரத்தில் போதுமான அளவு கிடைக்குமாறு செய்தல். நடுவு நிலையை தவறாமல் சிறப்பாக ஆட்சி புரிதல், எப்போதும் முகமலர்ச்சியான இன்சொல் கூறுவது, ஏழை மக்களின் அத்தியாவசியத் தேவைகளை மனநிறைவுடன் அளித்து அவர்களை மகிழ்வித்தல் ஆகும். இந்த அடிப்படை நிர்வாகத்திறன் உடையவன் வேந்தர்களுக்கெல்லாம் வேந்தனாக, ஒளி விளக்காகத் திகழுவான் என்று வள்ளுவர் உரைக்கிறார். தலைவன் சிறப்பாக இருந்தால்தான் அவன் ஆட்சிபுரியும் குடிகளும் சிறப்புப் பெறும்.

இன்றைய காலக்கட்டத்தில் பெரும்பாலும் மறந்துவிட்ட நற்குணங்களை எளிய திருக்குறளின் மூலம் அனைத்து

தலைமைப் பொறுப்புள்ளவர்களும் நினைவுப்படுத்தி அதன்வழி நடத்தல் சமுதாயத்திற்கு மிக்க பயன் விளைவிப்பதாக அமையும்.

**கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கும்**
**உடையனாம் வேந்தர்க் கொளி (இறைமாட்சி:குறள் 10)**

**திருக்குறளில் மனிதவள மேம்பாட்டுத் திறன்**
(Human Resources Management)

நிர்வாகத்துறையில் பல உட்பிரிவுகள் உள்ளன. அவை மனிதவள மேம்பாடு (Human Resource Managemeng), சந்தை நிர்வாகம் (Marketing management), உற்பத்தித்திறன் (Production Management), நிதிநிலை நிர்வாகம் (Financial Management) ஆகியன அத்தியாவசியமான பிரிவுகள், இதில் எல்லா நிலைகள் மற்றும் துறைகளுக்கும் பொருத்துமாறு சிறப்புடைய மனிதவள மேம்பாட்டுத்திறன் திறமையான தலைவனால் மட்டுமே சிறந்த நிர்வாகத்தை அளித்து வெற்றிகரமாக செயல்பட முடியும். அதற்குத் தேவையான குணநலன்களைத் திருக்குறள் மிக நுட்பமாகவும், ஆழமாகவும் எடுத்துரைக்கிறது.

**செய்யும் செயல்களை ஆராய்ந்து செயல்படுத்துதல்**
(Management Philosiphy)

ஒரு செயலைத் தொடங்குவதற்குமுன். அதை எவ்வாறு செயல்படுத்துவது, அதனைச் சிறப்புற முடிக்கும் வழி, அதனால் உண்டாக்கும் பயன், ஆகியவற்றைச் சீர்தூக்கி ஆராய்ந்து செயல்படுத்த வேண்டும். அவ்வாறின்றி எடுத்தேன், தொடுத்தேன், கவிழ்த்தேன் என்று செயல்புரிவது, பிறகு அதை எண்ணி வருந்துவது சிறப்பன்று. இந்நெறியைக் காட்டும் குறள்,

**எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்**
**எண்ணுவ மென்ப திழுக்கு (தெரிந்து செயல்வகை : குறள் 7)**

தாம் செய்கின்ற செயலைச் சிறப்புடையதாக இருந்தாலும் அதனால் பயன் பெறுபவர் எவ்வகை மக்கள் என்பதையும் நினைவில் கொண்டு அவர் பகைவரே ஆயினும் அவரவர் இயல்பையும் சூழ்நிலையையும் கருத்தில் கொண்டு செயல்புரிதல் சிறப்பு. அவ்வாறு செய்யாவிடில் நல்லசெயல்களைச் செய்தாலும், அதன் இறுதி விளைவு குற்றம் உடையதாகவே கருதப்படும்.

**நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்**
**பண்பறிந் தாற்றாக் கடை (தெரிந்து செயல்வகை: குறள் 9)**

தலைமைப் பொறுப்பில் உள்ளவர் சிறந்த நிர்வாகத்தை அளிப்பதில் இருந்து தடம்புரளக்கூடாது. எனவே தான் உள்ள நிலை, தனக்குள்ள பொறுப்பு ஆகியவற்றை உணர்ந்து, மதித்து அதற்கு ஏற்றவகையில் பொருத்தமுடைய செயல்களையே செய்யவேண்டும். அப்போதுதான் குடிமக்கள் அவரை மனமுவந்து ஏற்றுக்கொள்வர். இல்லையே இவ்வுலகம் அத்தலைவனை ஒதுக்கிவிடும்.

**எள்ளாத எண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு**
**கொள்ளாத கொள்ளா துலகு (தெரிந்து செயல்வகை: குறள் 10)**

**பகைவனை வெல்லுவதற்குரிய திறமை:**
(Strength Analysis)

பொது நிர்வாகத்துறை மற்றும் உயர்பதவிகளில் உள்ளவர்கள் எந்த ஒரு செயலை செய்வதற்கு முன்பும், அந்த திட்டத்தை நடைமுறைப்படுத்த தேவையான திறமைகள் அந்த செயலின் தன்மை. அதனால் விளையும் நன்மை, தீமை அதன் இறுதி விளைவு ஆகியவற்றை மிகத் தெளிவாக ஆராய வேண்டும். அத்துடன் செயல்படுவதற்குத் தன்னிடமுள்ள வலிமை, திறமை, தேவையான கருவிகள், ஆலோசனைகள், பொருள் வசதி ஆகியவற்றை கருத்தில் கொள்ளல் வேண்டும். இதுபோல் தம் பகைவனிடத்தில் உள்ள திறமைகள், தனக்கு மற்றும் பகைவர் ஆகிய இருவருக்கும் துணைபுரிவோரின் வலிமையையும் ஆராய்ந்து பார்த்து இதில் அனைத்து திறமைகளும் நம்மிடத்தில் மிகுதியாக இருந்தால் மட்டுமே அச்செயலை நடைமுறைப்படுத்தல் வேண்டும்.

**வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியுந்**
**துணைவலியுந் தூக்கிச் செயல் (வலியறிதல்: குறள் 1)**

எந்த ஒரு செயலிலும் வெற்றியிலும் மகிழ்ச்சி ஏற்படுகிறது இயல்பு. அதற்காக அளவு கடந்த துணிச்சல் மற்றும் நம்பிக்கையுடன் மரத்தில் ஏற்ற முயன்றவர். அக்கிளையின் நுனிப்பகுதியில் ஏறி நின்று மீண்டும் ஏற முயற்சி செய்வது (மேலும் பாராட்டு, சிறப்பு பெற முயல்வது) அவரது உயிரைப் பலிவாங்கும். ஆகவே எத்தகைய மன எழுச்சி, திறமை, ஊக்கம் இருந்தாலும் அவற்றுக்கெல்லாம் ஓர் எல்லை நிச்சயமாக உண்டென்று எண்ணிக் கட்டுப்பாட்டுடன் திகழ்வது சிறப்பு. இல்லையேல் அவர் தோல்வியடைவது உறுதி.

**நுனிக்கொம்பர் ஏறினா ரஃதிறந் தூக்கின்**
**உயிர்க்கிறுதி யாகி விடும் (வலியறிதல்: குறள் 6)**

**செயல்புரிவதற்கு ஏற்ற காலத்தை அறிந்து செயல்படுதல்**
(Time Management)

எந்த ஒரு செயலைச் செய்வதற்கும், அதற்குரிய சூழ்நிலைகள், தகுந்த காலம் ஆகியன ஒரு சேர வரும்வரை காத்திருப்பது சிறப்பு. எந்த நேரத்திலும் வீணாக பகைவரைச் சீண்டாமல் கட்டுப்பாட்டுடன் இருக்கும் தலைவன்/அரசன்/ நிர்வாகி அதற்குண்டான காலம் வரும்வரை பொறுமையுடன் காத்திருந்தால் இந்த உலகையும் மிக எளிதாகக் கைப்பற்ற இயலும். வானமும் வசப்படும். அத்தகைய காலம் வரும்வரை மனம் தளராமல் காத்திருப்பது மிக முக்கியம்.

**காலங் கருதி யிருப்பர் கலங்காது**
**ஞாலங் கருது பவர். (காலமறிதல் : குறள் 5)**

ஒரு சிறந்த நிருவாகி எண்ணிய குறிக்கோளை அடைவது மிகவும் இன்றியமையாததாகும். குறிக்கோளை அடைய பொறுமையுடன் காத்திருந்து அதற்கேற்ற சூழ்நிலை உண்டாகும்போது காலம் தாழ்த்தாது, பின்வாங்காமல் உடனடியாக அச்செய்கையை நிறைவேற்ற வேண்டும். அப்போது எடுத்த காரியம் கைகூடும். களவு மெய்ப்படும். மீனைப் பிடிக்க முடிவெடுத்த கொக்கு, மீன் தண்ணீரின் மேற்பகுதிக்கு வரும்வரை எந்தச் சலனமும் காட்டாமல் மீன் வந்ததும் அது விரைவதற்குமுன், விரைந்து கொத்திக் கொள்ளும். அத்தகைய அடக்கமும், துணிவும் உடையவன் சிறந்த நிருவாகியாகத் திகழ முடியும்.

**கொக்கொக்க கூம்பும் பருவத்து; மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த விடத்து (காலமறிதல்: குறள் 10)**

**செயல்பாட்டுக்கான தகுந்த சூழலில் செயலாற்றுதல்**
(Situation Analysis)

ஒரு செயலைச் செயல்படுத்தக் கூடிய வலிமையும், அதற்கேற்ற காலமும் சிறப்புற அமையப் பெற்றாலும் வெற்றியை முழுமையாக யாரும் கணக்கிட முடியாது. முழு வெற்றிக்கு, வினைபுரியத் தகுந்த இடத்தைத் தேர்வு செய்தலும் அவசியமானதாகும்.

முதலை ஆழமான தண்ணீருக்குள் இருக்கும்வரை மிகத் தைரியமாக எதையும் எதிர்கொண்டு வெல்லும் ஆற்றலுடன் விளங்கும். அது தண்ணீரிலிருந்து தரைப்பகுதிக்கு வந்தால் பிற உயிரினங்கள் மேலோங்கி முதலையை வெல்லும்.

அதுபோலவே செயல்புரிவதற்கு ஏற்ற இடத்தை ஒருவர் தேர்வு செய்து செயல்புரிவது சிறந்த நிர்வாகத்திறனுக்கு மேலும் மெருகூட்டும். இக்கருத்தை வெளிப்படுத்தும் குறள்.

**நெடும்புனலுள் வெல்லும் முதலை யடும்புனலின்**
**நீங்கி னதனைப் பிற (இடனறிதல்: குறள் 5)**

ஒரு செயலை செயல்படுத்தும்போது தேவையான பணபலம், மனித வளம், முன்னோர் பெற்ற சிறப்பு, பெருமை ஆகியவை பெற்றிருந்தாலும், அதனை எண்ணித் தன்னால் எந்த சூழலையும் கையாள முடியும் என்று அடுத்தவருக்குச் சாதகமான சூழல் உள்ள இடத்தில் சென்று செயல்புரிவது தமக்கு தோல்வியே தரும். எதிராளிக்கு, அவர் சொந்த இடத்திலிருந்து செயல்படும் வாய்ப்பே அவர் உயிரையும் கொடுத்து வெல்லும் திறனையும் ஊக்கத்தையும் அளிக்கும். இதனைக் கீழ்க்காணும் குறள் மூலம் நாம் அறியலாம்.

**சிறைநலனுஞ் சீரு மிலரெனினும் மாந்தர்**
**உறைநிலத்தோ டொட்ட லரிது (இடனறிதல்: குறள் 9)**

முக்கியமான பொறுப்பில் உள்ளவர்கள், தன்னிடம் எல்லாவிதமான அதிகாரங்களும் உள்ளது என்ற காரணத்தினால் எந்த இடத்திலும் முன்யோசனையின்றி செயல்படுவர். அச்சமயம், சரியான சூழலை, இடத்தை தேர்வு செய்யாததால் தம்மைவிட வலிமை குறையோரிடத்திலும் தோல்வியுறும் வாய்ப்பு உள்ளது. எனவே தான் என்ற அகம்பாவம் இருந்தால் அதை விட்டொழித்து அனைவரையும் அரவணைத்து தகுதியில்லாத இடத்தில் சென்று செயல்பட முனையக்கூடாது. அத்தகைய சூழலில் நாம் நம்மைவிட வலிமை குன்றியவரால் தோல்வியுறுவோம்.

சீற்றமும் வேகமும் கொண்ட போரில் பங்கேற்கும் ஆண் யானை பாகனுக்கு அடங்காமல் தனக்கு உள்ள நிலத்தைவிட்டு வெளியேறி அதன்கால் சேற்றில் புதைந்தால், உடனடியாக வெளியே வரமுடியாது. எளிய குள்ளநரிகள் கூட வலிய யானையை வெற்றி கொள்ளும்.

எனவே இடமும், சூழலும், சிறந்த நிர்வாகத்திற்கு உயிர்நாடி போல இன்றியமையாதாகும் இக்கருத்தைக் குறள்மூலம் நாம் அறிவோம்.

**காலாழ் களரி னரியிடுங் கண்ணஞ்சா**
**வேலாள் முகத்த களிறு (இடனறிதல்: குறள் 10)**

**பொருளின் சிறப்பு (financial Administration)**

இவ்வுலகில் அனைத்து காரியங்களுக்கும் உயிர்நாடியாக விளங்குவது பொருளே ஆகும். எனவே நேர்மையான முறையில் பொருள் தேடல், அதனைத் திறம்பட நிர்வகித்தல் வாழ்வில் முழு வெற்றியையும், பாராட்டையும் பெற்றுத் தரும். பல குணங்கள் இயல்பிலேயே இருக்க வேண்டும் என உணர்த்தும் வள்ளுவர், பொருளைத் தேடச் சொல்கிறார். ஏழ்மையில் பிறந்தாலும் பொருளீட்டுவதன் மூலம் ஒருவர் சிறப்புயர்வு அடைய இயலும்.

எனவே சிறப்பு/பெருமை, மதிப்பு வேண்டுபவர் நேர்மையான முறையில் பொருளை ஈட்டுதல் வேண்டும். பொருளில்லாதவரை எள்ளி நகையாடிய பகைவர்கள், பொருள் கொண்டவரை தம் செருக்கை ஒழித்து மரியாதை செய்யத் தொடங்குவர். பகைவனையும் அவனது செருக்கையும் வெல்லும், மிகக் கூர்மையான போர்க்கலன்களை விட வலிமை மிக்கது ஒருவன் ஈட்டிய செல்வமே.

**செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்**
**எஃகதனிற் கூரிய தில் (பொருள் செயல் வகை: குறள் 9)**

**முடிவுரை**

வள்ளுவரின் திருக்குறளில் நிர்வாகத்திறன் பற்றி, பல்வேறு நிலைகளில் எப்படி ஒருவர் சிறப்பாக செயலாற்ற முடியும் என்பதை மிகத்தெளிவாக, எளிமையுடன் விளக்கியுள்ளார். இது எக்காலத்திற்கும் பொருந்துவதாக அமைந்துள்ளது. இதனாலே திருக்குறளை ‘உலகப் பொதுமறை’ என்று போற்றுவது ஏற்புடையதே. இந்நூலை ‘தமிழர் வேதம்’ என்றழைக்கப்படுவதால் தமிழ்மொழி சார்ந்த அனைவருக்கும் பெருமை.

# வள்ளுவர் காண விளைந்த சமூகம்

**புலவர் வெ.சேதுராசு**

கடவுளையும், காவலரையும் புலவர் பெருமக்கள் பாடிக் கொண்டிருந்த நேரத்தில், மனிதகுலத்தைப் பற்றிப்பாடிய, ஒரே புலவர் வான் புகழ் வள்ளுவர் ஒருவரே. புத்தரும், இயேசுவும், நபிகளும் அவரவர் நிலையில், நின்றும் கூறினர். திருவள்ளுவர், ஒருவர்தான், மக்களது நிலையில் நின்று, குறுகிய, மிகச்சிறிய, ஒன்றே முக்கால் அடியில், ஏழே சீரில், குறள்வெண்பாவில் வடித்துத்தந்து, சமுதாயப்புரட்சியை விளைவித்தார்.

ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளிலும், தமிழ் இனத்தையோ, தமிழ்மொழியையோ, தமிழ்ப் பண்பாட்டையோ, எங்குமே சிறப்பித்துக்கூறவில்லை. திருக்குறளில், மக்களையும், உலகத்தையுந்தான் கூறுகின்றார். யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற தத்துவந்தான், வள்ளுவர் காண, விழைந்த சமூகம். இவ்வாறு, வள்ளுவத்தின், பல்வேறு, சமூகப்புரட்சியை விளக்குவதே, இவ்வாய்வின் நோக்கமாகும். சமூகச் சிந்தனை என்பது, மனிதனை, மனிதனாகவே இருக்கச் செய்வது. மனிதப்பண்பிலிருந்து மாறி, மிருகமாக, விலங்காக, மாறாமல் தடுத்து, நல்வழிப்படுத்துவதுதான் வள்ளுவர் காண விளைந்த சமூகம்.

புத்தர்பெருமான் வழியில், சீர்திருத்தக்கருத்தை, சமுதாயப் புரட்சியை, மனிதனுக்காகச் செய்தவர், திருவள்ளுவர் ஒருவரே. வள்ளுவர் மட்டுமே. துறவியாகி, பிரம்மச்சாரியாகி, பாசத்தையும் பற்றையும், முற்றும் அறுத்துவிடுங்கள். துறந்து விடுங்கள். இவையெல்லாம், அப்பேரின்பம் பெறத் தடைக்கல்லாக இருப்பது. பொருளும் பற்றுந்தான், என்றெல்லாம், அறநூலார் அறிவுரை கூறிய நேரத்தில் வள்ளுவப் பெருந்தகையார் மட்டுமே.

அருளில்லார்க் கவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்று துணிந்து கூறினார். இந்தச் சமூகத்

தொண்டை, அக்காலத்தில் துணிந்து கூறியவர் திருவள்ளுவர் ஒருவர்தான்.

இல்லறம் துன்பம், குடும்பம் கொடுமை, உலகம் மாயை, வாழ்வும் மாயை. நாம் காணும் சுகமும் மாயை என்று, எல்லோரும் சொன்னபொழுது, இல்லறமே நல்லறம் என்று, ஒரே அடியாக அடித்துச் சொன்னவர், திருவள்ளுவர் ஒருவரே.

**இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாந் தலை**

என்று மேன்மைப்படுத்தி நல்வழியில் செல்கின்ற இல்லறத்தோடு கூடிய, இல்வாழ்வானை, மற்ற வழியில் செல்பவர்களைக் காட்டிலும், சிறந்தவன் என்கிறார் தெய்வப்புலவர்.

வள்ளுவர் மனிதனால் கடைப்பிடிக்க முடியாத எதையும் அவர் கூறவில்லை. இல்லறத்தில் இருந்துகொண்டே மனிதனால், கடைப்பிடிக்க முடிந்தைதத்தான் கூறினார். ஒவ்வொரு அதிகாரத்திலும், ஒவ்வொரு குறளிலும் அவர் கருத்தைக் கூறி விடுகிறார். பின்னர், பத்துபத்துக் குறள்களாக ஏன் கூறினார்? முதலில் கடுமையான, ஒரு விதியை வகுத்துக்கூறி, பின்பு, ஓரளவு தளர்த்தி, பிறகு, இறங்கி வந்து, சாதாரண ஏழை, எளிய பாமரமக்களால் கடைப்பிடிக்க முடிந்ததை மட்டும் கூறினார். இதுவே வள்ளுவர் காண விழைந்த சமூகம்.

**மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற**

என்ற குறளில், பணம் படைத்தோர், பல தொழில்கள் தொடங்கி, மக்களுக்கு வேலை வழங்கி, வாழ வைக்கச் செய்யுங்கள். சிறிய வாணிகம், நேர்மையாக நடத்தி, பலருக்கு உதவி செய்யுங்கள். காளையர்கள், பயிர்விளைவித்து நாட்டுக்கு நல்லது செய்யுங்கள். வாய்ப்பற்றோர், உடலால் பிறருக்கு உதவி செய்யுங்கள். பணம், பொருள் படைத்தோர் பணத்தாலும், பொருளாலும், உதவி செய்யுங்கள். இவ்விரண்டும் இல்லாதவர், நன்மை செய்ய வாய்ப்பு இல்லையெனில், தீமையை நினையாமல் இருந்தால், அதுவே பவ அறங்களைச் செய்த பலன் தரும் என்கிறார் திருவள்ளுவர்.

பொருளில்லாதவரைவிடப் பொருளுடையவரிடம் அமைதியும் அடக்கமும் இருப்பது அரிதாகும் என்று கூறுகிறார். செல்வர் செல்வத்தின் மேல், குறிக்கோளாக இருப்பர். அடக்கமாக இருந்தால், பலசெல்வங்கள் பெருகும். அந்த

அடக்கமே ஒரு செல்வம் என்று கூறி, மனத்தை மாற்றுகின்றார் வள்ளுவர். மாற்றுகிறது வள்ளுவம்.

எல்லோர்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும் செல்வர்க்கே செல்வந் தகைத்து என்பது வள்ளுவர் காண விளைந்த சமூகம். அறநூல்கள் அனைத்தும் நல்லவராகவும், பக்தர்களாகவும், பண்பாளர்களாகவும் இருங்கள் என்று கூறுகின்றன. ஆனால் வள்ளுவர் மட்டும், ஒழுக்கமாக இருங்கள் என்று கூறுகிறார். பூனை போன வழியே, பூனையின் குட்டியும் போகலாம் என்பதைப் போல், ஒழுக்கம் இருப்பின், மற்றவை தானாகவே வந்துவிடும். இதனையே வள்ளுவம்,

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்**

என்கிறது.

ஒழுக்கம் உயிரைப் போன்றது. உயிரைப்போல், ஒழுக்கத்தைக் காத்தல் வேண்டும். ஒழுக்கத்துடன் வாழ்பவரே உயிருடன் வாழ்பவராவர் என்கிறார் வள்ளுவர்.

வாரி வழங்கி தான தருமம் செய்தால், மோட்சம், சொர்க்கம் கிடைக்குமென்று, அறநூல்கள் கூறுகின்றன. ஆனால், வள்ளுவர், இல்லாதவர்களுக்கு ஒன்றைக் கொடுத்து உதவுவதே ஈகை. மற்றவையெல்லாம் பயன் கருதிச் செய்யப்படுவன.

**வறியார்க்கு ஒன்றீவதே ஈகை மற்றெல்லாங்**
**குறியெதிர்ப்பை நீரது டைத்து**

என்று வள்ளுவர், சமூகத்திற்குக் கூறுகிறார்.

அசுவமேதயாகம், கோமேதயாகம், வேள்வியாகம் என்ற பெயரால் பல்லாயிரக்கணக்கான உயிர்களையும், உணவுகளையும் வேள்வித்தீயில் இட்டுப் பலியாக்குவதைக் கண்ட வள்ளுவர்,

**அவி சொரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று**

என்று கூறினார்.

பல ஆயிரம் வேள்விகளைச் செய்வதைக் காட்டிலும், உயிர்களைக் கொன்று, தின்னாமல் இருந்தாலே, மேலான பலனை அடையலாம் என்கிறார். ஒருவன், ஒரு கன்னத்தில்

அடித்தால், மறுகன்னத்தைக்காட்டு. ஒருவன் தீங்கு செய்தால் பொறுத்துக்கொள் என்று எல்லோரும் கூறிக்கொண்டு இருந்தபொழுது,

**இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயஞ் செய்து விடல்**

என்று, வான்புகழ் வள்ளுவர் கூறுகிறார்.

தனக்குத் துன்பம் செய்தவர்க்கு, அவரே வெட்கித் தலைகுனியும்படி, அவருக்கு, நன்மையைச் செய்துவிடு. நீ செய்த அந்த நன்மையையும் உடனே மறந்துவிடு என்று சமூகத்திற்குக் கூறுகிறார் வள்ளுவர். மக்களுள், மதவேறுபாடும், சாதி வேறுபாடம் கொண்டிருக்கின்ற நாணந்தரும் நிலையினைக் கண்ட வள்ளுவப் பெருந்தகை,

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்**

என்கிறார்.

பிறக்கும்போது எவ்வித மாறுபாடும் இல்லாமல் பிறக்கின்றனர். இடையிலேதான் சாதி மடமையும் மத மடமையும் புகுந்து தாழ்ந்தவன், உயர்ந்தவன் என்ற வேறுபாடுகள் தோன்றுகின்றன. அவரவர் செய்கின்ற தொழிலில் தான், வேறுபாடே தவிரப் பிறப்பால் வேறுபாடு இல்லை என்று வள்ளுவர் தான் காண விளைந்த சமூகத்திற்குக் கூறுகிறார்.

கிருத்தவர், பைபிளை போற்றித் தம்வாழ்வாகக் கொள்வதைப் போல, தமிழர் அனைவரும் உலகமக்கள் அனைவரும் தமது வாழ்வாகத் திருக்குறளைக் கொள்ளுதல் வேண்டும்.

திருக்குறள் ஓர் அறநூல்.
திருக்குறள் ஒப்பற்ற இலக்கியம்.
திருக்குறள் தமிழர்தம் வாழ்வியல்.
எல்லார்க்கும் பொதுவானது.
எல்லார்க்கும் தேவையானது.
எல்லார்க்கும் நன்மை தரவல்லது.

நல்லதொரு, ஐயன் திருவள்ளுவரின், தெய்வீகக் குறளை, நாம் அனைவரும் படித்தல் வேண்டும். நம் அனைவர் இல்லங்களையும் அய்யன் குறளும், அய்யன் படமும் அலங்கரிக்க வேண்டும்.

# வள்ளுவர் காட்டும் நட்பு

கோ.அரிகிருஷ்ணன்

'கோட்டுப்பூப் போல மலர்ந்துபின் கூம்பாது' என்று நட்பின் பெருமையை விளக்குகிறது நாலடியார். இந்நட்பு இனம், மதம், சமயம், மொழி, நாடு என்ற எல்லாத் தடைகளையும் தாண்டி, உள்ளப் புணர்ச்சி கொண்டு பழகும் உறவாகும். வானவில்லின் வண்ணம்போல் சாதி, மதத்தால் வேறுபட்டிருந்தாலும் நட்பு என்ற ஒன்றில் ஒன்றுபட்டு வாழ்பவர்கள் நண்பர்கள். உன்பொருள் என்பொருள் என்பது நட்பினில் இல்லையே. நண்பர்களில் ஆண் என பெண் என பேதமும் இல்லையே. பூவாசமாய் சேர்ந்திடும் என்ற கூற்றிற்கிணங்க, நட்பு உயர்ந்து நிற்கிறது. இத்தகைய சிறப்பு வாய்ந்த நட்புப் பற்றி உலகப் பொதுமறையான திருக்குறள் என்ன சொல்கிறது என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**நண்பரும் வாழ்க்கைத் துணையும்**

நண்பரும் வாழ்க்கைத்துணையும் ஒன்றே. கணவன் மனைவி உறவு அமைதல் போன்று, நல்ல நண்பர்கள் அமைவதும் முன்ஜென்ம பந்தமாகும். யாயும் ஞாயும் யாரா கியரோ, எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர், யானும் நீயும் எவ்வழி யறிதும், செம்புலப் பெயனீர் போல, அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே எனவரும் குறுந்தொகைப் பாடல், உறவுமுறை இல்லாத ஆணும் பெண்ணும் அன்பினில் கலந்துவிட்ட நிலையை உணர்த்துகிறது. இது நட்பிற்கும் பொருந்தும். இருவர் நட்பில் ஒருவர் பொறை என்பதுபோல், நண்பராகட்டும் வாழ்க்கைத் துணையாகட்டும் இருவரில் ஒருவர் பொறுத்தால்தான் அல்லது விட்டுக் கொடுத்தால் தான் அது நல்ல உறவாக அமையும். இந்த இரண்டிற்கும் சுயநலமென்பதும் இல்லை.

**உண்மை நட்பு**

இதயக் கூட்டில் குடியமர்த்தி இரண்டு இதயம் சுமக்கின்ற உருவமில்லாக் குழந்தை, இதற்கு வயது தேவையில்லை உருவம் கூட காணாமல் உறவு கொள்ள வரும் நட்பு என்று நட்பைப் பற்றியும் உயிரையும் தருகிற ஒருவனை அடைவதால் பலதுன்பமும் விலகிப் போய்விடும் என்று நண்பரின் பெருமையையும் பாலின் செய்யிட்கோவை புகழ்ந்துரைக்கம். நல்ல நூல்களைக் கற்கக் கற்க மேன்மேலும் இன்பம் பயப்பது போல, நற்பண்பு உடைய நல்ல நண்பருடன் கொண்ட நட்பும் பழகப் பழக மிகுந்த இன்பத்தைக் கொடுக்கும். இதனை, நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடை யாளர்த் தொடர்பு எனும் குறள் உணர்த்துகிறது. அத்தகைய நண்பன் துன்புறும் காலத்து அத்துன்பத்தை அவன் உரைக்கா முன்பே போக்குவதும் நல்ல நண்பனின் கடமைகளாகும்.

மேலும் முகமலர்ச்சி கொள்வது மட்டுமல்லாது அகமும் மலர்ச்சி கொள்ளும்படியாக உள்ளன்பு கொண்டு நட்பு கொள்வதும், நண்பர்கள் நெறி தவறிச் செல்லுங்கால் அத்தவறைத் தடுத்து நிறுத்தி நல்வழிப்படுத்துவதும், பழகிய உரிமையால் தன் நண்பன் தன்னைக் கேட்காமல் வருந்ததக்கச் செயல்களைச் செய்தாலும், அது அவன் அறியாமையால் செய்கிறான் என்றோ, மிகுந்த உரிமையால் செய்கிறான் என்றோ உணர்ந்து, தாம் தொன்றுதொட்டு பழகிவந்த அன்பின் வழிவந்த கேண்மையாகிய நட்பைக் கைவிடாது நட்பு கொள்வதும் நல்ல நண்பனின் இலக்கணமாகும்.

**தக்கார் நட்பு**

நட்பு கொள்ள வேண்டுமென்றால் நல்ல நண்பன் வேண்டும். நட்பு கொள்ள வந்தவரை ஆய்ந்து நட்பு கொள்வோம் என்ற கூற்றிற்கிணங்க, நண்பர்களை ஆராய்ந்து நட்பு கொள்ள வேண்டும். அவ்வாறு ஆராயாமல் நட்பு கொண்டோமானால், இறுதியில் தான் சாவதற்குக் காரணமான துயரத்தை உண்டாக்கும். அவ்வாறு ஆராயுங்கால், ஒருவனுடைய குணம், குடி, குற்றம், இனம் ஆகியவற்றை ஆராயவேண்டும். உயர்ந்த குடியில் பிறந்து தனக்கு வரும் பழிக்கு அஞ்சுகின்றவனை ஒன்று ஈந்தும் கொளல் வேண்டும் என்றெல்லாம் தக்காரிடத்தில் நாம் கொள்ளும் நட்பின் இயல்புகளை விளக்கிச் சொல்கிறார் வள்ளுவர்.

இத்தகைய குற்றமில்லாத தக்காரின் நட்பு வளர்பிறைபோல் வளரவேண்டும் என்பதை, நிறைநீர நீரவர் கேண்மை எனும்சொல் உணர்த்துகிறது. இச்செய்தியை நாலடியாரும் நுவலும், கற்றாரின் நட்பு நுனிக்கரும்பிலிருந்து அடிவரைத் தின்றார் போன்று பழகப் பழக இனிமை பயக்கும் என்ற நாலடியாரின் செய்தியை, பயில்தொறும் பண்புடையாளர்த் தொடர்பு என்னும் குறட்பாவில் விளக்குவார் வள்ளுவர். நண்பர்கள் ஒன்றாக இணைந்து பழக வேண்டுமென்பதல்ல. கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் போல நட்பு என்ற ஒத்த உணர்ச்சி இருந்தாலே போதுமானது என்ற வள்ளுவரின் கூற்றை, பிரியினும் நட்பு வளரும் உளமிரண்டு சேர்ந்து இருக்கப் பெறின் என்ற தற்காலக் கவிஞனின் குறட்பாவும் உணர்த்துகிறது.

**தகவிலார் நட்பு**

இன்றைய உலகில் தன்னுடைய தேவைக்காக நட்பு கொள்பவர்களே மிகுதியானவர்கள். அவர்கள் பணத்திற்காகவும் பொருளுக்காகவும் இன்பத்திற்காகவும், இனம், மதம், மொழிக்காகவும் நட்புகொண்டு தேவை முடிந்ததும் கண்டும் காணாமல் சென்று விடுவார்கள். பொருளுக்காக நட்பு கொள்கிறவர்களை விளைமகளிர் என்றும் இத்தகையோரின் நட்பை ஒன்றும் ஈந்தும் ஒருவுக, பெருகலின் குன்றல் இனிது என்றும் கூறுவார் வள்ளுவர்.

நண்பருக்குத் துன்பம் வரும் காலத்து அத்துன்பத்தைப் போக்காது விட்டு நீங்குவாரை கல்லா மா என்று கடிந்துரைப்பார். நல்லது செய்தல் ஆற்றீ ராயினும், அல்லது செய்தல் ஓம்புமின் என்பதுபோல, பேதை பேருங்கெழீஇ நட்பின் அறிவுடையார் ஏதின்மை கோடி உறும் என்று அறிவிலார் நட்பைவிட அறிவுடையார் நட்பின்மை கோடி மடங்கு சிறந்தது எனக்கூறுவார். சொல்லும் செயலும் வேறானவர்களின் நட்பும் முகத்திற்கு நேர் புகழ்ந்துரைத்தும் புறத்தே இகழ்பவரின் நட்பும் கொள்ளற்க என்றுரைப்பார்.

தகவிலாரின் நட்பினை அடிக்கரும்பிலிருந்து நுனிக்கரும்புவரைத் தின்றாற்போன்றது என்றும் இது, ஆரம்பத்தில் இனிமையாகவும் காலம் செல்லச் செல்ல வெறுக்கும் தன்மையுடையது என்றும் நாலடியார் கூறுகிறது. இதனையே, பிறைமதிப் பின்நீர பேதையார் நட்பு எனக்கூறும் வள்ளுவம்.

**நட்புப் போலி**

ஓர் ஆண் ஆணோடு நட்பு கொள்ளும்போது ஒரு பெண் பெண்ணோடு நட்பு கொள்ளும்போதும் அந்த நட்பு கடைசிவரை நட்பாகவே இருக்கிறது. ஆனால், ஒரு ஆணும் பெண்ணும் நட்பு கொள்ளும் போது சிலநேரங்களில் அது காதலாக மாறிவிடுகிறது. இதற்குக் காரணம் என்ன? ஒத்த பாலினத்தார் கொள்ளும் அன்பு நட்பாகவும் இருவேறுபட்ட பாலினத்தார் கொள்ளும் அன்பு காதலாகவும் மாறுவதற்கு பாலின ஈர்ப்பே காரணமாகும். இது தாய் மகனிடத்துக் கொள்ளும் பாசம், தந்தை மகளிடத்தில் கொள்ளும் பாசம் போன்றது.

இவ்வாறு பால்மாறி நட்பு கொள்பவர்கள் அனைவரும் காதலர்களாக மாறிவிடுகின்றனர் என்று சொல்லமுடியாது. ஒரு சிலரே அதற்கு ஆட்படுகின்றனர். அவர்களைக் கேட்டால், நாங்கள் நண்பர்களாகத் தானிருந்தோம். பின் காதலர்களாக மாறிவிட்டோம் என்று கூறுவார்கள். இது முற்றிலும் தவறானது. நட்பில் காதல் தோன்றாது. கண்கள் தொட்டுத் தீட்டுகின்ற, வண்ண ஓவியம்தான் காதல் இது, கண்ணால் பூக்கும் பூ என்பது போல அவர்கள் கண்டதுமே காதல்வயப்படுகின்றனர். அதை மறைப்பதற்கு நண்பர்கள் எனப் பொய்வேடம் போடுகின்றனர். இவர்களை, மனத்தின் அமையாதவரை எனைத்தொன்று செல்லினால் தோறாற்பாற் றன்று எனக்கூறுவார் வள்ளுவர்.

**முடிவுரை**

செயற்கரிய யாவுள என்பதற்கேற்ப, நட்பைக் காட்டிலும் செய்து கொள்வதற்கு அரியசெயல் எதுவும் இல்லை. அத்தகைய நண்பர்களைத் தேர்ந்தெடுக்கும்போது அவர்களின் குணம், குடி, குற்றம், இனம் ஆகியவறை ஆராய்ந்து நட்பு கொள்ள வேண்டும். நட்பு கொள்ளுங்கால் நல்லவரின் நட்பு வளர்பிறை போன்றும் தீயவர்களின் நட்பு தேய்பிறை போன்றும் அமையவேண்டும். நட்பு என்ற உணர்ச்சியில் நண்பன் துன்புறும்போது அத்துன்பத்தைத் தானேமுன்வந்து போக்க வேண்டும். அவ்வாறு உதவாவது தன்னை விட்டு நீங்கின் அவருடைய நட்பை ஒன்று ஈந்தும் ஒருவுருதல் வேண்டும். அன்பின் வழிவந்த கேண்மையால் தன் நண்பன் தன்னைக் கேளாது, தனக்குத் துன்பம் தரும் செயல்களைச் செய்தாலும் அது அவனது அறிவின்மையால் நிகழ்கின்றன என்றுணர்ந்து நட்பாட வேண்டும் என, நட்பின் இயல்பு, நண்பு கொள்வாரின் தன்மை முதலியவற்றை வள்ளுவர் தமது நூலில் நட்பியல் எனும் பகுதியில் விளக்கிச் சொல்கிறார்.

# வள்ளுவர் உணர்த்தும் கல்விச் சிந்தனைகள்

சீ. கண்ணன்

**முன்னுரை**

திருவள்ளுவர் தந்த திருக்குறள் நூல் உலகப்பொதுமறை இது தமிழுக்கும் தமிழனுக்கும் எக்காலத்திற்கும் அழியாப் பெருமை சேர்க்கும் நூல் இந்நூலில் உள்ள 1330 பாக்களும் மானுட வாழ்விற்கும் உயர்வுக்கும் வழிகாட்டும் கருத்துக்கள் ஏராளம் ஏராளம். அவை குழந்தைகள்முதல் பெரியவர்கள்வரை கிராமம் முதல் நகரம்வரை உலகில் உள்ள மாந்தர் அனைவரும் ஏற்கத தக்க வகையில் அமைந்துள்ள அருமையன பாக்கள். இவற்றில் அறிவைத் திறக்கும், அறிவை விரிவாக்கும் கல்விச் சிந்தனைகள் பற்றி இக்கட்டுரையில் சிலவற்றைக் காண்போம்.

**அழியாச் செல்வம் கல்வி**

கல்வி என்பது, கற்ற ஒருவன் பெற்ற அழியாச் செல்வம் ஆகும். தீங்கிழைக்காதது பெருமை தரக்கூடியது கல்வி. சென்ற இடமெல்லாம் சிறப்பைத் தரக்கூடியது. மற்றயச் செல்வங்கள் எல்லாம் செல்வங்கள் ஆகாது என்கிறார் திருவள்ளுவர். இதனை வலியுறுத்தும் அறிய குறளே

**கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடல்ல மற்றை யவை**

என்பது. கல்வி என்ற செல்வம் காலத்தால் அழியாதது கொடுக்கக் கொக்கப் பெருகுவது நீரால் நெருப்பால் அழிக்க முடியாதது. கள்வரால் களவாடமுடியாதது என்பதே உண்மை.

**ஆவது அறியவைக்கும் கல்வி**

இன்னது செய்தால், இன்னது விளையும் என்ற அறியச் செய்வது அறிவு அந்த அறிவைத் தருவது கல்வி. கல்வியால்

பெறப்பட்ட அறிவால்தான் இதனை உணரமுடியும் என்பது வள்ளுவன் சொன்ன வாக்கு.

**அறிவுடையார் ஆவது அறிவார், அறிவிலார்**
**அஃதறி கல்லா தவர்**

அறிவு என்பது அறியப்படுவது. படித்தும் அறியலாம் கேட்டும் அறியலாம். அப்படிப் பெறப்பட்ட அறிவானது வயதால் முதிர்ந்து தளர்ச்சியுற்ற ஒருவருக்கு ஊன்றுகோல் எப்படி உதவுகிறதோ அப்படி கேட்டு அறிந்த அறிவானது சமயத்தில் உனக்கு உதவும் என்கிறார் வள்ளுவர்.

**கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை**

**இன்றியமையாதது கல்வி**

கல்வி ஏன் இன்றியமையாதது என்று சொல்கிறோம் என்றால் அது கண்ணைப் போன்றது. கண் இல்லை எனறால் என்ன ஆகும். எதுவும் தெரியாது. குருடனாகிவிடுவோம். அப்படித்தான் கற்காத ஒருவனிடம் ஒரு புத்தகத்தை கொடுத்தால் படிக்கத் தெரியாது என்பான். பெயர்ப்பலகையைக் காட்டி இது என்ன என்றால் தெரியாது என்பான். ஆனால் படித்தவர்களிடம் கேட்டால் உடனே சொல்வார்கள் படிக்காதவர்கள் பெற்றது கண்ணல்ல புண்ணாகும்.

**கண்உடைய தென்பவர் சிற்றோர், முகத்திரண்டு**
**புண் உடையார் கல்லாதவர்**

**ஈத்துவக்கும் செல்வம் கல்வி**

கல்வி என்பது அழியாத செல்வம். அதனை நாமே வைத்துக் கொள்ளக் கூடாது. நாம் கற்ற கல்வி கல்லாத ஒருவற்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுப்போமானால் அது பெருகுமே ஒழிய குறையாது. மற்றவர்க்கும் அது பயன்படும். தன் செல்வத்தை பொருளை பிறருக்கு கொடுத்து உதவினால் பெறுவது இன்பம்.

**ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை**
**வைத்து இழக்கும் வன்கணவர்**

கொடுப்பது பொருள் மட்டும் அல்ல, கல்வியையும் கொடுக்கலாம் என்பது இங்கு உணரத் தக்கது எப்படிக் கற்க வேண்டும்?

**உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்**
**கடையரே கல்லா தவர்**

செல்வம் உடையவர்முன் இல்லாதவர்கள், வறியவர்கள் எப்படி அடங்கி ஒடுங்கி, பணிந்து தனக்கு வேண்டியதை எப்படிக் கேட்டுப் பெறுகிறார்களோ அப்படி, கற்றவர்முன் கல்லாதவர்கள் பணிந்து, வணங்கி கல்வியைப் பெறுதல் வேண்டும் என்று மேற்கண்ட குறளில் கூறுகிறார் வள்ளுவர்.

**கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக**

ஒருவன் கல்வியைக் கற்க வேண்டும். பள்ளி சென்றும் கற்கலாம், படித்தவரிடம் சென்றும் கற்கலாம், ஆனால் தெளிவாகக் குற்றமறக் கற்றுத் தெளியவேண்டும். கற்க வேண்டிய, பயனுள்ள நூல்களைக் கற்க வேண்டும். அப்படி நல்ல நூல்களைக் கற்றுத் தெரிந்து கொண்டதுபோல அந்தக் கல்வி அளித்த, காட்டிய வழியின்படி வாழ்வது காட்டுவதுதான் பயனுள்ளது, கற்றதற்கு அடையாளம் என்கிறார்.

**ஏன் கல்வி கற்க வேண்டும்?**

கல்வியை ஒருவன் ஏன் கற்க வேண்டும் என்றால் கல்வி என்பது அழியாத செல்வம், அது பெருமை புகழ் தருவது. இன்பம் தருவது. பயன்தருவது. தாம் தரும் கல்வியால் உலகம் இன்புறுகிறது. என்று அறியும் கற்றவர்கள் மேலும் மேலும் கற்க விரும்புகிறார்கள்.

**தாம் இன்புறுவது உலகின் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்**

ஒருவன் கற்ற கல்வியானது இந்த பிறவியில் மட்டுமல்ல ஏழு தலைமுறைக்கும் பயன்தரக்கூடியது. இதனை,

**ஒருமைக் கண் தான் கற்ற கல்வி**
**எழுமையும் ஏமாப் புடைத்து**

என்கிறார் வள்ளுவர்.

**முடிவுரை**

நாம் மனிதனாக வாழ, மாண்புடையவனாக வாழ வேண்டுமாயின் கல்வி அவசியம். அந்தக் கல்வியை, தோண்டத் தோண்ட மணற்கேணியில் நீர் ஊறுவதுபோல, மாந்தன் கற்க கற்க அறிவு பெருகும் என்கிறார் வள்ளுவர்.

**தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு**

எனவே பெருமை தரக்கூடியதும், ஏழு தலைமுறைக்குப் உதவி செய்யக் கூடியதும், நம்மை விலங்கிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதும் கல்வியே ஆகும் என்று கூறுகின்ற வள்ளுவனின் கருத்துகளை மேற்கொண்டு வாழ்வில் கல்விச் செல்வத்தை வரையின்றிப் பெற்று வாழ்வினை வாழ்வாங்கு வாழ்ந்து காட்டுவோமாக!

# வள்ளுவர் வகுத்த வாழ்வியல் நெறி

பாவலர் ப. கோ. நாராயணசாமி

**முன்னுரை**

உலகப்பொதுமறையாம் உன்னதத் திருக்குறளை உலகிற்களித்தவர் திருவள்ளுவர் அதனால்தான் பாட்டாலே வையத்தைப் பாவிக்க வந்தப் பாட்டுக்கொரு புலவன் பாரதி சொன்னான்.

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**

பாரதி பாடியதுபோல் வள்ளுவனை உலகுக்குத் தந்ததால்தமிழ்நாடு பெருமையுற்றது. தமிழ்மொழி சிறப்பை பெற்றது. வள்ளுவன் யார்? ஒரு தமிழன் "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்று இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே பொதுமை பேசிய கணியன் பூங்குன்றனாரின் வழி வந்தோன் வள்ளுவன் அனைத்தையும் உலகாகக் கண்பவன். இப்படி ஒரு அறிஞன் உலகில் வேறு எந்த நாட்டிலும் தோன்றயதாக நான் கேள்விப்படவில்லை. திருக்குறளைப்போல் வேறு எந்த மொழியிலும் இரண்டாயிரம் ஆண்டின் முன் இருந்ததாக யானறிந்தவரை இல்லை என்றே கருதுகிறேன். இருந்தால் கூறும்படி ஆன்றோரை கேட்டுக் கொள்கிறேன்.

திருக்குறள் திருவள்ளுவன் உலகுக்குத் தந்த ஒப்பற்ற தமிழ்மறை இதில் திரு என்பது செல்வத்தைக் குறிக்கும். அழகைக் குறிக்கும். இன்னும் பல பொருளைக் குறிக்கும். குறள் என்பது ஏழு சீர்களைக் கொண்ட குறள் வெண்பாவைக் குறிக்கும் திருக்குறள் என்பது 1330 குறள் வெண்பாக்காளைக் கொண்டது. பத்து குறள்களைக் கொண்டது ஓர் அதிகாரம் அப்படி 133 அதிகாரங்களைக் கொண்டது.

அறம், பொருள், இன்பம் என்ற முப்பிரிவுகளைக் கொண்ட முப்பால் ஆகும். உலகில் தோன்றிய மாந்தர் அனைவருக்கும் பொருந்தும், கருத்துகளைக் கொண்டது. மொழி, இனம் நாடு, சமயம், சாதி கடந்து அனைவருக்கும் வாழ்வியல்

நெறிகளைக் கூறுவதால் இது உலகப் பொதுமறை என்று உலகோரால் போற்றப்படுகிறது வள்ளுவர் கூறிய முக்கிய வாழ்வியல் நெறிகளைக் காண்போம்.

வாழ்வியல் நெறிகளை வள்ளுவன் தான் படைத்த திருக்குறளில பாயிரம் அல்லாது இல்லறவியல் துறவறவியல், ஊழியல், அரசியல், அமைச்சியல், அரணியல், கூழியல், படையியல், நட்பியல், குடியியல் களவியல் மற்றும் கற்பியல் என 12 இயலில் கூறுகின்றான்.

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்**

என்று பிறப்பால் அனைவரும் சமம். அவன் செய்யும் தொழிலால் திறமையால் வேறுபடுவான் என்று உலகிற்கறிவித்தான் வள்ளுவன். அப்படி பிறந்த மனிதன் இறக்கும் வரை உள்ள காலமே வாழ்க்கை ஆகும். அந்த வாழ்க்கையை எப்படி எல்லாம் வாழவேண்டும் எப்படியெல்லாம் வாழக்கூடாது எனறு உலகமக்களுக்கு நடுநிலையில் இருந்து நல்ல நெறிகளைக் கூறியுள்ளாள். ஒரு ஆணும், ஒரு பெண்ணும் சேர்ந்து தொடங்குவதே இல்லற வாழ்க்கை, அது எப்படி அமையவேண்டும் என்பதை இல்லறவியல்இல் வாழ்க்கை எனும் அதிகாரத்தில் கூறி உள்ளான்.

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

என்னும் குறளில் அன்பையும் அறத்தையும், அடிப்படையாகக் கொண்டு வாழும் வாழ்வு பண்பையும் பயனையும் கொடுக்கும் என்கிறான். தலைவனும் தலைவியும் அன்பு கொண்டு பழகி அறச் செயல்களில் ஈடுபட்டு அறவழியில் பொருளீட்டி வாழ வேண்டும் என்கிறான். அறம் இல்லறம் துறவறம் என்று இருவகைப்படும். அதில் இல்லறமே சிறந்தது. துறவறம் மேற்கொண்ட துறிவிக்கும், பெற்றோர்க்கும், பிள்ளைகட்கும், இயலாதவர்க்கும் இல்லறத்தானே துணை. அந்த இல்லறத்தை பிறர் பழிக்கா வண்ணம் சிறப்பாகவும் மற்றவர் போற்றும் வண்ணம் வாழ வேண்டும் என்பதை,

**அறன் எனப்பட்டதே இல்வாழ்கை அஃதும்**
**பிறன்பழிப்ப தில்லாயின் நன்று**

என்ற குறள்மூலம் கூறுகின்றான்.

இல்வாழ்க்கை மேற்கொண்ட இருவரும் எப்படி வாழ வேண்டும். தலைவன் எப்படி பொருளீட்டி குடும்பத்தைக் காத்து

நடத்திட வேண்டும் தலைவி எத்தகைய பண்புகளைக் கொண்டவனாக இருக்க வேண்டும் என்பதையெல்லாம் விரிவாக வள்ளுவன் கூறுகின்றான்.

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்**

வாழ்வாங்கு வாழ்வது எப்படி? என்றால் குடும்பம் நடத்தப்பொருள் வேண்டும். அந்தப் பொருளை அறவழியில் ஈட்ட வேண்டும் உழைத்த பொருளீட்ட வேண்டும். பிறரை துன்புறுத்தாமல், பிறர் பொருளைத் திருடாமல் நல்லவழியில் ஈட்டிய பொருளாக இருக்க வேண்டும் அந்தப் பொருள்மூலம் குடும்பம் நடத்தினால்தால் இல்லறம் இன்பமாக இருக்கும். இதைத்தான்,

**அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து**
**தீதின்றி வந்த பொருள்**

என்னும் குறள்மூலம் நன்னெறி காட்டுகிறான்.

இல்லறத் தலைவியானவள் எப்படி இருக்க வேண்டும்? எப்படி இருக்கக் கூடாது என்பதை வாழ்க்கைத் துணைநலம் என்ற அதிகாரத்தில் விளக்குகிறான். குடும்பத்திற்கு ஏற்ற நல்ல குணங்களை உடையவனாக இருக்க வேண்டும். தன் கணவனின் வருவாய்க் கேற்ப குடும்பம் நடத்திட வேண்டும். கற்பியல் சிறந்தவனாக இருக்க வேண்டும். பெரியோர்கள், சான்றோர்கள் சொன்ன நல்ல நெறியில் குடும்பம் நடத்துபவனாக இருக்க வேண்டும் என்பதை,

**தற்காத்து தற்கொண்டான் பேணி தனைசான்ற**
**சொற்காத்து சோர்விலாள் பெண்**

என்ற குறள் மூலம் விளக்குகிறார்.

இல்லறம் நடத்துவதன் பயன் நல்ல மக்களைப் பெறுதல் என்கிறார். அந்த மக்களை நல்ல வழியில் வளர்த்து, கல்வியில் சிறந்தவனாக்கி, ஒழுக்கமுள்ளவனாக, சான்றோர்கள் அவையில் முன்நிற்கும் தகுதி உள்ளவனாக்க வேண்டும் என்பதை,

**தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்**

என்ற குறள்மூலம் விளக்குகிறார்.

இன்றைய சமுதாயத்தில் இளைஞர்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதை நாம் காண்கிறோம். ஒவ்வொரு இளைஞனும், தன்னை வளர்த்து பலவகையிலும் தான் முன்னேற, வளம்பொற, வாழ்வு பெற வகை செய்த தந்தைக்கும்,

தாய்க்கும் பெருமை சேர்க்கும் வகையில வாழ வேண்டும். இப்படி ஒரு பிள்ளையைப் பெற இவனுடைய தந்தை தாய் என்னதவம் செய்தார்களோ என்று மற்றவர்கள் வியந்து போற்றும் வகையில் மகன் இருக்க வேண்டும் என்பதை,

**மகன் தந்தைக்காற்றும் உதவி இவன்தந்தை**
**என்நோன்றான் கொல்எனும் சொல்**

என்ற குறள் மூலம் விளக்குகிறார்.

மாந்தர்கள் இப்படித்தான் வாழ வேண்டும் என்ற குறிக்கோளோடு வாழ வேண்டும், ஒழுக்கமுடையவர்களாக, நல்லன எண்ணி, நல்லன செய்து வாழ்தல் வேண்டும் என்கிறார். அது தான் உயர்ந்த வாழ்க்கை சிறந்த வாழ்க்கை என்கிறார் இதனை,

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்**

என்ற குறள் மூலம் ஒழுக்கத்தை, நன்னடத்தையை உயிராகப் போற்றி வாழ வேண்டும் என்கிறாா. பெண்களை கற்பு நெறியோடு வாழ வலியுறுத்திய வள்ளுவர் ஆண்களையம் பிறர் மனைவியை விரும்பாத பேராண்மை மிக்கவனாக வாழ வேண்டும் என்பதை,

**பிறர்மனை நோக்காத பேராண்மைச் சான்றோருக்கு**
**அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு**

என்ற குறள்மூலம் கூறுகிறார். பிறர்மனை நோக்காதது பேராண்மை மட்டுமல்ல சிறந்த ஒழுக்கம் ஆகும் என்கிறார்.

**முடிவுரை**

வள்ளுவன் தான் படைத்த திருக்குறளில் மாந்தர்கள் இப்படித்தான் வாழ வேண்டும், இப்படி வாழக் கூடாது என்பதை மிகத் தெளிவாக எடுத்துக் கூறி உள்ளான். மற்றவருக்கு உதவியாக வாழ்வதுதான் சிறந்தது. மற்றவருக்குத் தேவை எதுவோ அதைக் கொடுத்துதவி மற்றவர்களால் பாராட்டிப் புகழக் கூடிய சிறந்த வாழ்க்கை வாழ்வதே பிறவி எடுத்ததன் பயன் என்பதை,

**ஈதல் இசைப்பட வாழ்தல் அதுவல்லது**
**ஊதிய மில்லை உயிர்க்கு**

என்ற குறள்மூலம் கூறுகிறார். எனவே அரும்பெரும் வாழ்வியல் கருத்துகளை வாரி வழங்கும் உலகப்பொது மறையாம் திருக்குறளை நாளும் ஓதிப் பயன்பெறுவோம். பிறர்க்கும் எடுத்துக் கூறி குறள் நெறி பரப்புவோம்.

# வள்ளுவர் போற்றும் பெண்ணியம்

கவிமாமணி. துரை. இராசமாணிக்கம்

உலக மக்கள் நல்வாழ்வு வாழ வழிகாட்டி நீதிநூல்கள் தமிழில் உள்ளதுபோல் உலகமொழிகள் எதிலும் இல்லை. அதில் தலையாயது திருக்குறள் என்கிறார் ஜி.யு.போப். வள்ளுவருக்கு இணையான சிந்தனையாளர்கள் வேறு எவரும் கிடையாது என்கிறார் நோபல் பரிசு பெற்ற ஜெர்மன் நாட்டவர் ஆல்பர்ட் சுவைட்சர்.

எனவே, சான்றோர்கள் வரிசையில் போற்றத்தக்க பேரறிவாளராக திருவள்ளுவர் விளங்குகிறார். கிறித்துவர்களுக்கு பைபிளும், இசுலாமியர்களுக்கு குரானும், இந்துக்களுக்கு கீதையும் இருப்பினும் சாதி, சமயங்களைக் கடந்து அனைவரும் ஏற்கும் கருத்து பொதுமை நிறைந்த உலகப் பொதுமறையாகப் போற்றப்படுவது திருக்குறளே. வள்ளுவர் பெண்மையைச் சிறப்பித்துக் கூறுதலை ஆய்வு செய்தலே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

மனிதஇனம் மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு தென்னிறந்தியாவில்தான் தோன்றியது என்கிறார் நீலகண்டசாஸ்தியார். தமிழர் வாழவியல் வரலாற்றுக் காலம் கி.மு.300ல் இருந்துதான் தொடங்குகிறது என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து. மனிதன் அன்று முதல் இன்று வரை தனித்து வாழ முடியாதவன். ஜனனத்தில் இருந்து மரணம் வரை துணை தேவைப்படுவதால் 'Man is a Social animal' என்றார் பிளாட்டோ. கூடிவாழும் சிந்தனையிலிருந்துதான் குடும்பம் உருவானது. குடும்பத்தின் ஆதாரம் அன்றும், இன்றும், என்றும் பெண்கள்தான். பெண்மையில்லையேல் நாம் இல்லை, நமது உறவுகள் இல்லை, இந்த உலகமே இல்லை. எனவேதான் தமிழ்மறை பெண்களை இல்லாள் என்கிறது. ஆண்களை இல்லான் என்று அழைப்பதில்லை. திருவள்ளுவர் தனது நூலில் பாயிரத்தில் கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை,

அறன் வலியுறுத்தல், அதிகாரங்களைத் தொடர்ந்து இல்லறவியல் ஒருவர் சிறப்பான இல்வாழ்க்கை அமைய வாழ்க்கை துணை நலம் அதிகாரத்தில் பெண்மை எவ்வாறு போற்றுதற்குரியது என்பதை ஆய்ந்தும், அறிந்தும் சுவைப்போம்.

**அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்பது இல்லாயின் நன்று**

உலகத்தில் அறம் என்று சொன்னால் அது இல்வாழ்க்கைதான் என்று கூறும் திருவள்ளுவர் அவ் இல்லறம் சிறப்பதும் பெண்களால் தான்.

**மனைத்தக்க மாண்புடையாள் ஆகி தற்கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை**

மனை-வீடு, குடும்ப வருவாய்க்குள் வாழ்க்கையை சிறப்புடையதாக அமைத்துக் கொள்வது மனைவியால்தான் அமையும் என்கிறார். இதனையே "மனைக்கு விளக்கம் மடவாள்" என்கிறது நான்மணிக்கடிகை.

**இல்லதன் இல்லவள் மாண்பானாள் உள்ளதன்**
**இல்லவள் மாணாக் கடை**

ஒருவரது இல்வாழ்க்கையில் மாண்பமை மனைவி அமையப்பெற்றால் இல்லாதது எதுவும் இல்லை என்கிறார். "மாண்ட மனையாளை இல்லாதான் இல் அதர் காண்பதற்கரிய காடு" சிறந்த மனைவி அமையாதவர் வாழ்க்கை வழிகாண்பதற்கரிய காட்டில் வாழ்வது போன்றது என்கிற நாலடியாரும் ஒப்பு நோக்கத்தக்கது.

**பெற்றான்பெறின் பெறுவர் பெண்டீர் பெரும்சிறப்பு**
**புத்தேளிர் வாழும் உலகு**

பெருமைக்குரிய சிறப்புடைய பெண்டீரைப் பெற்றால் தேவர் உலகில் வாழும் சிறப்பை இங்கேயே பெறுவர் என்கிறார்.

**புகழ்புரிந்த இல்லில்லோர்க்கு இல்லை இகழ்வார்முன்**
**ஏறுபோல் பீடு நடை**

புகழத்தக்க இல்லறத் துணை இல்லாதவர்க்கு தன்னை தூற்றுவோர் முன் வீறு நடை போட முடியாது என்கிறது வள்ளுவம். இல்லறம் அல்லது நல்லறம் இல்லை என்கிறார் அவ்வை மூதாட்டியும், குடும்பம் கோயிலாவதும், குப்பை மேடாவதும் பெண்களின் கைகளிலேதான் இருக்கிறது என்கிறார்

பாவேந்தரும். பெண்களின் உள்ளத்தையும், அன்பையும் வள்ளுவர் இன்பத்துப் பாலில் எடுததுக் கூறுவது மேலு சிறப்பிற்குரியது.

**உள்ளினேன் என்றேன் மற்றென்மறந்தீர் என்றென்னைப்**
**புல்லாள் புலத்தக் கனல்**

உன்னை நினைத்தேன் என்பதற்கு மறந்தாலன்றோ நினைக்க முடியும் என்று கண்ணீரைச் சிந்துபவர்களாயும்,

**இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனா**
**கண்நிறை நீர் கொண்டனல்**

இப்பிறவியில் உன்னைப் பிரிய மாட்டேன் என்று உறுதியினை அளித்தாலும், அடுத்தப் பிறவியல் இல்லையா? என்று அழுகை உடையவர்களாகவும் இருப்பர் என்பது ஆழமான அன்பின் வெளிப்பாடு அல்லவா?

**கலிங்கத்துப்பரணியிலும ஒரு காட்சி**

**நரைமீது தொழுநன் தன் உடலந் தன்னை**
**தாங்காது தன்கையால் தாங்கி - விண்ணாட்டு**

**அறமகளிர் அவன் ஆவி புணராமுன்னம்**
**ஆவி ஒக்க விடுவாளை காண்மின்! காண்மின்!!**

பகைக்களத்தில் வீரமரணம் எய்தும் தனதுகணவரை தரை என்னும் மணமகள்மீது வீழாது தன்மடியில் தாங்கி, அவன் ஆவி விண்ணுலகம் சென்றதும் வான்மகளிர் வரவேற்று தழுவாதுஅங்கேயும்தானே முன்னிற்க உயிர்துறப்பானை காண்மின் என்று கலிங்கத்து பரணி காட்டும் உணர்வை, உரிமையை, பாசத்தை பெண்களிடம்தான் காணமுடியும் என்பது உண்மையல்லவா....!

“மக்கள்பேறு, அன்புடமை, விருந்தோம்பல், ஒழுக்கமுடமை யாவும் அமைய வேண்டுமெனில் சிறப்பான பெண்துணை அமைய வேண்டும்'' என்கிற வள்ளுவர் கருத்து ஏற்புடையதே. அடக்கம், பொறுமை, தியாகம், இரக்கம், பிறர்நலன் கொண்டு அனைத்தும் கலந்த அன்பே வடிவமானவர்கள் பெண்கள். இல்லறம் சிறக்க மட்டுமின்றி இவ்வுலகம் உய்ய, உயர, வாழ, அடுத்தொரு ஜீவன்களை கொண்டுவரும் அற்புத சக்தியாகத் தாய்மையைப் பூணும் பெண்மையின் சிறப்புகளை வள்ளுவர் தனது குறளில் சிறப்பாக எடுத்துரைத்திருப்பது படித்தும், உணர்ந்தும் பயன்பெறத்தக்கது.

# வள்ளலார் படைப்புகளில் திருக்குறள்

இ.வீரசக்திவேல்

**முன்னுரை**

நீண்ட இலக்கியப் பாரம்பரியத்தைக் கொண்ட தமிழ்ச்சூழலில் திருக்குறளுக்கெனத் தனித்த இடமுண்டு. இலக்கியப் படைப்புகள், இலக்கியச் சொற்பொழிவுகள், மேடைப்பேச்சுகள், பட்டிமன்றங்கள், வழக்காடு மன்றங்கள், திருமண நிகழ்வுகள் எனப் பல்வேறு நிலைகளிலும் தன்னைப் புனரமைத்துக் கொண்டது திருக்குறள். சீர்திருத்தக்காரர்களால் அதிகமாகக் கையாளப்பட்டதும் உலகத்து அறிஞர்களால் ஞானியர்களால் பாராட்டப்பெற்றதும் இந்திய இலக்கியங்களுள் அதிகமான மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றதும் பல்வேறு இலக்கிய அமைப்புகளைக் கண்டதும் இந்நூலே ஆகும். உலகம் தழுவிய ஒருமைப்பாட்டிற்கான ஒழுகலாறுகளைக் கொண்டதும் இந்நூலே ஆகும். இன்னும் எவ்வளவோ சிறப்புகளைப் பெற்றும் தமிழர்களிடத்தில் மட்டும் ஏனோ ஆழப்பதியாமல் போயிற்று.

சாதி, மதம், இனம், மொழி, கடந்து நிற்கும் நூலுக்குச் சரியானபடி அங்கீகாரம் இல்லாமலிருப்பதற்குத் தமிழர்களிடையே புகுந்த சாதியும் மதமும் முக்கியக் காரணங்கள். தமிழர்களிடத்தில் என்று சாதியும் மதமும் புகுந்ததோ அன்றே 'தமிழன்' என்ற அடையாளம் மறைக்கப்பட்டு விட்டது. ஒருவேளை தமிழ் தவிர்த்த ஏனைய மொழிகளில், சமயம் சார்ந்த நூலாக இருந்திருப்பின் அதன் இருப்பிடம் முற்றிலும் வேறாக இருந்திருக்கும் என்று எண்ணத் தோன்றுகிறது.

**பின்னடைவும் மீட்டெடுப்பும்**

திருக்குறளின் சொல்வாக்கினை, தமிழகத்தில் காலூன்றிய வேற்றரசுக் காலங்களிலும் சமய எழுச்சிக் காலங்களிலும்

அவ்வளவுவாகக் காணமுடியவில்லை. வேற்றரசுக் காலங்களில் அவர்களின் தாய்மொழியே ஆட்சி செலுத்தியது. தமிழ் புறந்தள்ளப்பட்டது. சமய எழுச்சிக் காலங்களில் சமயச் சிந்தனைகளே முதன்மை பெற்றுள்ளன. ஆகவே திருக்குறள் உள்ளிட்ட அறநூல்களின் இருப்பைக் காண்பது அரிதாகிறது. ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னரே. அதுவும் ஜி.யு.போப், வீரமாமுனிவர் இவர்களின் வருகைக்குப் பின்னரே திருக்குறள் இனம் காணப்பட்டது. தமிழ்ச்சூழலில் வள்ளலார், பாரதியார், பெரியார், பாரதிதாசன் இவர்களால் திருக்குறள் இனம் காணப்பட்டுப் புத்துயிர் பெற்றது. பின்னர் பாரதி, பாரதிதாசன் பரம்பரையினராலும் திராவிட இயக்கத்தாராலும் மேடையெங்கும் திருக்குறள் முழுக்க பெற்றது என்றால் மிகையாகாது.

சமயவாதிகள் ஒருபோதும் பொது ஒழுக்கம் கூறும் அறிவார்ந்த நூல்களை எடுப்பதில்லை. மக்களையும் எடுக்க விடுவதில்லை. ஏனென்றால் மற்றக்கருத்துகளைப் பரப்புரை செய்யவும் முடியாது. அவர்களின் பிழைப்பும் போய்விடும் என்ற பேச்சும் கட்டாய வழிபாடுகள் மக்களின் அறிவு வளத்தைச் சுரண்டுவதைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும். முதலாளிகளால் தொழிலாளர்களின் பொருளாதாரம் சுரண்டப்படுவதைப் போல மதவாதிகளால் மக்களின் அறிவுவளம் சுரண்டப்படுகிறது. அதே வேளையில் சமயம் கடந்த நிலையில் திருக்குறளைப் பரப்புரை செய்துவரும் குன்றக்குடி ஆதீனத்தின் அரும்பணி மகத்தானது. மற்றவர்களால் திருக்குறளைப் பக்கத்தில் வைத்திருக்கத்தான் முடியும். முடிந்தால் திருக்குறளை மதம் சார்ந்த நூலாக மாற்ற முனைவார்கள். இன்றளவில் பல்வேறு இயக்கங்கள், இலக்கிய அமைப்புகள், ஆய்வு மையங்கள் இலக்கிய இதழ்கள் திருக்குறளின் கருத்துகளைப் பரப்புரை செய்து வருவது வரவேற்கதக்கது.

**வள்ளலார் படைப்புகளில் திருக்குறள்**

வள்ளுவத்தின் தாக்கம் பெறாத இலக்கியப் படைப்புகள் இல்லையென்று சொல்லுமளவுக்கு குறட்றொடர்களோ, குறள் சொல்லாட்சிகளோ, கருத்துச் செறிவுகளோ இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. அந்த வகையில் வள்ளலாரின் படைப்புகளில் திருக்குறளின் செல்வாக்கு வெளிப்படையாகவும் நுட்பமாக மறைந்தும் வந்துள்ளது. வெளிப்படையாக வந்தவிடங்களில் குறளின் தொடர்களும் சொல்லாட்சிகளும்

அப்படியே பயின்று வந்துள்ளன. வெகுளாமை, பொறையுடைமை, நிலையாமை முதலிய அதிகாரக் குறட்பாக்கள் திருவருட்பா-நெஞ்சறிவுறுத்தல் பகுதியில்,

**கூத்தாட்டு அவைசேர்குழாம் விளிந்தாற் போலுமென்ற**
**சீர்த்தாட் குறண்மொழியுந் தேர்ந்திலையே**

என்றும்,

**சொல்லா விடத்து சினந்தீது செல்லிடத்தும்**
**இல்லதனிற் றியதென்ற தெண்ணிலையே**

என்றும் அப்படியே பயின்று வந்துள்ளதைப் பார்க்கமுடிகின்றது. குறட்றொடர்களைப் போல் குறளின் சொல்லாட்சிகளும் வள்ளலாரின் படைப்புகளில் இடம் பெற்றுள்ளன. 'துச்சில்' 'காமம்' 'வெகுளி' என்பன போன்ற சொற்கள் காணப்படுகின்றன.

குறட்பா இலக்கணம் என்றால் வள்ளலாரின் படைப்புகள் அதற்கான இலக்கியம் என்று கூறுமளவுக்கு, குறள் கருத்துகள் விளக்கியுரைக்கப்பட்டுள்ள பாங்கினையும் உணர முடிகின்றது.

**கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள**

இதனையே வள்ளலார் தம்முடைய பாங்கில்,

**கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த**
**குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே**
**ஆடையிலே எனைமணந்த மணவாளா அம்பலத்தே**
**ஆடுகின்ற அரசேஎன் அலங்கல் அணிந்தருளே**

என்று பாடி மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன் நுகர்ச்சிக்கு இடமாக இருக்கக் கூடியவன் இறைவன் என்பதைப் பாடலில் பதிவு செய்து குறள் கருத்தினை விளக்கியுள்ளார்.

வள்ளுவத்தின் செல்வாக்கினை மிகவும் நுட்பமாக வள்ளலாரில் பார்த்தோமானால், அன்புடைமை, அருளுடைமை, புலால் உண்ணாமை, கொல்லாமை ஆகிய அதிகாரங்களே வள்ளலாரின் உயிரிரக்கக் கோட்பாட்டிற்காகத் தாக்குரவு என்பது புரியும். இவ்வதிகாரங்களின் கருத்தாக்கங்கள்தான் தத்துவார்த்தங்களோடு வள்ளலாரின் "சீவகாருண்ய ஒழுக்கம்' என்ற உரைநடை நூலாக விரிவு பெற்றது என்றாலும் மிகையன்று.

**வள்ளலாரின் பார்வையில் திருக்குறள்**

திருக்குறளைப் பார்க்கும் பார்வைக்கும் வள்ளலார் பார்த்துள்ள பார்வைக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. வள்ளுவத்தை வாழ்வியல் நூலாக, அறவியல் நூலாக, பொய்யாமொழியாக, வாய்மொழியாகப் பார்க்கின்றோம். வள்ளலார் இவற்றினையெல்லாம் கடந்து, திருக்குறளில் 'சாவாக்கலை' பற்றிக் குறிப்பிட்டுள்ளதாகக் கூறுகின்றார். "தேவர் குறளில் முதல் அதிகாரத்தில் சாகாத கல்வியைக் குறித்துச் சொல்லியிருக்கிறது. அதைத் தக்க ஆசிரியர் மூலமாய்த் தெரிந்து கொள்ளலாம்" (திருவருட்பா உடைநடைப்பகுதி) என்பது வள்ளலாரின் வாக்காகும். தமிழ்மக்கள் 'சாவாக்கலை'யையும் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காகவோ என்னவோ குறளை உணர்ந்து தமிழகத்திலேயே முதன்முதலில் திருக்குறள் வகுப்பெடுக்க ஏற்பாடு செய்து நிறைவேற்றினார். திருக்குறளைக் கையாண்டுள்ள இடங்களிலெல்லாம் 'சீர்த்தாட்குறன்மொழி' 'ஒண்குறள்' என்பன போன்ற அடைமொழிகளோடு குறிப்பிட்டுள்ளதையும் ஆழ்ந்து பார்க்க வேண்டியுள்ளது.

**முடிவுரை**

திருக்குறள் தேசிய நூலாக அடையாளம் காணவேண்டின் தமிழர்களிடையே உள்ள சாதிய, மத எண்ணங்கள் களையப்பட வேண்டும். அதற்கான விழிப்புணர்வாக சாதி மதங்களின் போலித்தனம் வெளிப்படுத்தப்பட வேண்டும். அப்பொழுதுதான் புனித நூல்களின் பொய்யுரைகள் புலப்பட்டு நிற்கும். தமிழர் வீடெங்கும் திருக்குறள் வாசிக்கப்பட வேண்டும். மதப்போர்வை போர்த்திக் கொண்டு வாழும் தமிழ்ச்சமூக அவல நீக்கத்திற்கும் சமன்மைச் சமுதாய உருவாக்கத்திற்கும் திருக்குறளைப் போன்று 'பொதுஒழுக்கம்' கூறும் நூல்களால் மட்டுமே முடியும். மதநூல்கள் (புனித நூல்கள்) பிரிவினையையே உண்டாக்குவன தவிர மானுடம் சிறக்க வழி கூறாதவைகள்.

சமத்துவ சமுதாயம் காண விழைந்த வள்ளலார், பெரியார் முதலான ஆளுமைகளின் உருவாக்கத்திற்கு இருப்பாக நின்ற நூல் 'தேசிய அடையாளம்' காண்பது மிகவும் பொருத்தமுடையதாகும்.

# திருக்குறள்
# உலகக் கலைக்களஞ்சியம்

**முனைவர் பெ. கணேஷ்**

திருக்குறள், தமிழ்மொழியின் பெருமைக்கும் பழமைக்கும் சான்றாக விளங்கும் ஒப்பற்ற நூல். தமிழ்நாட்டினைப் பற்றி உலக மக்கள் உணர்ந்து கொள்ள வாய்ப்பாக அமைந்தது வள்ளுவரின் வாய்மொழி, எனவேதான்

**வள்ளுவன் தன்னை உலகினுக்கே - தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**

என்று வாயார உளமாறப் பாராட்டினார் பாரதியார். வள்ளுவரின் குறட்பாக்கள் அனைத்துமே கற்போர் உள்ளத்தைக் கவரத் தக்கன.

திருக்குறள் ஒரு பொதுநூல். தமிழ் மொழியில் தோன்றிய ஒரு சிறந்த நூல். ஒரு நல்ல வாழ்க்கை நூல், மனித சமுதாயத்திற்கு இன்றியமையாத கருத்துகளை எடுத்துக்கூறும் நூல். திருக்குறளில் தமிழ்மொழி, தமிழ்நாடு, தமிழன், தமிழ்மக்கள் போன்ற சொற்றொடர்கள் இல்லை. ஆனால் திருக்குறளில் திருவள்ளுவர் ஒரு நாடு எப்படி இருத்தல் வேண்டும் என்பது பற்றிப் பேசுகிறார். மனிதன் எத்தகைய பண்புகளைப் பெற்று விளங்குதல் வேண்டும் என்பது பற்றிக் கூறுகிறார். மக்கள் எப்படி இருத்தல் வேண்டும். எப்படி வாழ்தல் வேண்டும் என்பது பற்றி விளக்குகிறார்.

திருவள்ளுவர் உலகத்திலுள்ள எல்லா மக்களையும் எல்லா நாட்டையும் குறிக்கும் வகையில் பொதுவாகப் பேசுகிறார்; எதைப் பற்றிப் பேசினாலும் யாரைப் பற்றிப் பேசினாலும் பொதுவாகவே பேசுவார். இது அவர் மேற்கொண்ட சிறந்த ஓர் உத்தி. இவற்றிலிருந்து அவருடைய பொதுமை பேணும் பண்பும் பொதுமையை விரும்பும் போக்கும் நன்கு விளங்குகின்றன. இத்தகைய போக்கு-இந்தப் புதிய நோக்கு திருக்குறளைத் தவிர

வேறு எந்தத் தமிழ் நூலிலும் காணல் அரிது. இதிலிருந்து பொதுமையைத் திருவள்ளுவர் பெரிதும் விரும்புகிறார் என்பது தெற்றெனப் புலனாகிறது. இத்தகைய பொதுமைப் பண்பு திருக்குறளில் அமைந்திருக்கும் காரணத்தாலேயே திருக்குறளைப் பல நாட்டு மக்களும் தத்தம் மொழியில் பெயர்த்து விரும்பிப் படிக்கின்றனர். பல நாட்டுச் சான்றோர்களும் இதனைப் போற்றி வருகின்றனர். எனவே, திருக்குறள் காலத்தால் அழியாத நூலாக இன்றும் வாழ்ந்து கொண்டு வருகிறது.

வள்ளுவரது பிறப்பைப் போலப் பெருமை மிக்க பிறிதொரு நிகழ்ச்சி தமிழகத்தின் வரலாற்றில் இல்லை. மனித குல நல்வாழ்வு கருதி இவர் எண்ணாத எண்ணமில்லை, சொல்லாத கருத்தில்லை, பேசாத பொருளில்லை, பேணி வளர்த்த உடல், பண்பாடு பொதிந்த அறிவு, இனிமை கலந்த பேச்சு, கருத்து நிறைந்த எழுத்து, பயன் கருதாச் செயல் ஆகிய அனைத்தையும் மனித இனம் அனைத்திற்குமே பயன்படுத்திய புரட்சிக் கவிஞர் அவர். ஓமர், பிளாட்டோ போன்ற மேலை நாட்டு அறிஞர்கள் தங்களது உண்மைப் பெயர்களையாவது உலகிற்கு விட்டுப் போயினர். வள்ளுவர் இம்முறையிலும் புரட்சியைப் புகுத்திக் காட்டிவிட்டார். தனது இயற்பெயரைக் கூடச் சொல்லாது காலமென்னும் காரிருள் மறைந்து விட்டார்.

மக்களின் நல்வாழ்விற்கு வழிகாட்ட வந்த திருக்குறள், ஈடு இணையற்ற ஒரு நீதிநூல், இதனை உலகுக்குத் தந்த பெருமை தமிழகத்தைச் சார்ந்தது.

இறை இன்பத்தைக் காட்டி, இல்லற இன்பத்திற்கு மக்களை முறையாக அமைத்துச் செல்லும் புது நெறியைப் படைத்தவர் வள்ளுவப் பெருமகனார். கடவுள் வாழ்த்தில் தொடங்கி, காமத்துப் பாலில் (கமக-நிறைவு = காமமி நிறைவு பெறும் புதுமைக் கோலத்தை இங்குதான் காணலாம்.

**அயல்நாட்டார் அறிஞர்கள்**

அயல் நாட்டார் திருக்குறளைப் பற்றி என்ன சொல்லியிருக்கின்றனர் என்பதைப் பார்ப்போம்.

வானோங்கிய உணர்வுகளையும் தூய்மையான ஒழுக்க நெறிகளையும், கருத்தாற்றலையும், வெளியீட்டையும் கொண்டு விளங்கும் திருக்குறள் இன்பம் பயக்கத்தக்கது. உலகிலுள்ள மாந்தரின் அனைத்து மொழிகளிலும் இதற்கு ஈடான ஆற்றல் மிகு அறநெறிகள் கிடையாவென்பது உறுதியாகும்.

**கிறித்துவ சமயத்தைச் சார்ந்த அறிஞர்**

மிகச் சிறந்த இலக்கியம் என்ற முறையாலும், மிக உயர்ந்த நெறியைக் கொண்ட நூல் என்ற முறையிலும் திருக்குறள் நம் நினைவைக் கவர்ந்திழுக்கிறது ஒரு குறிப்பிட்ட வகுப்பார்க்குரிய கருத்துகளை ஒதுக்கித் தள்ளி, எல்லார்க்கும் பொதுமையான கருத்துகளை முன்வைத்து 'மனு' போன்றவர்களும் பிற சமயப் புலவர்களும் கூறிய ஒப்புக் கொள்ளத் தகாத-ஏற்றுக் கொண்டு நடக்கவியலாத விளக்கங்களை முற்றிலும் விலக்கிவிடுகிறார் வள்ளுவர். எனவே, இவர் பெருமிதமான நடையைக் கருத்தில் கையாள்கிறார்.

**மறைத்திரு. துரு**

சிறந்த இந்தியப் பண்பாட்டுப் படைப்புக்களில் திருக்குறளும் ஒன்றாகும். சிறந்த குடி மகன், சட்டயாப்பாளன், ஆன்ம உணர்வுடைய துறவி ஆகியோரின் தன்மைகளை ஒன்றாக இணைத்துள்ளார் வள்ளுவர். குடும்பத்தினருக்கும், அரசர்க்கும், துறக்கமெய்த விரும்புவோர்க்கும் நன்னெறி காட்டும் கருவூலமாகத் திருக்குறள் உள்ளது. இங்கு இந்தியர்களுக்குரிய சிறந்த நூல் மட்டுமன்று உலகத்துக்குரிய சிறந்த இலக்கியமும் ஆகும்.

**மனமோகன் கோசு**

தமிழில் ஒழுக்க நெறிகளைக் கூறியவர்களில் குறளாசிரியர் முதலிடத்தை வகிக்கிறார். குறளுக்குச் சமமான ஒரு நூல் உண்மையில், இந்திய மொழிகள் எவற்றிலும் இல்லையென்பதைப் பொதுவாக அனைவரும் ஒப்புக்கொண்டுள்ளனர்.

**சான் முருடாக்கு**

திருவள்ளுவர் தமிழ் நூலாசிரியர்களுள் இளவரசராக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறார். திருக்குறளும் சிந்தாமணியும், தனித்தனியேனும் யாக்கல் முறையிலும் வடமொழியிலிருந்து முற்றிலும் மாறுபட்டவை என்பது உலக அரங்கில் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்றாகும்.

**கால்டுவெல்**
**உயர்ந்து நிற்பது**

வாழ்வின் மூன்று குறிக்கோளாகிய அறம், பொருள், இன்பம் பற்றிய 1330 சிறு சொற்றொடர்களாலான திருவள்ளுவர் குறள் உலக இலக்கிய மாணிக்கங்களில் ஒன்றாகும்.

வள்ளுவர் நாடுகள், இனங்கள், வகுப்புக்கள்யாவற்றையும் கடந்து நிற்பவர். அவர் கற்பிப்பது மக்கட் பொது ஒழுக்கமும், அறிவுகேவுமாகும். தோன்றிய நாட்டில் குறள் பெரிதும படித்து, ஆய்ந்து உயர்வாகப் போற்றப் பெறுவது மட்டும் அல்லாமல் மேல் நாடுகளில் அது தெரியத் தொடங்கிய நாள்முதல் அங்கும் அதனைப் போற்றுபவர்கள் பலரைப் பெற்றிருக்கின்றது என்பதில் வியப்பேதுமில்லை.

1730ஆம் ஆண்டிலேயே முதல் இரு பால்களும் சி. சோசப் பொசுகி பாதிரியாரால் இலத்தீனில் மொழிபெயர்க்கப்பட்டன. பிரஞ்சு, செர்மன், ஆக்கிய மொழிபெயர்ப்புகளும் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வெளியாயின.

**பேராசிரியர் எம். விண்டர்னிட்சு**

**பொதுமை**

தமிழ் இலக்கியத்தில் தலைசிறந்த குறள். எண்ணங்களை எடுத்துறைக்கும் சிறப்பினும் தூய்மையினும் ஈடும் எடுப்புமற்ற நூல்களில் ஒன்று எல்லாவற்றைக் காட்டிலும் குறளில் காணும் வியப்பு என்னவென்றால் இனப்பிரிவுகள், மக்கட் பிரிவுகள், கொள்கைப் பிரிவுகள் இவற்றைப் பொருட்படுத்தாமல் உலகமக்கள் அனைவருக்கே அதன் ஆசிரியர் கூறிச் செல்வதேயாகும்.

**மேலை நாட்டறிஞர் எம். ஏரியல்**

**நூலும் நாடும்**

மிகத் தூயதமிழின் இயற்றப்பட்ட குறள். ஆசிரியர் தம் எண்ணங்களை அறிவிக்க எடுத்தாளும் ஏறத்தாழ 1200 சொற்களிலே ஐம்பது கூட வட சொற்கள் அல்ல. நாம் அறிந்த தமிழ் நூல்களிலே எதுவும் தூய்மையில் குறளை அணுகவும் முடியாது. இன்றைய தமிழை அது என்றும் கண்டனம் செய்வது போலிருக்கிறது. தம் தாய்மொழியின் செழுமை, இனிமை, ஆற்றல் இவற்றை வள்ளுவர் தெளிவாக விளக்கிவிட்டார்.

குறளை மேலும் வளமாக்க முடியாது. அதன் அமைப்பு முறையை மேலும் செம்மை செய்ய இயலாது. அது தன்னளவிலேயே ஒரு குறைவற்ற இழைப்போவியம் ஒரு கல்லின் அளவை, உருவத்தை, நிறத்தைச் சிறிதளவு மாற்றினாலும் முழுநிலையின் அழகும் கெட்டுவிடும்.

இவ்வளவ உயர்ந்த மனிதரை, இத்துணை ஒப்பற்ற ஒரு நூலை, அளித்த நாடு உருப்படாத இழிவான நாடாக இருக்க முடியாது என்னும் எண்ணம் எழுச்சி தருவதாகின்றது. அவர் அறிவுறுத்திய ஒழுக்கம் என்றும் மாறாத ஒழுக்ககப் பண்புடைய மண்ணில் அன்றி வேறு இடத்தில் வளர்ந்திருக்க இயலாது. தமிழ்மக்களின் மீட்சிக்காகப் பணி செய்வோர்க்குக் குறள் தனிவகையான ஏன், செறிந்து ஆர்வமளிக்கும் ஒரு நூலாக வேண்டும்.

**பண்டாரகர் இலாசரசு**
**தங்க ஆப்பிள்**

எந்த மொழிபெயர்ப்பும் குறளின் கவர்ச்சித் தன்மையை ஓரளவுகூட எடுத்தியம்ப முடியாது. உண்மையாகவே, இது இடைமிடைந்த வெள்ளியின் இட்ட தங்க ஆப்பிள் ஆகும்.

**பண்டாரகர் கிரௌல்**
**பெரு நூல்**

உலகத்தின் பெருந்தனித் திறமையாளர்களிலே வள்ளுவரும் ஒருவர் என்பதில் ஐயமில்லை. மதிப்பிலே குறள் மற்ற எல்லாத் தமிழ் இலக்கியங்களையும் விஞ்சுகிறது. ஒரு நாட்டின் எல்லா மக்களது உணர்ச்சியையும் ஊடுருவி என்றும் மாயாது நிலவும் ஒரு சில பெருநூல்களிலே அதுவும் ஒன்றாகும். குறட்பாக்கள் மிகச் சிறந்த ஒழுக்கத்தைத் திட்டமிடும் உரைகளாகும்.

**ஜி.யு.போப்**
**கண்டிக்க முடியாதவர்**

கிரோக்கர்களுக்கு ஓமர் (Homer) எப்படி என்றும் சிறந்தவரோ, அப்படியே, குறள் தமிழ்மக்களுக்கு இன்றியமையாத இலக்கியப் புதையல், எடுத்துரைக்க ஏற்ற கவி, ஒப்புயர்வற்ற வகையான சொல்லில் பெருஞ்சிறப்பு, ஒழுக்கத்தின் மேதகவு.

மனைவியர் கணவன்மாரைக் காதலிக்கவும், மக்கள் உண்மை, ஈகை, அமைதி காட்டவும் கூறி ஆளுநர் தண்ணாயும், நுண்ணறிவும் பூணவும், ஆளப்பட்டோர் பணிவும் உதவி மனமும் நிறையவும் வற்புறுத்தும் கவியை (வள்ளுவஸ) எந்தமத குருவும் வெளிப்படையாகக் கண்டிக்க முடியாது.

**சார்லசு இ. கவர்**
**போலிச் சமயமும் குறளும்**

"எந்த மதகுருவையும் கண்டித்து வள்ளுவர் ஒரு சொல்லும் சொல்லவில்லை என்று" திரு. கவர் கூறுவது

சரியாகலாம். சமய குரு வகையினரை வெளிப்படையாக அவர் தாக்கவில்லை என்பது உண்மையே. ஆனால் இத்தகையதொரு நூலில் ஏதும் கூறாமல் இருப்பதில் ஏதோ கருத்திருக்க வேண்டும்."

"சமயத்தின் பேரால் செய்யும் போலித்தனம், ஏமாற்றல், கொடுமை இவற்றை நூல் முழுவதும் எதிர்பாராததாகத் தோன்றுகிறது."

**அருள்திரு. இராவின்சன்**
**ஒப்பற்றது**

திருவள்ளுவர் தம்மெய்யறிவுரைகளைத் திட்ப நுட்பமாக ஈரடிப்பாக்களில் எடுத்தியம்புகின்றார். அவற்றில் காணும் உறுதிக்கும் செறிவுக்கும் வேறு எந்த மொழியிலும் ஒப்பில்லை என்பது திண்ணம்.

**ரெவரெண்டு பெர்சிவல்**
**பழைமையானது**

"குறளில் சொல்லியவற்றில் சில பழைய ஏற்பாட்டில் (old Testament) முதன்முதலில் எழுதப் பெற்றவற்றைக் காட்டிலும் பழையையானவையாக இருக்கலாம்." "குறள் மிக உயர்ந்த ஒழுக்க நெறியைப் பற்றிய செய்யுள் நூலாகும்"

**அருள் திரு. எலிசகூல்**
**தலைசிறந்த நூல்**

மக்களுடைய உள்ளங்களையும், உணர்வுகளையும் கொள்ளை கொண்ட இருநூல்கள் இந்தியாவில் இருக்கின்றன. அவற்றுள் முதலாவது துளசிதாசர் இராமாயணம், வட இந்தியாவில் ஒவ்வொரு குடியானவனும் அறிந்திருப்பது, மற்றொன்று திருவள்ளுவரது குறள். அதைப் போன்றே இந்தியத் தீபகற்பத்தின் தென்பகுதி முழுவதும் மிக நன்றாகத் தெரிந்திருப்பது. அவை இரண்டில் குறள் மிகவும் பழைமையானது. தமிழ் இலக்கியத்தின் தலைசிறந்த நூலாகிய இதனைப் படித்து உணர்ந்தால் அல்லது தமிழில் புலமைப் பெற்றுவிட்டதாகக் கூறிக் கொள்ள முடியாது என்பதில் ஐயமில்லை.

**ஃபிரெடெரிக் பின்காட்**
**அதுவேறு இதுவேறு**

தமிழ்மொழி சமஸ்கிருத மொழியிலிருந்து வேறுபட்டது. தமிழ் திராவிட மொழி, மிகப் பழைய காலத்திலேயே தமிழ்

சிறந்து ஓங்கி வளர்ந்த மொழி, தமிழர்களுடைய புகழ் பெற்டற கவியான திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளை மராட்டியில் "சானோகுருசி" மொழிபெயர்த்திருக்கிறார். அதைப் பார்த்தால் தமிழ் மொழியின் தொன்மை தெளிவாகப் புரிகிறது. தமிழர் நாகரீகம், மொழி வளர்ச்சி எல்லாவற்றையும் அந்த நூலிலிருந்து அறிய முடிகிறது. கி.மு.300 ஆண்டுகளுக்கு முன்பு தமிழர்களும், தமிழகமும் இருந்த நிலைமையை அந்நூல் படம் பிடித்துக் காட்டுகிறது.

**சிரீபாத் கோசி**

**மலாய் மொழியில் குறள்**

மலாய் மொழியில் திருக்குறளை ஆக்கித் தந்தவர் டாக்டர் இசுமாயில் உசேன் என்பவர். மலாயா, நெதர்லாந்து, அமெரிக்கா நாடுகளில் படித்து மொழியில் துறையில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றவர்.

**சீனமொழியில் குறள்**

சீனமொழியில் திருக்குறளை மொழிபெயர்த்தவர் "செங்சீ" என்பவர். இவர் சிறந்த ஓவியரும் கூடத் திருக்குறள் கற்பிக்கும் ஞானம் வந்தை மலையருவியாகப் பெருகி வழிந்து பூமியில் பரந்து பாய்வதைச் சிந்தனைச் சிற்பி ஒருவன் பார்த்து மகிழ்வதாக உருவகப்படுத்தி அழகிய ஓவியம் வரைந்துள்ளார்.

**திருக்குறள் ஒரு அரங்கம்**

திருக்குறள் ஒரு அரங்கம் அஃது அவ்வக்கால உலகைப் புரக்கும் பொருள்களை அவ்வப்பொழுது வழங்கும பெற்றியது. அதனின்றும் இது காறும் அறிஞரால் எடுக்கப்பட்ட பொருள் சிலவே மிகச் சிலவே. இவ்வேளையில் திரண்டுவரும் புது உலகமும், இனித் திரளப்போகும் பலவகை உலகங்களும் ஏற்கத் தக்க பொருள்கள் இன்னும் திருக்குறளில் மிடைந்து கிடைக்கின்றன. திருக்குறட் அரங்கம் வந்தது.

**திரு.வி.க.**

**பொதுமறை**

திருக்குறள் வாழ்வுக்கு ஆக்கம் தரும் மெய்ம்மைப் பொருளைக் கூறுவது. மற்றப் பொய்ம்மைச் சிறுமைகளைக் கூறுவதன்று, இத்தகைய ஒரு நூல் ஓர் இனத்தார்க்கு மட்டும் உரியதாகாது. அது மன்பதைக்குரிய பொதுமையது. திருக்குறள் தமிழ்மொழியில் பிறந்த ஒரு பெரும் பொதுமறை உலகைக் கூறுபடுத்தும் பொருள்கள் அதன்கண் இல்லை. உலகை

ஒருமைப்படுத்தும் செவ்விய பொருள்கள் அதன்கண் மிளிர்கின்றன. இப்பெரிய பொதுமறையை மன்பதை பயின்று ஒருமையின்பத்தை நுகர்வதாக.

**திரு.வி.க.**

**வள்ளுவன் புகழ்**

தமிழ்ப் பெருமான் வள்ளுவர் வகுத்த அறநெறியை அடிப்படையாகக் கொண்டே எங்கள் சமுதாயத்தை உருவாக்க முயன்று வருகிறோம் என்கிறார் சிங்கப்பூர் முன்னால் கலாசார மந்திரி. "ஒதிமான்வோச்" அவர்கள் வள்ளுவப் பெருமானின் *1966*வது ஆண்டு விழாவில் அவர் பேசும்போது அவர் "வள்ளுவர்" சமதர்ம சமுதாய லட்சியத்தைத் தான் பரப்பினார். பல மதத்தினரைக் கொண்ட மலேசியாவை ஒன்றாக இணைத்துச் சமயச் சார்பற்ற சமுதாயத்தை அமைக்கப் பாடுபடும் மலேசியாவின் அரசியல்வாதிகள் வள்ளுவரிடமிருந்து கற்றுக் கொள்வதற்கு நிறைய இருக்கிறது என்றும் குறிப்பிட்டார்.

**கிறித்தவத் தமிழ்த்தொண்டர்**

தேமதுரத் தமிழோசை உலகெலாம் பரவும் வகையில் திருக்குறளை மேலைநாட்டு மொழிகளில் பெயர்தெழுதிய பெரியோர் கிறத்தவரை வான்புகழ் வள்ளுவரின் தீந்தமிழ்ப் பனுவலாம் திருக்குறளை "இருள் இராவிடத்து விளங்கிய ஒரு மீன் போலவும் பாலைச் சுரத்து அரிது அலர்ந்த ஒரு பதுமம் போலவும் ஞானத் திருவிளக்கு ஏந்தத் தெரிந்த திருவள்ளுவர்" என்று (தொன்னூல் விளக்கம்) வாழ்த்தி மகிழ்கிறார் வீரமாமுனிவர். **1730**ம் ஆண்டில் இலத்தீன் மொழியில் திருக்குறளின் அறத்தையும் பொருளையும் பெயர்த்து அளித்தார். முனிவரையே முன்னோடியாகக் கொண்டு, அயர்லாந்து நாட்டவரான கலைமுனிவர் சார்ச்சு யுக்லோ பேரப்பு *(1820-1908)* திருக்குறளை *1886*-ம் ஆண்டு ஆங்கிலத்தில் ஆற்றி அருளினார். எல்லீசுத் துறை திருக்குறளின் *13* திறங்களை ஆங்கிலத்தில் தந்துள்ளார். செருமானிய மொழியில் கிரால் அவர்களும், பிரெஞ்சு மொழியில் ஏரியல் கலேமிரேசர் ஆகியோரும் மொழிபெயர்த்துள்ளனர். விவிலியத்திற்கு அடுத்ததாக உலகில் பெரும்பாலான மொழிகளில் பெயர்ப்புச் செய்யப்பட்டிருப்பது திருக்குறளே, "பொதுமறையென்று தமிழ்நாட்டார் போற்றும் திருக்குறளின் செம்மையை உலகறியக் காட்டிய பெருமை கிறித்தவர்க்கே உரியதாகும்" என (கிறித்தவத் தமிழ்த் தொண்டர்) இரா. பி. சேது கூறுகின்றார்.

**தமிழ் வேதம்**

'தமிழ் வேதம்' என்று போற்றப்படுகிறது திருக்குறள்.

**திருக்குறள் வகுப்பு**

தமிழ்நாட்டில் முதன் முதலாக திருக்குறள் வகுப்பு நடத்தியவர் வள்ளலார் இராமலிங்க அடிகளார்.

**காந்தியடிகள்**

திருக்குறளின் பெருமையை அறிந்த காந்தியடிகள் "திருக்குறளைப் படிப்பதற்காகத் தான் தமிழனாகப் பிறக்க ஆசைப்படுகிறேன்" என்றார்.

**கோவில்**

மதுரை மீனாட்சி அம்மன் கோவில் பொற்றாமரைக் குளத்தில் ஒரு பக்கச் சுவரில் திருக்குறள் அத்தனையும் பளிங்குக் கற்களில் பதிக்கப்பட்டுள்ளன.

**வள்ளுவர் ஆண்டு**

தமிழில் திருவள்ளுவர் ஆண்டு பின்பற்றப்படுகிறது. இதுவும் ஆரிய ஆண்டு முறைதான். தை 1-ந் தேதி புத்தாண்டு பிறக்கும். ஆங்கில ஆண்டைவிடத் திருவள்ளுவர் ஆண்டுக்கு 31 ஆண்டுகள் அதிகம்.

**தமிழ் நாடு சட்டசபை**

தமிழ்நாடு சட்டசபைக் கூட்டம் திருக்குறள் ஒலிக்கத்தான் தொடங்கும். இதற்கு வழிவகை செய்தவர் சபாநாயகராக இருந்த சி.பா. ஆதித்தனர். தமிழ்நாடு சட்டசபை வீதிகளைத் தமிழில் தந்தவரும் அமரர் ஆதித்தனார்தான்!

**குறளின் சிறப்பு**

ரஷிய கிராமங்களின் மாளிகையில் அணுத்துளைக்காத சுரக்கப் பாதுகாப்பு பெட்டகத்தில் வைக்கப்பட்டுள்ள அரிய நூல்களுள் ஒன்று திருக்குறள்.

2. விக்டோரியா மகாராணியும் வைத்திருந்த நூல்

3. இங்கிலாந்தில் விவிலியத்துடன் வைத்துப் போற்றப்படுகிறது.

**திருவள்ளுவர் திருக்கோவில்**

சென்னை மயிலாப்பூர் முண்டகக்கண்ணி அம்மன் தலத்தின் துணைத்தலமாக உள்ளது "திருவள்ளுவர்

திருக்கோவில்" இந்தத் தெரு "திருவள்ளுவர் கோவில் தெரு" என்றே அழைக்கப்படுகிறது. கருவறையில் திருவள்ளுவ நாயனார் கம்பீரமாகக் கிழக்கு பார்த்த நிலையில் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். அர்த்தமண்டபத்தில் திருவள்ளுவர்-வாசுகி அம்மையார் திருவுருவங்கள் இருக்கின்றன. வாசுகி அம்மையாருக்கு இங்குத் தனிச் சந்நதியும் உண்டு.

**தந்தை பெரியார்**

நீங்கள் எந்தச் சமயத்தார் என்று கேட்டால், "வள்ளுவர் சமயம்" என்று சொல்லுங்கள். "உங்கள் நெறி என்ன?" வென்றால், "குறள் நெறி" என்று கூறுங்கள்.

**டாக்டர் ஆ.ப.ஜெ. அப்துல்கலாம்**

நான் படித்தவற்றுள்ளெல்லாம் மிகச் சிறந்த நூல் திருக்குறள் அது வாழ்க்கைக்கு மகத்தான வழிகாட்டி, நாட்டில் மதச் சண்டையும், சாதிச் சண்டையும் நடந்து கொண்டேயிருக்கிறது. ஆனால் சாதி, மொழி, மதம் பற்றி வள்ளுவர் தம்நூலில் ஓரிடத்தில் கூடக் குறிப்பிடவில்லை.

பண்டைத் தமிழர் வாழ்வியலை இலக்கியத்துணையுடன் சித்திரிக்கும் பெரும் பணியில் வள்ளுவர் நமக்களித்த திருக்குறள் பெருஞ்செல்வக் களஞ்சியமாகும். அதனைக் காணவும், வள்ளுவர் கால நிலையை அவர் விட்டுச் சென்றுள்ள காலக் கண்ணாடி வாயிலாகக் கணிக்கவும் முற்படுவோமாக.

# 'திருவள்ளுவரின் பக்தி நெறி'

**கவிஞர் மா.கோமுகி மணியன்**

திருக்குறளைப் படைத்ததன்மூலம் திருவள்ளுவர் தமிழ் மொழிக்கும், தமிழ்இனத்துக்கும் உலகளாவிய அங்கீகாரத்தை பெற்றுத்தந்துள்ள பெருமைக்குரியவர். அவர் காட்டிய வழிமுறைகள், வாழ்க்கை நெறிமுறைகள் உலக மக்கள் யாவர்க்கும் பொதுவானது. அதனால்தான் அதனை உலகப் பொதுமறை என்கிறோம். அதன் சிறப்பை,

**கடுகைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டி**
**குறுகத் தரித்த குறள்**

என்று இடைக்காடரும்

**அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டி**
**குறுகத் தரித்த குறள்**

என்று ஔவையாரும் பாராட்டியிருப்பதிலிருந்து புலனாகும்.

தமிழ் எழுத்தின் 'அ' என்கிற அகரம் தொடங்கி கடைசி மெய் எழுத்தான 'ன்' முடிய 1330 குறளையும் எழுதியிருந்தாலும், உலக மக்களின் பொதுமறையாய் விளங்க வேண்டுமென்கிற கருத்தில், தமிழ் என்கிற சொல்லோ தமிழர் என்கிற வார்த்தையோ பொய்யா மொழிப் புலவர் தன்குறளில் ஒரு இடத்தில்கூட பயன்படுத்தவில்லை.

அதைப்போலவே 'தெய்வம்' என்ற சொல்லை 6 இடத்தில் திருக்குறளில் காணமுடிந்தாலும், 'கடவுள்' என்ற சொல் ஒரு இடத்தில் கூடக் காணப்படவில்லை, 133 அதிகாரத்தில் 132 அதிகாரம் அந்தந்த அதிகாரத்தில் உள்ள பாக்களில் எங்கேனும் காணப்படுகின்ற வார்த்தைகளால் தலைப்பிடப்பட்டு இருக்கிறது.

ஆனால் 'கடவுள்' என்கிற வார்த்தையே இல்லாத முதல் அதிகாரத்திற்கு, 'கடவுள் வாழ்த்து' என்று பிற்காலத்தில் அதனைத் தொகுத்தவர்கள் தலைப்பிட்டுத் தொடங்கி உள்ளனர்.

அதைப்போலத்தான் திருக்குறளுக்கு மணக்குடவர், பருதி, பருதிப் பெருமாள், காலிங்கர் போன்று அக்காலத்தில் உரை எழுதியிருந்தாலும் பரிமேலழகர் எழுதிய உரை சாலச் சிறந்த ஒன்றாக விளங்கியது. பிற்காலத்தில் மு.வ. தொடங்கிச் சாலமன் பாப்பையா வரை 150க்கும் மேற்பட்டவர்கள் உரை எழுதி உள்ளனர். ஆனால் யாவரும் எழுதிய உரைகள் ஒரேமாதிரியாக இல்லை. கொள்கை நெறிகளில், பொருள் தருவதில் வேறுபடுகிறார்கள். திருவள்ளுவரின் 'பக்தி நெறி'க் கொள்கையிலும் அப்படித்தான் முரண்படுகிறார்கள்.

எனவே உலகப்பொதுமறை தந்த பொய்யாமொழிப் புலவர் திருவள்ளுவரின் குறட்பாக்களின் பொருள் உணர்ந்து அவரின் ஆழ்மனது அறிந்து அவரின் பக்தி நெறியினைக் கண்டறியப்பட வேண்டியுள்ளது.

எடுத்துக்காட்டாக 'கடவுள் வாழ்த்து' என்கிற முதல் அதிகாரத்தில்,

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்**

- 10 என்கிறார் யாரை இறைவன் என்று குறிப்பிடுகிறார்.

'இறைமாட்சி' அதிகாரத்தில்,

**முறைசெய்து காப்பாற்றும் மன்னன், மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும் - 388**

என்கிறார். அப்படியானால் மன்னனை இறைவன் என்கிறாரா? அதைப் போலவே கடவுள் வாழ்த்தில்,

**அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்**
**பிறவாழி நீந்தல் அரிது - 8**

என்கிறார். அறம் என்றால் என்ன? அறவாழ்வு யாது? என்பதனை 'அறன் வலியுறுத்தல்' அதிகாரத்தில்,

**மனத்துக்கண் மாசிலன்ஆதல் அனைத்து அறன் ஆகுல நீர பிற - 34** என்ற குறளில் விளக்குகிறார். அந்தணன் என்போர் யார்? அதற்கு 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தில்,

**அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக லான் - 30** என்ற குறள்மூலம் வெளிப்படுத்துகிறார்.

ஊழ் வலியது என்பதனை 'ஊழ்' என்கிற அதிகாரத்தில் தெளிவாக விளங்க வைக்கிறார். கடினமான காரியத்தைச் செய்ய சில நேரங்களில் தடுமாறுவார்கள். ஒருவன் செல்வந்தனாக

இருப்பதும், ஒருவன் கல்வியில் சிறந்தவனாக இருப்பதும், ஊழ் (அ) விதி ஒத்திருந்தால் காலம் சாதகமாக இல்லாத காலத்திலும் வெற்றி பெறுவதும், ஊழ் சதி செய்தால் சாதகமான நேரத்தில் கூட எதையும் சாதிக்கமுடியாது திணறுவதும் நடக்கிறது.

எனவே நல்வினையால் நன்மை வரும்பொழுது மகிழ்ச்சி அடைபவர்கள் அது அல்லாமல் தீமை வரும் பொழுது ஏன் தேவையில்லாமல் வருந்த வேண்டும்.

மனிதனின் முயற்சிகளையெல்லாம் முறியடித்து முடிவில் ஊழே வெல்கிறது என்பதனை,

**ஊழின் பெருவலி யாவுள மற்றுஒன்று**
**சூழினும் தான்முந் துஉறும் (குறள் 380)**

குறளில் விளக்குகிறார். விதியை வெல்லமுடியாது என்று தன்பாக்களில் பாடிவிட்டு 'ஆள்வினை உடைமை' என்கிற அதிகாரத்தில் இடைவிடாத முயற்சி இருந்தால், செய்ய முடியாத காரியத்தையும் செய்ய முடியும், சோம்பல் உள்ளவனால் எதையும் சாதிக்க முடியாது, ஊழின் வலிமையால் இடையூறு ஏற்பட்டாலும் மனத்தளர்ச்சி இன்றி எத்தகைய குறைபாடும் இல்லாமல் தொடர்ந்து முயன்று உழைப்பவர்கள் விதியையும் வெல்வர் என்பதனை,

**தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும் (குறள் 619)**

என்ற குறளிலும் வெளிப்படுத்துகிறார். எனவே மன்னனைத்தான் இறைவன் என்றும் தெய்வத்தால் ஆகாத காரியத்தையும் முயற்சித்தால் வெற்றிபெறலாம் என்றும் உலகப் பொதுமறை திருக்குறள்மூலம் திருவள்ளுவர் உணர்த்துகிறார். இதுவே திருவள்ளுவரின் பக்திநெறி என்று முடிவாக எடுத்துக் கொள்ள வேண்டுமா? என்று பார்க்கையில் அதுவும் ஆராய வேண்டிய ஒன்றாக இருக்கிறது.

ஏனெனில் திருவள்ளுவர் எதையும் நுட்பமாக, மனத்திண்மையோடு மனத்தில்பட்ட கருத்தை பட்டவர்த்தனமாகத் தெளிவாக எடுத்துக் கூறும் ஆற்றல் படைத்தவர். கள் உண்ணாமை, புலால் மறுத்தல் அதிகாரங்களில் வரும் குறள் இதனைத் தெளிவுபடுத்துகிறது.

காரணம் சங்க காலத்தில் புலால் உண்ணுதல், கள் உண்ணுதல், இரு தாரம் கொள்ளுதல், சூது ஆடுதல் இவை

வழக்கத்தில் இருந்திருக்கிறது. ஆனால் வள்ளுவர் இதனை கள் உண்ணாமை, புலால் மறுத்தல் அதிகாரங்களில் வன்மையாகக் கண்டிக்கிறார்.

கள் உண்பவர்கள் தன்புகழை இழப்பர், சான்றோர் அவர்களை மதியார்; எதிரிகள் எளிதில் அவர்களை வெல்வர்; கள் உண்டு அறிவு மயங்கிக் கிடப்பவர்கள் விசம் குடித்துச் செத்தவர்க்குச் சமம் என்பதனை,

**துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பார் கள்ளுண் பவர் (குறள் 926)**

என்று விளக்குகிறார்.

அதைப்போலவே புலால் உண்பவர்கள் இரக்கமில்லாத வர்கள், பொருளைக் காப்பாற்றத் தெரியாதவனிடம் பொருள் எவ்வாறு இருக்காதோ அப்படி ஊன் உண்பவரிடம் அருள் இருக்காது. பல வேள்விகள் செய்த பலனைவிடப் புலால் உண்பதை கைவிடுவதால் வரும் பலனே அதிகம், புலால் உண்ணாதவரை எல்லா உயிர்களும் கை கூப்பி வணங்கும் என்பதனைப் புலால் மறுத்தல் அதிகாரத்தில்,

**கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும் - 260**

என்ற குறளில் விளக்குகிறார். மேலும் புல்லறிவாண்மை அதிகாரத்தில்,

**உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான், வையத்து**
**அலகையா வைக்கப் படும்**

என்கிறார்.

மேலும் நிலையாமை, துறவு, மெய் உணர்தல் போன்ற அதிகாரங்களில் நிலையில்லாத வாழ்க்கையைப் பற்றியும் பற்று நீங்கினால் துன்பம் நீங்கும், விருப்பு வெறுப்பு அறியாமை நீங்கினால் துன்பங்கள் ஒழிந்து நீங்கிவிடும். பிறவித்துயரைத் தரும் அஞ்ஞானம் அகல செம்பொருளைக் காண்பதே மெய் உணர்வு ஆகும் என்பதனை,

**பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு (குறள் 358)**

என்ற குறளில் விளக்குகிறார்.

**நிலையாமை அதிகாரத்தில்**

**நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும் பெருமை உடைத்துஇவ் வுலகு - 336** என்று நேற்று இருந்தவன் இன்று இல்லை என்கிற நிலையாமைத் தன்மை உடைய வாழ்க்கையில் எந்தப் பொருளில் இருந்து பற்று நீங்கியவனாக இருக்கிறானோ அந்தப் பொருளால் அவன் துன்பம் அடைவதில்லை என்பதனை துறவு அதிகாரத்தில்,

**யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன் (குறள் 341)**

என்பதன் மூலம் விளக்குகிறார்.

அப்படிப்பட்ட துன்பம் இல்லாத வாழ்க்கையைப் பெற விருப்பு வெறுப்பு அற்ற இறைவன் திருவடிகளை மனத்தால் நினைப்பவர்களுக்கு கிட்டும் என்பதனை,

**வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல (குறள் 4)**

என்ற குறளில் விளக்குகிறார்.

ஐம்புல ஆசைகளையும் ஒழித்து இறைவனிடத்து அன்பு செலுத்துபவர்களுக்கு அறியாமையால் வரும் நல்வினை தீவினை சேர்வதில்லை என்பதனை,

**பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார் (குறள் 6)**

**இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு (குறள் 5)**

போன்ற குறள் மூலம் உணர்த்துகிறார்.

தனக்குநிகர் இல்லாத இறைவனின் திருவடிகளை நினைப்பவர்க்கு அல்லாமல் மற்றவர்கள் துன்பங்களை போக்கிக் கொள்ள இயலாது என்பதனை,

**தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்**
**மனக்கவலை மாற்றல் அரிது (குறள் 7)**

மேலும் எட்டுகுணங்களை உடைய இறைவனின் திருவடியை வணங்காதவர் தலை இருந்தும் பயனில்லாததே என்பதனை,

**கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை (குறள் 9)**

என்ற குறளில் விளக்குகிறார்.

முடிவாக மனிதர்கள் தங்கள் மனமாகிய மலரில் வீற்றிருக்கும் இறைவன் திருவடிகளைத் துதிக்கின்றவர்கள், நினைக்கின்றவர்கள் துன்பமின்றி, அழிவின்றி வாழ்வதுடன் பிறவிக் கடலையும் நீந்துவர் என்பதனை,

**மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார் (குறள் 3)**

**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார் (குறள் 10)**

என்ற குறள்கள் மூலம் தெளிவாக்குகிறார். எனவே தன்மனதில் தவறு என்பதனைத் தைரியமாய் தெளிவாக தனது குறளில் பல இடங்களில் சுட்டிக் காட்டியுள்ள வள்ளுவர், இறைவன் ஒருவன் இல்லையென்று நினைத்து இருந்தால் வெளிப்படையாகக் கடவுள் இல்லையென்று மறுத்து இருப்பார். அப்படி அல்லவே! பிறகு அவரின் பக்தி நெறிதான் என்ன?

இறைவனை மட்டும் நம்பி சோம்பி இருந்தால் ஒன்றும் நடவாது என்பதற்காகத்தான் தெய்வத்தால் ஆகாது எனினும் முயற்சி தன் மெய்வருத்தக் கூலிதரும் என்றார். மன்னனை இறை என்பதால் மன்னனே இறைவன் என்பதல்ல; இறைவனைப்போல் விருப்பு வெறுப்பு இல்லாமல் நடுவுநிலை தவறாமல் மக்கட்கு நன்மை பயத்தல் வேண்டும் என்பதே வள்ளுவரின் உள்ளக் கருத்தாகும். ஓர் ஆயுள் தண்டனைக் கைதி தன் நன்னடத்தையால் தண்டனை தவிர்ப்பு விதிகளின்படி (Under the provision of permission) தன் தண்டனைக் காலத்தைப் பாதியாகக் குறைக்க வழிவகை தற்காலச் சட்டத்தில் உள்ளது.

மனிதன் இயற்றிய சட்டமே தன்தவறை உணர்ந்து திருந்த நினைக்கும் மனிதனுக்கு இவ்வளவு இரக்கம் காட்டும்பொழுது இறைவன் கருணை வடிவானவனாயிற்றே! அவன் இரக்கம் காட்டமாட்டானா?

காட்டுவான்; எப்பொழுது வள்ளுவர் கூறியபடி வாலறிவாலனாய், மலர்மிசை ஏகினானாய், வேண்டுதல் வேண்டாமை இலாதவனாய், பொறிவாயில் வெந்தவித்தானாய், தனக்குவமை இலாதானாய், அறவாழி அந்தனணாய், என்குணத்தானாய் வாழ்பவர்களுக்கு இறைவன் இரக்கம்

காட்டுவான், இன்பவாழ்வு அளிப்பான்; எனவே யார் மேலே கூறியபடி வாழ்கிறார்களோ அவர்களே வள்ளுவர் காட்டும் இறைவன். மேலே கூறிய பெயர்களே அவரது இறைவனுக்கு சூட்டப்படும் திருப்பெயர்கள் ஆகும்.

அதனாலேயே செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே! என்று திருவள்ளுவ மாலை பகர்கிறது.

திருவள்ளுவரின் இறைவனுக்குத் திருநீறுமில்லை, திருமண்ணுமில்லை, உருவமுமில்லை, கோயிலுமில்லை, பிறிதுமில்லை, ஒழுக்கம், நன்னெறியே, பக்திநெறி உலகமக்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒன்று.

# திருக்குறளில் வாழ்க்கைத் திறன்கள்

இரா. கலைச்செல்வி

**முன்னுரை**

மனிதனின் பிறப்பைப் பற்றிக் கூறுமிடத்து, "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்பர். மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் தன் வாழ்வை மகிழ்ச்சியாக, வெற்றிகரமாக வாழ்ந்து காட்டுவதற்குச் சில அடிப்படைத் திறன்கள் தேவைப்படுகின்றன. சராசரி மனிதனிலிருந்து தொடங்கி நிபுணர் வரை அவரவரின் திறனுக்கேற்பவே அவர்களின் வாழ்வு வெற்றியாகவும் தோல்வியாகவும் அமைகிறது. ஒருவரது வாழ்வில் வெற்றி தோல்வியை நிர்ணயிப்பதில் முக்கியப் பங்கு வகிப்பது வாழ்க்கைத் திறன்களாகும். அவற்றை நாளும் நல்குவதில் முன்னணியில் நிற்பது 'திருக்குறளே'. திருக்குறள் வெளிப்படுத்தும் வாழ்வியல் திறன்கள் பின்வருமாறு கொடுக்கப்படுகின்றன.

**வாழ்க்கைத் திறன்கள்**

தினசரி வாழ்க்கையின் எதிர்பார்ப்புகள், சவால்களை சிறப்பான முறையில் எதிர்கொள்ளத் தேவைப்படும் விதத்ததில், தனிநபராக தம் நடத்தையைப் பொருத்தமாகவும், ஆக்கப்பூர்வமாகவும் ஆக்கிக் கொள்ளப்பயன்படும் திறன்களையே வாழ்க்கைத் திறன்கள் என்கிறோம். (உலக சுகாதார நிறுவனம்) சூழலுக்கு ஏற்றவாறு இலகுவான வழியில் சிக்கல்களைச் சமாளித்துச் செயல்படுவதையே பொருத்தமான முறை என்கிறோம். ஆக்கப்பூர்வமான நடத்தை என்பது கடினமான சூழலிலும் சூழலின் அழுத்தத்தைச் சமாளிக்க ஆரோக்கியமான சிந்தனையோடு சந்தர்ப்பங்களை - சூழ்நிலைகளை எதிர்கொள்வதாகும்.

என்ன செய்யவேண்டும், எப்பொழுது செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்பதைத் தீர்மானிக்க, நம் அறிவை,

அணுகுமுறையை, மதிப்பீடுகளை உண்மையான திறன்களாக மாற்ற வாழ்க்கைத் திறன்கள் உதவுகின்றன.

வாழ்க்கையில் திறன் பெற்று, சக்தியுடன் மேம்பட்டு வாழ்வதற்கான ஒரு கருவியாக வாழ்க்கைத்திறன் கல்வி என்ற அணுகுமுறை அமைகிறது. வாழ்க்கைத் திறன்களை மேம்படுத்திக் கொள்ளாமல், அறிவை மட்டும் வளர்த்துக் கொண்டால் அந்த அறிவு பயன்படாமல் போய்விடும். நடைமுறை, தொழில் சார்ந்த, வாழ்வியல் ஆதார, எழுத்தாற்றல் திறன்கள் இவற்றைப் பயன்படுத்த வாழ்க்கைத் திறன்கள் உதவுகின்றன.

தொடர் பயிற்சியாலும், நிதானத்தைக் கடைப்பிடிப்பதாலும் இத்திறன்களைப் பெறலாம். இத்திறனுள்ளவர் ஒரு செயலைச் செய்து தரமான முடிவைத் தருவார்கள். குறைந்த நேரத்தையும் சக்தியையும் ஆதாரத்தையும் பயன்படுத்தி ஒரு சிறந்த தீர்வு காண்பர். வாழ்க்கைக் திறன்களை மேம்படுத்திக் கொள்வது என்பது எவ்வித சூழ்நிலையையும், எல்லாவித மக்களையும் எதிர்கொண்டு நம் வாழ்வை ஆரோக்கியமாகவும் ஆக்கப்பூர்வமாகவும் நடத்திச் செல்ல உதவுகிறது.

**சில முக்கியத் திறன்கள்**

- தன்னை அறிதல்
- தன்னை பிறர் நிலையில் வைத்துப் பார்த்தல்
- கூர் சிந்தனைத்திறன் / திறனாய்வுச் சிந்தனைத் திறன்
- பிரச்சினைகளைத் தீர்க்கும் திறன்.
- உறவு கொள்ளும் திறன்.
- தொடர்பு கொள்ளும் திறன்.
- உணர்ச்சிகளுக்கு ஈடுகொடுக்கும் திறன்.
- முடிவெடுக்கும் திறன்.
- அழுத்தத்திற்கு ஈடுகொடுக்கும் திறன்.
- படைப்பாற்றல் திறன்.

**வாழ்க்கைத் திறன்கள் அன்றாட வாழ்வில் தேவைப்படுவதற்கான காரணங்கள்**

- நல்ல உடல் நலத்துடனும் ஆக்கப்பூர்வமான மனதோடும் வாழ்வதற்கான முறைகளின் முக்கியத்துவத்தை உணர்ந்துகொள்ள உதவுகிறது.

- எளிதாக ஆட்படும் தன்மையைக் குறைத்து, ஆபத்துக் காரணிகளைக் குறைத்து, பாதுகாப்புக் காரணிகளை ஆதரித்தல்.
- தன்னம்பிக்கையையும், தன்மானத்தையும் கட்டமைத்தல்.
- வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துதல்
- சூழலுக்கும் மனிதர்களுக்கும் ஏற்றவாறு தன்னைப் பொருத்திக் கொள்ளுதல்.
- பிரச்சினைகள் வரும்பொழுது, தொய்வடையாமல் ஆக்கப்பூர்வமான முறையில் அணுகுதல்.
- நம்முடைய எழுத்தாற்றல், மொழி ஆளுமை, தொழில்திறன், அன்றாடச் செயல் திறன்கள் ஆகியவற்றைத் திறம்பட பயன்படுத்துதல்.

**திருக்குறளும் வாழ்க்கைத் திறன்களும்**

திருக்குறளில் கூறப்பட்டுள்ள மதிப்புக்கல்வியை முழுமையாகப் பெற வாழ்க்கைத் திறன்களைப் பின்பற்றியொழுகுதல் வேண்டும். குறிப்பிட்ட இத்திறன்களைப் பின்பற்றினால் மட்டுமே வாழ்க்கையில் சரியான பாதையில் செல்ல இயலும். எடுத்துக்காட்டாக, சில குறள்களைப் பார்க்கலாம்.

**தன்னை அறிதல்**

ஒருவர் தன்னின் பலம், பலவீனத்தை அறிந்து தான் யார் என்பதை உணர்ந்து கொள்ளுதல் தன்னை அறிதலாகும். சமுதாயத்தில் பிறருடன் இணைந்து வாழ, செயலாற்ற, தனக்குக் கிடைக்கும் வாய்ப்புகளைச் சரியாகப் பயன்படுத்தி முன்னேற இத்திறன் உதவுகிறது. இதனாலேயே வள்ளுவர், "பிறரது குற்றத்தைப் பார்க்கும் முன் உன்னிடம் உள்ள குற்றத்தைக் காண்" எனக் கட்டளையிடுகின்றார்.

**ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னும் உயிர்க்கு (குறள் 190)**

**தன்னைப் பிறர்நிலையில் வைத்துப்பார்த்தல்**

மற்றவர்களின் சூழ்நிலையைப் புரிந்து கொள்ளக்கூடிய மிக நுட்பமான மன உணர்வைப் பெற்றிருப்பது தன்னைப் பிறர்நிலையில் வைத்துப் பார்த்தலாகும். இத்திறனைப் பெற்றோர் நண்பர், சுற்றத்தார், அண்டை அயலார் ஆகியோரிடத்துப்

பயன்படுத்தும் பொழுது பல பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பது எளிதாகும். பிரச்சினைகளைக் கண்டிப்பாகத் தீர்க்க முடியும். சில சமயம் எதிர்பாராத அற்புதங்களைக் கூட நிகழ்த்தும் வல்லமை கொண்டது. இத்திறனைப் பற்றி வள்ளுவரின் கருத்து:

**மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து (குறள் 90)**

என்பதாகும்.

**கூர் சிந்தனைத் திறன் / திறனாய்வு சிந்தனைத் திறன்**

கிடைத்த அனுபவங்களையும் தகவல்களையும் முன் தீர்மானங்கள் இன்றி ஆராயும் திறன். இத்திறன் பிறர் நம்மிடம் பழகுவதற்கான காரணங்கள், நட்புக்கான காரணங்கள் ஆகியவற்றை நாம் உய்த்துணர வைக்கிறது.

**அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்கல் ஆகா அரண் (குறள் 421)**

**பிரச்சினைகளைத் தீர்க்கும் திறன்**

நம்முடன் பழகியவர் நமக்கு ஏதேனும் ஒரு உதவி செய்து, பின் சூழ்நிலையினாலோ/அறிந்தோ/அறியாமலோ அவர் நமக்கு ஏதேனும் துன்பம் செய்தால் நாம் அதனைத் துன்பமாகக் கருதக்கூடாது. இதனையே,

**கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த**
**ஒன்றுநன்று உள்ளக் கெடும் (குறள் 109)**

என்ற குறள் வலியுறுத்துகிறது.

**உறவு கொள்ளும் திறன்**

இன்று, உலகியல் வழக்கில் பெரும்பான்மையான பிரச்சினைகளுக்கு அடித்தளமாய் அமைவது ஒருவரின் பேச்சு, மற்றொன்று பணம். இவற்றுள் முன்னதை நீக்கத் திருவள்ளுவர் கூறும் உத்தி ஆழ்ந்து சிந்தித்தற்குரியது.

**ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்**
**காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு (குறள் 642)**

**தொடர்பு கொள்ளும் திறன்**

ஒருவருக்கொருவர் தனது கருத்தைப் பரிமாறிக் கொள்ளவும், சமுதாயத்தில் மேன்மை அடையவும், ஏன் நாட்டை

ஆளவும், ஒருவருக்குத் தொடர்புகொள்ளும் திறன் தேவைப்படுகிறது. பேசவேண்டிய இடத்தில் ஒரு சில சொற்களைப் பேசாமலிருப்பதும், தேவையில்லாத இடத்தில் தேவையற்றதைப் பேசுவதும் பாதிப்புக்குள்ளாக்கும். எனவே இத்திறனில் சிறப்புப் பெறுவதுதான் ஒருவருக்கு உண்மையான மிகச் சிறந்த சிறப்பு என வள்ளுவர் கூறுவது ஒப்புநோக்கற்குரியது.

**நாநல மென்னும் நலனுடைமை அந்நலம்**
**யாநலத்து உள்ளதூஉம் அன்று (குறள் 641)**

**உணர்ச்சிகளுக்கு ஈடுகொடுக்கும் திறன்**

செயல்பாடுகளில் உணர்வுகளுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்துச் செயல்படும்போது, அது நம் நடத்தையை எப்படிப் பாதிக்கும் என்பதை உணர்ந்து நாம் ஈடுபடும் செயல்களில் மிகக் கவனமுடன் இருக்க வேண்டும் என்பதை,

**தக்கார் தகவிலார் என்பது அவரவர்**
**எச்சத்தாற் காணப் படும் (குறள் 114)**

**முடிவெடுக்கும் திறன்**

ஒவ்வொரு சூழ்நிலையிலும், ஒவ்வொரு நிகழ்விலும் அவற்றின் நன்மை தீமையைப் பகுத்தறிந்துதான் முடிவெடுக்க வேண்டும். அப்பொழுதுதான் அம்முடிவு நன்மை பயக்கும், அவ்வாறின்றி ஒன்றைப் பற்றி முடிவு எடுத்தபின் அவற்றைப் பற்றி எண்ணுதல் குற்றம் என்கிறார்.

**எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்**
**எண்ணுவம் என்பது இழுக்கு (குறள் 467)**

**அழுத்தத்திற்கு ஈடுகொடுக்கும் திறன்**

வாழ்வில் நமக்குள் ஏற்படும் மனஅழுத்தங்களைக் கண்டு அவற்றைக் குறைத்து நம் சூழலை மாற்றிச் செயல்படுதல் வேண்டும். இவ்வழுத்தமானது நமக்கு உணர்வு ரீதியாகவும், உடல் ரீதியாகவும் மிகப்பெரும் பாதிப்பை ஏற்படுத்தும் தன்மையுடைது. இன்றைய நவீன உலகில் குறிப்பிட்ட விகித மக்கள் இதனாலேயே தன்வாழ்வைத் தொலைத்துவிடும் செய்தியை நாள்தோறும் செய்தித்தாள்களில் காணமுடிகிறது. எனவே, தத்தம் வாழ்வைச் செம்மைப்படுத்த விரும்பும் ஒவ்வொருவரும் பின்பற்றி நடக்க சில குறள்கள்:

**மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்**
**தகுதியான் வென்று விடல் (குறள் 158)**

**உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரின் பின் (குறள் 160)**

**படைப்பாற்றல் திறன்**

ஒருவன் ஏற்கனவே பெற்றுள்ள அறிவினை (அ) உத்திகளைத் தொகுத்து (அ) மாற்றி (அ) திரும்ப புதியசூழலில் பயன்படுத்துவதனால் ஏதேனும் உருவாக்கவல்ல திறமை படைப்பாற்றலாகும். இது அன்றாட சூழலில் பெற்றுள்ள அனுபவங்களைத் தாண்டிச் சூழுலுக்கு ஏற்றாற்போல் மாறி இயங்க உதவுகிறது.

மருத்துவத்தைக் கற்றறிந்தவன் அனைத்து நோயாளிக்கும் ஒரே மருந்தைத் தராது நோயாளியின் சக்தியையும் நோயின் தன்மையையும் காலத்தின் இயல்பையும் நன்கு கருதிய பிறகே சிகிச்சை செய்ய முற்பட வேண்டும் என்பதை,

**உற்றான் அளவும் பிணியளவும் காலமும்**
**கற்றான் கருதிச் செயல் (குறள் 949)**

என்கிறார்.

**முடிவுரை**

**எல்லாப் பொருளும் இதன்பால் உளஇதன்பால்**
**இல்லாத எப்பொருளும் இல்லையால் - சொல்லால்**
**பரந்தபா வால்என் பயன்வள் ளுவனார்**
**கரந்தபா வையத் துணை**

என்பதற்கேற்ப மனிதனின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான மிக அத்தியாவசியமான வாழ்க்கைத் திறன்கள் அனைத்தையும் திருக்குறள் தன்னுள் கொண்டிருக்கிறது.

# திருவள்ளுவர் அறிவுறுத்தும் இல்லறம்

**ரெ.முரளி**

இல்லறங்களின் வளர்ச்சியைப் பொறுத்தே ஒரு நாட்டின் வளர்ச்சி இருக்கும். ஒரு கட்டிடத்தின் உத்திரவாதத்திற்கு அஸ்திவாரம் எப்படி முக்கியமானதோ அதேபோல் நாட்டின் வளர்ச்சிக்கு இல்லறமே அடித்தளம். ஒவ்வொரு வீட்டின் இல்லறம் நன்றாக இருந்தால் தான் தெரு, ஊர், மாவட்டம், மாநிலம், நாடு, உலகம் என அனைத்துமே சிறப்பாக இருக்கும்.

இல்லறம் நல்லறமாக அமைந்தால் தான் சமூகம் சலனமில்லாது இருக்கும். அங்கு சாந்தியும், சமாதானமும் நிலவும். நல்ல சந்ததி உருவாகும். பசுமையான பூமியில் நல்ல பயிர்கள் விளைவதைப் போல நல்ல இல்லறத்தில்தான் நல்ல எதிர்கால சந்ததியினர் உருவார்கள். கணவன், மனைவி இருவரும் ஒத்த கருத்துடன் வாழ்வதே ஊர் புகழும் இல்லறம் ஆகும். கணவரின் கண் அசைவைப் புரிந்து கொள்ளும் மனைவியும், மனைவியின் மனத்தை நோகடிக்காத கணவரும், பெற்றோரையும், சமூகத்தையும் மதித்து வழிநடக்கும் பிள்ளைகளும் சேர்ந்து இல்லறம் மல்லிகை பூச்சரம்போல் வாசம் வீசும். இல்லற வாழ்க்கை என்பது இறைவன் கொடுத்த இனிய உறவு. இல்லற வாழ்க்கை இனிமையாக அமைய கணவன், மனைவி இருவரும் இரு தராசுபோல் இருக்க வேண்டும்.

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது**

இல்லறத்தில் கணவன், மனைவி இருவரும் அன்புடன் அறம் செய்வதே வாழ்வின் பயன், அதனால்தான் அவ்வை மூதாட்டியும் அறம் செய்ய விரும்பு எனச் சொன்னார். சில புரட்சி திருமணத்தில் மேற்கண்ட இந்தத் திருக்குறளைக் கூறியே மணமக்கள் வாழ்க்கையை துவங்குகின்றனர். வாழ்க்கைத் துணை நல அதிகாரத்தில் மனைவியானவள் எப்படி இருக்க வேண்டும் என அழகாய் சொல்கிறார் திருவள்ளுவர்.

**தற்காத்துக் தற்கொண்டார் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்**

தன்னைக் காத்துத் தன்னை நம்பி வாழும் கணவன், குழந்தைகள் மற்றும் சொந்த பந்தங்களையும் பாதுகாத்து அதற்கு மேலும் நாவடக்கம் கொண்டு சோர்வில்லாமல் வாழ்பவளே சிறந்த மனைவி இப்படிப்பட்ட மனைவி மழையை பெய் என்று சொன்னால் மழையும் அவள் சொல் கேட்கும் என்கிறார். விருந்தோம்பல் தமிழர் பண்பாடு. வள்ளுவப் பெருந்தகை காட்டும் இல்லறவியல் விருந்தோம்பலின் பெருமை விளக்கப்படுகிறது. இல்லறத்தில் கணவன், மனைவி இணைந்தே வந்தோரை உபசரித்து மனமகிழச் செய்திட்ட பின்னரே விடை கொடுக்க வேண்டும். தமிழர்கள் இன்றும் வீட்டிற்கு யாரேனும் வந்தால் உணவு உண்ட பின்னரே அனுப்பி வைப்பர். இது தமிழர்களின் மரபு மட்டுமல்ல. இல்லறத்தின் சிறப்பும் ஆகும்.

**மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்னோர்ற்றான் கொல் எனும்சொல்**

தந்தைக்கு மகன் செய்ய வேண்டிய கடமை இவனுடைய தந்தை இவனைப் பெற என்ன தவம் செய்தாரோ என்று புகழும்படி மகன் வாழ வேண்டும். திருவள்ளுவர் முற்பிறவி, தவம், தெய்வம் ஆகியவற்றில் நம்பிக்கை கொண்டவர். அதனால்தான் மகனைப் பெறுவதில் கூட முற்பிறவிப் பயன் இருப்பதாய்க் கூறியுள்ளார். மகன் சிறந்தவன் என்றால் இல்லறத்தில் தாய், தந்தை இருவரும் சிறந்தவர்களாகத்தான் இருப்பார்கள் என்பதை சொல்லவும் வேண்டுமோ? திருவள்ளுவர் 1330 திருக்குறள் இயற்றி இருந்தாலும் சிறப்பான பல குறள்களில் தலைமை ஏற்பது.

**இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய் கவர்ந்தற்று**

என்ற திருக்குறள்தான்.

- இனிய வார்த்தைகள் இருக்கும்போது கடுமையான வன்சொற்கள் பேசுவது கனியிருக்கும்போது காயை விரும்புவது போல் ஆகும். நாவடக்கம் வேண்டும் என்பதற்காக எழுதப்பட்ட திருக்குறள் இது.

வள்ளுவர் - வாசுகியே இல்லறத்தில் ஒருவருக்கொருவர் அன்புடன் விட்டுக்கொடுத்து வாழ்ந்தால் இல்லறம் என்றும் நல்லறமே.

# திருக்குறளில் அறிவியல் கருத்துக்கள் இலக்கிய ஆய்வு

வை.பூ. சோமசுந்தரம்

**திருக்குறள் மேன்மை**

தமிழ் இலக்கிய வானில் திருக்குறளின் மேன்மை ஒப்புயர்வற்றது. (சங்க இலக்கியங்களாகப் போற்றப்பெறும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் திருக்குறளுக்கு மட்டும், திருவள்ளுவருக்கு மட்டும் கிடைத்த பெருமை சிறப்பு பட்டியலிட முடியாத அளவு பரந்துள்ளது. திருவள்ளுவமாலை, ஐம்பத்து ஐந்து சான்றோர்களின் புகழுரை பெற்ற நூல். பழைய உரை ஆசிரியர்கள் பத்துப்பேர். தற்போது வந்துள்ள உரைகளின் எண்ணிக்கை முந்நூற்று ஐம்பது. இன்னும் இந்த எண்ணிக்கை பெருகி வருகிறது. 2002ம் ஆண்டு வரை 36 மொழிகளில் 128 மொழிப்பெயர்ப்புகளாக மலர்ந்துள்ளது திருக்குறள். ஆங்கிலத்தில் மட்டும் 28 மொழி பெயர்ப்புகள். 1730இல் வீரமா முனிவர் இலத்தீனில் மொழியாக்கம் செய்தார். மு.வ. திருக்குறள் உரை 1959இல் முதல் பதிவு 2009இல் 44 ஆண்டுகளில் 175 பதிப்பு கழக வெளியீடாக வந்த சாதனை. வள்ளுவரின் உருவம் மயிலாடுதுறை திரு.இரா. வேணுகோபால் சர்மாவால் ஓவியமாக்கப்பட்டு, பாரதிதாசன் வீட்டில் காமராசர் பார்த்திட கரந்தை தமிழ்ச் சங்கத்தில் நடந்த புலவர் குழு 18.04.1959இல் ஒப்புதல் தர, அறிஞர் அண்ணா இதனை வெளியிட டாக்டர். கலைஞர் பாராட்டிட, சட்டசபையில் வைக்கப்பட்டது. 1960 பிப்ரவரியில் அஞ்சல் தலையில் வள்ளுவர் வருகிறார். 1995 உலகத் தமிழ் மாநாட்டின்போது 10 ரூபாய் நாணயத்தில் வள்ளுவர் மிளிர்ந்தார். காவல்துறையில் சிறந்த சேவை செய்தோர் பெறும் பதக்கத்தில் வள்ளுவர் உருவமும், கடிதோச்சி மெல்ல எறிக குறள் வரியும் பொறிக்கப்படும், சிறப்பு!

சட்டசபை துவங்கும்போது ஒரு திருக்குறளைக் கூறிப் பொருள் விளக்கம் செய்யும் முறை, தந்தை, ஆதித்தனார் சட்டமன்றத் தலைவரால் *24.11.1967* முதல் துவங்கப்பட்ட நிகழ்வு(காந்தியடிகள் திருக்குறளைத் தமிழில் கற்க, நான் (மறுபிறவியில்) தமிழனாகப் பிறக்க விரும்புகிறேன் என்று மொழிந்த நுட்பம். திருக்குறளுக்கு உரை எழுதுவதும், இமயமலைக்குப் பொன்னாடை போர்த்தும் முயற்சியும் ஒன்றுதான் என்பது குறளோவியம் கண்ட கலைஞர் கூற்று. சென்னையில் வள்ளுவர் கோட்டம், குமரிக்கடலில் திருவள்ளுவர் சிலை, ஊர்தோறும் திருவள்ளுவர் மன்றங்கள், விழாக்கள், திருவள்ளுவராண்டு, திருவள்ளுவர் நாள், திருக்குறள் பற்றிய ஆய்வு நூல்களின் அணி வரிசை, குன்றக்குடி அடிகளாரின் உலகத் திருக்குறள் பேரவை, இப்படி எந்த இலக்கியத்திற்கும், நீதி நூலிற்கும், இல்லாத சிறப்பு மணிமகுடம் திருக்குறளுக்கு மட்டும்.

**(வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**

என்று பாரதி மொழிந்தது மெய்தான்)

எல்லாப் பொருளும் இதன்பால் உள என்று திருக்குறளின் சிறப்புப்பாயிரமாக விளங்கும் திருவள்ளுவ மாலையில் மதுரை இளநாகனார் பாடினார். (எல்லாப் பொருளும் என்றால் காப்பிய இலக்கணத்தில் சொல்லப்படும் நாற்பொருளும், அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவையா? ஆம். வள்ளுவர் முப்பாலில் நாற்பால் மொழிந்தவர் தாம். இதற்கும் மேலாக) இன்றைய உலக வளர்ச்சிக்கு ஏற்ப, எல்லாப் பொருளும் என்பதில் அறிவியல், மருத்துவம், பொறியியல் மற்றும் தொழில்நுட்பம், மேலாண்மை, வேளாண்மை, சமயம், அரசியல், உளவியல், குமுகாயவியல் என்று பல பொருள்களும் அடங்கும். இவற்றில் வள்ளுவரின் அறிவியல் பார்வையை, திருக்குறளில் அறிவியல் கருத்துக்களைப் பற்றி, சிறிதே ஆய்வது கட்டுரையின் நோக்கமாகும்.

**அறிவு**

ஆராய்ந்து தானே தெளிவது அறிவு. அறிவைப் பற்றிய பொருள்களின் தொகுப்பே அறிவியல் (இலலிதா சுந்தரம் இலக்கியத்தில் அறிவியல் பார்வை)

அறிவுடைமை, பேதைமை, புல்லறிவாண்மை என்ற அதிகாரங்கள் அறிவு சார்ந்த கருத்துகளை விளக்குவன.

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு (குறள் 423)**

**எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு (குறள் 385))**

**நன்றின்பால் உய்ப்பது அறிவு (குறள் 422)**

**நுண்பொருள் காண்பது அறிவு (குறள் 424)**

என்று அறிவுக்குப் பல விளக்கம் தருவார் திருவள்ளுவர். எனவே, எதனையும் நுட்பமாக ஆராய்ந்து தெளிந்து உரைப்பதே அறிவாகும். இவற்றின் தொகுப்பே அறிவியலாம்.

**திருக்குறளில் அறிவியல் பார்வை**

திருக்குறளின் அமைப்பும், பிரிவுகளும் தலைப்புகளும் சொல்லும் முறையும் நுட்பமான முறையில் அமைந்துள்ளன. ஓர் அதிகாரத்தில் கூறப்படும் பொருள் பற்றிய விளக்கமும், அதன் பலன்களும், நன்மை, தீமைகளும் விதந்து சொல்லப்பட்டிருப்பதை உய்த்துணரலாம். திருக்குறள் படைக்கப்பட்ட பாங்கே அறிவியல் நுட்பமானது. சுருக்கம், தெளிவு, வகைபாடு, உடன்பாடு, எதிர்மறை விளக்கம் என்று அவர் கூறும் கருத்துக்களின் நிலைப்பாடு நினைந்து போற்றத்தக்கதாகும்.

**அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்**
**தன்நோய்போல் போற்றாக் கடை (குறள் 315)**

சென்ற இடத்தால் செலவிடாது தீதொரி,

நன்றின்பால் உய்ப்பது அறிவு என்றும் (குறள் 422) அவர் கூறும் கருத்துக்கள் அறிவுடைமைக்கு அடையாளங்கள் ஆகும்)

**அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்**
**கேடும் நினைக்கப் படும் (குறள் 169)**

என்று கூறும்போது, பொறாமை உள்ளத்தாரிடம் செல்வம் குவிந்திடவும். நல்ல மனம் உடையவனுக்குக் கேடு வருதலும் உளவாயின், அவை ஆராயப்பட வேண்டும் என்று கூறும்போது ஏன் இந்த நிலை என்று அவரே ஒரு முடிவு கூறாமல், நன்மை ஆராயுமாறு தெரிவிப்பது ஓர் அறிவியல் பார்வையாக வழிகாட்டுதலாக அமைந்துள்ளதை உணரலாம்.

**முதற்குறள்**

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்ற முதற் குறளிலேயே அறிவியல் நுட்பம் துளிர்விடுகிறது. கடவுள் வாழ்த்து என்று வாதிடுவோர் உண்டு. முதல்குறளுக்குப் பலரும் பலவிதமாகப் பொருள் எழுதியுள்ளனர். ஆதிபகவன் என்றால் கடவுள் என்று பலர் உரை எழுதியுள்ளனர். சிலர் வேறு பொருள் கூறியுள்ளனர். ஆதிபகலவன் என்பது ஆதி பகவன் என்று திரிந்தது என்பார், புலவர். குழந்தை, ஆதி பகவான் என்பது ஆதி சூரியன் என்பதைக் குறிப்பதாகும் என்பார் அவர். (இக்கால உலகிற்குத் திருக்குறள் அறிவியல் நோக்கில் வள்ளுவம் மணவை முஸ்தபா பக் 58)

சூரிய ஒளி மட்டும் தான் பூமிக்கு அப்பால் வெளியிலிருந்து வந்து இயல்பாகவே கிடைக்கும். அபூர்வ ஆற்றல் மூலம். ஏனைய சக்திக் கருவறைகள் பூமிக்குள், அல்லது புவி சார்ந்த வளிமண்டலத்தில் அடங்கி நிற்பனவே. முழுமுதற் கடவுள் ஞாயிறு. இவனே ஆதிபகவன் என்பார் நெல்லை சு. முத்து. (இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி 1, திருக்குறள்வழி அறிவியல் கற்போம் பக் 39)

ஆதி என்றால் முதல் என்பது பொருள். பகவன் எனில் கதிரவன் என்பது பொருள். முதற் குறளிலேயே மொழியியலும், அறிவியலும் விளக்கப்பட்டிருக்கின்றன. (கவிஞர் செ. அரிமா குணம் நாடி, குற்றமும் நாடி பகல் 26)

இவ்வாறு ஆதிபகவன் என்பதைக் கதிரவனாகக் குறிப்பிடும் உரையாசிரியர்களின் விளக்கம் உலக உயிர்களின் வாழ்விற்குச் சூரியனே அடிப்படை என்ற அறிவியல் உண்மைக்கு அடித்தளமாக விளங்குவதைக் காணலாம்.

அகர முதல எழுத்தெல்லாம் என்று வரும் எடுத்துக்காட்டு உவமை, மொழியியலின் ஒரு நுட்பமான செய்தி ஆகும்.

**அகர முதல எழுத்து எல்லாம்** என்று கூறும் வள்ளுவர் **ஆதிபகவன் முதற்றே உலகு** என்று ஏகாரம் தேற்ற ஏகாரம் தந்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது. ஞாயிறு போற்றதும், ஞாயிறு போற்றுதும் என்று இளங்கோ அடிகள் பாடியதும், ஒப்பு நோக்கத்தக்கது.

**மறுபிறவி**

பிறவிப் பெருங்கடல் என்றும், எழுபிறப்பும் என்றும் எழுமையும் ஏமாப்பு என்றும் வள்ளுவர் பேசுவார். மறுபிறவி பற்றி வள்ளுவருக்கு உடன்பாடு இருந்ததா என்பது பற்றியும் இருவேறு கருத்து உண்டு.

**உறங்குவது போலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு (குறள் 339)**

என்று வள்ளுவர் ஒருவனுக்குச் சாவு வருதல் உறங்குவது போன்றது. பின்னர்ப் பிறப்பு வருதல், உறங்கி விழிப்பது போன்றது, என்ற பொருள்பட மொழிவதிலிருந்து மறுபிறவியை உறுதிசெய்வது போன்றே உள்ளது.

**குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே**
**உடம்பொடு உயிரிடை நட்பு (குறள் 338)**

என்றும்,

**உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு (குறள் 1122)**

என்றும், வள்ளுவர் பேசும்போது உடம்பு, உயிர் பற்றிய கருத்துகள் வலியுறுத்தப்படுகின்றன. கடவுள் பற்றிய எண்ணம் போன்றே உயிர் பற்றியும், பிறப்பு, இறப்பு பற்றியும் புதிராக இருப்பினும் திருவள்ளுவர் இவைப்பற்றிப் பேசி உள்ளமை தெளிவு தரும் தருத்துகளே. குறிப்பாக உயிர் அழிவில்லாதது என்ற கருத்தை அவர் கொண்டுள்ளதை உணர முடியும். ஆழமான கருத்துக்கள் அவை. மேலும் ஆராயத்தக்கன. இதுதான் அறிவியல். பெய்யெனப் பெய்யும் மழை.

**தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை (குறள் 55)**

தன் கடமைகளைச் செய்யும் மனைவி. "பெய்யென்று சொல்லிடப் பெய்யும் மழை" போன்றவள் என்ற ஆய்வுக் கருத்தை எண்ணி, பெய் என்று சொன்னதும் மழை பெய்யும் என்ற பொருளைத் தற்போது யாரும் ஏற்கமாட்டார்கள். அவ்வாறு சொன்னால் மழையும் பெய்வதில்லை. இதனால், மேகங்கள் சூழ வரும்போது, வெள்ளி நைட்ரேட் முதலிய வேதிப் பொருள்களைத் தூவி, மழை பெய்ய வைப்பது தற்போது நடைபெறுகிறதே, பெய்யெனப் பெய்கிறதே. கற்பனை எனினும் இன்று அறிவியல் காலத்தில் நடக்கிறதே.

**தண்ணீர்... தண்ணீர்**

உலகமெல்லாம் தண்ணீர் பற்றிய சிந்தனை மேலோங்கி வருகிறது. வள்ளுவர் தண்ணீர் பற்றிப் பல மேலான கருத்துகளை நயம்படக் கூறியுள்ளார்.

நீரின்றி அமையாது உலகு (குறள் 20) என்றமை உயர்வான கருத்து. நீரின் மேன்மையை உணர்ந்து அதைக் காக்க வேண்டிய காலம் வந்துவிட்டது. தான்அமிழ்தம் என்று உணர வேண்டும் என்றார். மழைநீர் உலகை வாழ்விக்கிறது அல்லவா? நிலத்தியல்பால் நீர் திரிந்தற்றாகும் என்ற வழியும் ஊருணி நீர் நிறைந்ததற்றே என்ற வழியும் நீரை நல்லவழியில் சேமித்துப் பயன்படச் செய்ய வேண்டும் என்ற கருத்தும் உணரத்தக்கது.

**நெருஞ்சிப் பழம்**

**அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
**அடிக்கு நெருஞ்சிப் பழம் (குறள் 1120)**

அனிச்சமலரும் அன்னத்தின் சிறகும் இப்பெண்ணின் அடிக்கு, நெருஞ்சிப் பழத்தின் முள் போலத் துன்பத்தைச் செய்யும். வழக்காற்றில் நெருஞ்சிப்பழம் என்று பேசுவதில்லை. நெருஞ்சி முள் குத்திவிட்டது என்றே பேசுவோம். செடியியலின்படி நெருஞ்சிப்பழம் என்று குறிப்பதே மிகவும் பொருத்தமானது. வள்ளுவரின் நெருஞ்சிப்பழம் என்ற சொல், ஆட்சி, மிகவும் இதமாக உள்ளது. தேமாங்கனி, புளிமாங்கனி, யாப்பியலில் பார்ப்போம். மாங்கனி, தேங்கனி என்று தெம்மாங்குப் பாடல்களில் பயின்று வரும்.

**தலைவன்**

**மாரளவு தண்ணிக்குள்ள மன்னிமன்னிப் போறபுள்ள உன் மாராப்புச்**
**சேலைக்குள்ள ரெண்டு மாங்கனியும் இருக்கக் கண்டேன்**

**தலைவி**

**மாங்கனியும் இல்ல மச்சான்**
**தேங்கனியும் இல்ல மச்சான்.**
**பரிசம் போட்ட மச்சானுக்கு**
**ரெண்டு பால்குடமும் கொண்டு போறேன்.**

முற்றிய தேங்காயை தேங்கனி என்று கூறும் இக்கூற்றைப்போல நெருஞ்சிப்பழம் குறளில் மிளிர்கிறது. கழுகுமலை காவடிச் சிந்திலும் அண்ணாமலைக் கவிராயர்

செய்ய பஞ்சணையும் பொறாது சிவந்து கொப்பளமாகும், நெருஞ்சிப்பழம் என்று நோகும் என்பதும் வள்ளுவர் போலும்.

**கவரிமா**

**மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின் (குறள் 969)**

இக்குறட்பாவில் மயிர் நீப்பின் என்பதற்குத்தன் மயிர்த் தொகுதியில் ஒரு மயிர் வீழினும் என்றே பலரும் பொருள் கூறி உள்ளனர். மயிர் நீப்பின் என்பது பிறவினை ஆகும். மயிர் முழுவதும் நீக்கினால் என்பதுதான் பொருள். பனிமலையில் வாழும் கவரிமானின் மயிரை நீக்கிவிடின், அது குளிர்தாங்காது இறந்துவிடும் என்பதுதான் சரியான பொருள். சான்றோரும் அவருக்கு மானக்கேடான செயல், பிறரால் செய்யப்படின் உயிர் நீப்பர் என்பதே பொருள்.

**வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்**
**யாருள்ளித் தும்மினீர் என்று (1317)**

தலைவன் தும்மல் போட்டான். தலைவி 100, 200 என்று வாழ்த்தினாள். பின் யார் நினைந்ததும் தும்மினீர் என்று கேட்டு அழுதாள். என்று வள்ளுவர் கூறும்போது எங்கோ ஒருவர் நினைக்க, அதனால் தும்மல் வரும் என்று கருதும் மக்கள் நினைப்பு சரியா? எண்ண அலைகள் பற்றி இக்காலக் கருத்துகள் இதற்கு அரண் சேர்க்கும். வாழ்த்துதல், தூற்றுதல், கருநாக்கு, சாபம் என்று கூறும் கூற்றுகளும் ஒப்பு நோக்குக.

**கடலும், மழையும்**

மழை பெய்யாவிடில், கடலும் தன்தன்மையை இழக்கும் என்ற வள்ளுவச் சிந்தனை,

**நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி**
**தான்நலகா தாகி விடின் (குறள் 17)**

என்ற குறள்வழி மலர்ந்துள்ளது. கடலின் தன்மை குன்றும் என்பது கடலில் வாழும் உயிரினங்கள் வாழாது மடிந்தால், கடலின் தன்மை மாறிவிடும் என்பதாம்.

**புலால் மறுத்தல்**

சைவக்குரல் எழுப்பும் வள்ளுவர், உணவுச் சங்கிலி என்று அறிவியலார் பேசும் கருத்தை,

**கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும் (குறள் 260)**

என்று பேசுகிறார். அருள் மலருமா?

**கள்**

எஞ்ஞான்றும் நஞ்சுண்பார்கள் உண்பர் என்று வள்ளுவர் மொழியும் நஞ்சு உடனடியாகக் கொல்லும் நஞ்சு அல்ல, மெல்ல மெல்லக் கொல்லும் நஞ்சு ஆகும். அவர் கடைவிரித்தார், கொள்வோமா நாம்?

**முடிவுரை**

திருக்குறளில் இன்றைய அறிவியலுக்குரிய பல குறிப்புகள் இருக்கின்றன. அவை திருக்குறளின் பெருமையை உயர்த்துகின்றன என்பார் முனைவர் மலையமான் (குறளின் அலைகள் பக்.5). திருக்குறள் ஓர் அறிவியல் நூலே. வேதம் புதுமை செய் என்னும் மகாகவி வாக்கிற்கேற்பத் திருக்குறளைப் புதிய அறிவியல் பார்வையுடன் ஏற்போம், என்ற நெல்லை சு. முத்து அவர்களின் கருத்து (இக்கால உலகிற்குத் திருக்குறள் பக். 45) ஏற்புடையதே.

# உலகப் பொதுமறையாம் திருக்குறளை உலக அவையத்து முந்தியிருப்பச் செய்தல்

கோ.புண்ணியமூர்த்தி

**முன்னுரை**

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு குறள் (234)

**தெளிவுரை:** ''இப்புவியின் எல்லையளவுக்குப் பரவியிருக்கும் புகழ்தரும் செயல்களை ஒருவன் செய்வானானால், தேவருலகத்தவர் தேவரைப் போற்றாது அவனையே போற்றுவர்.''

மேற்குறிப்பிட்ட திருக்குறளைத் திருவள்ளுவர், தனியொரு புலவனாகத் தன்நலத்துடன் தான்மட்டுமே புகழொடு தோன்றி வாழவேண்டும் என்று எண்ணி இயற்றியதாகத் தெரியவில்லை. மேலும் திருவள்ளுவர் சுட்டும் சமூகம், அதனைச் சார்ந்த பண்பாடு, கலைகள் அவை யாவற்றையும் உலகம் போற்றும்படி செய்ய வேண்டும். திருவள்ளுவர் குறிப்பிடும் புகழ்தரும் செயல்களை யாரேனும் செய்ய முற்படும்போதும் அவர்களுக்கு மக்கள் எவ்வாறு உறுதுணையாக இருத்தல் வேண்டும் என்பதை வலியுறுத்தவே மேற்படி திருக்குறளை இயற்றியிருப்பார் என்றே தோன்றுகிறது. தமிழின் தனிச்சிறப்பாய்/மகுடமாய் விளங்கும் திருக்குறளைத் தமிழ்மொழி பெற்றுள்ளதால் தமிழுக்குப் பெருமைதான். இருப்பினும், உலகமே வியக்கும் வண்ணம் உலகின் முதன்மையான மாபெரும் உலக அதிசயத்தை இத்தமிழ் மண்ணில் உருவாக்கி, குறிப்பாக இன்றைய உலகின் முதன்மையான அதிசயமாக உள்ள பிரமிடையே (Pyramid) விஞ்சி நிற்கும் அளவிற்கு உருவாக்கப்படும் மாபெரும் உலக அதிசயத்தின் வாயிலாக உலக மக்கள் அனைவரின் பார்வையை அவ்வதியசத்தை நோக்கி ஈர்க்கச் செய்து அவர்கள் யாவரும்

நேரில் வந்து அதைக் கண்டுகளிக்கச் செய்வதன் வாயிலாகவும் திருவள்ளுவரின் பெருமையையும் திருக்குறளின் பெருமையையும் உலக மக்கள் அறிந்து, திருக்குறளை உலக மொழிகள் அனைத்திலும் அவர்களாகவே மொழிபெயர்த்துக் கொள்ளச் செய்வதுதானே திருக்குறளுக்குப் பெருமை?! திருக்குறள் ஓர் உலகப் பொதுமறை என்று ஸிமீஸ். டாக்டர் ஜி.யூ.போப் (Rev.Dr G.U.POPE) திருக்குறளுக்குப் புகழாரம் சூட்டியுள்ளார். அதை மெய்ப்பிக்கும் வகையில் செயற்கரிய செயல்களால் உருவாக்கும் உலகின் முதன்மையான அதிசயத்தின் வாயிலாக உலகிற்கு அதைச் செய்து காட்ட வேண்டும். ஆதலினால் இனி அதனைச் செய்திட முற்படவேண்டும்.

உலகம் போற்றும் வண்ணம் உருவாக்கப்போகும் உலகின் முதன்மையான அதிசயம் வாயிலாக 'மட்டுமே' திருக்குறளுக்கு உலகப் புகழைச் சேர்க்க இயலும். அதனால் 'மட்டுமே' உலகப் பொதுமறையாம் திருக்குறளை உலக அரங்கில் முந்தியிருப்பச் செய்ய முடியும். அவ்வாறு செய்யாமல் வெறுமனே உலகமொழிகள் அத்தனையிலும் திருக்குறளை நமக்கு நாமே (''காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு'' என்று உலகம் விமர்சிக்கும்படியாக) மொழிபெயர்ப்பு செய்வதால் மட்டும் திருக்குறள் உலக அரங்கில் முதன்மை பெற்றுவிடாது. அப்படிச் செய்யும் மொழிபெயர்ப்புகள் யாவும் ஏதோ ஓர் இடத்தின்/மடத்தின் மூலையில் முடங்கி கிடக்கும் என்பதைச் சுட்டிக்காட்டவே இக்கட்டுரையை இங்கே பதிவு செய்யப்படுகின்றது. இனி உலகப் பொதுமறையாம் திருக்குறளை உலக அவையத்து முந்தியிருப்பச் செய்யும் முறைப்பற்றிக் காண்போம்.

**1. உலக மொழிக் குடும்பங்களில் திராவிட மொழிக் குடும்பத்தின் தனித்தன்மையும் பெருமையும்**

சற்று ஏறக்குறைய நாற்பது கோடி ஆண்டுகளுக்கு முன்பு தீப்பிழம்பான கதிரவனிலிருந்து சிறுசிறு தீப்பிழம்புகளாகச் சிதறிப் பின்னர் உருண்டுதிரண்டு காலப்போக்கில் குளிர்ந்து கதிரவக் கோள்கள் உருவாகி அவை தனக்குத்தானே சுழன்று கொண்டே கதிரவனையும் சுற்றிவரும் கதிரவக் குடும்பம் (Solar family) உருவானது, அதில் ஒன்றுதான் நாம் வாழ்ந்துகொண்டிருக்கின்ற புவி என்பது அறிவியலறிஞர்களின் கூற்றாகும். புவியின் பெரும் நிலப்பகுதி ஒன்றாகத் திரண்டிருந்தபோது அந்நிலப்பகுதியின் மையப்பகுதியாக, அதாவது இன்றுள்ள தென்இந்தியப்

பகுதியையும் ஆப்பிரிக்க கண்டத்தையும் இணைக்கும் பகுதியாக "இலெமுரியா" கண்டம் இருந்தது என்றும்; பின்னர் காலப்போக்கில் அம்மாந்தரினம் எல்லாத் திசைகளிலும் பிரிந்து சென்று பல இனக்குழுக்களாக உருமாற்றம் அடைந்தன என்றும்; அவ்வாறு உருவான முதல் இனம் தொல்திராவிட மொழிபேசிய தமிழின மக்கள் என்றும் கருதப்படுகின்றனர். அவ்வினமக்களே மூத்த (ஆதி) திராவிட மக்கள் என்பது உலக மானுடவியல் வல்லுநர்களின் கூற்றாகும். மேற்படி கருத்துகளை அறிவியல் மற்றும் வரலாற்று மொழியியல் அடிப்படையில் நோக்கும்போது; உலகில் முதன்முதலாகப் பேசப்பட்ட மொழி தொல்திராவிடமொழி (Proto Dravidian language) என்றும், பின்னர் அகத்தியர், தொல்காப்பியர் போன்றோர் இனம்காட்டிய, ஐந்திரம் சுட்டும் "தமிழ்மொழி" என்றும் கருதப்படுகிறது.

மேற்குறிப்பிட்ட மாந்தரினம் பல்வேறு இனக்குழுக்களாகப் பிரிந்து பல்வேறு மாற்றங்களுக்குப் பின்னர், இன்று உலகெங்கும் உள்ள மக்கள் ஆறாயிரம் மொழிகள் பேசுன்றனர் என்பது மேலைநாட்டு மொழியியல் வல்லுநர்களின் ஆய்வின் வெளிப்பாடாகும். உலகமக்கள் தங்கள் பண்பாட்டின் பெருமைகளைத் தங்களின் சிறப்பு வாய்ந்த 'இலக்கியப் படைப்புகளின்' (Incorporeal Object) வாயிலாகவும் 'கலைப்படைப்புகள்' (Corporeal Object) வாயிலாகவும் பதிவு செய்துள்ள ஒரு சில மொழிகளை மட்டுமே உலகச் செம்மொழிகள் என்று உலக மொழியியல் அறிஞர்கள் ஏற்றுக்கொண்டுள்ளனர். மேற்படி உலகச்செம்மொழிகள் வரிசையில் இடம்பெற்றுள்ள மொழிகள் *1.*கிரேக்கம் *2.*இலத்தீன் *3.*சீனம் *5.*ஹீப்ரு *6.*பாரசீகம் *7.*தமிழ் *8.*சமஸ்கிருதம் ஆகியவையாகும்.

உலகமக்கள் வாழும் நிலப்பகுதிகளை ஆறு பெரும் நிலப் பிரிவுகளாக, அதாவது கண்டங்களாகப் பிரித்துள்ளனர். அதில் குறிப்பாக இந்திய நாடு ஆசிய பெரும் நிலப்பகுதியில் இடம் பெற்றுள்ளது. உலகமக்கள் தொகைக் கணக்கெடுப்பின் அடிப்படையில் உலகிலேயே பெரும் மக்கள் தொகை வாழும் பகுதி ஆசிய நிலப்பகுதியென்றும், அதில் குறிப்பாக உலகத்திலேயே பெருமளவு மக்கள் வாழும் இரண்டாவது நாடு இந்தியா (*110* கோடி மக்கள்) என்றும் கணக்கிடப்பட்டுள்ளது. அதன் அடிப்படையில் நோக்கும்போது இன்றைய திராவிட மொழிக் குடும்பத்தில் இடம்பெற்றுள்ள 73 மொழிகளில் பேசும் மக்கள் தொகையின் எண்ணிக்கை *22,15,15,995* பேர் என்று

கணக்கிடப்பட்டுள்ளது. மேற்படி மொழிகளைப் பேசும் மக்கள் இனம் உலகளவில் இந்தியா, நேபாளம் மற்றும் பாகிஸ்தான் போன்ற நாடுகளில் வாழ்ந்து வருவதாக உலக மொழியியல் அறிஞர்கள் கண்டறிந்துள்ளனர். இதனடிப்படையில் "இந்தியா ஒரு மொழிக் கூட்டப்பகுதி" (India as linguistics Area) என்று உலக மொழியியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

மேலும் இன்றைய உலகமக்கள் பேசும் மொழிகளின் அடிப்படையில் உலக மொழிக்குடும்பங்களைப் பதினோரு மொழிக்குடும்பங்களாக வகைப்படுத்தியுள்ளனர். அவை *1.* ஆப்ரோ- ஆசியாடிக் (AFRO - ASIATIC), *2.* ஆஸ்ட்ரோனேசியன் (AUSTRONIESIAN), *3.* இந்தோ - ஐரோப்பியன், (INDO - EURO-PEAN), *4.* நிகர்-கான்கோ (NIGER - CONGO), *5.* சீன - திபெத்தியன் (SINO - TIBETAN), *6.* டிரான்ஸ் நியூ கொய்னா (TRANS NEW GUINEA), *7.* நிலோ-சஹரன் (NILO - SAHARAN), *8.* தாய்-கடைய் (TAI - KADAI), *9.* திராவிடம் (DRAVIDIAN), *10.* அல்டாய்க் (ALTAIC), *11.* யுராலிக் (URALIC) ஆகும். மேற்குறிப்பிட்ட மொழிக் குடும்பங்களின் பெரும்பிரிவுகளைக் கீழ்க்குறிப்பிட்டுள்ள ''உலக மொழிக் குடும்பங்கள்'' என்ற வரைப்படத்தில் (படம்-1இல்) காண்க.

| உலக மொழிக் குடும்பப்பெயர் | திராவிட மொழிகளின் எண்ணிக்கை | திராவிட மொழிப் பேசுவோர்களின் எண்ணிக்கை | உலகளவில் பேசப்படும் நாடுகள் |
|---|---|---|---|
| திராவிட மொழிக் குடும்பம் | *73* | *22,15,15,995* | இந்தியா,நேபாளம், பாகிஸ்தான் |

**உலக மொழிக் குடும்பங்கள்**




படம் - 1

மேற்குறிப்பிட்ட உலக மொழிக் குடும்பங்களில் தனிப் பெருமை வாய்ந்த ஒரு மொழிக் குடும்பமாக விளங்குவது திராவிட மொழிக் குடும்பமாகும். இம்மொழிக் குடும்பத்தில் பேசப்படுகின்ற 73 வகையான மொழிகளின் மூத்த மொழியாக இன்றளவும் பேச்சு மற்றும் எழுத்து வழக்கில் இடம்பெற்றுள்ள மொழி "செம்மொழித் தமிழ்" எனும் "செந்தமிழ்" மொழியாகும். மேற்குறிப்பிட்ட உலகச் செம்மொழிகள் வரிசையில் இடம்பெற்றுள்ள செம்மொழிகளில் இன்றைக்கும் பேச்சு மற்றும் எழுத்து வழக்கில் உள்ள இருபெரும் செம்மொழிகளில் ஒன்று 'சீனச் செம்மொழி'' மற்றொன்று பழந்தமிழ் மொழியான (Proto Dravidian Language) 'செம்மொழித் தமிழ்' ஆகும். உலகச் செம்மொழிகள் அரங்கில் அந்தந்த மொழிகளின் பழம்பெருமைகளை எடுத்தியம்பும் சான்றுகளாக விளங்குவதில் பண்டைய கட்டடம் மற்றும் சிற்பக் கலைகளின் பங்கு அளப்பரியதாகும். உலகச் செம்மொழிகள் வரிசையில் இடம்பெற்றுள்ள அனைத்துச் செம்மொழிகளுக்கும் அந்தந்த நிலப் பகுதிகளில் தரைக்குமேலே கண்களுக்குப் புலப்படும் வகையில் மிகப் பிரம்மாண்டமான உயரத்தில் எழில்மிகுத் தோற்றத்துடன் இடம்பெற்றுள்ள பண்டைய கட்டடம் மற்றும் சிற்பக்கலைகளாகிய (Corporeal Objects) புறச்சான்றுகள் அச்செம்மொழிகளின் ''தனித்தன்மை'' மற்றும் ''தொன்மையை'' எடுத்தியம்புகின்றன என்பதைத் தக்க சான்றுகள் வாயிலாக இக்கட்டுரை பதிவு செய்கிறது.

உலகச் செம்மொழிகளின் இலக்கியச் சிறப்பை எடுத்தியம்பும் பண்டைய கட்டடக்கலைகள் மற்றும் சிற்பக் கலைகள் இன்றளவும் உலக அதிசயங்களாக விளங்குகின்றன. எடுத்துக்காட்டாகக் கிரேக்கச் செம்மொழியின் இலக்கியச் சிறப்பை அம்மண்ணில் இடம்பெற்றுள்ள 4500 ஆண்டுகள் பழமை வாய்ந்த மாபெரும் பிரம்மாண்டமான 'பிரமிடுகள்' புறச்சான்றாக இன்றளவும் உறுதியான தன்மையோடு (500 அடிகளுக்கும்மேல் உயரம் கொண்டது.) நெடிதுயர்ந்து நின்று கிரேக்க மொழிக்குக் ''கட்டியம்'' கூறிவருகின்றன. அது மட்டும் அல்லாமல் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தில் வளர்ந்துள்ள நிலையில் இன்றைக்கு அதுபோன்ற மாபெரும் கட்டடம் மற்றும் சிற்ப அமைப்பை உருவாக்குவது இயலாத ஒன்று என்று இன்றைய மேலைநாட்டு கட்டடவியல் வல்லுநர்களே வியந்து கூறுமளவிற்கு இன்றளவும் பிரமிடுகள் உலகப் புகழ்பெற்று விளங்குகின்றது. உலகச் செம்மொழிகளுக்குரிய நாடுகள் தங்களின் ''அழகியல் சிந்தனைகளாக'' (Aesthetic Thoughts)

எவ்வாறு பண்டைய 'கலைப் படைப்புகளை' (Corporeal Objects) அதாவது அவற்றை எவ்வாறு புறச்சான்றுகளாகப் படைத்துள்ளனர் என்பதையும் காண்போம்.

**2. உலகச் செம்மொழிகள்மீது பண்டைய கட்டடக்கலைகள் மற்றும் சிற்பக் கலைகளின் தாக்கம்**

உலக மக்களிடையே பேச்சு மற்றும் எழுத்து வழக்கிலுள்ள ஆறாயிரம் மொழிகளில் ஒருசில மொழிகளை மட்டுமே செம்மொழிகள் என்று உலக மொழியியல் வல்லுநர்கள் கருதுவதற்கான அளவுகோல்கள் யாதெனின் அச்செம்மொழிகளின் 1. தொன்மை (Antiquity), 2. ஒத்திசைவு (Harmony), 3. தெளிவு (Clarity), 4. தன்னடக்கம் (Restraint), 5. கண்ணியம் (Serenity), 6. இலட்சியம் (Idealism), 7. பொதுமை (Universality), 8. பகுத்தறிவு (Reason), 9. ஒழுங்கு (Order), 10.கண்ணோட்டம் (Humanism) போன்றவை ஆகும். அதோடு மட்டும் அல்லாமல் ஒரு மொழியின் செம்மொழித் தன்மையை அம்மொழியில் இடம் பெற்றுள்ள "இலக்கியப் படைப்புகள்" (Incorporeal Objects) அதாவது; அவை "கருத்துப் படைப்புகள்" (அகச் சான்றுகள்) என்பதாகும். இரண்டாவது "கலைப்படைப்புகள்" (Corpreal Objects) அவை பண்டைய "காட்சிப் பொருட்கள்" (புறச் சான்றுகள்) எனலாம். ஒரு மொழியின் செம்மொழிச் சிறப்புகளில் தலையாய சான்றாக இருப்பவை "கலைப்படைப்புகளே". அவற்றில் குறிப்பாகப் பண்டைய "கட்டக்கலை" மற்றும் "சிற்பக்கலையின்" பங்கு இன்றியமையாததாகும். இதற்கான சான்றுகளாகப் பன்னாட்டு நிறுவனத்தின் (UNO வின்) கிளை நிறுவனமான பன்னாட்டு கல்வி அறிவியல் மற்றும் பண்பாட்டு நிறுவனம் (UNESCO - United, Natons of Educational Scientific and Cultural Organisation) மிகவும் தொன்மை வாய்ந்த பிரம்மாண்டமான பண்டைய கட்டடக்கலைகள் மற்றும் சிற்பக்லைகளை உலகளவில் அனைத்து நாடுகளிலும் ஆய்வு மேற்கொண்டு UNESCO World Heritage site என்று அடையாளம் காணப்பட்டு அதன் தொன்மை அடிப்படையில் உலக மொழிகளின் தொன்மையையும் இலக்கிய செறிவையும் மேற்படி புறச்சான்றுகள் வாயிலாக அறிவியல் மற்றும் வரலாற்று அடிப்படையில் உலகச் செம்மொழிகள் என்று அறிவித்துள்ளதாகத் தெரிய வருகிறது. அவ்விரு கலைப் படைப்புகள் எந்தெந்த மொழிப் பகுதிகளில் மிகுதியாக இடம் பெற்றுள்ளனவோ அம்மொழிகளே உலகச் செம்மொழிகள் வரிசையில் முன்னணியில் உள்ள செம்மொழிகள் என்று

அறிஞர்கள் உலகம் (UNESCO) ஏற்றுக் கொண்டுள்ளது. அவை பின்வருமாறு

**1. கிரேக்கம் (Greek)**



படம் - 2
4500 ஆண்டுகள் பழமை வாய்ந்த கிரேக்கக் கட்டடக் கலை

கிரேக்க மொழி நீண்ட இலக்கிய வரலாறு உடையது. மேலைநாட்டு இலக்கிய மரபை உருவாக்கியவர்களே கிரேக்கர்கள்தான். ஹோமர் என்ற மாபெரும் பாவலரின் பெருங்காதைகளான 'இலியட்' (Iliad) மற்றும் 'ஒடிசி' (Odyssey) ஆகியன செவி வழி மரபினவாகக் கிரேக்க இலக்கிய உலகில் கோலோச்சின. ஏறத்தாழ கி.மு.700களில் அவை வரிவடிவம் பெற்றிருக்கக் கூடும் எனக் கருதப்படுகிறது. பின்னர் 'ஹேரடோட்டஸ்' (Herodotus) போன்றோரின் வரலாற்றுப் பதிவுகள், டெமாஸ்தனிசின் சொற்பொழிவுகள், சாக்ரடீஸ் பிளேட்டோ (Plato), அரிஸ்ட்டாடில் (Aristotle) ஆகியோரின் மெய்யியல் நூல்கள் போன்றவை கிரேக்கச் செம்மொழி இலக்கியங்களாகத் திகழ்ந்தன. கி.மு.500 முதல் கி.மு.320 வரையிலான காலப்பகுதி கிரேக்கத்தின் செம்மொழி இலக்கியக் காலமாகக் கருதப்பட்டது. இலக்கியத்தில் செம்மொழித் தன்மை என்பதே கிரேக்க இலக்கியங்களில் அமைந்த கூறுபாடுகளின் அடிப்படையில் அமைந்துள்ளதேயாகும். அதோடு அல்லாமல் கிரேக்கச் செம்மொழி இலக்கியத்தின் சிறப்பை உலகிற்குப் பறைசாற்றும் வகையில் அந்நாட்டில் 4500 ஆண்டுகள் பழமை வாய்ந்த பிரமிடுகளின் (pyramids) (படம்-2இல் காண்க) பண்டையக் கட்டடகலை மற்றும் சிற்பக் கலைகளின் சிறப்பு உலக மக்களின் தனிப்பார்வையை ஈர்த்தது என்றால் அது மிகையாகாது. இவை கிரேக்கச் செம்மொழி இலக்கியத்திற்குக் "கட்டியம்" கூறுவதாக அமைந்துள்ளது. மேலும் இவை கிரேக்கர்களின் "அழகியல் சிந்தனைகளை" வெளிப்படுத்துகின்றன.

**உ. இலத்தீன் (Latin)**



படம் - 3
1900 ஆண்டுகள் பழமை வாய்ந்த இலத்தீன் கட்டடக் கலை

ஐரோப்பாவைப் பொருத்தவரை அடுத்து இடம் பெறுவது இலத்தீன் இலக்கியம். இலத்தீன் மொழியில் செம்மொழி இலக்கிய வரலாறு வர்ஜில் (Vergil) படைத்த இனீட் (Acneid) என்ற இலக்கியப் படைப்பிலிருந்து

தொடங்குவதாகக் கொள்ளலாம். அம்மொழியின் மேம்பாட்டிற்கும் இலக்கிய வளத்திற்கும் பெரும் பங்களித்தவர்களில் சிறந்த சொற்பொழிவாளர்களும் மெய்யியல் அறிஞர்களுமான சிசிரோ (Cicero), சேலஸ்ட் (Sallust), டேசிட்டஸ் (Tacitus), செனகா (Seneca) போன்றோராவர். கி.மு.70 முதல் கி.பி.18 வரையிலான காலப்பகுதி இலத்தீன் இலக்கியத்தின் பொற்காலமாகக் கருதப்படுகிறது. அதோடு மட்டும் அல்லாமல் இலத்தீன் செம்மொழி இலக்கியத்தின் சிறப்பை உலகிற்கு எடுத்துக்காட்டும் வகையில் அந்நாட்டில் 1900 ஆண்டுகளுக்கு முன்பு ஏற்படுத்தப்பட்ட, உலக அதிசயங்களில் ஒன்றான இத்தாலிய நாட்டு 'கோலோசியம்' (The Roman Colosseum) எனப்படும் மாபெரும் திறந்தவெளி அரங்கம் (படம்-3இல் காண்க) இன்றைய உலக அதிசயங்களில் ஒன்றாக அமைந்துள்ளது.

**3. அரேபியம் (Arabic)**



படம் - 4
4500 ஆண்டுகள் பழமை வாய்ந்த அரேபியக் கட்டடக் கலை

அரேபிய மொழியில் முதல் செம்மொழி இலக்கியம் 'குரான்' என்றே கூறப்படுகிறது. இது ஏழாவது நூற்றாண்டைச் சேர்ந்ததாகவும், செவி வழி வந்த அரேபியப் பழமொழிகள், பாடல்கள் போன்றவை ஆறாவது நூற்றாண்டைச் சேர்ந்தவை என்றும் பின்னர் அவை ஏழாவது, எட்டாவது நூற்றாண்டுகளில் எழுத்துவடிவம் பெற்றன என்று கருதப்படுகிறது. பொதுவாகப் பண்டைய தமிழ் இலக்கியத்தோடு ஒப்பிடும்போது அரேபிய இலக்கியங்கள் தொன்மை என்ற பண்பில் மிகவும் பிந்தியவை. இருப்பினும் முகலாயர்களின் பண்டைய கட்டடக் கலையின் சிறப்புத் தன்மைகள் (படம்-4இல் காண்க). அரேபிய செம்மொழியை உலகம் திரும்பிப் பார்க்கச் செய்துள்ளது என்றால் அதுவும் மிகையாகாது. மேலும் ஒரு எடுத்துக்காட்டு இந்தியாவில் இடம்பெற்றுள்ள, உலக அதிசயங்களில் ஒன்றான 'தாஜ்மஹால்' இன்றைக்கும் முகலாயர்களின் கட்டடக் கலையின் தனிச்சிறப்பை உலகிற்குப் பறைசாற்றிவருகிறது.

**4. சீனம் (China)**

சீனச் செம்மொழி இலக்கியம் 5000 ஆண்டு இலக்கிய வரலாறு மிக்கது. சீன இலக்கிய வரலாற்றில் கி.மு. 3000 முதல்

கி.மு.600 வரை உள்ள காலம் வரலாற்றுக்கு முந்திய காலம் எனப்படுகிறது. கி.மு.600 முதல் கி.பி. 200 வரை தொன்மைக்காலம்.

சீன இலக்கிய வரலாற்றில் தொடக்கக் காலத்தில் முக்கியப் பங்கு வகித்தவர் இருவர் கி.மு. 600 போன்ற காலப் பகுதியில் வாழ்ந்த கொன்ஃபூசியஸ் (Confucious) மற்றும் லாவுட்சு (Laotse) என்போர் ஆவர். சீன மொழியில் கி.மு.3000 முதல் கி.மு.600 வரையிலான இலக்கியங்களைக் கொன்ஃபூசியஸ் நான்குத் தொகுதிகளாகத் தொகுத்தார். ஐந்தாவது தொகுதியாகத் தனது படைப்பான ''தென்றலும் வாடையும்'' என்ற நூலையும் வெளியிட்டார். கொன்ஃபூசியஸ் தொகுத்த நான்கு தொகுதிகளில் சீன இலக்கியத்திற்கு அவர் செய்த சிறப்பான பங்களிப்பு பழம்பாடல் தொகுதியே ஆகும். கொன்ஃபூசியசுக்குச் சற்று முந்தியவராகவும், அவருக்குச் சமகாலத்தவராகக் கருதப்படுபவருமான லாவுட்சு என்ற அறிஞர் 'தாவ்' என்ற நெறியைக் கண்டவர்.



படம் - 5
3500 ஆண்டுகள் பழமை வாய்ந்த சீனக் கட்டடக் கலை

மிகப்பெரிய இலக்கிய வரலாறு கொண்ட சீனச் செம்மொழி இலக்கியத்திற்கு, உலக அதிசயங்களில் நீங்கா இடம்பெற்ற 'சீனப் பெருஞ்சுவரின்' (The Great Wall of China) பங்கு இன்றியமையாத ஒன்றாகும். சீனப் பெருஞ்சுவரின் சிறப்பு வாயிலாகச் சீனமொழியின் செம்மொழி இலக்கியச் செல்வங்கள் உலகப் பார்வைக்குத் தெரியவந்தது என்றால் அதுவும் மிகையாகாது. இதற்கான எடுத்துக்காட்டாகத் திகழ்வது மேற்படி சீனப் பெருஞ்சுவரில் இடம்பெற்றுள்ள 3500 ஆண்டுகள் பழமை வாய்ந்த 'கல்வெட்டுகளே' ஆகும்.

### 5. ஹீப்ரு (Hebrew)



படம் - 6
3000 ஆண்டுகள் பழமை வாய்ந்த ஹீப் கட்டடக் கலை

ஹீப்ரு மொழிக்கு கி.மு.12ஆம் நூற்றாண்டு முதல் தற்காலம் வரையிலான இலக்கிய வரலாறு உண்டு. ஹீப்ரு மொழியின் வரலாறு நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அதில் செம்மொழிக்காலம் அல்லது "விவிலிய" காலம் என்பது

கி.மு.3ஆம் நூற்றாண்டு வரை இது முதல் பகுதியாகும். இந்தக் காலப் பகுதியில்தான் ‘பழைய ஏற்பாடு’ (Old Testament) எழுதப்பட்டது. அடுத்தது யூதர்களின் அறநெறி முறைகள், சட்டங்கள் ஆகியவை ‘மிஷ்னா’ (Mishna) என்ற பெயரில் ஜூடா-ஹா-நசி (Juda-ha-Nasi) என்பவரால் ஏறத்தாழ கி.பி.200 போன்ற காலப்பகுதியில் தொகுக்கப்பட்டது. இது ஹீப்ரு மொழியில் இரண்டாவது காலம் அதாவது மிஷ்னா காலமாகும். இத்தொகுப்பிற்குப் பல தலைமுறை அறிஞர்கள் விளக்கம் எழுதினர். இது கெமாரா (Gemera) என்ற தலைப்பில் தொகுக்கப்பட்டது. மிஷ்னா மற்றும் கெமரா ஆகிய இரண்டின் தொகுப்புதான் யூதர்களின் முக்கிய நூலான டாலமுட் (Talmud) என்ற பதிப்பாகப் போற்றப்படுகிறது. மூன்றாவதாகக் கி.பி.6 ஆம் நூற்றாண்டு முதல் 13-ஆம் நூற்றாண்டு வரை இடைக்காலம். அடுத்ததாக புதுமையான ‘ஹீப்ரு காலம்‘. விவிலிய காலம் ஹீப்ரு மொழியின் செம்மொழிக் காலமாகக் கருதப்படுகிறது. ஹீப்ரு மொழியின் செம்மொழித் தொன்மையை உலகறியச் செய்வதற்கு 3000 ஆண்டுகளுக்கு முன்பாக “அரசர் சாலமன்” என்பவரால் ஜெருசலேம் என்ற பகுதியில் எழுப்பப்பட்ட சாலமன் கோயிலின் (Solomon’s Temple) (படம்-6இல் காண்க) சிறப்பு ஒரு முக்கியப் பங்கை வகிக்கிறது.

**6. பாரசீகம் (Persian)**



படம் - 7
2500 ஆண்டுகள் பழமை வாய்ந்த பாரசீகக் கட்டடக் கலை

பாரசீகம், ஈரான் நாட்டின் ஆட்சிமொழி. இன்றைய உலகப் பண்பாடு, அறிவியல் முதலியவற்றிற்குத் தக்க கொடைகள் வழங்கிய நாடுதான் பண்டைய பாரசீகம். இன்று உலகம் முழுவதிலும் வழக்கத்தில் உள்ள எண்களை உலகிற்குக் கொடையாக வழங்கியதும் இம்மொழிதான். அழகுணர்ச்சி, வாழ்வின் இன்பங்கள் மீது நாட்டம், அறிவியல்மீது ஈடுபாடு முதலிய கூறுகளால் சிறப்புற்று விளங்குவது பாரசீக இலக்கியம். ‘உமர் கய்யாம்‘ என்ற பாவலரின் வாயிலாக உலகத்திற்கே தன்னையறிவித்துக் கொண்ட இலக்கியச் செல்வம் நிறைந்த மொழி பாரசீகம். பாரசீக மக்கள் அறிவின் சிறப்பினைக் குறிக்க ஒளியைக் குறியீடாகக் கொண்டனர். இந்த அடிப்படையில் பாரசீக இலக்கியம் தமிழ் இலக்கியத்தை ஒத்துக் காணப்படுகிறது. சான்றாகத் தூய்மை என்பது குறித்து,

**பொருள்கள் அனைத்திலும் தூய்மையே**
**மிக்க அழகும் பெருமையும் வாய்ந்தது**

- என்று கூறப்படும் கருத்து

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற**

என்ற குறட்பாவின் கருத்துடன் இயைந்து செல்வதைக் காணலாம். பாரசீகச் செம்மொழியின் தொன்மையை உலகறியச் செய்வதில் அதனுடைய *2500* ஆண்டுகள் பழமை வாய்ந்த பண்டைய கட்டடக்கலையான 'பெரிசிபோலிசு' (Persepolis) (படம்-7இல் காண்க) பெரிதும் துணை செய்துள்ளது.

**7. தமிழ்** (Tamil)



<u>படம் - 8</u>
1800 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாக கருதப்படும், தரையில் புதையுண்டுபோன தமிழகக் கட்டடக் கலை (செங்கற்கட்டுமான முருகன் கோவில், சாலுவன்குப்பம்,

ஆரியம் சார்ந்த இந்தியப் பண்பாட்டிற்கு வடமொழி கொள்கலனாக (Container) எவ்வாறு விளங்குகிறதோ அதைப்போலவே திராவிடம் சார்ந்த பண்பாட்டிற்குத் திராவிட மொழிகளில் மூத்ததும், ஏறத்தாழ *2500* ஆண்டு இலக்கிய வரலாறு கொண்டதுமான தமிழ்மொழி கொள்கலனாக விளங்குகிறது. எப்படி ஐரோப்பிய பண்பாட்டை அறிந்து கொள்வதற்குக் கிரேக்கமும், இலத்தீன் மொழியும் தேவையோ அதுபோலவே இந்திய வரலாற்றை, இந்தியப் பண்பாட்டை, அதன் இறையியல் மற்றும் மெய்யியல் மரபுகளை முழுமையாக உணர்ந்து கொள்ள வடமொழி, தமிழ் ஆகிய இரண்டு மொழிகளும் தேவை. தமிழின் தொன்மை என்பது செம்மொழித் தகுதிக்கு ஒரு முக்கியமான கூறுபாடாகக் கருதப்படுகிறது. தமிழின் தொன்மை உலகளாவிய ஒன்று. பிரிட்டானியக் கலைக் களஞ்சியம் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது, "Apart from literature written in Classical (Indo - Aryan) Sanskrit, Tamil is the oldest literature in India" - Encyclopedia Britannica. Vol.II.P.350

என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா (Encyclopedia Britannica) சமஸ்கிருதத்தையும் தமிழையும் தொன்மையான இலக்கியம் (Oldest Literature) என்று குறிப்பிட்டுள்ளது. மேலும் பன்னாட்டு நிறுவனமான யுனெஸ்கோ (UNESCO) தமிழையும் சமஸ்கிருதத்தையும் செம்மொழிகள் என ஒப்புதல் அளித்ததாகத்

தெரியவில்லை. ஆதலினால்தான் இந்திய நடுவண் அரசிடம் தமிழுக்குச் செம்மொழித் தகுதியைக் கேட்டுப்பெற வேண்டிய நிலை ஏற்பட்டது.

தமிழின் செம்மொழித் தகுதியை உலகு அறிய செய்யத் தக்கவல்ல சங்க இலக்கிய நூல்களான ‘எட்டுத்தொகை’, ‘பத்துப்பாட்டு’, ‘பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்’, ‘தொல்காப்பியம்‘, ‘சிலப்பதிகாரம்‘, ‘மணிமேகலை’, ‘முத்தொள்ளாயிரம்’, ‘இறையனார் களவியல்’ போன்றவை ஐரோப்பிய செம்மொழிகளான கிரேக்கம், இலத்தீன், சீனம், ஹீப்ரு, பாரசீகம், அரேபியம் ஆகியவற்றைக் காட்டிலும் இலக்கியச் செறிவு மிக்கதாகக் கருதப்படுகிறது.

ஐரோப்பிய நாடுகளைச் சார்ந்த செம்மொழிகள் மற்றும் கிழக்கு ஆசியப் பகுதியைச் சார்ந்த சீனச் செம்மொழிக்கு தனிச் சிறப்பு வாய்ந்த, உலகைக் கவர்ந்து இழுக்கும் வல்லமை மிக்க உலக அதிசயங்களான பண்டைய கட்டடக்கலை மற்றும் சிற்பக்கலைகள் போன்று உயர்தனிச் செம்மொழியாம் தமிழ்மொழிக்குக் கட்டியம் கூறும் வகையில் பண்டைய கட்டடக்கலை மற்றும் சிற்பக்கலைகள் இருந்ததாகக் கருதப்படுகிறது. எடுத்துக்காட்டாகத் திராவிடப் பண்பாட்டைச் சார்ந்த மொஹஞ்தாரோ, ஹரப்பா போன்ற பண்டைய கலைகள் இயற்கைச் சீற்றங்களினாலும், அந்நியர் படையெடுப்பினாலும் தரையில் புதையுண்டு போயின. இது ஆரியக் கட்டடக்கலையைச் சார்ந்தனவா? அல்லது திராவிடக் கட்டடக்கலையைச் சார்ந்தனவா? என்ற வரலாற்று அடிப்படையிலான கருத்துவேற்றுமை இருதரப்பினரிடமும் இன்றளவும் நிலவிவருகிறது என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது. ஆதலினால் தமிழின் தொன்மையை உலகறியச் செய்வதில் சற்றுத் தொய்வு ஏற்பட்டுள்ளது என்பதே இக்கட்டுரையின் ஆய்வு முடிபாக முன்வைக்கப்படுகிறது.

“மேற்குறிப்பிட்ட மேலைநாட்டு செம்மொழிகள் மற்றும் கிழக்கு ஆசிய நாடான சீனச் செம்மொழி ஆகியவற்றுக்கு 3500 முதல் 4500 ஆண்டுகளுக்கு முற்பட்ட இன்றைய உலக அதிசயங்களாகக் கருதப்படுகின்ற பண்டைய கட்டடக்கலைகள் மற்றும் சிற்பக்கலைகளைப் படைப்பதற்கான மொழிச் ‘செறிவு’ மிக்க கலைகள் குறித்தான ‘சொல்லாட்சிகள்’, ‘அளவீடுகள்’, ‘குறியீடுகள்’, ‘எண்கணக்கு’, ‘வரைபடங்கள்’, ‘கருவிகள்’, மற்றும் ‘வேதி மூலப்பொருட்கள்’ போன்ற அடிப்படைத் ‘தொழில்நுட்ப நுணுக்கம்’ இருந்திருந்தால் மட்டுமே

மேற்படி பண்டைய உலக அதிசயங்களை வடிவமைத்திருக்கக் கூடும் என்பதே இக்கட்டுரையின் மிக முக்கிய கண்ணோட்டம் (அ) ஆய்வாகும். இத் தொழில்நுட்ப நுணுக்கம் பண்டைய காலத்தில் மொழிவளர்ச்சி இல்லையேல் நிகழ்ந்திருக்க முடியாது, இதில் ஒரு மொழியின் 'பங்கு' மிகப்பெரியதாகக் கருதப்படுகிறது. என்பதே இக்கட்டுரையின் ஆய்வு முடிபாகும். இதற்கான சான்றாக இன்றைய உலக அதிசயங்களாகத் திகழும் பண்டைய கட்டடக்கலைகளில் இடம் பெற்றுள்ள "கல்வெட்டுகள்" வாயிலாக அதனை அறியலாம்.

**8. சமஸ்கிருதம்**



<u>படம் - 9</u>
5000 ஆண்டுகள் பழமை வாய்ந்த தரையில் புதையுண்டுபோன மொஹஞ்சதாரோ, ஹாரப்ப பண்டைய கட்டடக் கலை

கிரேக்க, இலத்தீன் இலக்கியம் போன்று பழமையான இலக்கியமென மேலைநாட்டினரால் மதிக்கப்பட்டதும், பாராட்டப்பட்டதும், பரவலாகப் படிக்கப்பட்டதும் வடமொழி இலக்கியமாகும். வடமொழி இலக்கியத்தை இரு பிரிவுகளாகக் காணலாம். வேதகால இலக்கியம் கி.மு.1500 முதல் கி.மு.200 மற்றும் செம்மொழிகால இலக்கியம் கி.மு.500 முதல் கி.பி.1000. வேதகால இலக்கியத்திற்கும் செம்மொழிக் கால இலக்கியத்திற்கும் பொதுவாக ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகள் எனக் கணக்கிடப்படலாம். வடமொழியில் செம்மொழிக்கால இலக்கியம் இராமாயண், மகாபாரதப் பெருங்கதைகளில் தொடங்குகிறது. இச்செம்மொழியே சமஸ்கிருதம் (sanskrit) எனப் பாணினியால் அழைக்கப்பட்டது. அதற்கான இலக்கணத்தையும் அவர் வகுத்தார். ஹோமரின் இரு பெருங்காதைகளான இலியட், ஒடிசி இரண்டும் சேர்ந்த தொகுதிபோல் எட்டு மடங்குப் பெரியது இராமாயணம், மகாபாரதம் என்ற பெருங்காதைகள், வடமொழியான சமஸ்கிருதத்தைச் செம்மொழி எனக் கிரேக்க இலத்தீன் மொழிகளோடு சேர்த்து உருவகப்படுத்திய பணியை நாம் செய்யவில்லை. இந்தப் பெருமை ஐரோப்பியர்களையே சாரும். சர்.வில்லியம் ஜோன்ஸ் என்பவர் 1784-இல் ஆசியக் கல்விச் சங்கம் (Asiatic Society) என்ற நிறுவனத்தைக் கல்கத்தாவில் உருவாக்கினார். இந்த நிறுவனத்தின் வாயிலாகவும், மேக்ஸ் முல்லர், கேல் புரூக் போன்றோரும் வடமொழி நூல்களை ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு போன்ற பல ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்த்து வெளியிட்டார்கள்.

கீழை உலகின் புனித நூல்கள் (Sacred Books of the East) என்ற வரிசையில் மேக்ஸ் முல்லர் பதிப்பித்த 50 தொகுதிகளில் பெரும்பாலானவை வடமொழி நூல்களாகும்.

இலக்கியம், மெய்யியல், அரசியல் போன்ற துறைகளில் பெரும்பாலும் கிரேக்க, உரோம பங்களிப்புகளையே பார்த்துக் கொண்டிருந்த ஐரோப்பியர்களுக்கு 'வேதம்', 'உபநிடதம்' தொடங்கி வடமொழியின் 'இதிகாசங்கள்', 'காப்பியங்கள்', 'நாடகங்கள்', 'தத்துவ நூல்கள்', 'நீதி நூல்கள்' ஆகியவற்றின் வரவு ஒரு புதிய உலகத்தை அவர்களுக்கு அறிமுகப்படுத்தியது. வடமொழி இலக்கியம் கிரேக்கம் இலத்தீன் போன்று பழமையான இலக்கியமாகக் கருதப்பட்டது.

**முடிவுரை**

இந்த ஆய்வுக் கட்டுரையின் முடிபாக முன் வைக்கும் கருத்து யாதெனின், உலகப் பொதுமறையாம் திருக்குறள் உலக இலக்கியங்களையே "விஞ்சுமளவிற்கு" நம்முடைய செயற்கரிய செயல்கள் வாயிலாக உலக அவையத்து முந்தியிருப்பச் செய்யும் செயல்களைப் "போர்க்கால அடிப்படையில்" உடனே தொடங்க வேண்டிய கட்டாயத்தில் உள்ளோம் என்பதை இக்கட்டுரை வாயிலாக என் சிற்றறிவிற்கு எட்டிய கருத்தை முன்வைக்க விழைகிறேன்.



படம் - 10

130 அடி உயரம் கொண்ட தற்போதைய உலக அதிசய சிற்பக்கலை

இன்றைய உலகச் செம்மொழிகள் அனைத்திருக்கும் அம்மொழிகளைச் சார்ந்த வரலாற்று சிறப்பு மிக்க, உலக மக்களின் பார்வையைத் தன்பக்கம் ஈர்க்கச் செய்யும் நெடிதுயர்ந்த பண்டைய கட்டடக்கலைகள் மற்றும் சிற்பக் கலைகள் அச்செம்மொழிகளுக்கு "வலுவான பின்னணி" (Sound Background) ஆக உள்ளன. ஒருக்கால் அதுபோன்ற உலகச் சிறப்பு மிக்க உலக அதிசயங்களாகத் கருதப்படுகின்ற 3000 முதல் 4500 ஆண்டுகள் பழமை வாய்ந்த கட்டடம் மற்றும் சிற்பக்கலைகள் தமிழ்மண்ணில் இடம்பெற்றிருந்தால் திருக்குறள் உலக இலக்கியங்களை எல்லாம் 'விஞ்சி' உலகின் முதன்மையான இலக்கியங்கள் வரிசையில் "முதலிடம்" பெற்றிருக்கக் கூடும் என்பதை ஒரு "கருதுகோளாக" இங்கே பதிவு செய்ய விழைகின்றேன். மேலும் அண்மைக் காலத்தில்

இயேசு கிறித்துவிற்கு (Christ The Redeemer) பிரேசில் நாட்டில் 130 அடி உயரத்தில் ஏற்படுத்தப்பட்ட சிலை (படம்-10இல் காண்க) இன்றைய உலக 7 அதிசயங்களின் பட்டியலில் இடம்பெற்று அந்நாட்டின் பெருமையை உலகறிய செய்துள்ளது என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். வளர்ந்த மேலை நாட்டினர் தங்களின் செம்மொழிகளுக்கான சான்றுகளாக இன்றைய உலக அதிசயங்களாகப் போற்றப்படும் இரண்டாயிரம், மூன்றாயிரம், நான்காயிரம் மற்றும் ஐயாயிரமாண்டுகள், பழமை வாய்ந்த பண்டைய கட்டடக் கலைகளைச் சான்றுகளாக முன் நிறுத்தி மார் தட்டிக்கொண்டு பெருமை கொள்கின்றனர். வையகமும் அதைப் பாராட்டுகிறது. இனிச் செய்ய வேண்டியது, இனிவரும் காலங்களிலாவது உலகப் பொதுமறையான திருக்குறளின் சிறப்பை உலகறியச் செய்வதற்கான "தீர்வாக", மிகப் பெரிய அளவிலான புதிய முயற்சி, அதாவது இன்றைய உலக அதிசயங்களை எல்லாம் "பன்மடங்கு விஞ்சி" நின்று உலக அதிசயங்களின் முதன்மையான அதிசயம் "தமிழ் மண்ணில்" இடம்பெற்றுள்ளது என்ற கலைப் படைப்புகளின் (Corporeal Objects) புறச் சான்றுகள் வாயிலாக "உலகின் பார்வையைத்" தமிழின்பால் ஈர்க்க செய்து உலக மக்கள் யாவரும் தமிழ்நாட்டை நோக்கி வரச் செய்யும் அளவிலான முயற்சியை மிகப் பெரிய, உலக முதன்மையான அதிசயத்தின் வாயிலாக அதனைச் செய்ய வேண்டும் என்ற கருத்தையும் முன் வைக்க விழைகின்றேன்.

ஆம் உலகப் பொதுமறையான திருக்குறளின் பெருமையை இவ்வுலகிற்குப் பறைசாற்றும் வகையில் மேற்குறிப்பிட்ட செயற்கரிய செயல் அமையும், இனி வரும் காலங்களில் அதாவது ஐயாயிரம், பத்தாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் தமிழகத் தலைமுறையினர் பெருமை கொள்ளும் வகையிலும், மேலும் உலகத்திலேயே முதன்மையான புதிய உலக அதிசயமாக அமையப்போகும் செயற்கரிய செயலைக் காண உலக மக்கள் யாவரும் சுற்றுலாப் பயணிகளாகத் தமிழகம் நோக்கி வருவர். அதனால் தமிழ்மொழியின் பெருமை பாரெங்கும் பரவும். கிரேக்க இலக்கியங்களை உலக மக்கள் பிரமிடுகளைப் பார்த்து போற்றுவதுபோல, இனித் திருக்குறளும் உலகிலேயே முதன்மையான உலகப் பொதுமறை என்று அவர்களாகவே முன்வந்து போற்றுவர். இதனால் திருக்குறளின் பெருமை பாரெங்கும் பரவச் செய்யப்படும், போற்றப்படும். செந்தமிழுக்கு முகவரியை உருவாக்கிக் கொடுத்த மேலைநாட்டு அறிஞர்களான கால்டுவெல், ஜி.யு.போப், எல்லீஸ், வீரமாமுனிவர் போன்றோர்

திருக்குறளுக்குப் பெருமை சேர்த்ததுபோல, இனி உலகமொழிகள் அனைத்திலும் உலகப் பொதுமறையான திருக்குறளை உலக அறிஞர்கள் அவர்களாகவே முன்வந்து மொழிபெயர்த்துக் கொள்வார்கள். இதில் நமக்கு நாமே மொழிபெயர்ப்பு செய்தல் கூடாது, அது நமது பணியும் அல்ல. மேலும், உலகச் சுற்றுலாப் பயணிகளின் வருகையால் சுற்றுலா அந்நியச் செலாவணியும் பெருகும், அதனால் தமிழரின் வாழ்வாதாரம் பெருகும்.

தமிழ்மண்ணில் இப்போதுள்ள ஐநூறு, ஆயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்த உலக அதிசயங்களுக்கான தகுதியை எட்ட முடியாமல் உள்ள பண்டைய கட்டடங்கள் மற்றும் சிற்பங்களைக் காட்டிலும் "பன்மடங்கு உயரமான", "மிகப் பிரம்மாண்டமான", "உலகின் முதன்மையான", "உலகமே வியக்கும் வண்ணம், உலகின் முதல் புதிய உலக அதிசயத்தை" இத் தமிழ் மண்ணில் ஏற்படுத்துவதினால் 'மட்டுமே' உலகப் பொதுமறையான திருக்குறளை உலக அவையத்து முந்தியிருப்பச் செய்ய இயலும் என்ற ஆணித்தரமான கருத்தை இங்கே பதிவு செய்யப்படுகிறது. இதனை நாம் செய்ய முற்பட்டால் இதில் நாம் வெற்றி பெறுவது 100க்கு 200 விழுக்காடு உறுதி.

## துணை நூற்பட்டியல்

1. டாக்டர் மணவை முஸ்தபா 'தமிழ்ச் செம்மொழி கோரிக்கை வரலாறு' மனோரமா இயர்புக் 2005,
2. டாக்டர் வா.செ. குழந்தைசாமி 'உலகச் செம்மொழிகளும் தமிழும்' மனோரமா இயர்புக் 2005.
3. டாக்டர் வா.செ. குழந்தைசாமி 'உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ்'.
4. தமிழ் விக்கிப்பீடியா இணையத்தளம்.

# கட்டுரையாளர்களின் முகவரி

**முனைவர் கோ. விசயராகவன்**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113.

**முனைவர் அ.ரோஸ்மேரி**
துறைத்தலைவர்
மொழியியல் துறை
திருவனந்தபுரம் பல்கலைக்கழகம்
கேரளா.

**முனைவர் அ. பரிமளகாந்தம்**
இணைப்பேராசிரியர்
அகராதியியல்
பி.எஸ். தெலுங்குப் பல்கலைக்கழகம்
ஐதராபாத் - 500 004.

**முனைவர் அ.பூலோகரம்பை**
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
திராவிடப் பல்கலைக்கழகம்
குப்பம்-517425, ஆந்திர மாநிலம்.

**முனைவர் கு. இராஜ்மோகன்**
விரிவுரையாளர், வணிகவியல் துறை
ஜவகர்லால் நேரு அரசு கலைக் கல்லூரி
அந்தமான்.

**திருமதி த. சித்ரா**
தமிழ்த்துறைத் தலைவி
சன் கலை (ம) அறிவியல் கல்லூரி
கீ. இராஜபாளையம் அஞ்சல்
திருவண்ணாமலை-606755.

**முனைவர் க. அழகர்**
தலைவர், தமிழ்த்துறை
இராஜுக்கள் கல்லூரி
இராஜபாளையம்
விருதுநகர் மாவட்டம்.

**முனைவர் புலவர் செ. இராசு**
ஈரோடு முன்னாள் தலைவர்
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்.

**முனைவர் ஞா. சுஜாதா சிவக்குமார்**
தமிழ்த்துறை
த.கி.மு. மகளிர் கல்லூரி வேலூர்

**முனைவர் மு.சற்குணவதி**
முதுநிலை விரிவுரையாளர் -
தமிழ்த்துறை
தொலைதூரக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை-600005

**முனைவர் வே. பாரதி**
விரிவுரையாளர், தமிழ்த்துறை
சத்யசாய் கல்வியியல் கல்லூரி
ஆவடி, சென்னை

**முனைவர் சு. சிவக்குமார்**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
மகேந்திரா கலை அறிவியல் கல்லூரி
காளிப்பட்டி, நாமக்கல்.

**முனைவர் பா. சங்கரேஸ்வரி**
உதவிப் பேராசிரியர்
தமிழியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை

**ஆ. கெஜலட்சுமி**
விரிவுரையாளர், தமிழ்த்துறை
சுவாமி விவேகானந்தா கலை அறிவியல் கல்லூரி
ஓரத்தூர்

**முனைவர் பெ. சுமதி**
உதவிப் பேராசிரியர்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை

முனைவர் சோ. முத்தமிழ்ச்செல்வன்
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை
அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி
சிவகாசி

**முனைவர் நா. சிவா**
உதவிப் பேராசிரியர்
மகேந்திரா கலை (ம) அறிவியல் கல்லூரி
நாமக்கல்

**இரா. சுந்தரமூர்த்தி**
உதவிப் பேராசிரியர்
மகேந்திரா கலை அறிவியல் கல்லூரி
நாமக்கல்

**முனைவர் தி. சாமுண்டீஸ்வரி**
விரிவுரையாளர், தமிழ்த்துறை
வள்ளியம்மாள் மகளிர் கல்லூரி
சென்னை

**முனைவர் கா. காந்தி**
உதவிப் பேராசிரியர்
தமிழாய்வுத்துறை
மகேந்திரா கலை அறிவியல் கல்லூரி
நாமக்கல்

**முனைவர் அ. தேவகி**
உதவிப் பேராசிரியர்
தமிழ்ப்புலம்
அரசு கல்வியியல் கல்லூரி
குமாரபாளையம்

**எஸ்.எஸ். சிவவடிவு**
தலைமை ஆசிரியர்
கல்வி உலகம் சிவானந்தம் உயர்நிலைப் பள்ளி
காட்பாடி

**முனைவர் கு.அ. மகேஸ்வரி**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
பூம்புகார் கலைக்கல்லூரி
சீர்காழி

**ப. மோகன்தாசு**
வழக்குரைஞர்
புதுச்சேரி

**செல்வி ஆ. நந்தினி தேவி**
ஸ்ரீ அம்மன் கலை அறிவியல் கல்லூரி
சித்தோடு, ஈரோடு

**இ. இனநலப் பெரியார்**
21, பாரதி நகர் 2-வது தெரு
பெருமாள் புரம், திருநெல்வேலி

**பெ.மோகனப்பிரியா**
ஆங்கிலத் துறை
அண்ணா பல்கலைக் கழகம்
கோவை.

**முனைவர் அ.கணேசன்**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
ஸ்ரீஅம்மன் கலை அறிவியல் கல்லூரி
சித்தோடு, ஈரோடு-638102.

**முனைவர் மு.சுதா**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி - 3

**முனைவர் பே.நடராசன்**
இணைப் பேராசிரியர்
தமிழியல் துறை
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகம்
திருநெல்வேலி - 627012.

**முனைவர் வெ.கலைச்செல்வி**
இணைப்பேராசிரியர்
அரசு கல்வியியல் கல்லூரி
குமாரபாளையம் - 638 183

**பேரா.எம்.பெஞ்சமின் நிர்மல்**
விரிவுரையாளர், ஆங்கிலத் துறை
மனோ கல்லூரி, திசையன்விளை
திருநெல்வேலி மாவட்டம்,

**முனைவர் மா.மீனாட்சி சுந்தரம்**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
அரசு கலைக்கல்லூரி
கோயமுத்தூர்

**மு.சுதா**
முனைவர் பட்ட ஆய்வாளர்
இந்திய மொழிகள் பள்ளி
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

**எம்.சுப்பராயன்**
முனைவர் பட்ட ஆய்வாளர்
திராவிடப் பல்கலைக்கழகம்,
குப்பம், ஆந்திரப் பிரதேசம்

**இரெ.பாஸ்கர்**
எண்:10, இலட்சுமணன் வீதி,
இராஜலிங்க நகர்
கல்புதூர், காட்பாடி
வேலூர் - 632007

**சு.திருஞானசம்பந்தம்**
நூலகர்
ஸ்ரீஅம்மன் அறிவியல் கலைக் கல்லூரி
ஈரோடு

**த.ஜெய்சங்கர்**
தமிழாசிரியர்
ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளி
கொளமஞ்சனூர்
திருவண்ணாமலை மாவட்டம்

**முனைவர் கனல் மைந்தன்**
அரசு கல்வியியல் கல்லூரிப் பணி (ஓய்வு)
கோவை-18

**திருக்குறள் புலவர் நாவை. சிவம்**
நிறுவனர்: திருக்குறள் பயிலகம்
அண்ணா நகர், மணற்பாறை
திருச்சி 621306

**முனைவர் சிவ.பத்மநாபன்**
ஸ்டேட்பேங்க் காலனி
நாகர்கோயில்

**முனைவர் தே.சம்பத்**
தமிழாசிரியர்
படைக்கலன் தொழிற்சாலை உயர்நிலைப் பள்ளி
திருச்சி-621016

**இரா.கல்யாணசுந்தரம்**
7, நடுத்தெரு, அனுப்பானடி
மதுரை 625009

**பெ.மரியநேசன்**
முதுகலை ஆசிரியர் (ஓய்வு)
A5, பூந்தென்றல் இல்லம்,
த.நா.வீ.வ. வாரியம்
கன்னங்குறிச்சி, ஜெயநகர்,
சேலம்-8

**சோ.ம. செயராசன்**
கோவை

**தே.நே. சித்திரச் செல்வி**
கலைவாணி கல்வியியல் கல்லூரி
கள்ளக்குறிச்சி

**த.கருணைச்சாமி**
தேனி

**தகடூர் தமிழ்க்கதிர்**
தர்மபுரி

**பெ. காப்புசாமி**
வண்டலூர், சென்னை

**புலவர் ச.ந. இளங்குமரன்**
தேனி

**ஆ. குழந்தைவேலு**
தலைவர்
தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம்
தஞ்சாவூர்

**முனைவர் அ. அருணாசலம்**
பேராசிரியர், ஆங்கிலத்துறை
எஸ்.கே.பி. பொறியியல் கல்லூரி
திருவண்ணாமலை

**க. ரவீந்திரன்**
கோவை

**புலவர் வெ.சேதுராசு**
முதுகலைத் தமிழாசிரியர் (ஓய்வு)
கோவில்பட்டி

**கோ. அரிகிருஷ்ணன்**
இரட்டணை, திண்டிவனம்

**சீ. கண்ணன்**
திருச்சி

**பாவலர் ப.கோ. நாராயணசாமி**
வடதொரசலூர், தியாகதுருகம்

**கவிமாமணி துரை. இராசமாணிக்கம்**
சேடன்குட்டைத் தெரு
திண்டிவனம்

**இ. வீரசக்திவேல்**
முனைவர் பட்ட ஆய்வாளர்
கணேசர் கலை அறிவியல் கல்லூரி
மேலைச்சிவபுரி

**முனைவர் பெ. கணேஷ்**
தலைவர், சமூகவியல் துறை
தங்கவயல் சட்டக் கல்லூரி
தங்கவயல், கர்நாடகா

**கவிஞர் மா. கோமுகி மணியன்**
சட்டமன்ற முன்னாள்
உறுப்பினர்
மாணிக்கம் தெரு, விநாயகாநகர்
கள்ளக்குறிச்சி - 606202

**இரா. கலைச்செல்வி**
உதவிப் பேராசிரியர்
அரசு கல்வியியல் கல்லூரி
புதுக்கோட்டை

**ரெ.முரளி**
கட்டிட பொறியாளர்
செகந்திராபாத்

**வை.பூ. சோமசுந்தரம்**
கழுகுமலை
தூத்துக்குடி மாவட்டம்

**கோ. புண்ணியமூர்த்தி**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக்கழகம்
திருப்பதி - 517 502

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| அண்மை வெளியீடுகள் | ரூ. பை. |
|---|---|
| அறிவியல் பார்வையில் வேதாத்திரிய உடல்நலக் கொள்கைகள் | 60.00 |
| பழங்குடி மாணவர்களுக்கான தமிழ்மொழிப் பாடநூல் மதிப்பீடு | 65.00 |
| பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் மனிதவள மேம்பாடும் | 50.00 |
| மேலைநாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு | 175.00 |
| பெரியார் என்னும் பேரொளி | 60.00 |
| சீனக்கவிஞர் குமோரோவின் தேவதைகள் (கவிதைத் தொகுப்பு) | 70.00 |
| புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம் | 100.00 |
| உலகத் தமிழியல் ஆய்வுகள் (தொகுதி 1) | 450.00 |
| செவ்விலக்கியச் சாரம் | 70.00 |
| வேதாத்திரி மகரிசியும் மதநல்லிணக்கமும் | 45.00 |
| வீரமாமுனிவரின் சொல்லிலக்கணம் | 50.00 |
| திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள் | 165.00 |
| தொல்காப்பிய உத்திகள் | 60.00 |
| தமிழில் இசுலாமிய மரபுகள் | 60.00 |
| தமிழில் இலக்கிய மானிடவியல் | 80.00 |
| தொடரியல் கோட்பாடுகளின் வளர்ச்சி | 65.00 |
| இராசேந்திர சோழனின் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் | 80.00 |

வெ.எண் : 772

திருக்குறள் தேசிய நூல் (பன்முக ஆய்வுப் பார்வை)

விலை : ₹ 175.00



ISBN : 978-81-925359-4-4

